# கம்பன் கலை

172

பேராசிரியர்

அ.ச.ஞானசம்பந்தன்

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.
154. டி. டி. கே. சாலை, சென்னை - 18

1988

அரசங்குடி சரவண முதலியார் ஞானசம்பந்தன் (1916)

THE SOUTH INDIA SAIVA SIDDHANTHA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.

கிளைகள் :
சென்னை - 108. திருநெல்வேலி-6 மதுரை- 1
கோயம்புத்தூர்-1 கும்பகோணம் -1 திருச்சி-2
சேலம்-1

(கழகம்)

முதற் பதிப்பு : ஜூலை 1988
கழக வெளியீடு : 1856

031, 1F50, l : g
N88

KAMBAN KALAI

நாவல் ஆர்ட் அச்சகம், சென்னை - 600014.

# பதிப்புரை

தமிழ்க் காப்பியங்களில் சிறந்து விளங்குபவை சிலம்பும் மேகலையும். இவை தமிழுக்கேயுரிய காப்பியங்கள். இவற்றை யடுத்துச் சிறந்து நிற்பது கம்பன் பாடிய இராம காவியம். இராமபிரானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டெழுந்த காவியமாதலின் முன்னிரண்டைவிட இக் காவியமே தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுள்ளது என்பதில் ஐயமில்லை.

இராமகாதை தமிழ் மக்களிடையே ஈராயிரம் ஆண்டுகட்கு மேலாகப் பரவி நிலைத்த இடம் பெற்றுள்ளது. கதை பழைய தாயினும் கம்பன் காவிய உருக்கொடுத்த பின்னரே தமிழ்மொழியில் ஈடிணையற்ற இடத்தைப் பிடித்தது. கம்பன் கவி பாடிக் கன்னித் தமிழ் வளர்த்த சான்றோர்கள் காவிய நாயகனான இராமனைத் தெய்வமாகவே எண்ணி வழிபடலாயினர். இராமனை மாமனிதன் என்றும் கம்பனை மானுடம் பாடிய கவி என்றும் அவனுடைய கவிகளைக் கொண்டே ஆயும் போக்கு இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தலை தூக்கியது.

புதிய நோக்கு, கம்பனின் கவிகளைப் பல வழிகளில் ஆயத் தூண்டியது. கவிநயம் காண கம்பன் கழகங்கள் நாடு முழுவதும் தோன்றின. தொடக்கத்தில் சொற்பொழிவுகள் வாயிலாகவே கவிநயம் விரித்துரைக்கப் பெற்றது. மக்களிடையே ஆர்வம் மேலிட மேலிட பட்டிமன்றங்கள், வழக்காடு மன்றங்கள், காவியம் படைத்த கவியே தான் படைத்த பாத்திரங்களுடன் மேடையில் மோதுகின்ற நாடகக் காட்சிகள் என்று கம்பன் காவியத்தைப் பல கோணங்களிலும் பல வடிவங்களிலும் தமிழறிஞர்கள் ஆயத் தலைப்பட்டனர்.

இவர்களுக்கெல்லாம் தலைவராகவும், வழிகாட்டியாகவும் கடந்த நாற்பதாண்டுகளாக மேடை தோறும் கம்பன் முழக்கம் செய்து வருபவர் பேராசான், அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள். பிறர் போன நெறியில் நில்லாது தனிவழி கண்டு, புதிய கோணத்தில் ஆய்ந்து புதிய புதிய செய்திகளைக் கம்பன் காவியத்தில் கண்டு உரைத்தவர்—அவர். அவரில்லையேல் மக்கள்

இன்னும் பழைய பாங்கிலேயே காவியத்தைப் பொழுது போக்குக்காக மட்டுமே படித்து வரும் நிலை நீண்டு கொண்டிருக்கும். அவர் புதிய கோணத்தைக் காட்டினார். இன்று அவர் வழியில் கம்பன் காவியத்தைப் புதிய புதியகோணங்களில் பார்வையிட்டுப் பலர் மேடைகளில் கம்பன் கவிநயத்தைப் புதிது புதிதாகப் படைத்து வருகின்றனர். இவர்களுக் கெல்லாம் ஆசான் பேராசிரியர் அ. ச. ஞா. அவர்களே என்பது மிகையாகாது.

பலர் பேசுவர்; சிலரே எழுதுவர். பேச்சு காற்றொடு காற்றாகக் கலந்து கரைந்து விடும். எழுத்து கல்லின் மேல் பொறித்த கல்வெட்டாக நிலைத்து நிற்கும். இவ்வகையில் பேராசான் அவர்கள் மேடையதிர, மேடைக்கு எதிரே அமர்ந்திருப்பவர்கள் உள்ளங்கள் அதிரப்பேசுவார். மனதில் பட்ட புதிய ஆய்வுகளை அழகு தமிழில் அடுக்கடுக்கான காரண காரியங்களை அடுக்கிக் காட்டித் தம் வாதத்தைத் திறம்பட எழுத்திலும் எடுத்துக் காட்டுவார். இவர்தம் கட்டுரைகள் சிறு சிறு நூல்களாக பல நூல்வடிவில் இடம் பெறாத கட்டுரைகளாக ஆங்காங்கே சிதறிக் கிடந்தன. இவற்றை ஒருங்கு திரட்டி ஒரே நூலாக வெளியிட்டால் தமிழ்ப் பெருமக்களுக்குப் பேருதவியாக இருக்குமே என்று கருதி பேராசானை அணுகினோம். அவர்களும் மனமுவந்து இசைவளித்தார்கள். ஆசானுக்கு அகங்கனிந்த நன்றி.

கம்பன் காவியத்தை அனுபவிப்பதற்கு ஆய்வுக்கண் தேவை என்று கருதுபவர்களுக்கு இந் நூல் ஒரு நல்ல வழிகாட்டி. ஆசானின் அரை நூற்றாண்டுக் காவியப் பயிற்சி இவர்கட்குத் துணை நிற்கும்.

கம்பன் காவிய அன்பர்கட்கு இந்நூல் பெருந்துணையாக இருக்குமென்று எதிர்பார்க்கிறோம். எங்கள் எண்ணம் நிறைவேற உறுதுணையாக நின்ற பேராசான் அ. ச. ஞா. அவர்கட்கு உளங்கனிந்த நன்றி.

'கம்பனுடைய படைப்பில் இலங்கைப் பேரரசனாகிய இராவணன மிளிரும் வண்ணத்தை ஆசான் அவர்கள் தனி நூலில் வடித்துத்தந்துள்ளார்கள். இராவணன் என்றாலே பிறன்மனை கவர்ந்தது மட்டுமே மக்கள் மனத்தில் ஆழமாக நிற்கிறது. அவனுடைய மாட்சியை யாருமே கண்டது கிடையாது. ஆசான் அவர்கள் மட்டுமே அவனுடைய பேராற்றல்களை எடுத்துக் கூறி அத்தகைய மாட்சி பெற்றவன் சிறுசெயலால் சீர் குலைந்ததை, விளக்கியுள்ளார். இதுவே 'இராவணனன் மாட்சியும் வீழ்ச்சியும்' என்ற தனி நூலாகக் கழக வழி முன்னரே வெளிவந்துள்ளது. இதுவும் 'கம்பன் கலையுடன் இணைத்துப் படிக்க வேண்டிய நூலாகும்.

தமிழ் இலக்கிய ஆர்வலர்கள் இவற்றை வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# ஆசிரியன் உரை

ஏறத்தாழ 35 ஆண்டுகட்கு முன்னர் எழுதப் பெற்ற 'நாடும் மன்னனும்' நூலில் தொடங்கி மிக அண்மையில் (1988) எழுதப் பெற்ற 'கவிஞன் கண்ட சமரசம்' என்ற கட்டுரை வரை இந் நூலில் இடம் பெற்றுள்ளன. திறனாய்வு முறையில் கம்பனிடம் இவ்வாசிரியன் கொண்ட ஈடுபாட்டு வளர்ச்சியை இதில் காண லாம். பல தனிக் கட்டுரைகள் உதிரியாக இருந்தவற்றைக் 'கம்பன் கலை' என்ற தலைப்பினுள் அடக்கி ஒரே நூலாகக் கொணர முன் வந்த தி. தெ. இ. சை. சி. நூ. ப. கழகத்தின் இயக்குநர் திரு. இரா. முத்துக்குமாரசாமி எம். ஏ. அவர்கட்குப் பெரிதும் கடப் பாடுடையேன்.

இக்கட்டுரைகளைப் படித்து அரிய ஆராய்ச்சி முன்னுரை தந்த கவிஞர் நா. சந்திரசேகரனுக்கும் என் நன்றி என்றும் உரிய தாகும்.

அச்சுக்கோப்பார், படி திருத்துவார் ஆகியோர் செய்த குழப்பம் பெரிது. அன்பர் சந்திரசேகரனார் இவற்றை எடுத்துக் காட்டித் திருத்தியுள்ளார். இக்குறைபாடுகளை நூலைக் கற்பவர்கள் மன்னிக்க வேண்டுகிறேன்.

# பணிந்துரை

இந்நூலிடைக் காணத்தகும் கட்டுரைகளில் முதல் எட்டு கட்டுரைகள் மூன்று நூல்கள் வடிவில் முன்னர் வெளிவந்தன.

கம்பன் கலை என்ற தலைப்பிட்டு வெளிவந்த

நாடும் மன்னனும், அரசியர் மூவர், தம்பியர் இருவர்

என்பனவே அவை. பல பதிப்புகளைக் கண்டன. இன்று காணற் கியலா நிலையின.

ஆகலின் தி. தெ. இ. சை. சி. நூ. ப. கழகத்தார் அவற்றையும், நூலாசிரியரின் பிற கட்டுரைகளையும் இந்நூலில் இணைத் துள்ளனர்.

ஒரு சேர இவற்றைத் தொகுத்து வெளியிட்டுதவிய கழகத் தார்க்கும், நிர்வாக இயக்குநர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கட்கும் நன்றி பாராட்டும் உலகு.

இக்கட்டுரைகளில் கட்டுரை எண் 9 முதலா 24 ஈறா அமைந் துள்ளவற்றுள் (க. எண்) 11, 12, 13, 14, 15 ஆகியவை புதிய கோணம் நூலில் வெளி வந்தவை. (க. எண்) 17, 18, 19, 20, 21 ஆகியவை இன்றும் இனியும் நூலில் வெளிவந்தவை. (க. எண்) 9, 10, 16, 22, 24 ஆகியன, கம்பன் கழக மலர்களிலும், பிற வற்றிலும் பொதிந்து மணம் வீசின.

(க. எண்) 23—1978 கல்கி தீபாவளி மலரில் வெளி வந்தது.

இந்நூலிடை இரட்டை எண் அமை இடப்பால் கம்பன் கலை என்ற தலைப்பே (ப. 86 வரை) விளங்கக் காணலாம். இத் தலைப்பே நூல் நெடுக அமைய வேண்டும்.

மாறாக ப 88 முதல் ப. 180 வரை அரசியர் மூவர் என்றும் ப. 182 முதல் நூல் இறுதிவரை தம்பியர் இருவர் என்றும் அச்சிட்டுள்ளமை விரைந்து அச்சுக்காண விழைந்ததன் விளைவு போன்ம்.

நூற்பெயர் கம்பன் கலை என்பதே அன்றோ?

கம்பன் வாழ்ந்த காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதி (ப. 2.) என்பது அது போழ்து இந்நூலாசிரியரின் கருத்து.

ஆனால், கம்பன் ஒன்பதாம் நூற்றாண்டினன் என்பதே அரில் தபஉணர்ந்த அறிஞர் பல்லோர் தம் முடிபு. இம் முடிபே இவரது கருத்தும் ஆம்.

தான் முன்னர் சொன்னவற்றுள் தானே தவறு காண்புழி அதனைச் சுட்டிக் காட்டித் தன் நிலை கூறல் இவர்தம் இயல்பு என்பதனை இவரது பெரிய-புராணம் ஓர் ஆய்வு என்ற நூலில் (ப. 361) காணலாம்.

ப. 10ன் ஈற்றில் அமைந்துள்ள பாடல் அடிகள் பட்டினத்தாரது அன்று. திருவிளையாடல் புராணம் பாடிய பரஞ்சோதியாரது.

மேலும் இந்நூலில் ப. 258, ப. 259 ப. 274 இவற்றின் அடிக் குறிப்புகளை கீழ்க்கண்டவாறு மாற்றிக் கொள்க.

'இந்நூல் பக்கம் 71, 72'. என்றும் 'ப. 63, 64' என்றும், ,ப 125' என்றும் அமைக்க.

முதல் எட்டு கட்டுரைகள் முன்னர் நூலாக வந்தமையின் (பல பதிப்புகள்) அவை பற்றி ஒன்றும் கூற வேண்டா.

எஞ்சிய ஈரெண் கட்டுரைகள் (9 முதலா 24 ஈறா) குறித்து இயம்புவன் இவ்விடை.



○ மனிதர் மூவகை நிலையர்—விலங்கனையார், இலங்கு நூல் கற்றார். மீமனிதர் எனத்தக்கார்—என்பர்.

நாம் அனைவரும் சாதாரண சராசரி மனிதரே. விருப்பு, வெறுப்பு கோபம், தாபம் நிரம்பப் பெற்றவர்களே.

புல்லிய உலகத்து நில்லாமை தூக்கித் தன்னை மென்மே லுயர்த்தி மேம்படல் மனிதனுக்கே உரியது.

நூலறிவு சாலாது, உணர்வு வழி அமைபவர், அறிவு நலம் சான்ற கொள்கையின் உயர்வார், இரண்டும் கெட்டார், ஆய மூவகையரை முழுமுதல் நட்புக் கொண்டான் எனின் எளிவந்த அவன் தன்மைக்கு என் உரைப்பது ஈடு?

அன்பைச் சாதனமாக கொண்டவர், காமமொடு கடுஞ்சினம் கடிந்தவர் ஆய இருபாலாரையும் இறைவன் ஏற்று அவ் வேண்டுவார், வேண்டியாங்கு எய்தினர் ஆக அருள்பாலிப்பான்.

அலகிலா விளையாட்டுடையான் மாட்டு அன்பு செலுத்துவது அம்மைக்கு ஆம் என்ற வணிக நோக்கு அறிவு வழியார்க்கு நிரம்ப உண்டு.

வாடிய பயிர் கண்டு வாடி, வருந்துவர் காணில் அவர் துயர் துடைக்க முந்தி, பலன் எதிர்பாராமல் தொண்டு செய் உளத்தர், அன்பு பிழம்பாய் நிற்பார். கண்ணப்பன், குகன் போல்வார் இத்தகையார்.

அருள் என்னும் அன்பின் குழவி என்பார் செந்நாப் புலவர்.

நிறை அறிவு, முழுமுதலை அறியச் சாதனம் ஆகின்றதே அன்றி சாத்தியம் ஆவதில்லை.

இரண்டும் கெட்டான் ஆகிய நம் போன்ற ஐயப்பாடும் தெளிவும் மாறி மாறி எழும் சாதாரண மக்கள் அவன் அருள் பெறல் அமையாதோ எனில் பெறுதலும் எளிதே என்று காட்டும் வகையில் படைக்கப்பட்டவனே சுக்கிரீவன்.

நல்லார் இணக்கமும், நற்றவர்தர, பெறும் கேள்வி ஞானமும் கால அடைவில் பக்தியும், ஞானமும் வளர்க்கும்.

அவன் அன்றிப் புகல் பிறிதுஇல் எனத் தெளிந்து சர்வ பரித் தியாகம் செய்வார்க்கு, தனது என்று தனித்த வாழ்வு பிறிது ஒன்றும் இன்று.

ஆனால் வாழ்வில் நேர் 'இடர் களையாரோ இவர்?' எனத் தடுமாறும் மக்கள், தவறு செய்ய நேரின் அத்தவற்றுக்காக அவனிடம் இரந்து மன்னிப்புக் கேட்பது முறை.

'எத்துணையும் அரியை நீ' எளியை ஆனாய். எனை ஆண்டு கொள் விதமும் இதுவோ? எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறு என்?' என வியந்து தற்கிரங்கி, வழுவாய் மருங்கின் கழுவாய் நாடும் சராசரி மனிதனின் மலை அளவு மாப்பிழையும் தீயினில் தூசாம். அவற்றைக் கடுகாக் கருதி கடுகி அருள்வன் கருணையே வடிவானவன்.

மூவேறு பண்புடையார் எவ்வெவ்வகையில் இறைவன் அருளுக்கு அருகர் ஆவர் (அண்மையர்—பாத்திரர்) என்பதனைப் பல்லாற்றானும் விளக்குவதே 'தம்பியர் மூவர்—ஏன்' என்ற தனித்த கட்டுரை. (9)

○ அடுத்து அமைவது மனிதனின் பிரதிநிதி என்பது.

அறிவும், உணர்வும் கலந்த கலப்பே மனித நிலை.

இவ்விரண்டும் சில்கால் முரணி, தடுமாற்றம் தருவதும் உண்டு.

காரண காரியங்களைப் பற்றி நன்கு ஆய்ந்து தெளி நல்முடிவுக்கு வருதலும் கூடும்.

இருப்பினும் ஒரோவழி கொண்ட அம்முடிபே 'தவறாம் கொல்?' என்று ஐயுறலும் உண்டு.

கொளுத்தக் கண்டும் கொண்டது விடாது, கற்றும், கேட்டும் தெளிவடையார்கட்கு காட்சி, அனுமானம், பிரமாணம் என்னும் மூவகையில் பெரிது முயன்று தெளிவுபடுத்தல் வேண்டும்.

தேறானிடத்துத் தெளிவும், தெளிந்தார் கண் ஐயுறவும் கொண்டமையால் தீரா இடும்பையர் இவர்.

ஐயப்பாட்டிலேயே உழலும் இவர் போல்வார் தமக்கு 'உய்தி உளதோ?' என ஐயுறல் வேண்டா என்ற பல நற்கருத்துகள் மலர்ந்த சோலையே மனிதனின் பிரதிநிதி என்ற கட்டுரை. (10)

○ காவல் மன்னற்குக் கண் என அமைந்த சுமந்திரன், கால்வல் நெடுந்தேர் கடாவுதலிலும் வல்லன். அரசற்கு அடுத்த நிலையன்; அகலா அன்பினன்; உசாத் துணைவன்; தானைத் தலைவன்.

கண்ணிற் கூறலும், செவியிற் காணலும் வல்ல இவன் மன்னன் மனமும் குடிமக்கள் இயல்பும் மாவின் மனமும் நன்கறிந்தவன்.

இராமன் பிறந்த நாள் தொட்டு சிறந்த அவனுடன் பழகியவன்; மகமுறை பாராட்டியவன்; தீராக் காதலன்; பழைய நண்பினன்.

எனவே கிழமையைக் கீழ்ந்திட விரும்பகில்லான்.

மதி நுட்பம் நூலோடுடையான் எனினும் அரசுப்பணி தலை நின்ற தன்மையால், கடமையும் காதலும் எதிர் எதிர் கிடைப்பப் பெரிதும் பேதுறுவான்.

தன் பின் இராமனே முடிசூட வேண்டும் என்ற கருத்தைப் பெரிய முன்னுரையுடன் அரசன் கூறினன். சிற்றரசர்களும் அமைச்சர்களும் உடன்பாட்டுக் கருத்தினரே. இதனை அவர்கள் சார்பாக அரசற்கு அறிவிக்கும் கடப்பாட்டினன் சுமந்திரன்.

அரசன் முடி துறத்தலும் இளையவன் மௌலி கவித்தலும் தக்கனவே என்று கூறின் என்னென்ன மன ஓட்டங்கள் அரசன் மனத்தில் எழக்கூடும் என யூகித்துத் திறம்படத் தன் கருத்தை நவில்கிறான்.

கூறவும் விரும்பாத ஒரு கருத்தை வெளிப்படையாக விளம்பாமல் 'அது' எனக் குறிப்பிடுவார் பாடறிந்தொழுகுநர்

இத்துணைச் செய்திகளை விவரிப்பதே மூரிய தேர்வலான் என்னும் கட்டுரை. (11)

இருதலை உள் எறும்பி ஒத்து இவன் இடர்ப்பாடுறுதலைக் கூறுவது அடுத்து அமை கட்டுரை.

○ இழைக்கின்ற விதிமுன் ஈர்க்க இராமன் இளையானுடன்' இல்லென் இடையாளுடன் கானம் புகுதல் தவிராதாகின்று கொண்டுய்க்கும் கொடுமையும் இவன் பாலதாயிற்று.

பெறலருந் திருமகன் பிரிவிற்கும் அவன் பிரிவால் பெரும். பிறிது உறும் மன்னற்கும் ஆக மனம் நைகின்றான்.

எதிர் வரு இடர்களை எண்ணாத சீதையின் எண்மை நிலை கண்டு வருந்திப் புலம்புகிறான்.

களிறுமாறு பற்றிய தேய்புரிப் பழங்கயிற்றைக் கொண்டு பேராசிரியர் இந்நிலையை விளக்குகிறார்.

கவை மகன் நஞ்சுண்டாங்கு கலங்கு நிலையன் ஆகிய சுமந்திரற்காக நாமும் பெரிதும் வருந்துகிறோம். (12)

○ முறுவல் என்பது இளநகை. பல்தோன்றா வகை இதழ் விரிவு. இராமபிரான் முறுவல் இத்தகையதே (Mona Lisa முறுவல்)

உயர் பெருமக்கள் வெடிபடச் சிரியார்; வாளெயிறு இலங்க நகாஅர்; வெண் கீற்றிலங்கவே நகுவர்.

இம்முறுவல், செய்வான் இதயத்து உணர்வைக் குறிப்பால் உணர்த்துவது; வெளிப்படுத்துவது.

சிறியது ஓர் முறுவலில் பெரியது ஓர் பொருளினைப் புலப் படுத்துவான் (காதலாயினும், கடுத்தது ஆயினும்) இராமன்.

விருத்த மாதவரை நோக்கி ஏன் முறுவலித்தான் (எள்ளல் குறிப்பில்) என்பதைக் கம்பன் வழித் தெளிவுறுத்துவார் ஆசிரியர்.

அறிவு வழிப் படர்நர் ஆய அம்முனிவர் இராமன் வேறு, தாம் வேறு எனக் கருதியவர். வீடுறல் கண்ணிய தன்னலத்தர்.

ஆனால் குகனோ உணர்வின் பண்டம். 'நீவேறு எனாதிருக்க, நான் வேறு எனாதிருக்க' என்றபடி ஒன்றிய இயல்பினன்,

கங்கை வேடனும் காளத்தி வேடனும் இத்தகையவரே! 'இத்துணைப் பொழுதும் தாழ்த்தேன்' என்று தற்புலக்கும் திண்ணன் போலவே, தலை நின்ற தாயன்பினால் அமுதினுக்கு இயையத் திருத்திக் கொணர்ந்த தேனினன்; மீனினன். இதனை (அன்பின் ஆழ்ச்சி) நுணுகி ஆய்ந்து புலப்படுப்பார் இக் கட்டுரையில். (13)

○ 'அறம் வெல்லும்; பாவம் தோற்கும்' என்பதே இக்காப்பியப் பாவிகம்.

அறங்கொள் கொம்பு எனப் பிராட்டியாரை, அறத்தின் நாயகன் எனப் பிரானைப் போற்றுவார் கம்பநாடர்.

மாறிலா, ஈறிலா (அடிப்படை) அறங்களே காப்பிய அடித்தளம்.

அறச்சார்வின அழியா நிலையின. நிலையில் தாழாது நெடிது உயர்ந்து சமுதாயத்தில் விளங்குவன.

தனி மனித அறம், அவனவன் நிலை, மேற்கொள் வாழ்வு முறை இவற்றுக்குத்தக அமையும்.

தனி அறமும், சமுதாய அறமும் முரணின்று அமைதல் வேண்டும். சமுதாய அறத்தில் ஒருவன் வழீஇனால் அந்நெறி அவனை நிறுத்தல் வேண்டும். இன்றேல் சமுதாயத்திற்கு அவனால் உண்டாம் ஏதம் பெரிது.

நூலிடை அமைந்துள்ள அறங்கள் பல. அவைதம்முள் முரணாவகை ஏவர்க்கும் ஒப்பவே கூறப்படுகின்றன, என்ற தெளிவினை நமக்கு இக்கட்டுரை வழி காட்டுகிறார். (14)

○ மனிதன் அறிவு பெறு வாயிலாய் அமைந்தவே ஐம்பொறிகள். அவை தமக்குரிய அளவில் (எல்லையில்) நின்று நன்று பயத்தல் வேண்டும். கரைக்கு அடங்கி ஒழுக வேண்டிய ஆற்று நீர் வரம்பிகந்து பெருகின் அழிவு மிகுமாப்போல், இவ்வைம் பொறிகள் அடங்ககில்லவாய் அமையின் அழிவு உண்டாம் என்பது முன்னையோர் கண்ட முடிவு.

அடக்கம் என்பது புலன்களை அறவே ஒழிப்பதோ ஒடுக்குவதோ அன்று.

அறனறிந்து, பொறிகளாலாம் பயன் அறிந்து, திறனறிந்து செயல்பாடு அமைதல் வேண்டும்.

மெய்யுணர்வு தலைப்படற்கு இப்புலனடக்கம் பெரிதும் துணை செய்யும். புலன்கள் நெறியின் புறம் செலாமை வேண்டும். கட்டுப்பாடு பிறர் விதிக்க அமையும் அடக்கம், அதனை எதிர்க்கவே முனையும் மறைமுகமாக, பின்னர் வெளிப்படையாக.

தமக்குத் தாமே கட்டுப்பாடு விதித்துக் கொண்டு, அவா அறுத்து அந்நிலை நிற்பின் சிறப்பு எய்தல் கூடும்.

இக்கருத்துகளைப் பலபடி விவரிப்பதே இக்கட்டுரை. இதன் விரிவே 'கம்பன்—புதிய பார்வை' என்னும் பெருநூல்.

அடக்கம் அடங்கல் பொருளில் பயிலக் காண்கிறோம். ஆன்று அவிந்து அடங்கிய நிலையே சான்றோனாக்கும்.

துய்பொருள் இல்வழி புலனடக்கம் மேயினேம் என்பார் பொய் புகலுநரே. இதனைப் பக்கம் 374ல் கூறுகின்றார்.

பரதன், அனுமன் இவர்களைச் சான்றுகாட்டி விளக்கும் திறனைக் காண்கின்றோம்.

பொறிகளை அவை போமாறே போமாறே விடுபவர் வல்லே சாமாறே சாமாறே விரைகின்றவர்.

புலனடக்கம் உண்மை, அஃது இன்மை இவற்றைக் கம்பன் பாத்திரங்களைக் கொண்டு தெளிவுபடுத்துகின்றார்.

உரன் என்னும் தோட்டியால் ஓரைந்தும் காக்க என்பதே இக்கட்டுரையின் உள்ளுறை. (15)

○ புதிய கண்ணோட்டம் படைத்த இக்கட்டுரை மாவீரன் வாலியின் பெரியன போற்றி, சிறியன சிந்தியா நிலையை விளக்குவது.

கம்பன் காட்டும் வீரர்களுள் இறுதிவரை உறுதி மாறாது இருந்து இறந்தார் இருவர். 'யாரேனும்தான் ஆகுக யான் என் தனி ஆண்மை பேரேன்' என்று கொண்ட கொட்பினை விட்டுக் கொடாமல் இறந்தவன் இராவணன். 'வாளினை வணங்கல் அல்லால் வணங்குவனோ இவனை?' எனச்செம்மாந்து நின்றவன் இரணியன். இவர்களினும் உயர்ந்த வீரன் ஆகிய வாலி, சிறியன சிந்தியான் என்று சிறப்பிக்கப்பட்டான்.

உணர்ச்சியும் தன்முனைப்பும் மிக்கிருந்த காரணத்தால் பல்வேறு உணர்ச்சிகளுக்கு ஆளாகி, வாய் தந்தனகூறி இராமனை

ஏசிப் பேசுகிறான். எற்றானும் பகை என்ற ஒன்று இல்லாதான் தன்னைக் கொன்றது எதனால் என்று அறியமாட்டாதே பல படியாகப் பழித்துக் கூறுகிறான். தெளிவு பெறல் அரிதாய், திகைப்பு உறும் அச்சூழ்நிலையிலும் ஆழ்ந்து சிந்திக்கிறான். அகமனம் தெளிய, அதுவரைத் தான் போற்றிய அறத்து வழி வீரம், அரும்பெறல் உயிர் என்பன பொருள் இன்றிப் போதல் காண்கிறான். மேலும் யான் எனதென்னும் செருக்கு, இறப்பு - பிறப்பு, பகை - நட்பு, என்பன பொருள் அற்றன; சிறியன ஆகின்றன என்று தெளிகிறான். இதுவரைபொருள் அல்லவற்றைப் பொருளாகக் கருதிய மருள் நீங்க மாண்பிறப்பு எய்துகிறான். இத்தகைய அறிவு விளக்கம் ஆகூழ் உடையார்க்கே அமையும். அல்லாப் பிறர் அடையார். யாதனுள்ளும் யாவருள்ளும் நின்று நிலவும் ஒரு பொருளைப் பிரித்து பகை, நட்பு, நொதுமல் என்று காணல் உலகினர் இயல். பன்மையில் ஒருமை காணும் தன்மை ஸ்திதப்பிரக்ஞ மனநிலை பெற்றவர்க்கே சாலும்.

தான் அந்நிலை பெறக் காரணம் ஏவு கூர் வாளியே என்கிறான்.

பூ, மணம் என்பன காண்டற்கு, மோக்கற்கு என இருவகைப் படினும் ஒன்றே இரண்டாய் விளங்கும். வேலையும் திரையும் வேறுபாடின்மை தெளிந்தார் எங்கெங்கு காணினும், (பார்க்கின்ற மலரூடும்) அவன் வடிவே காண்பார். இந்நிலையும் அவன் அருள் இன்றேல் இயையாதாம். "அவனருளே கண்ணாகக் காணின் அல்லால் காண்பார் யார்? காட்டாக்கால்?'' என்பதே உண்மை.

இத்தெளிவு காட்டு முறை தக்கானால் தக்கார்க்குத் தக்க வழி அமையும்.

பார்வை, ஸ்பர்ஸம், திருவடியால் தீண்டல், சொல் வடிவில் அமைதல் ஆக தீக்கை முறை பல்வகைய. இவ்விடை அம்பின் வாய் அருள்தீக்கை பெற்றவன் வாலி என்ற புதுக்கருத்தை, கம்பன் வழி நின்று (இதுவரை எவருமே கூறாத கருத்து) கூறி, தெளிவு படுத்துகின்றார். காரண காரிய வகையில் புலப்படுக்கும் இக் கட்டுரை ஆழ்ந்த ஆய்வின் விளைவு. புதிய கண்ணோட்டம் என்றமையால் இல்லது கிளத்தல் ஆகாது; உள்ளது சிறத்தல் காண்கிறோம். (16)

○ இனிய நல்முடிவு எடுக்கத் தன் துணையொடு சூழ்ந்த இராமன் முதலில் அவர்களை நெட்டுரை நிகழ்த்தவிட்டு, உளக்

கருத்தை நன்கு வாங்கிக் கொண்டு அவர்தம் வாதங்களையே தன் கருத்துக்கு இயைய அமைத்துக் கொள்கிறான். இது குறிக்கும் கட்டுரையே கம்பன் - வழக்கறிஞன் என்பது.

'பற்றுதல் பழுது' எனப் பலர் முடிபு கூறிய பொழுதும், 'மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி' என்று தொடங்கி 'அபயதானம் ஈதலே கடப்பாடு' என்பதனை விளக்கி, உளங் கொளச் செய்து, முதலில் ஏற்க மறுத்த சுக்கிரீவனையே கோதிலாதவனைக் கொணரப் பணிக்கிறான்.

இராமன் தன் சொல்லாடல் திறனை விளக்கும் பாங்கினை இக்கட்டுரையில் காண்கிறோம்.

சொலல் வல, சோர்வில், கூர்த்தமதி சான்ற வழக்கறிஞனாக இவர் இராமனை நமக்குக் காட்டுதிறன் எண்ணுந்தோறும் களிப்பு நல்கும். (17)

○ பகைத்த ஜப்பான் நாட்டைப் பாழ்படுக்கக் கருதிற்று அமெரிக்க வல்லரசு. யாண்டு பல ஆயின பின்னரும் தன் இழி நிலை திரிகிலது. மக்களை எண்ணாது குண்டுச் சோதனை நிகழ்த்தல் விட்டிலது.

பொருள் என்னும் பொய்சேர் இறுக்கம் இருள் உறுத்தும்
எண்ணிய தேஎத்தும் சென்று.

என்னுமாப்போலே மிகுசெல்வ வளத்த அந்நாடு அணுகுண்டு வீசி ஜப்பானின் இரு பெருநகர்களை அழித்தது.

நெடுங்காலத்துப் பின்னரும் கதிர்வீச்சின் விளைவாய் அந்நாட்டு மகளிர் உயிர்த்த சிறப்பில் சிதடும், உறுப்பில் பிண்டமும், கூனும், குறளும் எத்துணை அளவிற்கு அந்நாடு பாழாயிற்று என்று காட்டின.

நல்லோர் பல்லோர் பழித்த செயல் ஆயிற்று இது. இக்குண்டு வீச்சினைப் பிரம்மாத்திரத்தோடு ஒப்பிட்டுக் காட்டும் ஒரு கட்டுரை.

இலக்குவன் போரிடை பிரம்மாத்திரம் விட்டிலன் உலகம் (அழியுமே என—பழிக்குமே என) அஞ்சி.

அமெரிக்கர் (தம் செயல்) விட்டிலர் உலகம் (அழியுமே என) அஞ்சி(யேனும்),

கறுவு கொள் நெஞ்சமொடு களம் புக்க இராவணி இது குறித்து இலக்குவனைப் பெரிதும் வியந்து பாராட்டுவான்.

இக்கட்டுரை வெளிவர கலை தெரி நெஞ்சத்தர் திரு. S.S. வாசன், அவர்களே காரணர். கட்டுரை விளக்கம் கண்ட அவர் இந்நூலாசிரியரைப் பெரிதுவந்து பாராட்டினார் என்பது இன்றுளார் பலர் அறியாச் செய்தி. (18)

○ அண்மையில் வாழ்ந்த கண்ணுள் வினைஞர் K. மாதவன் அவர்கள் இருபது அடி உயர திரைச்சீலை வரையக் காட்டிய அதே திரைப்பாட்டினை நுண்ணிதாக பத்து அங்குல உயரப் படத்திலும் காட்டியவர். —(கலைவாணர் - வெ. பரந்தாமன்)

எல்லோரா, ஹளேபிட், பேலூர்—இவ்வூர்களில் உள்ள ஆகப் பெரிய சிற்பங்களும் ஆறங்குல உயரச் சிற்பங்களும் கலை நுணுக்கத்தில் ஒன்றற்கொன்று குறைவின்று.

பார காவியம் அமைத்த கம்பனும் செவ்வியோனைச் சித்தரித்தாங்கே மிகவும் நுணுக்கமாக அந்தமில் உவகையளை (நீலமாலை), மந்திரத்து ஒருவனை (சுமந்திரன்), திருகாரா உளத்துத் திருமகனை (சத்துருக்கனன்) சித்தரித்துள்ளான். (ப. 327)

இச்சத்துருக்கனன் குறித்த இரு பாடல்களுள் (299, 10174) கம்பன் ஒரே எதுகையைக் கையாண்டுளனேனும் உரை குறுக (ஒரு பேச்சு) நிமிர் கீர்த்தியன் ஆகவே காட்டியுள்ளான்.

''யானாம் இவ் அரசு ஆள்வான்?'' என்ற வினா இவர் கைவண்ணத்தால் விளக்கமுறுகிறது. வியக்கிறோம், விழிகள் மலர்த்தி.

எண் சுவைசேர் இசை சுமந்த பாடல் இது என்று இவர் விளக்க ''என்னே! இவர்தம் நுண்ணிதின் ஆய்ந்து நுவல் திறம் இருந்தவாறு!'' என மகிழ்கிறோம். (19)

○ தேய்வும், மாய்வும், பெருக்கமும் பிறப்பும் உடைய திங்கள் புத்தேள் தண்ணளியது. ஆகவே தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது என்ற உவமம் பயிலும் இக்கட்டுரையில், உயர்ந்ததன் மேலதா, ஆகத்தக்க ஓர் உவமம் இழிப்ப இழிந்த நிலையில் கூறப் பெறுகிறது.

ஏன்?

செவ்விய அல்ல பயிலா, கூறா, நாவினரேனும் நல்லான் ஒருவன் மாட்டு ஓரோ வழி பகை கொளநேரின், அப்பகைவன் தன் நற்றிறன் ஓரார். படாதன விட்டு ஏற்பன கூறார். இதுதான் இலக்குவன் நிலை.

இராமனிடத்து அன்புடைமை தன் ஒருவற்கே உரியது (Possessiveness) என்று இறுமாந்திருப்பவன் (Ego). இத்தற் செருக்கு நிழலின் நீங்காமையால் விளங்கிற்று. இராமன் அன்பு பரதன் மேலது என்று எண்ணவும் பொறாதவன்.

நினைந்ததற்கு மாறாக, நெடுமுடி சூடுவான் பரதன், நெடியவன் நீங்குவான் நாடு, என்ற செய்தி அறிந்த உடன் மூட்டாத காலத் தீ எனப் பொங்கி பரதனைப் பழித்து மொழிகிறான்.

இந்நிலையில் இழிப்ப இழிந்த உவமம் ஒன்று கையாள்கிறான் எள்ளல் கருதி. எத்துணை அளவிற்கு அவன் மனம் இருண்டு விட்டது என்பதற்குச் சான்று இது. அவன் மனக்கருத்தின்படி அமைகிறது.

அரிய கற்று ஆசற்றார் கண்ணும் வெளிறு அமையும் என்பதற்குச் சான்று இப்பகுதி. தாம் அறிந்த ஒன்றனையே உவமம் கூறல் உலகினர் இயல். வேட்டுவர் கண்ட வங்கினைப் பற்றி நீங்கா உடும்பினையே குடுமித்தேவரைப் பற்றி நீங்கா திண்ணனுக்கு உவமை காட்டி நிற்பான் நாணன்.

ஒன்றன் சிறப்பைப் பல படியாக விளக்கக் கருதி பல் உவமம் கையாண்டும், இயலாமை எண்ணி தன் செயலறு நிலை உள்ளி ''என் சொல்லி முற்றுவிப்பேன்? ஐயோ ஆற்றகில்லனே!'' என்ற ஆற்றாமையைத் தோற்றுவிப்பதே 'ஐயோ இவன் வடிவு' என்ற தொடர்.

உவமனிலி என அமைந்த நற்கட்டுரை இது. (20)

○ குற்றம் நீ குணங்கள் நீ
கூடல் ஆல வாயிலாய்

என்றும்,

தீயினுள் தெறல் நீ திங்களுள் அளியும் நீ!
உறையும் உறைவதும் இலையே
... ... ... ... ...மாயமாரனையை

என்றும் முன்னோர் முழுமுதலின் முரண்களை விளக்குவர்.

பேராசிரியர், 'வாராதே வரவல்ல' முரணில் முழுமுதல் (பண்புத் தொகையாகவோ ஏழன் பொருளிலோ கொள்க) இயல்புகளைத் தெளிவுபடுத்துகிறார்.

வினை ஆற்றாது, வினைப்பயன் விளைக்கும் விறல், விளங்கிய அறிவின் அம்முனைவன் பாலதே என்று காட்டும் இவர் திறன் உன்னுதோறும் உவகை ஒருங்கு பயக்குமால். (21)

○ திருமண நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளச் செல்பவர்களில் சிலர், குறிப்பாக மகளிர், மணித்தவிசு அமர்ந்துள மணமக்களிடை 'ஜோடிப் பொருத்தம்' இல் எனில் உடன் இருப்பாரிடை வாய்காவாது மொழிவதும் உண்டு.

Made for each other என்பதனை விளம்பரங்களில் மட்டுமே காண்டல் இயலும். மாறாக அமைவனவே பல. 'துணை தேர்ச்சி' ஏன் இவ்வாறு அமைகிறது என்று விளக்கி ஆங்கில அறிஞர் ஒருவர் கட்டுரையைச் சான்று காட்டுகிறார் ஆசிரியர். (ப. 437)

எழுத்தாளர் ஜெயகாந்தன் தம் 'சினிமாவுக்குப் போன சித்தாளு' நூலிடை 'சார்த்திக் காணல்' இயல்பை விளக்கி யுள்ளமை நோக்கத் தக்கது.

காணில் கைகூப்பித் தொழத்தக்க நிலையில் விளங்கும் மனைக்கு விளக்கம் ஆகு மடவார் காணின், கழிகாமுகற்கும் தீய நினைவு எழாது. ஆனால் 'பலர் காணத் தோன்றும் மதி'கள் காண்பார் நெஞ்சில் பிறழ்ச்சி உண்டாக்குநவே.

நலன் அற உலர்ந்த நங்கையைக் கண்டு, (கண்டான் என்பதே வியவுக்குரியது) கொளக் கருதி, மண் கீண்டு, மானத்திடைப் பொதிந்து தன் நகர் சேர்ந்தான் இராவணன்.

ஐந்நான்கு விழிகளும் ஆர்வினொடு பார்த்தன எனினும் அவை உண்மை காண்கில.

அனைத்துள அரும்பொருள்களும் தனக்கே உரியன ஆதல் வேண்டும் (Possessive) என்ற தன் முனைப்பு உடையானிடத்து,

அவனது பலவீனத்தையே தனக்குச் சார்வாகக் கொண்டு, தன் எண்ணம் ஈடேறாமைக்குக் காரணம் இடையில் சீதையே என்ற மாறான கருத்தினால், இராமனே சிதையை வருணித்திராத அளவிற்கு (சித்திரகூடப் படலம்) நலம் புனைந்துரைத்து, ஒழிவின்றிக் கூறி உறங்கு புலியை உசுப்பிவிட்டு சொல்வழிக் காமம் ஊட்டுகிறாள் பின்னை.

மேலும் தான் அவனுக்காக அவளைக் கொணர முயன்ற போதுதான் உறுப்பறை நேர்ந்தது என்றும் கூறுகிறாள். சினமும் தன்மானமும், கழிகாமமும் முந்துகின்றன. விரைந்து செயல்படு கிறான் இராவணன்.

காணா முன்னர், கேட்ட அளவில் அவனாகப் படைத்துக் கொண்ட ஓவியமே சீதை. (பெயர் ஒற்றுமை மட்டுமே)

ஒன்றன் செயலைப் பிறிதொன்றன் செயலாக் கூறும் மரபுண்மைபோல, தங்கை கிளத்திய அத்துணை நலன்களையும் தன் கற்பனைச் சிதையின் மீது ஏற்றி, நேர்கண்ட வழியும் அவ்வாறே இருப்பதாகவே எண்ணுகிறான்.

நோக்குவ நோக்குவ அவையே போறல் என்பர். இல்லுறை தவத்தியை, கற்பின் செல்வியைக் காணநேர்ந்தபோது, தன் கற்பனை உருவையே சார்த்திக் காண்கிறோன். இவ்வகை மயக்கு (illusion) நிலைபேறு கொண்டு மன்னுகின்றது. என்றும் பெயர்கிலது.

உண்மைச் சிதையை உள்ளபடி கண்டவனே அல்லன்.

எண்டிசை படர்ந்து, ஏற்றபோர் எனைத்தினும் கொற்றம் மேவிய அவன், தான் விரும்பிக் கொணர்ந்து வேளத்திருத்திய மகளிர் பலர். அவர்களை அனுமனும் கண்டனன் என்பார் கம்பர்.

இன்பத் துறையில் எளியனேனும் வயப்படா மகளிரை வணக்கக் கருதிலன். (சாவம் உண்டு என்பர்)

நயத்தினும், பயத்தினும் அவர்கள் தாமே தன்னை ஏற்றுக் கோடல் வேண்டும் என்று எண்ணுபவன்.

எனினும் வானுயர் நிலையில் தாழ்ந்து நிலத்தில் தாழ்ந்து 'ஏற்றுக் கொள் என்னை' என சிதையை வேண்டும் இழி நிலை மேவுகிறான். இத்தாழ்ச்சி கழிகாமத்தால் நேர்வதே.

ஏமாற்றம் மிக்கு, வடிகால் தேடி LSD போன்ற போதைப் பொருள்கள் கொள்வார், அவற்றின் ஆற்றல் உள்ள வரை கற்பனை வானில் மிதப்பர். வகை வகையான இனிய நல்ல பல கனவுகள் காண்பர். அக்காட்சி அறாவகை அடுத்தடுத்துப் பயன்படுத்துவர். அவ்வழி அறிவு அறைபோக கால அடைவில் மெல்ல மெல்ல இல்லாகுவர்.

இராவணன் காமமும் இத்தகையதே. தலைக் கொண்ட (காம நஞ்சின்) ஏழாம் வேகத்தால் தடுமாறுகிறான். அதிகாமம், அகங்காரம், அரும்பெறல் பொருள் பற்றும் ஆர்வமிகை, ஆய அனைத்துமே அழிவிற்குக் காரணமாக அமைகின்றன.

கேட்ட மங்கையை மறந்திலாதான்
நாமமும் சிந்தையும் ஒன்றின (சூர். சூழ்ச்சி 83,84)

இத்தொடர்கள் வழி பெயரில் மனம் பறிகொடுத்த மனத்தனாகி கற்பனைச் சிதையையே தன் மனச்சிறையில் வைக்கிறான்.

சொல் (பெயர்) கேட்ட அளவில் கிறுகிறுப்பார் பலர் உண்மையில், அகத்துறை நூலார்,

''மக்கள் நுதலிய அகனைந்திணையும்
சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறா அர்

என்றனரோ? அறிகிலேம்.

சொற் கிடந்தவாறு பொருள் உரைத்தல் சில்போது சிறவாது; கேட்ட நாமம், சிந்தை ஆகிய சொற்களின் ஆழ்பொருளை நுணுகி ஆய்ந்து வெளிப்படுக்கும் இக்கட்டுரை.

கற்பனை அழகை ஏற்றிக் காண்பதாலேயே எல்லையற்ற அன்பு செயல் இயலும். (வாத்ஸ்யாயனரும் இக்கருத்தை வேறு வகையில் புலப்படுப்பார்)

மாறாக இவ் ஏற்றிக் காணல், எல்லையற்ற இடர் தனக்கும் தமர்க்கும் தரும் என்பதனை இராவணன் வழி அறிகிறோம். (ப. 438, 439)

'நோதக்க செய்யும் சிறு பட்டி (மன்றப் பேச்சாளர்)யே இக் கட்டுரை வெளிவரற்குக் காரணமாயினார் என்று குறிப்பிட்டுள்ளார். இத்தகு பேச்சும் ஒருவகையில் நலமாயிற்றன்றே. (22)

○ ஆவி ஒய்கினும் ஆசையின் ஒய்விலாள் (கம்பன் 2818)
என்று சூர்ப்பணகை குறித்து, கம்பன் கூறுவான்.

காலம் ஒய்கினும் பூசல் ஒய்கிலர்

என்று வாலிவதை குறித்தும், 'போதி, சாதி' எனப் பொன்னைப் போக்கிய பொருவிலான் செயல் குறித்தும் பேச்சாளர்கள் பூசலிடுவன குறித்துக் கூறலும் சாலும்.

அமைய நோக்கிய அற்புளத் தலைவன் சிதையைச் சிறி சினந்து மொழிந்தவை செவ்விய அல்ல. எனவே இராமன் தலைவன் அல்லன். தகவிலி என்றே பழிப்பர் பலர்; வல்வழக்கும் தொடர்வர். (இக்காலப் பட்டி மன்றப் பாங்கு இருந்தவாறு இது).

'போதி, சாதி, தக்கது செய்' என ஏவினவன் யாவன்? குற்றக் கொள்கலன் போன்ற நம்போல்வானா? அல்லனே. நல்லன்; புலவர் புந்தியான் அன்றோ.

இடை தெரிந்து அடைமொழி அமைத்தலில் வல்ல கம்பனோ மாறுறப் பொருத்துவான்? இச்சொற்கள் எள்ளல் குறிப்பனவா? அல்ல. தக்கனவே என்பது இவர்தம் நெறிப்படுவாதம்.

செய் தவற்றை நீடு நினைந்து வாடும் பிராட்டியின் தற்குற்ற உணர்வு, தக்க தண்டனை கூடப் பெறாவிடத்து நீங்கில்லாது என்று உளவியல் அடிப்படையில் செல்லும் ஆய்வு தலைப்படுகிறார்.

தானே பற்றி நல்கிலன் ஆய நாயகனிடம் பெருங்கலாம் விளைத்த மருங்கிலாள் பெயர்ந்தனள் செல்ல அவ்வூடற் கருத்தினளை அமைதிப்படுத்த தெரிகணை தொடுத்த வில்லன் விரைகிறான். மாயமான் குரல் கேட்டு மனம் பேதுறும் மான் நெறி நிற்கும் தம்பியைக் கடிந்து உரைக்கிறாள்.

எரியிடைக் கடிது வீழ்ந்து இறந்து படுவள் என அஞ்சி வேகின்ற உள்ளத்தன் விலகினன் செல்கிறான்.

அவனை இவள் வைத வைவு எத்தகையது?

வெருவலை நின்றனை வேறு என்?
நின்ற நின் குறிப்பு என்?

இத்தொடர்கள் அறஞ்தஞ்சு நெஞ்சினள் வாயில் எழலாமா? நெறியின் நீங்கி நீரல கூறியதாகுமே.

சிஞ்சுப வனத்திடைச் சிறை இருந்த சிதை, தான் கூறிய கடிய சொற்கள் மஞ்சன் மனத்தில் கூரிய வேல் எனப் பாய்ந்திருக்குமே என எண்ணிப் பதைக்கிறாள்.

இருந்து ஏங்கி நெஞ்சம் புண்ணாகு நெடுந்தூரம் தான் நினைந்து புலம்புகிறாள்.

'இற்புகத் தக்கலை' என்னுமோ? (உருக்காட்டு 20)
'அறிவிலள் எனத் துறக்குமோ (உருகாட்சி- 14)
அப்புனிதன் தீண்டுமா? (உருக்காட்டு 11)

என்று ஐயுறுகிறாள் பலவாறாக.

குற்ற உணர்வினர் மன ஓட்டம் எவ்வெவ்வகை அமையும் என்று காட்டப் பெறுகிறது இக்கட்டுரையில்.

அவர்களைத் திருத்தி அமைதி பெறுமாறு செய்வது எங்ஙன்? பக்கம் 447ல் விளக்கம் காணலாம்.

அதிர்ச்சி வைத்தியம் எனூஉம் வகையது.

இக்கொடுமையின் (நாடகம்) கொடுமுடி, இளையவனை அழைத்து "இடு! தீ" என அவ்வளை ஒலி முன்கையள் வாயிற் கூறியதும்,

உலகத்துக்கே களை கண் ஆயினானை இளவல் தொழ, 'அவள் ஏவியது செய்க' என அவன் கண்ணிற் கூறியதும் ஆகும்.

பிராட்டியோ, எவனை ஏலா மொழிகளால் ஏசினாளோ அவனே எரி விதிமுறை அமைத்துத் தர இலை அற மலர்ந்த தாமரைப் பொய்கையில் புகூஉம் அன்னம் போல், பாங்குற நடந்தனள்.

பாய்ந்தனள் என்றோ, புகுந்தனள் என்றோ புகலாது நடந்தனள் என்பான் நயமுணர் கவிஞன்.

தான் செய் தவற்றுக்குத் தக்க தீர்வு இதுவே என முழு மனத்துடன் ஏற்று நடந்தனள் என்று அறிகிறோம்.

இலக்கியச் சிந்தனையாளர்க்கே 'ஆழ்ந்திருக்கும் கவி உளம் ஓர்தல்' அமையும் என்பதற்கு ஏற்ற சான்றே இந்த நற் கட்டுரை. (23)

○ இளங்கோஅடிகள் போன்ற, சமரச மனப்பான்மையன் கம்பன்.

சார்பு பற்றிய பலர் அவனை ஆழ்வாராக்கி, தூணப்பனாக்கி அவனுக்குத் தன்(ம்) திருநாமத்தைத் தானு(மு)ம் சாத்தினன்(ர்).

சமயக் கூட்டிற்குள் அடங்காத அக்குயிலினைப் பற்றி, அறியாதார் தம் காழ்த்தநெஞ்சினால் (பாடல் எண் 4470க்கு) வேறு விளக்கம் தருவர்.

'உலகளந்த அரி(யே) அதிகன். இது அறியாது அரன் அதிகன் என்று உரைப்பர் அறிவிலோர்கள்' என்பர்.

''உலகளந்தவன் திருமால். பிரமலோகம் உட்பட எல்லா உலகங்களையும் தன் அடிப்படுத்தவன். வான் பெற்ற நதிகமழ் தாளன். அவனுடைய திருவடி பயந்த கங்கையைத் தன் சிரமேற் கொண்டவன் சிவன் என்கிறார். இவ்வழி அத்திருமாலே பரதத்துவம் என வெளியிட்டார்'' என்றுரைப் பாருமுளர்.

இத்தகையார் நெஞ்சில் நடுநிலை புகலரிது போலும். பள்ளு நூல்களில் பள்ளக் குடும்பனின் இருமனைவியரும் இரு வேறு சமயத்தர். தம்மிடை ஏற்படு பூசலில் மற்றவர் கடவுளைப் பழித்தும் இழித்தும் பேசுவர். பூசல் முடிவில் குடும்பம் நன்முறை இயங்க ஒருமைமனத்தராய் நடக்க முடிவு செய்வர் என்றும் காண்கிறோம்

சமயம், பூசல் வளர்த்திலது. சமயிகளாலேயே பூசல் மலிகிறது. மூவரானவர் (தேவர்)க்கும் மேம்பட்ட முழுமுதல் குறித்தே கம்பன் சிந்திக்கிறான். தன் காலத்துக்கண்ட 'கெட்டப் போரிடும் உலகத்தை வேரோடு சாய்த்து, புதியதோர் உலகம் காண' அவாவு கிறான்.

முரண்பாட்டில் முரண்பாடின்மை தெளியவல்லாரே பெரியர். அவரினும் மேம்பட்டவனே இறைவன். இறைவன் இலக்கணமே முரணில் முழுமுதலாக விளங்குவது.

சமயங்களில் ஓர் உருமைப்பாட்டைக் காணமுயன்று, அறிவு வழி நின்று, செய்வினை முடித்த செம்மற்று இக்கட்டுரை.

இங்ஙன், ஒருங்கிணைந்த சமயம் உருவாக்கிய பெருநலத்தன் கம்பனே என்று தெளிவுபடுத்தி நிறைவு செய்கிறார் ஆசிரியர். (24)

☐ பேராசிரியர் அவர்கள் திட்ப நுட்பத் திறனாய்வில் வல்லர். தமிழ் இலக்கியப் பெருங்கடலின் பரப்பும், ஆழ்ச்சியும் கண்டு குளித்து மணி கொண்டவர். கற்றவர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்.

சென்ற காலத்தின் பழுதிலாத்திறத்தர்.
எதிர் காலத்தின் உறு தகு சிறப்பினர்.

''குன்றைக் கிழாஅர் கண்ட ஞானசம்பந்தரை நாமும் காண் கிறோம்; உவகைக் கடலாடுகிறோம்''. என்று பணிந்துரைத்து அமைவன்.

நன்வரப் பணித்தென்னை ஆட்கொண்ட வான்கருணைக்
கென்னைகொல் கைம்மாறு இனி?

குளைமேடு, இவ்வண்ணம்
சென்னை-94. நா. சந்திரசேகர்

# பொருளடக்கம்

# 1. நாடு

## 1.1 கோசலம் என்னும் கனவு

**சங்கப் பாடலின் இயல்பு**

தமிழ்ப்பெருங்கடலில் எண்ணற்ற முத்துக்கள் எடுக்கப் பெற்றுள்ளன.

கிறிஸ்து நாதர் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் உள்ள இரண்டு நூற்றாண்டுகளாகிய சங்ககாலத்தில் . சிறியவையும் பெரியவையுமான எண்ணற்ற முத்துக்கள் எடுபட்டதுண்டு.

அளவாற் சிறிய முத்துக்களைக் கோவை செய்து **ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை** முதலிய நூல்கள் தொகுக்கப்பெற்றன, அளவாற் பெரிய முத்துக்கள் **அகநானூறு, பரிபாடல், பத்துப்பாட்டு** என்னும் தொகை நூல்களாகத் தொகுக்கப்பெற்றன.

இவ்வாறு தோன்றிய நூல்களை ஒரு காரணம் பற்றியே முத்துக்கள் என்று உருவகித்தோம். ஆழ்ந்தும், பரந்தும், ஓயாமல் அலை வீசியும் திகழும் கடலில் ஒருவன் மூழ்கி எடுக்கும் சிறந்த பொருளே முத்தாகும். அதே போல உலகம் என்ற ஆழ்ந்த பெருங்கடலில், அன்றாட வாழ்க்கையல்லல், போராட்டம் எனப் படும் அலைகளின் நடுவே, உறுதி என்னும் துணைகொண்டு மூழ்கிக் கவிஞன் தன் அனுபவம் என்னும் முத்தைக் கொண்டு வருகிறான். சங்கப்பாடல்கள் என்று கூறப் பெறுபவை அனைத்தும் இவ்வாறு தோன்றியவையேயாகும். இப்பாடல்கள் பழந்தமிழரது அனுபவத்தின் ஆழத்தை உணர்த்துபவையே தவிர, அவ்வனுபவத்தின் அகலத்தை அல்லது பரப்பை வெளியிடுவன அல்ல. ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் கவிஞன் ஈடுபட்டு,

அவனுடைய வாழ்க்கை முழுவதும் உடனிருந்து கண்டு கூறும் பரந்த அனுபவநிலை சங்கப் புலவர்கள் பாடலில் காண்பதற்கில்லை. அவ்வாறு அவர்கள் பாடியிருத்தல் கூடும். அந்நூல்கள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை.

### இளங்கோ அடிகள்

கவிஞன் தன் மனத்துள் ஆழச்சென்று அனுபவங்கண்டு கவிதை புனையும் இந்தச் சங்கப்பாடல் முறை முதன்முதலாக இளங்கோவடிகளால் மாற்றி அமைக்கப்பெறுகிறது. தமது சொந்த அனுபவம் ஒன்றிலேயே அமிழ்ந்து கவிதை புனையாமல், முதன் முதலில் அவர் தாம் மற்றவருடைய வாழ்க்கையில் புகுந்து பார்க்கிறார். கண்ணகி, கோவலன் என்ற இருவருடைய வாழ்க்கையில் ஈடுபட்ட கவிஞர், முற்றும் தம்மை மறந்துவிடுகின்றார்; அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் அவர்களுடன் பின் செல்கிறார். இளங்கோவடிகள் தம்மையும், தம் சூழ்நிலையையும் மறந்துவிட்டுத் தம்மால் விரும்பப்பெற்ற கண்ணகி வாழ்வில் ஈடுபட்டதால், தமிழுக்கு ஒரு பெரிய நற்பேறு உண்டாயிற்று. அது வரையில் தமிழ்மொழி காணாத ஒரு புதுமுறைப்பாடல் தோன்றிற்று. காப்பியம் என்று கூறத்தக்க ஒரு புதுமுறைக் கவிதை, கவிஞன் பிறன் ஒருவனுடைய அனுபவத்தில் புகுந்து அவ்வனுபவத்லதைத் தனதாக்கிக்கொண்டு கவிதை புனைந்த புதுமை, முதன் முதலாக இளங்கோவடிகளால் நமக்குக் கிடைத்தது.

### அடிகளின் பின்னர்

உதிரியாய் உள்ள சங்கப்பாடல் தொகுப்புக்களில் இல்லாத புதுமை, அழகு, பரந்துபட்ட தன்மை என்னும் இவை எல்லாம் இப்புதுமுறைக் கவிதையில் காண முடிந்தது. இளங்கோவடிகள் வழியிலேயே அவர் பின் வந்த சாத்தனார் 'மணிமேகலை'யை இயற்றினார். அதைத்தொடர்ந்து சில நூற்றாண்டுகள் கழித்துக் கொங்குவேள் என்பார் 'உதயணன் சரிதை'யைக் காப்பியமாக இயற்றினார். அடுத்த சில நூற்றாண்டுகளில்—ஏறக்குறைய பத்தாம் நூற்றாண்டில்—திருத்தக்க தேவரின் 'சிந்தாமணி'யும் தோலாமொழித் தேவரின் 'சூளாமணி'யும் உதயமாயின. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழார் பெருமானின் 'பெரிய புராணம்' வெளிவந்தது. அதே நூற்றாண்டின் இறுதியில் கம்பநாடனது 'இராமாயணம்' பிறந்தது. இக்காப்பியங்களைக் கற்றவர்கள், எவ்வாறு இவை ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி

முன்னர்த் தோன்றியவைகளின் அனுபவத்தைப் பின்னர்த் தோன்றியவை பயன்படுத்திக் கொண்டுள்ளன என்பதை அறிய முடியும். காலத்தால் இறுதியில் தோன்றிய கம்பநாடன் தனக்கு முன்னர்த்தோன்றிய இத்துணைக் காப்பியங்களையும் சங்க நூல் களையும் நன்கு பயன்படுத்திக்கொண்டான். அவனுக்கு முன்னர்ப் பல காப்பியங்கள் தோன்றிவிட்டமையின், அவனது காப்பியம் அவை அனைத்தின் சிறப்பையும் பெற்று, மேற்கொண்டு அவனது தனிக் கற்பனையின் சிறப்பையும் கொண்டு விளங்குகிறது. முன்னர்த் தோன்றியவற்றின் சிறப்பை எல்லாம் சீரணித்துத் தன தாக்கிக்கொண்டமையின், அனைத்தும் அவனுடைய புது மெரு குடன் விளங்கக் காண்கிறோம். எனவே, அவனது காப்பியம் இனிப்பது போலப் பிற காப்பியங்கள் சுவை பயப்பதில்லை. பிற்காலப்புலவர் 'கம்ப நாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே', என்று கூறினது முற்றும் பொருத்தமுடையதே யாகும்.

### கம்பன் படைத்த கனவுலகு

இனி, அக்கவிஞர்பிரான் ஏனையார் போல வெற்று நாட்டு வளம் கூறத் தொடங்காமல், கோசலநாட்டு வருணனை என்ற பெயரில் ஒரு கனவு உலகத்தையே உண்டாக்கிவிடுகிறான். அவன் கண்ட கனவுலகைச் சற்றுக் காண்போம்!

கோசல நாட்டைப் பல படியாக வருணிக்கத் தொடங்கு கிறான் கவிஞன். ஒரு கட்டடத்தைத் தூரத்திலிருந்து பார்க் கிறோம். அதன் முழு வடிவமும் அழகும் கண்ணிற்படுகின்றன. அவற்றை அனுபவித்த பின்னர் இன்னும் அருகிற்சென்று பார்க் கிறோம். அக்கட்டடம் எத்தகைய கற்களால் எவ்வாறு ஆக்கப் பெற்றது என்பதையும், தனிப்பட்ட அறைகள் முதலியவற்றின் சிறப்பையும் உள் நுழைந்து காண்கிறோம். கம்பன் கட்டிய கவிதைக் கோவிலையும் அவ்வாறே காண்டல் வேண்டும். கோசல நாட்டை அவன் வருணித்துள்ள முறையைத் தூரத்தே இருந்து காணும் பொழுது என்ன உணர்வு உண்டாகும்? ஓர் அரசன் கொலு வீற்றிருக்கும் சிறப்பைக் கண்டால் என்ன மகிழ்ச்சி உண்டாகுமோ, அதே மகிழ்ச்சி உண்டாகக் காண்கிறோம். நாட்டுப் படலம் தொடங்கி மூன்று பாடல்கள் ஆனவுடன் இக் கொலுக் காட்சி வருகிறது. கோசல நாட்டில் மருதமாகிய விளை நிலமே மிகுதி. விளைநிலமிருந்தும், நீர் வசதி முதலியன இல்லை

யாயின் பயன் இல்லை. எனவே, அனைத்தும் சிறந்து விளையும் நிலங்களாக உள்ளன. ஆகலின், அந்நாட்டில் மருதம் என்னும் அரசி கொலு வீற்றிருப்பது போன்ற எண்ணம் நம் மனத்தில் தோன்றுகிறது.

மருதக் கொலு

அத்தாணி மண்டபத்தில் கொலுவில் அரசி வீற்று இருப்ப தானால், நல்ல இசையும் நாட்டியமும் இல்லாதிருக்குமா? இதோ அங்கு நாட்டியம் நடைபெறுகிறது! வாருங்கள் கண்டு களிக்கலாம் :

நாட்டியம் நடைபெறுவதற்குரிய அரங்கமும் விளக்கு வசதி களும் இருந்தாலன்றி, நல்ல முறையில் அதனை அனுபவிக்க முடியாதன்றோ? நல்ல வயற்புறமே அரங்கமாய் அமைகின்றது. நீர் அலைகள், தொங்கவிடப்பட்ட திரைகளாய் விளங்குகின்றன. செந்தாமரை மொட்டுக்கள் தீவர்த்தி பிடித்தாற்போலச் சூழ்ந்து நிற்கின்றன. பின்னணி இசை இதோ தொடங்குகிறது! மேகங்கள் கூடி மத்தளத்தின் சுதி கூட்டிவிட்டன. யாழ் வாசிக்கின்றனவே வண்டுகள், அது காதில் விழுகிறதா? இந்த பின்னணி இசையில் இதோ நாட்டியம் ஆடும் நங்கையாகிய மயில் வந்து ஆடத் தொடங்கிவிட்டது! எவ்வளவு சிறந்த நாட்டியக்காரர்களாயினும், ஆட்டத்தைக் கண்டு களிப்பவர்கள் இல்லையாயின், நன்கு ஆடல் இயலாது. எனவே, மயிலின் இந்த ஆட்டத்தைக் காண்பவர் யார் என்று நினைக்கிறீர்கள்? நூற்றுக்கணக்கான கண்கள் ஏக காலத்தில் காண்பன போலக் குவளை மலர்கள் வியந்து நோக்குகின்றன. இந்த முறையில் மேகங்களும் வண்டுகளும் பின்னியம் இயம்ப, தாமரைமொட்டுக்கள் விளக்கு வசதி செய்து தர, குவளை மலர்கள் நாட்டியத்தை விழித்த கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க, மயில் நாட்டியம் ஆட, எதிரே கொலு வீற்றிருக் கும் அரசி மருதாயி நாச்சி இக்காட்சியைக் கண்டு களிக்கிறாள். பாடலை இனிப் பாருங்கள் :

"தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்கக்
கொண்டல்கள் முழவின் ஏங்கக் குவளைகண் விழித்துநோக்கத்
தெண்திரை எழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம்வீற் றிருக்கும் மாதோ!"

(நாட்டுப்படலம், 4)

கோசலநாடு முழுவதையும் பிழம்பாக நோக்குபவர்கட்குத் தோன்றும் முழுத்தோற்றம்[1] இத்தகையது என்பதை வருணனை கூறுமுகமாகவே கவிஞன் கூறிவிட்டான். இந்த இடத்தில் கவிஞன் கையாளும் உவமை, இயல்புக்கும் மரபுக்கும் ஒத்துக் கற்போர்க்கு இன்பம் பயப்பதாகும். கொண்டல் முழங்கின், மயில் ஆடும்; குவளை மலர்ந்திருக்கும் மாலைப்போதில் தாமரை குவிந்துவிடும். இந்த இயல்பு பிறழாமல் முறைப்படுத்தும் கவிஞன் திறன் துய்ப்பார்க்குச் சுவை ஊட்டுமன்றோ?

## வயற்செழிப்பு

இனி அடுத்து நெருங்கிச் சென்று நாட்டினுள் நுழைந்து பார்க்கலாம். இந்த விளைநிலங்களில் விளைந்துள்ள நெல்லைப் பார்த்து வியப்பை அடைகிறீர்களா? 'இவ்வளவு செழிப்பாக வளர்வதற்கு என்ன உரம் போடுகிறார்கள்!' என்றா வியப்படைகின்றீர்கள்? இன்னுஞ் சிறிது தூரம் சென்றால், செழிப்பின் காரணம் நன்கு தெரியும். அதோ கரிய நிறத்துடன் தூரத்தில் வருகின்றனவே, அவை என்னவென்பது தெரிகிறதா? 'நீருண்ட மேகமோ, யானையோ!' என்று சந்தேகப்படுகிறீர்கள் அல்லவா? அவை பால் கறக்கும் நல்ல எருமைகளே. இதோ பக்கத்திலும் வந்துவிட்டன; நன்றாகக் காணுங்கள். இவற்றின் மடியிலிருந்து பால் ஒழுகிக் கொண்டேயிருப்பது தெரிகிறதா? நல்ல வளமை காரணமாகவும் கன்றை நினைப்பதனாலும் இவற்றின் பால் ஒழுகுகிறது. வழியில் ஒழுகும் பால் முழுதும் இதோ நெல் வயல்களில் சென்று பாய்கின்றது. இப்பொழுது தெரிகிறதா வயற்செழிப்பின் காரணம்? வெற்றுநீர் வளத்தால் மட்டும் அன்று இப்பயிர்கள் தழைப்பது; பால் வளத்தாலுங்கூட என்பதைக் கம்பநாடன் கூறுகிறான்.

"ஈர நீர்படிந்து இந்நிலத் தேசில
கார்கள் என்ன வருங்கரு மேதிகள்
ஊரில் நின்றகன்று உள்ளிட உண்முலைத்
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே."

(நாட்டுப்படலம், 25)

[கார்கள்—மேகங்கள், மேதிகள்—எருமைகள், உள்ளிட—நினைப்பதால், தாரை கொள்ள—பால் தாரையாக ஒழுக.]

---

1. Total impression

வண்டிகள்

இந்தப் பெரிய சாலையில் வருகின்ற இத்தனை வண்டிகளும் என்னவென்று நினைக்கிறீர்களா?

இவை அனைத்தும் விளைபொருள்களை ஏற்றிச் செல்பவையேயாகும். இவை விளைபொருட்செல்வம் மட்டுமே கொண்டு செல்கின்றன என்றா கூறினேன்? அன்று; ஒரு நாட்டில் மூலப் பொருள்கள் வேண்டுமல்லவா? இதோ அவையும் நிறைந்துள்ளன. "நிலஞ் சுரக்கும் நிறைவளத்தையும், நன்மணிப் பிலஞ் சுரக்கும் பெறுதற்கரியவற்றையும்" (38) ஏற்றிக்கொண்டு, 'நெறிகளும் புதையப் பண்டிநிறைத்து "மண் நெளிய ஊர்வார்கள்" (20) என்று கவிஞன் கூறுவதைக் கேட்டீர்களா? அவை என்ன விளை பொருள்கள் என்பதை அறிய ஆவல் உண்டாகிறதா? இதோ! "எள்ளும், ஏனலும், இறுங்கும், சாமையும், கொள்ளும் வண்டிகளில் வருகின்றன," என்றும், "நெற்குவைகள் செய்வார், வறியவர்க்குதவி, மிக்க விருந்து உண மனையின் உய்ப்பான்" (20) வண்டிகளிலும் ஏற்றி அனுப்புகின்றனரென்றும் கவிஞன் கூறுகின்றான்,

விலங்கின் வாழ்க்கை

இவ்வளவு இயற்கை வளமுடைய நாட்டில் விலங்குகள் எவ்வாறு வாழ்கின்றன என்பதை அறிய வேண்டாவா? தாங்கள் பொருள் தேடுவது தங்கட்கு மட்டும் என்று கருதாமல், பிறருக்கும் அதனைப் பங்கிட்டுத் தரும் பண்பாடு மக்களிடத்தில் மட்டுமே உள்ளது என்று நினைக்கிறீர்களா? ஆறறிவு படைத்துவிட்ட ஒரே காரணத்தால் அதிக கர்வம் கொள்ளவேண்டா. கோசல நாட்டிலே விலங்குகளும் பல்லுயிர் ஓம்பும் பண்பாட்டை மேற்கொண்டு வாழ்கின்றன. பெரியவர்கள் எவ்வாற்றானும் பிறருக்கு உபகாரஞ் செய்ய விரும்புவார்கள். தங்கள் வசதிக்கேற்ப உடலால் உபகாரஞ்செய்தலும், கையிற் கிடைத்த பொருளைப் பிறருக்குத் தருதலும் உபகாரம் என்றே கூறப்பெறும். இவ்விரு வகையிலும் கோசல நாட்டில் வாழும் பிராணிகளும் பிறருக்குப் பயன்படும் சிறப்பைக் கண்டு வரலாம், வாருங்கள் :

அதோ ஒரு குளம் தெரிகிறதன்றோ? அதில் ஒரு தாமரைப்பூ இருக்கிறது பாருங்கள். அந்தப்பூவை நன்கு கவனித்தீர்களானால், அதில் ஒரு சிறிய அன்னக்குஞ்சு உறங்குவதைக் காணலாம். அந்த

அன்னக்குஞ்சு இங்ஙனம் அயர்ந்து உறங்குகின்றதே! அதன் பசி தீர்ந்ததெப்படி? சுகமாகத் தூங்கச் செய்வது எது? தேரை வேறு எந்த வகையில் அன்னக்குஞ்சுக்கு உபகாரம் செய்ய முடியும்? தன்னால் முடிந்த செயலைச் செய்கிறது. இதுவே கோசல நாட்டின் தனிச்சிறப்புக்கு ஒரு காரணம். இயல்வது கரவா இயல்பைக் காணும் நாடே சிறந்த நாடென்பதைக் கவிஞன் மிக நன்றாகச் சுட்டி உணர்த்துகிறான் என்று எண்ணுகிறீர்களா? அந்தக் குளத்தில் சகதியில் கிடந்து மகிழும் எருமைகள் வீட்டிலே நிற்கின்ற தம் கன்றுகளைப் பரிவுடன் நினைக்கப் பால்சுரந்து ஒழுகுகிறது. அந்தப்பாலை இந்த அன்னக்குஞ்சுகள் வயிறு நிரம்ப உண்டு திளைக்கின்றன. இப்படி உண்டியை முடித்துக் கொண்ட அன்னக்குஞ்சுகள் அயர்ந்துறங்க, அக்குளத்தில் உள்ள பச்சைத் தேரைகள் தாராட்டுகின்றன.

''சேலுண்ட ஒண்க ணாரின் திரிகின்ற செங்கால் அன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா ராட்டும் பண்ணை.''

(நாட்டுப்படலம், 13)

(சேல் மீன் போன்ற ஒளியுடைக் கண்களையுடைய பெண்களைப் போன்று திரிகின்ற சிவந்த காலையுடைய அன்னம் தாமரையில் பொரித்துவிட்ட குஞ்சு, தன் கன்றை நினைந்த எருமை சொரிந்த பாலை உண்டுவிட்டு உறங்க, அத்தாமரையினருகிலுள்ள தேரை தாலாட்டுவது போலக் கத்துகிறது.)

தாமரைப்பூ காற்றில் அசையும் பொழுது அதில் அன்னம் இருந்து உறங்குவதைத் திருத்தக்க தேவர் தமது சிந்தாமணியில் அழகாகக் கூறுகிறார்:

''தாய்தன் கையில் மெல்லத் தண்என் குறங்கின் எறிய
ஆய்பொன் அமளித் துஞ்சும் அணியார் குழவி போலத்
தோயும் திரைகள் அலைப்பத் தோடார் கமலப் பள்ளி
மேய வகையில் துஞ்சும் வெள்ளை அன்னம் காண்மின்!''

(சிந்தாமணி, 935)

இதே கருத்தைக் கம்பநாடன் இன்னும் அழகுபடுத்திக் கூறிய சிறப்பைக் கண்டோம். தேரை அன்னக் குஞ்சுக்குச் செய்யும் உபகாரத்தை கண்டோம். ஆனால், தேரை தன்கூடவே குளத்தில் வாழும் அன்னக்குஞ்சுக்கு உபகாரம் செய்வது பெரிய சிறப்பன்று.

முன்பின் தெரியாதவர்கட்கு உபகாரம் செய்வதையே பெரியோர்கள் பாராட்டுவார்கள்.

**மீன்களின் களிப்பு**

கடலில் இருக்கின்ற மீன்கள் உப்புச் சுவையை அன்றி வேறு ஒன்றையும் அறியாதவை. சுவைகளிற் சிறந்த இனிப்பை அவை எவ்வாறு அனுபவிக்க இயலும்? என்றாலும், கோசல நாட்டில் உள்ள மரங்களும் கரும்புகளும் கடல் மீன்கட்கு இனிப்புச்சுவையை ஊட்டக் கருதி என்ன செய்கின்றன தெரியுமா? கரும்பின் சுவை ஒரு வகை இனிமை; பாளையில் வருகின்ற கள்ளின் சுவை வேறொரு வகை இனிமை; பழரசங்களில் வருகின்ற சுவை மற்றொரு வகை இனிமை; நேரே தேன் கூட்டிலிருந்து கிடைக்கும் தேனின் சுவை இன்னொரு வகை இனிமை; மலர்களிலிருந்து வரும் தேனின் சுவை பிறிதொரு வகை. இவை அனைத்தும் ஒன்றாகச் சேர்ந்து கடலில் சென்று பாய்ந்த உடனே கடல் மீன்கள் தம் வாணாளிலே கிடைக்காத இத்தேனை உண்டு, சற்று வெறிபிடித்து ஆடின. இக்காட்சியையும் கவிஞன் நமக்குக் காட்டுகிறான்.

''ஆலைவாய்க் கரும்பின் தேனும் அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் தேனும் தொடைஇழி இறாலின் தேனும்
மாலைவாய் உகுத்த தேனும் வரம்புஇகந்து ஓடி வங்க
வேலைவாய் மடுப்ப உண்டு மீனெலாம் களிக்கும் மாதே.''

(நாட்டுப்படலம், 9)

(அரிதலை—அரிந்த நுனி. தொடை இழி இறால்—ஒழுங்காக ஒழுகும் தேன் கூடு, வங்கம்—கப்பல்.)

கோசலநாட்டின் இயற்கை வளத்தையும், விலங்குகளின் பண்பாட்டையும் ஒருவாறு கண்டோம். இனி இத்தகைய நாட்டில் வாழும் மக்கள் வளத்தைக் காண்போம்.

## 1.2 கோசல மக்கள் வாழ்வு முறை

### செல்வப் பயன்

'நாடு என்ப நாடா வளத்தன' (குறள், 739) என்றார் வள்ளுவப் பெருந்தகையார்

இயற்கையில் கிடைக்கும் செல்வம் மிகுதியாய் இருத்தலே நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்தும்.

மக்கள் முயற்சி எவ்வளவு அதிகப்படினும், அதற்கேற்ற பயன் இல்லையாயின், அந்நாடு முன்னேற இயலாது.

கோசலநாட்டின் நீர் வளம், நில வளம் எத்தகையவை என்பதைக் கம்பநாடன் குறிக்கும் வகையை முன்னர்க் கண்டோம். இத்துணை வளம் பெற்ற நாட்டில் வாழும் மக்கள் எத்தகையர் என்பதைக் காணல் வேண்டும். ஒரு நாடு மிக்க வளமுடையது என்ற ஒரே காரணத்தால் மட்டும் அந்நாட்டு மக்களும் சிறந்தவர்கள் என்று கூறி விடுதற்கில்லை. இன்று அனைத்து வளங்களும் நிறைந்த நாடுகளிலேயே போரைப் பற்றிய அச்சம் மிகுந்திருக்கிறது. நம்மைப்போன்று சாதாரண நாட்டில் வாழும் மக்களாவது ஓரளவு அமைதியுடன் வாழ்கின்றார்கள். எனவே, வளப்பம் மக்களை நல்வழிப்படுத்தவும் பயன்படலாம்; அன்றேல், மேலும் மேலும் பேராசைப்படவும், பிறரை அடிமைப்படுத்தும் நோக்கத்திற்கு இரையாக்கவும் பயன்படலாம். இவ்விரு வகையிலும் பொருட்செல்வம் பயன்படுதல் கூடும் என்பதற்காகவே வள்ளுவர், "செய்க பொருளை; செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு அதனிற் கூரியது இல்" (759) என்று ஒரு குறளில் கட்டளை இட்டுவிட்டு, மற்றொரு குறளில், "பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள" (241) என்று கூறினார். செல்வம் படைத்தவர் அனைவரும் செம்மையான வாழ்க்கை வாழ்வதாய் இருப்பின், "திருவேறு;

தெள்ளிய ராதலும் வேறு'' (374) என்று ஏன் திருக்குறள் பேசுகிறது? தெள்ளிய அறிவினையுடையார் செல்வம் பெறாமல் வருந்துதலும் அறிவிற்குறைந்தார் பெரும் பொருள் படைத்திருப்பதும் இன்றும் நாம் காணும் அனுபவம். ஆகவே, செல்வம் மிகுந்த நாட்டில் வாழும் மக்கள் எவ்வாறு வாழ்ந்தார்கள் என்பதை விவரமாகக் குறிக்க வேண்டிய கடப்பாடு கவிஞனுக்கு ஏற்பட்டு விடுகிறது. இந்த அடிப்படையில் கம்பன் கண்ட கோசல மக்களைச் சற்று பார்ப்போம்.

**கோசல நாடா, தமிழ் நாடா?**

இப்பொழுது நாம் நுழைந்திருப்பது கோசல நாடு. இந்த நாட்டில் எந்த ஊருக்குள் நுழைந்தாலும் சில பொதுப் பண்பாடு களைப் பார்க்கலாம். இந்த ஊருக்குள் நுழையும் போதே இனிய இசை வந்து காதில் விழுகிறதல்லவா? இத்தகைய இசையைக் கோசலநாடு முழுவதுமே கேட்கலாம். கின்னரர், கிம்புருடர் என்று தேவலோகத்தில் இசையாளர்கள் வாழ்கின்றார்கள் எனக் கேள்விப் பட்டிருக்கிறோம். அது போலக் கோசல நாட்டிலும் ஒரு கூட்டத் தார் உண்டு. அவர் 'சிறியாழ்ப்பாணர்' எனப்படுவர். உலகத்தில் மக்களாய்ப் பிறந்த யாவருக்கும் கவலை என்பது பொதுச்சொத்து ஆனால், ஒரு சில அதிட்டசாலிகள், யாவருக்கும் பொதுவான இக் கவலையைத் தாங்கள் பங்கிட்டுக்கொள்வதில்லை; அதற்கு மறு தலையான மகிழ்ச்சியில் என்றுமே திளைக்கிறவர்கள். அவர்கள் மகிழ்ச்சியின் அறிகுறியாக ஓயாது பாடிக் கொண்டிருப்பார்கள். ''உளங்குளிர்ந்த போதெலாம் உகந்து உகந்து உரைப்பனே'' (திருமுறை-2, திருத்துருத்தி-9) என்று ஞானசம்பந்தர் அருளிச்செய்தபடி எப்பொழுதுமே பாடிக் கொண்டு இருப்பார்கள் போலும்! இவ் வகை மக்கள் ஒரு நாட்டில் இருப்பதே அந்நாட்டின் செல்வ நிலைக்குத் தக்க அடையாளம். ஏனையோர் போல இப்பாணர் ஓர் இடத்தில் நிலைத்துத் தங்கி வாழ்பவர் அல்லர். அவ்வாறு நிலைத்து வாழும் வாழ்க்கையை இவர்கள் விரும்புவதும் இல்லை; 'நாளை உணவுக்கு என்ன செய்வோம்!' என்று கவலைப்படுவதும் இல்லை.

> 'ஊர்எலாம் அட்ட சோறு நம்மதே; உவரி சூழ்ந்த
> பார்எலாம் நமது பாயல்.''

என்று பட்டினத்தார் பாடியதை வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட கூட்டத்தார் இப்பாணர்,

இவர் சிறிய யாழை இடப்பக்கத்தில் தாங்கி ஊர் ஊராகச் சென்று தமது இனிய இசையால் மக்களை மகிழ்விப்பர். அம் மக்கள் இவர்கள் இசையைக் கேட்டு மகிழ்ந்து, பிறகு பசிப்பிணிக்கு உணவிட்டுப் போக்குவார்கள். இது பழந்தமிழ் நாட்டில் காணப் பெற்ற இயல்பு. தனது உடம்பின் குருதி முழுதும் தமிழ்க்குருதியாக ஓடப்பெற்ற தமிழ்க் கம்பன், இவ்வியல்பைக் கோசலம் என்றுதான் கனவு கண்ட நாட்டுக்கு ஏற்றுகிறான். தமிழ் நாட்டின் சிறந்த இயல்புகளையும் அமைப்புக்களையும் இங்ஙனம் அவன்கோசலத் திற்கு ஏற்றியுள்ள முறையை அவனுடைய இராமாயணத்தை ஒரு முறை கற்றாரும் நன்கு அறிவர். இப்பாணர் பகலவன் உதயஞ் செய்வதற்கு முன்பே எழுந்து தமது இனிய கீதத்தை இசைத்துக் கொண்டு ஊர் முழுவதும் சுற்றி வருகின்றனராம். இவர்கள் பாடலின் இனிய ஓசை, உயர்ந்த மாடங்களின் மேல் படுத்து உறங்கும் மயில்களின் உறக்கத்தை கலைத்து, எழுப்புகின்றதாம். காலை நேரத்தில் இத்தகைய இனிய கீதத்தைக் கேட்டு மயிலே எழும்போது மற்றவர்களைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ?

''தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவம் மாந்தி
வள்விசிக் கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத்து உம்பர் வெயில்விரி பசும்பொன் பள்ளி
எள்ளருங் கருங்கண் தோகை இன்துயில் எழுப்பும் அன்றே.''
(நாட்டுப் படலம், 8)

(தெள்விளி—இசைப்பாடல் பாடுகின்ற, தேம்பிழி நறவம் மாந்தி—மதுரச் சாறாகிய கள்ளைக் குடித்து, வள்விசிக் கருவி பம்ப—கட்டு அமைந்த தண்ணுமை முதலிய தோல் கருவிகள் ஒலிக்க, வயின்வயின்—ஆங்காங்கே)

இவ்வளவு விடியற்காலையில் நறவம் மாந்தி உலாப் போகிற இக்கூட்டத்தார் எவ்வளவு கவலையற்றவர் என்பதை நாம் ஊகிக்க இடந்தருகிறான் கவிஞன்.

### ஊருக்குள்

நாம் இப்பாடல்களைக் கேட்டுக்கொண்டு இங்கேயே நின்று விடாமல், சற்று ஊருக்குள் செல்வோம் வருகிறீர்களா? இதோ தெரிகிற இப்பெரிய கட்டடம் என்னவென்று நினைக்கிறீர்கள்? இஃது இளம்பெண்கள் பந்தாடுகிற இடம். ஊருக்குப் பொதுவாய் இருக்கிற இப்பந்தாடும் இடம் இன்று நம் நாளில் உள்ள 'சமுதாயக்

கழகம்'[1] போன்றது. இதை அடுத்து நிற்பது உடற்கட்டமைந்த இளைஞர்கள் வில்வித்தையோடு ஏனைய கலைகளையும் பயிலக் கூடிய கூடம். இவை இரண்டும் முறையே சண்பகச் சோலையிலும் ஊர்ப்புறத்திலும் அமைந்துள்ளன. விளையாடும் இடங்களை அமைப்பதிற்கூடக் கோசல மக்கள் காட்டும் மன நிலையைச் சற்றுகவனித்துப் பார்க்கவேண்டும். அவர்களுடைய அனுபவ முதிர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகும் இந்த இடங்கள்.

இளையவர் பந்தாடுமிடம் சண்பகவனமே அன்றிச் சந்தனவன மல்லவாம்; ஏன்? சந்தனவனத்தில் வண்டுகள் நிரம்பியிருக்கும், மகளிர் பந்தினை எறிந்து பிடிக்கும் போது பந்தினை நோக்கும் கண்களைத் தங்கள் துணையோ என எண்ணி வண்டுகள் அணைய வரும். உடனே கண்ணிமைகள் மூடிக்கொண்டுவிட, பந்தைப் பிடிப் பதில் பிழை நேர்ந்துவிடுகின்றது. எனவே, வண்டுறா மலர்ச் சோலையாகிய சண்பக வனங்களுக்கே மகளிர் பந்தாடச் செல்வது வழக்கம் அங்கு. அங்ஙனமே இளங்குமரர்களும் தாங்கள் போர்க் கலை முதலிய கலைகளைப் பயில்கின்ற இடம் மணம் பரந்த ஊர்ப்புறவமேயன்றி நந்தனவனமல்லவாம். நந்தனவனத்தில் ஊராரும், மற்றாரும் வந்து கூடுவர். அதனால், தங்கள் பயிற்சிக்கு தடைவிளையக் கூடும். எனவே, ஊருக்கு அடுத்த முல்லைக்காடு களிலே தான் காளையர் போர்ப் பயிற்சி செய்வார்கள். இதனைக் கவிஞன் அழகாக எடுத்துக்காட்டுகிறான், இப்பாடலின் மூலம்:

"பந்தினை இளையவர் பயில்இடம் மயில்ஊர்
கந்தனை அனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனம்அல, சண்பக வனமாம்;
நந்தன வனம்அல, நறைவிரி புறவம்."

(நாட்டுப்படலம், 48)

### பொழுது போக்கு

மக்கள் வாழ்க்கையைப் பார்க்கப் புறப்பட்ட நாம் அவர்கள் விளையாடும் இடங்களை ஏன் பார்த்துப் கொண்டு நிற்க வேண்டும் என்று நினைக்கின்றீர்களா? அதிலும் ஒரு கருத்து இருக்கிறது. ஒரு நாட்டில் உள்ள மக்கள் தக்கபடி இத்தகைய பொழுது போக்கைப் பெறவில்லையானால், செம்மையான வாழ்க்கையைப் பெற இயலாது. பகல் முழுதும் நன்கு உழைக் கின்றவர்கள் மாலையில் ஓய்வு கொள்ளவும் இளைப்பாறவும் நல்ல

1. Social Club

வசதி வேண்டும். அப்பொழுதுதான் மறுநாள் அவர்கள் நன்கு உழைக்க இயலும். மேலை நாட்டார்கள் இத்துறையில் நன்கு கவனம் செலுத்துவதை இன்றும் காண்கிறோம். நம்முடைய நாட்டிலோ, இளஞ்சிறார்களுக்குக்கூட விளையாடும் இடம் இருப்பதில்லை. அங்ஙனம் இருக்க, பெரியவர்கள் விளை யாட்டிடத்திற்கு எங்கே போவது? நம் தமிழ் நாட்டைப் பொறுத்தவரை இக்குறைபாடு இன்றும் இருந்து வருகிறது. எனவே, கம்பநாடன் கண்ட கனவு நாட்டில் மக்கள் நல்ல பொழுது போக்கைப் பெற்றுள்ளனர் என்று கூறுவதை அறியப் பெரு மகிழ்ச்சி உண்டாகிறது. மாலையில் இத்தகைய இடங்கட்குச் சென்று வர வசதி இன்மையால், நகர மக்கள் இருந்த இடத்தில் இருந்து கொண்டே வம்பளந்து, பிறர் பழி தூற்றவும் பழகிக் கொள்கிறார்கள். விளையாட்டில் மற்றொரு பெரும் பயனும் உண்டல்லவா? பிறருடன் எளிமையாகப் பழகவும், விட்டுக் கொடுத்துப் பழகவும், பிறருக்கும் வாழ உரிமையுண்டு என்பதை அறியவும், "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்ற சமத்துவ உணர்வைப் பெருக்கிக் கொள்ளவும் விளையாட்டைவிடச் சிறந்த கருவி வேறு யாதுளது? எனவே, ஒரு நகர அமைப்பில் இத்தகைய இடங்கள் மிகுதியும் இருக்க வேண்டுபவை என்பதைக் கவிஞன் அறிவுறுத்துகிறான். கோசலநாட்டு மக்கள் நல்ல பண்பாடு உடையவர்களாய் வாழ்வதற்கு இவை போன்ற சாதனங்கள் உதவி செய்தன என்பதைக் கவிஞன் தனக்கே உரிய முறையில் கூறுகிறான்.

இவ்விளையாட்டிடங்களில் தங்கள் காலம் முழுவதையும் கழிக்கின்ற மக்கள், இன்றும் நம் நாட்டில் உண்டு. வாழ்க்கையில் செய்ய வேண்டிய பெரும் பணிகளுள் ஒன்றையுஞ் செய்யாமல் இருக்கும் இவர்கள், தமக்கும் பிறருக்கும் பாரமாய் உள்ளவர்கள். வேறு அலுவல்கள் இன்மையால் இவர்கள் விளையாட்டில் தங்கள் காலம் முழுவதையும் வீணே செலவழிக்கின்றார்கள். அவ்விளை யாட்டையும் பயனுடையதாகச் செய்யாமையின், இவர்கள் சோம்பேறிகளே! இளைஞர்களாய் உள்ளவர்கள் இவ்வாறு பழகிக் கொள்வார்களாயின், ஒரு நாட்டிற்கு இதைவிடத் தீமை வேறு இருத்தற்கில்லை. எனவே, கவிஞன் மிக்க கவனத்துடன் இவர்கள் செய்யும் காரியத்தைக் 'கலை' என்று கூறுகிறான்; 'கலை தெரி கழகம்' என்ற சொற்களால் இவ்வரிய பொருளைப்பெற வைக்கிறான். வில்வித்தை போன்ற கலைகளை இவர்கள் வயிறு

வளர்க்கும் சாதனமாகக் கொள்ளவில்லை.' 'விளையாட்டாகச் செய்யப்படுவதே கலை', என்றார் சிட்னி கால்வின்[1] என்ற மேனாட்டுத் திறனாய்வாளர்.

**போர்க்கலை**

இனி இன்னுஞ் சிறிது தூரம் உள்ளே சென்று பார்த்தால் ஆண் மக்கள் தங்களுக்கே உரிய போர்த்தொழிலைப் பயிலும் இடங்களைக் காணலாம். யானைப் போர் முறை ஓர் இடத்தில் பழகுகிறார்கள்; இதோ அதனை அடுத்தவிடத்தில் குதிரை ஏற்றமும், அடுத்த இடத்தில் விற்படை முதலியவற்றையும் பயில் கிறார்கள். இவை அனைத்தையும் சேர்த்துக் கவிஞன் "போர்க் கலை தெரிதலில் பொழுதுபோம் சிலர்க்கு" (நகரப்படலம், 68) என்று கூறுமுகத்தான் இவர்கள் வாழ்நாளில் இதனையே தொழி லாகக் கொண்டவர்கள் என்பதை அறிவிக்கிறான். 'பொழுது போம்' என்றதால், நாள் முழுவதும் இதனையே செய்கிறார்கள் என்பதும் பெறப்படுகிறதன்றோ? இதனால், முன்னர்க் கூறிய 'கலை தெரி கழகத்' திற்கும் இதற்கும் உள்ள வேறுபாடு நன்கு தெளிவாகிறதன்றோ?

போர் செய்வதில் இத்துணை விருப்பம் உடையவர்களாய் இவர்கள் இருந்தார்கள் என்றால், வாழ்க்கையில் எவ்விதம் வாழ்ந்தார்கள் என்ற ஐயம் எழத்தானே செய்யும்? போர் செய்வ தால் வாழ்க்கையின் இனிய பகுதிகளை அறியாதவர்கள் என்று எங்கே நாம் நினைத்துவிடப் போகிறோமோ எனக் கருதிக் கவிஞன் அடுத்த பாடலில் இன்னுஞ்சில வகை மக்களைப் பற்றிப் பேசுகிறான். இவர்கள் எல்லா நாட்டிலும், எல்லாக் காலத்திலும் இருப்பவர்கள்; வாழ்க்கையில் இன்பம் ஒன்றையே நாடுபவர்கள். இவர்கள், 'பழுமரம் தேரும் பறவை போல,' 'எது வரினும் வருக! அன்றி, எது போகினும் போக! இன்பம் மாறாத வாழ்வு ஒன்று மாத்திரம் எமக்கருளல் வேண்டும்', என்று வாழ்பவர்கள்.

உலகம் தோன்றிய நாளிலிருந்து இவ்வகை மக்கள் எல்லா நாட்டிலும், எக்காலத்திலும் உள்ளார்கள். உழைப்பு என்பது இவர்கள் அறியாத ஒன்று. உழைக்கின்றவர்கள், "ஐயோ! பொழுது போதவில்லையே கடமையைச் செய்து முடிக்க!" என்று வருந்துகிறார்கள். ஆனால், இவ்வகை மக்கள், "ஐயோ! பொழுது போகவில்லையே!" என்று கவலை கொள்ளுகிறார்கள்.

1. Sydney Colvin in his Essay on Art (in Ency-Britanica)

நாள் எனும் வாள்

இரு சாராருக்கும் பொழுது என்பது ஒன்றாயினும், அவரவர் மன நிலைக்கு ஏற்பவும் அது காட்சியளிக்கிறது.

இத்தகைய மக்கள் இருப்பதனாலன்றோ வள்ளுவர், 'நாள்என ஒன்று போல் காட்டி உயிர்ஈரும் வாள்' என்று கூறி விட்டுவிடாமல், 'அஃதுணர்வார்ப் பெறின்' (குறள். 334) என்றும் கூறினார்? 'ஒரு நாள் என்பது, நம் வாழ்நாளின் ஒரு பகுதியை வெட்டி எடுக்கிற வாளாயுதம் போன்றதாகும்', என்று கூறினார் ஆசிரியர்; ஆனால், இவ்வுண்மையை அறிகிறவர் உலகில் மிகச் சிலரே என்பதையும் நன்கு அறிந்தவராகலின், 'அஃது உணர்வார்ப் பெறின்' என்றும் சேர்த்துக் கூறினார்.

கோசலம் என்னும் கனவு நாட்டிற்கூட மக்கள் இவ்விரு வகை மனப்பான்மையுடன் இருக்கின்றார்கள் என்பதை அறிவுறுத்தவே கவிஞன் 'போர்க்கலை தெரிதலில் பொழுது போம் சிலர்க்கு' (நகர், 68) என்று கூறுகின்றான்.

வாழ்க்கையில் இவ்வளவு மகிழ்ச்சி ஏற்படுவதற்குக் காரணம், ஒரு நாட்டின் செல்வ வளமேயாகும். அச்செல்வ வளம் எத்தகையது என்பதை முன்னரும் கண்டோம். இனிக் கவிஞன் ஒரே பாடலில் இத்துணை வளங்களையும் கூறும் முறையைக் காண்போம்.

விளைநில வளம்

''நீரிடை உறங்கும் சங்கம்; நிலத்திடை உறங்கும் மேதி;
தாரிடை உறங்கும் வண்டு; தாமரை உறங்கும் செய்யாள்;
தூரிடை உறங்கும் ஆமை; துறையிடை உறங்கும் இப்பி;
போரிடை உறங்கும் அன்னம்; பொழிலிடை உறங்கும் தோகை''

(நாட்டுப் படலம்,5)

இப்பாடலின் பொருள் மிக எளிதாய் விளங்குகிறது; ஆனால், அதே காரணத்தால் நம்மை ஏமாற்றியும் வருகிறது. விளங்குகிற காரணத்தால் நுணுகி ஆராய்ச்சி செய்யாமல் விட்டுப் போய் விட்டால், இதிலுள்ள பொருள் நயத்தை இழந்து விடுவோம். ''தண்ணீரில் சங்கு உறங்குகிறது. ஏனெனில், தண்ணீரில் கிடந்து புரளாமல் எருமைகள் நிழலில் அசை போட்டுக் கொண்டு உறங்கு கின்றன. இவை அனைத்திற்கும் 'ஏன்?' என்ற வினாவை எழுப்பினால் உண்மை விளங்கும். எருமை ஏன் நிழலில் படுத்து

உறங்குகிறது, தெரியுமா? வயிற்றில் பசி இன்மையாலே தான். சுகம் அனுபவிப்பதில் ஈடு இணையற்ற விலங்காகிய எருமை, வயிற்றில் தீனி நிறைந்ததும் மர நிழலில் படுத்துக் கொண்டு அசை போட்டு, உட்கொண்ட தீனியை மீட்டும் மென்று சீரணிப்பிக்கிறது. இவ்வாறு அசை போடும் நிலைமை எப்பொழுது வரும்? வயிறு நிறைந்திருந்தால் அன்றோ? வயிறு நிறைவதற்கு வழி என்ன? எருமை புல்லையும் வைக்கோலையும் விரும்பித் தின்னும். ஆனால், இங்குக் கூறப்பெற்ற எருமை வைக்கோலைத் தின்னவில்லை. அது எவ்வாறு தெரிகிறது? வைக்கோல் போரில் அன்னம் உறங்குகிறது என்றதற்கு, மாடு வைக்கோலைத் தின்னவில்லை என்பது தானே பொருள்? எனவே, புல்லை வயிறு நிறைய மேய்ந்துள்ளது எனில், அக்கருத்து ஒரு பொருளை நமக்கு அறிவிக்கிறது. ஒரு நாட்டில் விளை நிலங்களுக்கே இடம் போதவில்லை எனில், புல் தரை எங்கே இருக்கப் போகிறது? புல் தரை நிறைய இருந்து இம்மாடு புல்லை வயிறு நிறையத் தின்றது என்பதனால், விளைநிலைங்களும் நிறையவுள்ளன என்பதும் பெறப்பட்டது.

### மக்கள் வளம்

இனிக் கவிஞன் மக்கள் வளம் பேசுகிறான் அடுத்த அடியில். 'வண்டுகள் மாலையில் உறங்குகின்றன. தாமரைப் பூவில் இலக்குமி உறங்குகிறாள்.' என்ற இத்தொடர் ஓர் ஐயத்தை விளைக்கிறது. வண்டுகள் மலரில் உறங்குவது உண்டு; ஆனால், மாலையில் உறங்குகின்றன என்றது சற்று வியப்பே. ஒரு வேளை மாலையில் உள்ள மலர்கள் புதியனவாய் இருந்து அவற்றில் தேனும் இருக்குமாயின், வண்டுகள் மொய்க்கும். தமிழில் 'நாண்மலர்' என்னும் தொடர்ச்சொல் உண்டு. 'அன்று மலர்ந்த பூ' என்பதே இதனுடைய பொருள். இத்தகைய மலர்களைத் தொடுத்து மாலையாக அணிந்தால், அம்மாலையில் வண்டுகள் மொய்க்கும். இதனால், அந்நாட்டு மக்களின் முருகியல் சுவை[1] எத்தகையது என்பதைக் கவிஞன் கூறிவிட்டான். கோசல மக்களின் பொழுது போக்கில் அன்றலர்ந்த மலர்களாக எடுத்து மாலையாகக் கட்டி அணிதலும் ஒன்று என்பது பெற்றோம். அம்மட்டோடு அன்றி, மாலையை அணிந்த அவர்கள் அல்லும் பகலும் அலைந்து கொண்டே இருப்பார்களாயின், அவர்கள் அணிந்துள்ள மாலையில் வண்டுகள் எவ்வாறு உறங்க முடியும்?

---

1. Aesthetic taste

எனவே, அம்மக்கள் போதுமென்ற மனமுடையவர்களாய்ப் பிறரும் தாம் பெற்ற இன்பத்தைப் பெறட்டும் என்று நினைப்பவர்களாய் இருந்தார்கள்; இதையே இந்த ஓர் அடியில் கூறிவிட்டான் கவிஞன். இந்தப் பகுதிக்கு இதுவே பொருள் என்பதை இவ் வடியின் பிற்பகுதி நன்கு அறிவுறுத்துகிறது. அம்மக்கள் போது மென்ற மனமுடையவர்களாய், மேலும் மேலும் பொருள் தேட வேண்டும் என்று அலையாதவர்களாய் இருந்தமையின், இலக்குமிக்கு இந்நாட்டில் வேலை இல்லை. மக்கள் ஓயாது பொருள் தேடுதலையே குறிக்கோளாகக் கொண்டிருப்பின், செல்வத் திருவுக்கு ஒவ்வொருவரிடமும் செல்ல வேண்டிய நிலைமை ஏற்படும். அப்பொழுது அவளுக்குத் தாமரையில் உறங்க நேரம் ஏது? எனவே, ''செய்யாள் தாமரையில் உறங்கு கிறாள்'' என்று கூறினமையின், யாரும் இலக்குமியை விரும்பி அழைப்பாரில்லை என்பது பெறப்பட்டதன்றோ?

கோசலமக்கள் தங்கள் வாழ்க்கையில் இத்தகைய ஓர் அமைதியை— இலக்குமியைக்கூட விரும்பாத ஓர் அமைதியை அடைந்து விட்டார்கள் என்று கூறுவதால், ஒரு நாட்டு மக்கள் வாழ்க்கையில் கொள்ள வேண்டிய குறிக்கோள் எத்தகையது என்பதைக் கவிஞன் புலப்படுத்திவிட்டான். இனி இந்நிலையை அவர்கள் அடைந்த முறை பற்றிச் சற்றுக் காண்போம்.

## 1.3 ஆடவரும் பெண்டிரும்

**நல்ல நாடு :**

உலகின் சில பகுதிகளைப் புண்ணிய பூமி என்று கூறுகின்ற வழக்கம் இன்றும் உண்டு.

ஒரு நாட்டிற்கூடச் சில பகுதிகளை இவ்வாறு கூறும் இயல்பும் உண்டு.

இங்ஙனம் கூறும் வழக்கம் இன்று நேற்றுத் தோன்றியதன்று; மிகப்பழைய நூல்களிலும் இத்தகைய பழக்கத்தைக் காண்கிறோம்.

ஒரு நாட்டை 'நல்ல நாடு' என்றும், 'புண்ணிய பூமி' என்றும் எப்பொழுது கூறுகிறோம்? அந்த நாட்டின் வளப்பத்தையும் செல்வச் செருக்கையும் கொண்டு இப்பெயர் தோன்றுவதில்லை. பின்னர் என்ன காரணத்தால் இப்பெயர் வருகிறது? பழந்தமிழ்ப் புலவர்களுள் ஒருவராகிய ஔவையார், இவ்வினாவை எழுப்பி விடையுங் கூறுகிறார்.

''நாடாக ஒன்றோ காடாக ஒன்றோ
அவலாக ஒன்றோ மிசையாக ஒன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!'' (187)

என்று புறநானூற்றுப் பாடலில் இப்புதிருக்கு விடை கூறுகிறார் அப்புலமைப்பிராட்டியார். 'நாடாக இருப்பினும் காடாக இருப்பினும், பள்ளமாக இருப்பினும் மேடாக இருப்பினும் கவலை இல்லை. எங்கே மக்கள் நல்லவர்களாய் இருக்கிறார்களோ, அங்கேதான் நாடும் நல்ல நாடு என்று கூறப்படும், என்பதே இப்பாடலின் பொருள். நாடு நல்லது என்று கூறும்பொழுது நாட்டில் உள்ள மக்களையே சொல்வோனும் குறிக்கிறான்; கேட்போனும் அறிகிறான்.

நல்லவர் யார்?

'நல்லவர்' என்ற மொழியை மக்கள் எங்ஙனம் பெறுகின்றார் கள்? 'நல்லவர்' என்று குறிக்கும் பொழுது பண்புடைமை என்னும் நம்மையைத் தான் குறிப்பிடுகிறோமே தவிர, அறிவுடைமை, ஆராய்ச்சித் திறன், செயலாற்றும் திறன் முதலியவற்றைக் குறிப்பிடவில்லை. நன்மை வேறு; இவ்வியல்புகள் வேறு. நன்மை உள்ளவிடத்தில் இவ்வியல்புகள் இருக்கும் என்றோ, அன்றி இவ்வியல்புகள் இருக்கும் இடத்தில் நன்மை இருக்கும் என்றோ கூறுவதற்கில்லை. 'பண்புடைமை, சான்றாண்மை, என்று வள்ளுவர் குறிக்கும் இயல்புகளையே இங்கு 'நன்மை' என்று குறிப்பிடுகிறோம். ஒரு நாட்டில் மக்கள் மிக்க அறிஞர்களாய் இருக்கலாம். அதனால் அந்நாடு சிறந்தது என்று கூறும் மரபு தமிழரிடம் இல்லை. அறிஞர்கள் நிறைந்த நாட்டில் மக்கள் சமுதாயம் நன்கு வாழ வழி வகுக்கப்பட்டால், அதை நல்ல நாடு என்று கூறுகிறோம். அதற்கு மறுதலையாக அங்கு அணுக்குண்டும் ஹைட்ரஜன் குண்டும் தோன்றினால், அதனை உண்டாக்கியவர் களை நல்லவர்கள் என்று கூற முடியுமா? அறிவும் ஆற்றலும் வேறு; பண்பாடு என்பது வேறு. மக்கட்சமுதாயம் இன்றைய நிலையில் அறிவு வேட்டையில் இறங்கியுள்ளதே தவிரப் பண் பாட்டைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை. இவ்வாறு கூறுவதால், மக்களுக்கு அறிவு தேவையில்லை என்று நினைத்துவிட வேண்டா. அறிவு தேவைதான். ஆனால், பண்பாட்டுடன் கலவாத அறிவு நன்மை விளைக்காது. மனிதனுக்கு எல்லா உறுப்புக்களும் உரம் பெற்றிருக்க வேண்டும். சிறப்பாகக் குத்துச்சண்டை செய்பவர்களை எடுத்துக்கொள்வோம். அவர் களுடைய முன் கைகள் தாம் பயன்படுகின்றன. அதனால் ஏனைய உறுப்புக்களை நன்கு வளர்க்காத ஒருவன் இத்தொழிலில் ஈடுபட இயலுமா? இத்தொழிலை நன்கு அறிந்தவர் இஃது இயலா தென்பதை நன்கு அறிவர். அதே போல, மனிதன் முழு வளர்ச்சியடைய வேண்டுமாயின், அறிவு பண்பாடு என்ற இரண்டும் வளர வேண்டும். இவ்விரண்டனுள் பண்பாடில்லாத அறிவு வளர்ச்சி தன்னைத்தானே அழித்துக் கொள்ளும்; அறிவில்லாத பண்பாடு நீண்ட நாள் நிலைத்து வாழ முடியாது. எனினும், 'மக்கட்சமுதாயத்திற்கு மிகுதியும் வேண்டப்படுவது எது?' என்றால். பண்பாடு என்று உடனே கூறிவிடலாம்.

**பண்புடையாரே நல்லார்:**

அறிவின் அவசியத்தை அறியாதவரல்லர் வள்ளுவப் பெருந் தகையார். அவர் இரண்டு குறள்களில் அறிவின் இலக்கணத்தையும் அதன் இன்றியமையாமையையும் கூறினார். ஆனால், இறுதியில், 'இவ்வுலகின் நிலை பேற்றுக்குக் காரணம் யாது?' என்ற வினாவை எழுப்புகிறார். ஆம்! உலகம் நிலை பெறுவது அறிவாற்றலாலா, அன்றிப் பண்பாட்டாலா? ஒரு முகமாக விடை கூறுகிறார் ஆசிரியர்.

''பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்; அஃதின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.'' (996)

என்ற குறளில் உலகம் நிலை பெறுவது பண்புடையாளராலேயே என்று விடை கூறிவிட்டார்.

இப்பேருண்மையை நன்கு அறிந்த கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன் தான் கண்ட நாட்டில் மக்களைப் படைக்கையில் இவ்வியல்பை மறவாமல் பேசுகிறான்; ஆம்! கோசல மக்கள் பண்பாட்டில் சிறந்தவர்கள் என்றே கூறுகிறான். இப்பண்பாட்டை எவ்வாறு பெற்றார்கள் அவர்கள்? கல்வி பண்பாட்டை வளர்க்குமா? கல்வி செம்மையானதாயிருப்பின், அது நிச்சயம் பண்பாட்டை மிகுவிக்கும். ''கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்'' (சித்தர் கணம்-10) என்று தாயுமான அடிகளும், ''கற்றாரை யான் வேண்டேன்'' (திருப்புலம்பல், 3) என்று மணி வாசகப் பெருந்தகையுங் கூறியவை நம் மனக்கண் முன்னர் வருகின்றன. ஆனால், இவர்கள் அவ்வாறு கூறக் காரணம் யாது? தாயுமான அடிகளே அக்காரணத்தை அடுத்த அடியில் விளக்கிவிடு கிறார். ''கற்றும் அறிவில்லாத என் கன்மத்தை என்சொல்வேன்!'' என்று அவர் கூறும் பொழுது காரணம் விளங்கிவிடுகின்றது. கல்வியின் பயனாகப்பண்பாடு பெருகவேண்டும்; அவ்வாறு பெருகா தாயின், அக்கல்வி பயனற்றது என்று கூறத்தேவை இல்லை. ஆனால், அதற்கும் மேலாக அக்கல்வி முன்னர் உள்ள பண் பாட்டையும் கெடுக்குமானால், அக்கல்வி இருப்பதைவிட இல்லா திருப்பதே மேல் என்று கூறத் தோன்றுகின்றதன்றோ? அது கருதியே வள்ளுவரும், ''கற்றதனாலாய பயன் என் கொல்?'' என்று கேட்டார், உண்மையான கல்வி பண்பாட்டை வளர்த்தல் வேண்டும்.

**கோசல நாட்டு ஆடவரும் பெண்டிரும்:**

இக்கருத்துக்களை மனத்தில் பதித்துக் கொண்டு கம்பன் கூறும் கோசலநாட்டு ஆடவர் பெண்டிர் இரு பாலாரையும் பார்க்க வேண்டும். பெண்டிரை முதலில் எடுத்துக் கொள்வோம். காரணம், ஒரு நாட்டின் சமுதாய வாழ்வின் வேராய் இருப்ப வர்கள் பெண்களே. வெளிக்குத் தெரியாமல் மரத்தின் வளர்ச் சிக்கு உதவுவது வேர் அன்றோ? அதேபோல, ஆண் மக்களின் வாழ்வு செழிக்க வீட்டினுள் இருந்து உதவுபவர் பெண்டிரேயாக லின், அவர்களை முன்னர்க் காண்போம். கம்பராமாயணத்தின் முதற்செய்யுளில் இக்கருத்தைக் கவிஞன் பேசுகிறான்; கோசல நாட்டுப் பெண்டிர் ஆடவர் என்ற இரு பாலாரின் பண்பாட்டைப் பேசுகிறான். பண்பாடு என்பது ஒரு சாராரிடத்தில் மட்டும் இருந்து பயன் இல்லை, எனவே, காப்பியத்தின் முதற்செய்யுளில் இக்கருத்தைப் பேசுவதால், மக்கள் பண்புடையவர்களாய் வாழ வேண்டும் என்பதில் கவிஞன் எத்துணைக் கருத்துடையவன் என்பது விளங்கும்.

''ஆச லம்புரி ஐம்பொறி வாளியும்
காசு அலம்பு முலையவர் கண்எனும்
பூசல் அம்பும் நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை நாட்டணி கூறுவாம்.''

(ஆற்றுப்படலம், 1)

[துன்பத்திற்கு ஏதுவான குற்றங்களைச் செய்யும் ஐம்பொறி களும், பெண்களின் கண்களும் தவறான வழியில் செல்லாத கோசலம்.]

என்ற கவிதையால், 'ஆண்மக்களுடைய ஐம்பொறிகளும் மகளிரின் கண்ணாகிய பொறியும் நன்னெறியினின்றும் பிறழாத கோசலநாடு' என்று கூறுகிறான்; இதிலும் ஒருசிறப்புத் தந்தே பேசுகின்றான். 'ஆசு அலம் புரி' என்றதால், 'துன்பத்திற் கேதுவான குற்றத்தைச் செய்யும் இயல் புடையனவாகிய ஐந்து பொறிகளும் என்கிறான். இவ்வைந்து பொறிகளும் (உடம்பு, வாய், கண், மூக்கு, செவி) குற்றம் செய்யும் இயல்புடையன வாயினும், இவற்றை அவ்வாடவர்கள் அடக்கி ஆளும் திறம் கூறப்பட்டது காண்க. ஆட்வர் குற்றம் நீங்கின பண்பாட்டை உடையவர் என்று கூறிய கவிஞன், பெண்டிரின் கண்கள் நன்னெறியினின்று வழுவாதன என்றுங் கூறினான். கண்கள் கூட முறையற்றனவற்றைக் காண மறுக்கும் என்பதால், அவர்கள்

பண்பாட்டிற்குக் கவிஞன் ஓர் எல்லை காட்டிக் கூறிவிடுகிறான். இப்பெண்டிருக்கும் ஆடவருக்கும் மிகுந்த கல்வியறிவும் உண்டு என்று கவிஞன் கூறப்போகிறான் என்றாலும், கல்வி அறிவுகளினும் சிறந்து வேண்டப்படுவது ஒழுக்கமேயாகலின், அதனை முதற் பாட்டிலேயே தெளிய உணர்த்தி மேற்செல்லுகிறான்.

**பெண் கல்வி :**

இனிக் கவிஞன், அவர்கள் பெற்றுள்ள பண்பாட்டிற்குத் துணை செய்த கல்வியைப்பற்றிக் கூறுகிறான். அந்நாட்டில் பெண்டிரும் நிறைந்த கல்வியைப் பெற்றிருந்தனர் என்று கூறுகிறான் கவிஞன். வேறு எந்த நூலிலும் காண இயலாத முறையில் இக்கருத்தைத் தனியாக ஒரு பாடலில் கம்பநாடன் கூறுகிறான்; பெண் கல்வியில் இக்கவிஞனுக்கு இருந்த ஆர்வத்தை என் என்று கூறுவது! இந்தச் சந்தர்ப்பத்தில் 'பிளேட்டோ' என்ற கிரேக்கப் பெரியார் தமது 'ரிபப்ளிக்கு' என்ற நூலில் கூறியுள்ளது அறிதற்குரியது: "ஆண் மகன் ஒருவனைத் தக்கவனாகச் செய்யும் அதே கல்வி, பெண் மகளையும் தக்கவளாகச் செய்யும், ஏன் எனில், அடிப்படையில் அவர் இருவருக்கும் பொதுத் தன்மை ஒன்றே."[1] அதுவும் கம்பன் வாழ்ந்தது பன்னிரண்டாம் நூற்றாண்டில் என்று நினைக்கும் பொழுது நமது வியப்புப் பன்மடங்காகிறது. இப்போது கல்வி முறை இருக்கும் நிலையில் ஆடவரும் பெண்டிரும் ஒரே விதமான கல்வியைப் பெறுகின்றனர். ஆனால், இம்முறை சிறந்ததன்று எனவும், பெண்டிருக்கென்று தனி முறைக் கல்வி இருத்தல் வேண்டும் எனவும் கூறுகிறவர் இன்றுண்டு. ஆனால், அன்றே கம்பநாடன் இதுபற்றிக் கூறியுள்ளான். 'பொருந்திய செல்வமும் பொருந்திய கல்வியும் பெற்றிருந்தார்களாம் கோசலநாட்டுப் பெண்கள். 'பொருந்து கல்வி' என்றமையால், அவர்கள் வாழ்க்கை சிறப்புறுதற்குரிய கல்வியைப் பெற்றுத் திகழ்ந்தார்கள் என்பதை அறிகிறோம். மேலும், 'பொருந்து கல்வி' என்றமையின், அவர் களிடம் சேர்ந்தமையினாலேதான் அக்கல்வி கூட விளக்கம் அடைந்தது என்றும் கவிஞன் தெரிவித்துவிடுகிறான். சிலரிடம் அமைந்திருப்பதால் சில பொருள்கள் சிறப்பை அடைகின்றன. அதுபோலத்தானே சிறக்கும் இயல்புடைய கல்வி அம்மங்கையரை

---

1. You will admit that the same education which makes a man a good guardian will make a woman a good guardian; for their original nature is the same—Yes. PLATO's Republic, Book V.

அடைந்தமையின் மேலுஞ் சிறப்பை அடைந்தது என்னுங் கருத்தும் உள்ளடங்கவே 'பொருந்து கல்வி' என்று ஆசிரியன் கூறுகிறான். இனிப் பாடலைப் பார்ப்போம்:

''பெருந்த டங்கண் பிறைநுத லார்க்குஎலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே?''

(நாட்டுப்படலம், 36)

இப்பாடலால் கவிஞன் அப்பெண்கள் பெற்ற கல்வி, பண்பாட்டைத் தரும் கல்வி என்ற கருத்தைக் கூறி விட்டான். 'அந்நாட்டு மகளிரிடத்து விருந்தினரை உபசரிக்கும் செயலும், வெளி நாட்டிலிருந்து வந்தவர்க்கு ஈதலும் அல்லாமல் வேறு என்ன தொழில்கள் இருந்தன?' என்கிறான் கவிஞன். ஆம்! இந்த இருசெயல்களும் பண்பாட்டின் தலையாய வெளிப்பாடு அல்லவா? இவற்றை அவர்கள் செய்கிறார்கள் எனின், இப்பண் பாட்டை எங்கிருந்து பெற்றார்கள்? பொருத்தமான கல்வி யுடைமையின், அதன் பயனாகப் பண்பாடு அமைந்தது என்று கூறுகிறான் கவிஞன். இந்த இடத்தில் விருந்தினர் வருகையைக் கண்ட மகளிர் உள்ளத்துவகையை உவமானமாகக் கம்பன் கையாளும் திறன் சிந்தித்து மகிழ்தற்குரியது. இரண்டு இடங்களில் அவன் கூறுவனவற்றைக் கேட்டு மகிழ்ந்துவிட்டு மேலே செல்வோம்.

''விருந்தினர் முகம்கண் டன்ன
விழாஅணி விரும்பு வாரும்'' (பால. நாட்டு. 15)

''விருந்துகண் டுள்ளம்
களிக்கும் மங்கையர் முகம்எனப் பொலிந்தன கமலம்.''

(கிட்கிந்தை. கார். 37.)

விருந்தளிக்கும் பண்பாட்டுச் செல்வத்தின் விழுமிய தன்மையைக் கவிஞன் எப்படி உணர்த்திச் செல்கிறான் பார்த்தீர்களா!

இனி இக்கல்விச் செல்வம் கற்றல் கேட்டல் என்று இரு வகைப்படும் என்பது நாம் அறிந்ததேயாம். கோசல மக்கள் எதனை மிகுதியாகப் பெற்றார்கள் என்பதையும் கம்பன் கூறுகிறான். நம் நாட்டவர்கள், 'கற்றலிற் கேட்டலே நன்று,. என்று கூறினார்கள். இவ்வாறு கூற ஒரு காரணமும் உண்டு

ஒரு மனிதன் ஒவ்வொன்றையும் தானே கற்றல் வேண்டும் என்று முடிவு செய்து கொண்டால், இவ்வுலகில் உள்ள கலைகளில் ஒன்றைக் கற்கக்கூட அவன் வாழ்நாள் போதாது. எனவே, தானே முயன்று ஒவ்வொன்றையும் கற்றலைக்காட்டிலும், கற்றவரிடத்துக் கேட்டல் மிகவும் எளிது. ஒருவர் பன்னெடுங் காலம் செலவழித்துப் பயின்ற ஒன்றை மிக எளிதாக ஒரு மணியிலோ இரண்டு மணியிலோ கூறமுடியும். அதனைக் கேட்பவர் வருத்தம் யாதுமின்றி அதனை எளிதில் அறிந்து கொள்ளலாம் அன்றோ? இதனாலேயே 'கேட்டல் சிறந்தது' என்று கூறினார்கள். இத்தகைய 'செவிவழிக் கல்வியே' கோசலத்தில் மிக்கிருந்தது எனக் கவிஞன் கூறுகிறான்.

**கேள்விச் செல்வம் துய்த்தல் :**

''பருந்தொடு நிழல்சென்று அன்ன இயல்இசைப் பயன்துய்ப் பாரும்
மருந்தினும் இனிய கேள்வி செவியுற மாந்து வாரும்'' (நாட்டு. 15)

''காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்'' (நாட்டு. 15)

என்ற அடிகளால் கேள்விச் செல்வத்தை மிகுதியும் துய்ப்பவர்கள் கோசல நாட்டு ஆடவரும் பெண்டிரும் என்ற கருத்தைக் கூறுகிறான். கேவலம் பொழுது போக்கின்பொருட்டு இன்று நூல்களைப் படித்தலும், சொற்பொழிவு கேட்டலும் நடைபெறுகின்றன. ''பயனில் சொல் பாராட்டு வானை, மகன், எனல்; மக்கட் பதடி எனல்,'' (196) என்று வள்ளுவர் கூறியிருந்தும் இன்று நம்முள் பலரும் இதனைச் செய்ய அஞ்சுவதில்லை. உண்மையில் கேள்வி நமக்குப் பயனுடையதாய் இருப்பின் அன்றி, அது வீண் காலம் போக்குவதேயாகும். எனவே, கோசல மக்கள் கேட்டது. ''மருந்தினும் இனிய கேள்வி'' என்று கூறப்படுதலால், அமிழ்தம் உண்பவர்க்குத் தப்பாமல் நன்மை விளைப்பதுபோல, இவர்கள் கேள்வியும் தப்பாமல் நன்மை விளைத்தது என்கிறான். 'மருந்தினும் இனிய' என்றது, ஈண்டு நோக்கற்பாலதாம். மருந்து- அதாவது அமிழ்தம்- நாவுக்கு மட்டுமே இனிக்கும். ஆனால், கேள்வியோ, செவிக்கும், உள்ளத்திற்குங்கூட இனிமை பயப்ப தாகும். அமிழ்தமோ, உண்ணுங்கால் மட்டுமே இனிக்கும். ஆனால், கேள்வியோ, கேட்கும்போது மட்டுமன்றி அதன் அருமையை எண்ணும் போதும் பேசும் போதுங்கூட இனிக்கும். ஆகவேதான் 'மருந்தினும் இனிய கேள்வி, என்றான் கவிஞன். 'வாயுறை வாழ்த்து' என்பதொரு வகைப் பாடல் தொல்காப்பியத்தில்

குறிக்கப்பெறுகிறது. வேம்பும் கடுவும் அன்ன வெஞ்சொல்லால், பின்னர் நன்மை விளைக்கும் என்ற கருத்தால், இடித்துச் சொல்வதாகும் இது. கடுமையான சொற்களும் இக்காரணத்தால் விரும்பி ஏற்றுக்கொள்ளற்குரியன. ஆனால், அவ்வாறு சொல்லப் படும் சொல்லும் இனிமையுடையதாய் இருக்குமாயின், இன்னுஞ் சிறப்பல்லவா? அதை மனத்துட் கொண்டு தான் கவிஞன், 'இனிய கேள்வி' என்று கூறுகிறான்.

இவ்வாறு மக்கள் இனிய கேள்வி ஞானத்தை எவ்விடங்களிற் பெற்றார்கள் என்ற வினா அடுத்துத் தோன்றுமன்றோ? நல்ல சொல்லைக் காதால் கேட்பதும் அரிதாகவுள்ள இக்காலத்தில் இது பற்றி அறிய வேண்டுவது மிகவும் இன்றியமையாததாகிறது. கோசல மக்கள் நல்ல கேள்வி ஞானத்தைப் பெறுவதற்கென்றே பல அவைகள் அந்நாட்டில் இருந்தனவாம். 'தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்தல் வேண்டும்' என்று கூறினார், நம் காலத்தில் வாழ்ந்த கவிச்சக்ரவர்த்தி பாரதியார். பாரதியார் கண்ட கனவு புதியதன்று தமிழ்க் கவிஞர்கள் பரம்பரையாகக் காண்கிற கனவுகளுள் ஒன்றாகும், இது. கம்ப நாடனும் கோசலத்தில் இத்தகைய கேள்வி ஞானத்தைப் பரப்பும் அவைகள் இருந்தன என்று கூறுகிறான்.

பட்டி மண்டபம் :

''மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்
அன்னமென் னடையவர் ஆடும் மண்டபம்
உன்னரும் அருமறை ஓதும் மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்''.

(நகரப்படலம், 62)

என்பதில் நான்கு வகையான மண்டபங்கள் கூறப்படுதலைக் கவனித்தல் வேண்டும். பலநாட்டுச் சிற்றரசர்களும் கொண்டு வந்து கொடுக்கும் கப்பப் பொருள்களை அளந்து கணக்கிடுகின்ற மண்டபம் ஒரு புறம்; அன்னத்தை ஒத்த மென்னடையுடைய மகளிர் ஆடுகின்ற நடனமண்டபம் மற்றொரு புறம்; அருமையின் அளவை உள்ளத்தானும் கணிக்க முடியாத அளவு பெருமை மிக்க வேதங்களை ஓதுகின்ற மண்டபம் பிறிதொரு புறம்; உரைத்தற் கரிய பெருமை வாய்ந்த பல்கலைகளை ஆராய்ச்சி செய்கின்ற பட்டி மண்டபம் என்பது இன்னொரு புறம். இப்படியாக நான்கு மண்டபங்களைக் காட்டுகிறான் கம்பன் நமக்கு. சமுதாய

வளர்ச்சிக்குப் பொருள் அடிப்படை யன்றோ? எனவே, கவிஞன் பொருள் குவியும் மண்டபத்தை முதலிற்காட்டி அடுத்து உள்ள எழுச்சியை ஊட்டும் நடன மண்டபத்தைக் காட்டுகிறான். கல்வி சமுதாயத்திற்கு இன்றியமையாததல்லவா? எனவே கல்வியின் சிகரமாகிய மறை ஓதும் மண்டபத்தைக் காட்டுகின்றான். கற்றதனால் மட்டும் பயன் உண்டா? தெளிவு இல்லாமல் நெட்டுருச் செய்துவிட்டதால் நன்மை விளையுமா? எனவே, கற்ற வற்றை எல்லாம் வல்லோர் பல்லோடனுமிருந்து ஆராய்ச்சி செய்து உண்மை காண்பதன்றோ கற்றவர்க்கழகு? பட்டி மண்டபம் என்பது பெரும்பான்மை சொற்போர் நடைபெறும் இடத்தையே குறிக்கும். எனவே, இங்கே குறிப்பிட்ட மண்டபத்தில் கலையாராய்ச்சி நடைபெற்றதென்றும் அதனைக் கேட்பவர் மிகுதியும் பயன் பெற்றனரென்றும் அறிய முடிகிறது.

**நுண்கலைகள்[1] :**

இவ்வளவு கல்வி வளர்ச்சியடைந்த நாட்டில் கலையின் சிகரமாய் உள்ள கவிதை தோன்றாமலா இருக்கும்? ஒரு நாட்டின் கலை வளர்ச்சியை அறிவிப்பன அந்நாட்டு மொழியில் தோன்றிய கவிதைகள் என்று கூறுதல் தவறாகாது. கோசலநாட்டில் ஓவியக் கலை மிக்கிருந்தது என்பதை, ''எழுதுசித் திரங்களும் இமைப்பி லாதவே,'' (நகர்-50) என்ற அடியால் கவிஞன் காட்டுகிறான். எத் துணை அறிவு வளர்ந்த நாடாயினும், அந்நாட்டில் கலைவளர்ச்சி இல்லையாயின், நாகரிகமும் பண்பாடும் நன்கு வளரவில்லை என்றுதான் கூற வேண்டும். நல்ல பண்பட்ட மனமே கலை முகிழ்த்தற்குச் சிறந்த நிலைக்களம். அக்கலைகள் பல திறப் பட்டன. சாதாரணக் கலையென்றும், நுண்கலையென்றும் கலையை இரண்டாகப் பிரித்தனர் திறனாய்வாளர். உணவு சமைத்தல் முதல் அனைத்தும் கலை எனப்படுமேனும், இவை சாதாரணக் கலைகள் எனப்படும். ஆனால் கட்டடம், சிற்பம், ஓவியம், இசை கவிதை என்பனவே நுண்கலைகள் எனப்படும். தான் கண்ட கனவு நாட்டில் இத்தகைய நுண்கலைகள் மலிந் துள்ளன என்கிறான் கவிஞன்.

**கவிதைக்கலை :**

கோசலத்தில் மிக்கிருந்த இசைக்கலை பற்றியும், சித்திரக்கலை பற்றியும், நாடு முழுவதும் நிறைந்திருந்த கட்டடக்கலை பற்றியும் கூறிய கவிஞன், இனிக் கவிதைக் கலை பற்றியும் கூறத் தொடங்கு

1. Fine Arts

கிறான். கோசல நாட்டில் புலவர்கள் நிறைந்துள்ளார்கள். அவர்கள் சிறு நூல்களையும் பாடல்களையும் பாடுவதில் கவனம் செலுத்தாமல், பெருங்காப்பியம் பாடுவதில் முனைந்துள்ளார்களாம். அவர்கள் ஆக்கும் காதைகள் கவிதைகளால் ஆக்கப்படுகின்றனவாம். பெரிய வரலாறுகளைக் கூறுகையில் உரை நடையிலும் கூறுவதுண்டு; ஆனால், கவிதையில் கூறுவது போன்ற அவ்வளவு சிறப்பை அவை பெறுவதில்லை. எனவே, கவிஞன் கோசலத்தில் புலவர்கள் கூறும் வரலாறுகள் அனைத்தும் கவிதைகளாகவே உள்ளன என்ற கருத்துப்பட, ''காதைகள் சொரிவன செவி நுகர் கனிகள்'' (நாடு.51) என்று கூறுகிறான். சிறந்த கவிதை செவ்விய ஓசை நயம் உடைதாய் இருக்கும். இன்று அச்சடித்த கடிதத்தில் பொறித்துள்ள கவிதையை மனத்திற்குள்ளாகவே படிக்கும் பழக்கத்தை மேற் கொண்டுள்ள நாம் கவிதையின் சிறந்த ஒரு பகுதியை அனுபவிக்கத் தவறிவிடுகிறோம். கவிஞன் கவிதையை இயற்றும்பொழுது கேட்போரின் காதுகளை நம்பித்தான் 'சப்த ஜாலங்களை'ச் செய்கிறான். எனவே, கவிதையை நன்கு அனுபவிக்க வேண்டுமாயின், வாய் விட்டு, ஒலி காதுகளில் விழும்படியாக, உரக்கப் படிக்க வேண்டும். அப்பொழுது தான் கவிதையின் முழுப்பயன் தெரியும். இதை மனத்துட் கொண்ட கவிஞன், 'செவி நுகர் கனிகள், என்று கூறுகிறான். 'கவிகள்' என்ற பாடமும் உண்டு. காதுக்குள்ளே கனி நுழையுமா என்று தெளிந்த சந்தேக ரசிகர்கள் 'கனி யைக் 'கவி, யாக்கி ஆறுதல் அடைந்திருக்க வேண்டும். அதன் பயன்தான் 'கவிகள்' என்ற பாடம். ''செவி நுகர் கனிகள்'' என்பதை நன்கு துய்த்து இன்புற்று மகிழ்ந்தமையாலே தான் பாரதியார்.

''இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே.''

என்று அழுத்தந் திருத்தமாகக் கூறிப் போர்ந்தார். ஆனதாலே தான் காதுகள் நன்கு கேட்டு அனுபவிக்கக் கூடிய கவிதைகளால் ஆக்கப்பெற்றிருந்தன என்கிறான் கோசல நாட்டுப் புலவர்கள் பாடிய காதைகளைக் கம்பன். சரிதானே?

**வெண்மை இல்லை :**

இதனை அடுத்துக் காண வேண்டிய பயனும் ஒன்றுண்டு; ஒரு நாட்டின் கல்வி நிலை நன்கு அமைந்திருந்தால், அந்நாட்டு மக்களின் அறிவு திண்மையுடையதாய் இருக்கும். கல்வி உடையார் அனைவரும் திண்மை உடையார் என்று கூறல் இயலாது' கற்றார் அனைவரும் திண்மையுடையராயின், 'கற்றறி மூடர்.

என்ற முதுமொழி தோன்றக் காரணம் இல்லை. மேலும், வள்ளுவப் பெருந்தகையாரும்,

"அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு." (503

என்றல்லவா கூறினார்? 'வெளிறு' என்று ஆசிரியர் இங்குக்) குறித்தது 'அறியாமை' ஆகிய தன்மை. கற்றறிவுடைமை மனிதனிடத்தில் ஆழ்ந்து கிடக்கும் அறியாமையைப் போக்கி விடாது என்பதே நம்மவர் கண்ட அனுபவ உண்மை. கல்வி அறியாமையைப் போக்குவதாயின், கற்றார்கள் மிகுதியாக உள்ள நாட்டில் குற்றம் மிகுதியாக இருக்க வழி இல்லை. ஆனால், இன்றைய உலகை மேலாகப் பார்த்தாலும், இக்கூற்று உண்மை யற்றது என்பது விளங்கும்' நூற்றுக்குத் தொண்ணூறு வீதம் கற்றவரைப் பெற்ற நாடுகளே பேராசை கொண்டு போரைப் பற்றித் தீவிரமாக ஆராய்ச்சி செய்கின்றன. எனவே, கல்வியால் மட்டும் பயனில்லை என்பது கண்கூடு. கோசலத்தில் கற்றார் நிறைந்துள்ளனர் என்று மட்டுங் கூறினால் எங்கே இந்தக் குறை பாடு வந்து விடுமோ என்று அஞ்சிய கவிஞன், 'வெண்மை' அவர் களிடம் இல்லை என்று கூறுகிறான்.

"வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால்;
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்;
உண்மை இல்லைபொய் உரைஇ லாமையால்;
வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்.
(நாட்டுப் படலம், 53)

வறுமை இன்மையால் கொடைச் சிறப்புத் தெரிவதில்லை; போர் இன்மையால் வலிமை தெரிவதில்லை; பொய் இன்மையின் உண்மையின் சிறப்புத் தெரிவதில்லை; கேள்வி ஞானம் உண்மையின் அறிவின்மை இல்லை, என்ற கவிதையால் வெண்மையாகிய அறியாமை அந்நாட்டில் இல்லாமையும் அதற்குரிய காரணமும் நன்கு விளக்கப்பெற்றுள்ளன.

இதே கருத்தை மற்றொரு வகையாகவும் கூறுகிறான் கவிஞன். ஒருவரை எப்பொழுது கல்வியுடையார் என்று கூறுகிறோம்? தம் பெயரைத் தட்டித் தடவி எழுதத் தெரிந்தவர் களைக் கற்றவர் என்கிறோமா? இல்லையே! அப்படியானால், எவ்வளவு கற்றவர்களைக் கற்றவர் என்று கூற முடியும்? கற்றவர் என்று ஒருவரைக் குறிப்பதே ஓர் ஒப்பு நோக்குச் சொல்லாகும்.

தம் பெயர் மட்டும் எழுதத் தெரிந்தவர்கூட, அதுவுந் தெரியாத வரை நோக்கக் கற்றவர்தாம். இவரை நோக்க எடுத்த நூலை வாசிக்கத் தெரிந்தவர் கற்றவரென்றே கூறப்பெறுவர். அப்படி யானால், கற்றாரென்று யாரைத்தான் குறிப்பது? கோசல நாட்டில் அனைவரும் நன்கு கற்றவராகவே உள்ளனர். ஆகவே, ஒப்பு நோக்கு முறையில் 'கற்றார்' 'கல்லாதவர்' என்று கூறத்தக்கார் ஒருவரும் கோசலத்தில் இல்லையாம்.

''கல்லாது நிற்பார் பிறர்இன்மை யின்கல்வி முற்ற
வல்லாரும் இல்லை; அவைவல்லர் அல்லாரும் இல்லை.''
(நகரப்படலம், 74)

என்ற பாடலின் மூலம் இவ்வழகிய கருத்தைக் கூறுதல் காண்க.

எனவே கோசல நாட்டில் வாழ்ந்த ஆடவரும் பெண்டிரும் மிகவும் நல்லவர் என்பதும், சிறந்த அறிவும் பண்பாடும் நாகரிகமும் பெற்றிருந்தனர் என்பதும், கல்வியிற் சிறந்தவர் என்பதும், சிறந்த கேள்வி ஞானம் உடையவர் என்பதும் இதுவரை கூறியவற்றால் விளங்கக் காண்கிறோம். ஒரு நாட்டில் மக்கள் எத்தகையவர் களாய் இருக்க வேண்டும் என்பதைப் பற்றி எத்தனையோ பெரும் புலவர் தம் கருத்தைக் கூறியதுண்டு. ஆனால், கவிச்சக்கரவர்த்தி கம்ப நாடன் கூறும் மக்கட் சமுதாயம் தனிப்பட்ட சிறப்புடன் விளங்குவதை இக்கவிதைகள் அறிவிக்காமல் இரா. இத்தகைய பண்பாடு நிறைந்த மக்கள் மேற்கொண்ட வாழ்க்கை பற்றியும், அவர்களது அரசியல் பற்றியும் அடுத்துக் காண்போம்.

# 1.4 கோசல அரசியல்

**மக்கள் நிலை :**

கோசலநாட்டு ஆடவரும் பெண்டிரும் பெற்ற கல்வியையும் அக்கல்வியால் பெற்ற பண்பாட்டையும் கண்டோம்.

இப்பண்பாட்டை அடிப்படையிற்கொண்டு அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையையும், அவர்கள் பெற்றிருந்த அரசியலையும் இனிக் காண்போம். அரசன் மக்களின் பொருட்டு இருக்கிறான். பழந்தமிழ் நாட்டில் அரச உரிமை பரம்பரைச் சொத்தாகவே இருந்து வந்தது. எனினும், அரசன் தன் விருப்பம்போல ஆட்சி செலுத்தாமல், மக்கள் நலம் கருதியே ஆண்டு வந்தான் என்பது அறிய முடிகிறது.

கோசலநாட்டு மன்னனும் இவ்விதிக்கு விலக்கானவன். அல்லன். அவன் ஆட்சி சிறக்க உதவியவர்கள் அந்நாட்டு மக்களே மன்னன் எவ்வளவு சிறந்தவனாயினும், மக்கள் மாண்பில்லாதவர் களாய் இருப்பின், அவன் ஆட்சி சிறவாது. எனவே, கம்பநாடன் தான் படைத்த மன்னனைப்பற்றிக் கூறுமுன்னர் அவனால் ஆட்சி செய்யப் பெற்ற மக்களைப்பற்றிக் கூறுகிறான். "மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி," என்று கூறும் பழமொழியைத் திருப்பி வைத்துப் பார்த்தாலும் அஃது உண்மையாகும். மக்கள் சிறந்த வழி மன்னன் சிறப்பதும், அவர்கள் சிறவாத வழி மன்னன் சிறவாமையும் உண்மையே. எனவே, கோசலநாட்டு மக்கள் எத்தகைய மன்னனைப் பெறத் தகுதி வாய்ந்தவர்கள் என்பதைப் பேசுகிறான் கவிஞன்.

**கோபத்தை வென்றோர் :**

அரசனது தலையாய கடமை நாட்டில் குற்றங் களைதல் என்பார்கள். 'துட்டர்களை அழித்தலும் சிட்டர்களைப் பரிபாலித்

தலும் அரசன் கடமைகளுள் தலையாயவை, எனச் சுக்கிர நீதி கூறுகிறது. ஆனால் கோசலநாட்டு மன்னனுக்கு இத்தகைய வேலை இல்லை என்கிறான் கவிஞன். குற்றம் நிகழ்ந்தால் அன்றோ அதனைக் களைய வேண்டும்? இந்நாட்டில் குற்றம் செய்வாரே யாரும் இல்லையாம். நமக்கே கொஞ்சம் வியப்பாக இருக்கிறதன்றோ? 'மக்கள் என்று இருந்தால், குற்றம் செய்யாதவர்களாக இருக்க இயலுமா? என்று கூடக் கேட்கத் தோன்றுகிறது. இத்தகைய சந்தேகம் கவிஞனுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். எனவே, அவன் அடுத்த அடியில் இதற்கு விடை கூற முற்படுகிறான். மனிதன் எப்பொழுது குற்றம் செய்கிறான்? அறிவை இழந்த பொழுதுதான் குற்றம் செய்கிறான். அறிவை எப்பொழுது இழக்கிறான்? கோபம் வந்த பொழுதுதான் மனித அறிவு பாழ்படுகிறது. எனவே, கோபமே மனிதன் குற்றம் செய்யக் காரணமாகிறது என்ற உண்மையை 'பகவத்கீதை' யுங்கூடப் பறை சாற்றுகிறது[1], 'ஆகலின், ஒருவன் குற்றம் செய்யாதிருக்கச் சிறந்த வழி கோபப்படாதிருப்பதுதான். கோபம் எப்பொழுது வாராமல் இருக்கும்? மனத்தில் தெளிவு இருக்கும் பொழுதுதான் கோபத்தை வாராமல் தடுக்க இயலும். கோபமே வாராமல் இருப்பது என்பது ஒன்று. வந்த கோபத்தை வெளிக்காட்டாமல் இருப்பது ஒன்று. இவ்விரண்டனுள் இரண்டாவது கூறப்பட்டது சிறப்பில்லாத ஒன்று. அது நம்முள் பலரும் செய்கிற ஒன்று. பெரியவர்கட்குக் கோபமே வாராமல் இருக்க வேண்டும். மனத்தெளிவால் அவர்கள் இதனை நிறைவேற்ற முடிகிறது. கோசல மக்கள் சிந்தையில் தெளிவு பெற்று அதனால் கோபம் வாராமல் காத்துக்கொண்டு, அதன் பயனாகக் குற்றம் என்பதையே செய்யாமல் இருக்கிறார்கள் என்பதைக் கவிஞன் இதோ சுவைபடக் கூறுகிறான்:

"கூற்றம் இல்லைஓர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லைதம் சிந்தையின் செம்மையால்."

(நாட்டுப் படலம், 39)

குற்றஞ்செய்யாதவர்மேல் கூற்றுவன் செல்வதில்லை என்றமையின், அந்நாட்டு மக்கள் இறப்பதே இல்லை, என்று யாரும் நினைந்துவிட வேண்டா. இறப்பு என்பது தவிர்க்க முடியாத ஒன்று. இங்கே 'கூற்றம்' என்பது அகாலமரணத்தையே! 'காலன், கூற்றம்' என்பவை வெவ்வேறு பொருளைக் கொண்ட

---

1. பகவத்கீதை, 2-ஆம் அத்தியாயம், ஸாங்கிய யோகம், பாடல்-62, 63.

சொற்கள். காலமுடிவிலே உயிர் போவதைக் 'காலன் வாய்ப் பட்டான்' என்றும், இடைக்கூற்றில் தற்கொலை, தூக்குத் தண்டனை' கொலை முதலியவற்றால் உயிர்போவதைக் 'கூற்றுவன் வாய்ப்பட்டான்' என்றும் சொல்லுவோம். எனவே அந்நாட்டில் அகாலச் சாவு இல்லை என்றே கொள்ள வேண்டும் அதாவது, அந்த நாட்டில் பழக்க வழக்க ஒழுக்கத்தால் குற்றமிழைத்து அதனால் மீளா நோய்க்காளாகி அகாலமரணத் திற்கு ஆளாவதோ, அன்றிச் சமுதாயவாழ்வில் தீய குற்றங்கள் புரிய அதனால் தூக்குத் தண்டனையடைவதோ, அல்லது எவருடனும் கொண்ட பகை காரணமாகக் கொலை செய்யப் படுவதோ இல்லை. காரணம், அந்நாட்டு மக்களின் மனச்செம்மை தான் என்கிறான் கவிஞன். இங்குக் கூறப்பெற்ற 'சிந்தையின் செம்மை' என்பது, வாழ்க்கையில் எத்துணைப் பயன்படக்கூடியது என்பதை நம்முள் ஒவ்வொருவரும் சற்று ஆராயவேண்டும். வாழ்க்கையில் பெற வேண்டிய பேறுகள் அனைத்திலும் தலையாயது சிந்தையின் தெளிவாகும். இது கருதியே போலும் பெரியோர்கள் 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவு'[1] என்று கூறினார்கள்! இனி அந்தப் பாடலின் பின்னிரண்டு அடிகளைப் பார்க்கலாம்;

'ஆற்ற நல்லறம் அல்லது இலாமையால்
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே!'

முன்னிரண்டடிகள் மக்கள் மனத்துச் செம்மையை வெளிப் படுத்தினால், இந்த இரண்டடிகளும் ஆட்சிச் செம்மையை விளக்கு கின்றன. அந்நாட்டு மக்கட்பண்பும் ஆட்சிச் சீர்மையும், தீயன புரிய எண்ணிச் செல்வோர்க்குங்கூட அங்கு இடமோ, வாய்ப்போ, வழியோ இல்லாமல், நல்ல செயல்களுக்கே வழி வகுத்து வைத்திருக்கின்றன. எனவே, அந்நாட்டிற்கு நாளுக்கு நாள் 'ஏற்றம்' (உயர்வு) ஏற்படுகிறதே அன்றி ''இழி தகவு'' (மேனின்றவர் தாழ்வது) என்பது சிறிதும் இன்று என்று கவிஞன் கூறுவது எவ்வளவு நயமாய் இருக்கிறது பார்த்தீர்களா!

**கள்வர் இல்லை:**

இந்நிறைவால் அம்மக்கள் பெற்ற பயனைக் கவிஞன் மேலும் கூற முற்படுகிறான். கோசல நாட்டில் மக்கள் தம்முடைய பொருளைப் பாதுகாத்து வைப்பதுகூட இல்லையாம். ஏன் எனில்,

1. குமரகுருபர அடிகளார்; சிதம்பர மும்மணிக்கோவை. பிரபந்தத் திரட்டு, 476.

அப்பொருளைக் கவர்ந்து கொண்டு போக அவண் ஒருவரும் இல்லை. களவு செய்யும் மனப்பான்மையைத் தடுப்பது அத்துணை எளிதன்று. இதனை வென்றவர்களைப் போற்றத்தான் வேண்டும். இதனாலேயே போலும் கள்ளாமை என்ற அதிகாரத்தை வள்ளுவப் பெருந்தகையார் துறவற இயலில் வைத்துப் போனார்! துறந்தேமென்று கூறுவாரும் துறத்தற்கரிய ஒரு மனப்பான்மைபோலும் இது! எனவே, கோசல மக்களிடம் இப்பண்பைக் கவிஞன் கூறும்பொழுது நாம் வியப்படையத்தான் வேண்டியிருக்கிறது.

''கள்வார் இலாமைப் பொருள்காவலும் இல்லை; யாதும்
கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ!''
(நகரப்படலம், 73)

என்று கவிஞன் கூறுகையில் இன்னும் ஒரு படி மேலே சென்று விடுகிறான்.

களவு மனப்பான்மை இல்லாதிருப்பதற்குரிய காரணமும் நன்கு விளங்குகிறது நான்காம் அடியினால். மக்கள் பண்பு எத்துணை உயர்ந்ததாயினும், வறுமை மிக்க வழியும் பசி மிகுந்த வழியும் பண்பாடு விடை பெற்றுக்கொள்ளும். எனவே, இவை இரண்டும் அங்கில்லை என்று கூறுமுகத்தான் தனது கூற்றை நிலை நாட்டுகிறான் ஆசிரியன். இல்லார் யாரும் இல்லை என்று கூறியதால், பசிப்பிணி இன்றியும் பிறர் பொருளை விரும்புபவர் உண்டு ஆகலின், அத்தகையோரும் இல்லை என்பதை விளக்க, 'கொடுப்பார்களும் இல்லை; ஏன் எனில், கொள்வார் இல்லாத காரணத்தால்' என்று நான்காம் அடியில் அழகாகக் கூறி விட்டான்.

வறுமையும் பசியும் இல்லாமல் இருப்பதாகப் பறைசாற்றும் ரஷியா போன்ற நாடுகளிற்கூட, அனைவரும் எல்லாச் செல்வமும் பெற்றுள்ளார்கள் என்று கூறுவதற்கில்லை. பெருஞ்செல்வமும் பெரிய அதிகாரமும் படைத்த ஆட்சியாளரும், ஆகாரத்தைத் தவிர வேறு வசதியற்ற ஆளப்படுவோரும் அந்நாட்டில் உண்டு என்பதை நாம் அறிவோம். இதனாலேயே அந்நாட்டில் அடிக்கடி போராட்டங்கள் ஏற்படுவதைப்பற்றிக் கேள்விப்படுகிறோம் ஆனால், இத்தகைய குறைபாடுகூடத் தான் கண்ட கனவு நாட்டில் இல்லை எனக் கவிஞன் கூறுகிறான்.

''எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லாலே
இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ!''
(நகரப்படலம், 74)

என்ற இப்பாடலில் அனுபவப் பொருளாகிய பெருஞ்செல்வத்தை அனைவரும் ஒரு சேரப் பெற்றிருந்தனர் என்பதும், எனவே பிறர் பொருளை விரும்புவார் யாரும் இல்லை என்பதும் நன்கு விளங்குவது காண்க. எத்துணைச் செல்வம் பெற்றிருப்பினும், மனநிறைவு இல்லாதவர்களும் உண்டு. அத்தகையார் இந் நாட்டில் இல்லை என்பதை முன்னரே குறித்துவிட்டான் கவிஞன்.

இனி அடுத்துக் காண வேண்டுவது, இந்நாட்டின் அரசனைப் பற்றியதாகும். கோசலநாட்டு அரசியல் பரம்பரையாய் வந்த ஒன்று என்பது, முன்னரே குறிக்கப் பெற்றது. பரம்பரையாய் வரும் இதில் ஒரு நன்மையும், ஒரு தீமையும் உண்டு. அரசியல் நுணுக்கங்களை அறிந்திருக்கும் வாய்ப்புப் பரம்பரை அரசியலில் உண்டு. 'மகன் அறிவு தந்தை அறிவு,'[1] என்ற நாலடியார் முதுமொழி இதற்கு நல்ல சான்று பகர்கிறது. ஆனால், தந்தைக்குப் பிறகு மைந்தனுக்கு அரசுரிமை வந்தே தீரும் என்ற கட்டுப்பாடு ஒரோ வழித் தீமை பயத்தலும் உண்டு. எப்படியும் இச்செல்வம் தம்மை அடைந்தே திரும் என்ற உறுதி காரணமாக அஞ்சாமல் தவறு செய்ய முற்படுபவரும் உண்டு அல்லவா? எனவே இங்குக் கூறப்பெற்ற குற்றத்தை நீக்கிக் குணத்தை மட்டும் மேற்கொண்டு அரசியல் அமைந்திருந்தது என்று கூறுகிறான் கம்பநாடன். இது எவ்வாறு என்பது பற்றிப் பின்னர்க் காண்போம்.

நாட்டை ஆளும் மன்னன் செய்ய வேண்டிய இன்றியமையாக் கடப்பாடுகள் சில உண்டு. அவற்றை வரிசைப்படுத்துகிறான் கவிஞன்.

''முறைஅறிந்து அவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெ:கும்
இறைஅறிந்து உயிர்க்கு நல்கும் இசைகெழு வேந்தன்...',
(நாட்டு.19)

[மரபையும் வரி வாங்கும் நீதியையும் அறிந்து, வரிப்பணம் என்று பேராசையுடன் சேகரிக்காமல், கோபிக்கும் நேரத்தில் கோபித்து, உயிர்கட்கு இரங்கும் புகழ் பெற்ற மன்னன்.]

---

1. நாலடி 7

அரசன் கடமை

நீதியாகிய சட்டத்தை அரசன் நன்கு அறிந்திருத்தல் மிக இன்றியமையாததாகும். சட்டத்தினும் மேற்பட்ட ஒன்று 'மரபு' எனப்படுவது. ஒரு நாட்டில் ஒரு காலத்தில் ஏற்பட்ட சட்டம், அதே நாட்டுக்குக்கூடச் சில காலம் கழித்துப் பயன்படும் என்று கூறுவதற்கில்லை. அவ்வாறாயின், ஒரு நாட்டுச் சட்டம் பிறிதொரு நாட்டுக்கும் ஏற்றதாகும் என்று கூறுவதைக்காட்டிலும் அறியாமை வேறு இல்லை. அந்த அந்த நாட்டின் மரபுகளை அரசன் நன்கு அறிந்திருக்க வேண்டும் என்பதை வலியுறுத்த வந்த கவிஞன், 'முறை அறிந்து' என்று கூறுகிறான். இம்மரபை அறிந்து இதன் வழி வாழாமல் தடுப்பது ஒருவனுடைய அவா அல்லது ஆசையாகும். தன்னைப்பற்றியும் தனது நலத்தைப் பற்றியும் ஓயாது நினைப்பவன், பிறர்பொருட்டு வாழ முடியாதாகலின், அவாவை நீக்கி என்று கவிஞன் அடுத்துக் கூறினான். இனிக் கோபம் என்பது தனி மனிதனுக்குத் தீங்கிழைக்கக்கூடிய ஒன்று. ''சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி'' (306) என்றார் வள்ளுவப் பெருந்தகையார். இந்தச் சினங்கூடச் சில சமயங்களில் வேண்டப் படுவதாகும். பலருடைய நலனைக் கருத வேண்டிய அரசன், அப்பலர் நலத்திற்குக் கேடு செய்யும் சிலரைக் கோபிக்கத்தான் வேண்டி வரும். ஆகவே, 'முனிவுழி முனிந்து, என்று கூறினான். இவை அனைத்தையும் நன்குசெய்யும் அரசன் கூடப் பொருளாசை காரணமாகப் பிறருக்குத் தீங்கிழைத்து விடுதல் கூடும். பொருளாசை அவ்வளவு எளிதில் விடக்கூடிய ஒன்றன்று. எனவே, கவிஞன், ''வெஃகும் இறை அறிந்து'' என்று கூறினான். அரசன் எவ்வளவு வரிப்பணம் வாங்க வேண்டும் என்பது பற்றி இன்று கூடத் திட்டமான முடிவு ஒன்றும் இல்லை. மக்களுடைய கொடுக்கும் சக்தி, அரசனுடைய செலவிடும் வழிகள், கால நிலை, சூழ்நிலை என்ற இவற்றை ஒட்டி மாறுபடும் இயல்புடையது வரி அளவு. எனவே, இவற்றையெல்லாம் உள்ளடக்கிக் கவிஞன் ''வெஃகும் இறை அறிந்து'' என்று கூறிப் போனான்.

இந்த இடத்தில் அரசன் தன்மையைப் பற்றிக் கவிஞன் கிஷ் கிந்தா காண்டத்தில் அரசியற்படலம் 34ஆம் பாட்டில் கூறுவதை ஒப்பு நோக்கிக் கற்பது பயனுடையதாகும்.

''நாயகன் அல்லன்; நம்மை
நனிபயந்து எடுத்து நல்கும்
'தாய்'எனஇனிது பேண த்
தாங்குதி தாங்கு வோரை!

ஆயது தன்மை ஏனும்
அறவரம்பு இகவா வண்ணம்
தீயது வந்த போது
சுடுதியால் தீமை யோரை!''

அரசன் தான் ஒரு தலைவன் என்று கருதப்படக்கூடியவனாய் இருந்துவிடக் கூடாது. 'ஈன்றெடுத்து ஊட்டி வளர்க்கும் தாய் இவன்' எனக் கருதும்படி அன்பு நிறைந்தவனாக மக்களைப் பரிபாலிக்க வேண்டும். இதுதான் முறை என்றாலும், குற்றம் நேர்ந்த இடத்துக் குற்றம் புரிந்தோரை அறத்தினது எல்லை கடவாதபடி தண்டிக்கத் தயங்கக்கூடாது. அன்பு நிரம்பியவர் எனினும், அறத்தாறு செல்லலே அருங்கடன் அரசர்க்கு என்பதை நன்றாகப் புலப்படுத்துகிறான் கவிஞன்!

இத்துணைச் சிறப்பும் உடையானே அரசன் என்று மட்டும் கம்பநாடன் கூறியிருப்பானேயாகில், அவன் ஒரு சிறந்த அரசனைப் பற்றி மட்டும் கூறினவனாவானே தவிரத் தான் படைத்த கனவு நாட்டின் ஒப்பற்ற அரசனைப் பற்றிக் கூறினவன் ஆகமாட்டான். எனவே, அவன் கூறும் தனிச் சிறப்புடைய அரசனைப் பற்றிக் காண்போம்:

இவ்வொப்பற்ற மன்னன் குடிகளுக்கு எவ்வாறு பயன்பட்டான் என்பதைக் கூற வந்த கவிஞன்,

''தாய்ஒக்கும் அன்பில்; தவம்ஒக்கும் நலம்ப யப்பில்;
சேய்ஒக்கும் முன்னின்று ஒருசெல்கதி உய்க்கும் நீரால்;
நோய்ஒக்கும் என்னின் மருந்துஒக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்.''

(அரசியற்படலம்,4)

'குடிகளிடம் கைம்மாறு கருதாமல் அன்பு செலுத்தலி னாலும், அவர்கள் கேளாமலும் அவர்கட்கு வேண்டுவனவற்றைச் செய்தலினாலும் தாயாய் உள்ளான்; குடிகள் செய்த தவமாவான் அவர்க்கு நலஞ்செய்வதில்; அவர்களை முன்னின்று செலுத்தலின் மகன் போல்வான்; குற்றம் உடையாரைத் தண்டித்தலால் நோயாவான்; தண்ணளி செய்தலின் மருந்து போல்வான்; அரசியல் தொடர்புள்ளவற்றையும் பிறவற்றையும் ஆராயும் பொழுது அறிவு போல்வான், என்று கூறுமுகத்தான் சிறந்த அரசனுக்குரிய பண்பாடுகள் அனைத்தையுங் கூறி விட்டான். இத்தகைய அரசனை மக்கள் எவ்வாறு விரும்பி

னார்கள் என்பதை அறியவேண்டாவா? அதற்கும் விடை கூற முற்படுகிறான் கவிஞன்.

### மன்னனே இறைவன்

அரசனைக் குடிகட்குத் தாய் என்று கவிஞன் கூறியது எத்துணைப் பொருத்தம் உடையது என்பதை ஆய்ந்து பார்த்தல் வேண்டும். அடைமொழி தாராமல் கூறிவிட்டாலும், தலையாய தாய்மாரை மனத்துட்கொண்டே கவிஞன் கூறுகிறான். 'பால் நினைந்து ஊட்டுபவள்' அல்லளோ தலையாய தாய்? குழந்தை பசித்து அழுத பிறகு பால் தருபவள் இடைப்பட்டவள் அல்லளோ? தன் குடிமக்கட்கு வேண்டும் நலத்தை அவர் வாய்விட்டுக் கேட்கு முன்னரே செய்கிறான் கோசல நாட்டு மன்னன், அதுவும், சமயமறிந்து, அந்தச் சமயத்திற்கு வேண்டும் நன்மையின் திறம் அறிந்து செய்கிறானாம். இவ்வாறு செய்வதை அம்மன்னன், தான் மன்னவனாய்ப் பிறந்துவிட்டமையின் தன் கடமை என்று நினைந்து செய்யவில்லை; உள் அன்போடு செய்கிறான். அதிலும்? ஒரு பொழுது ஒரு நன்மையைக் குடிமக்கட்குச் செய்துவிட்டுப் பின்னர் என்ன பயனை எதிர்பார்க்கலாம் என்று நினைப்பவர் உண்டு. கைம்மாறு கருதிச் செய்யப்படும் ஒரு நலம் நல்லதே யாயினும், சிறந்தது என்று கூறுவதற்கில்லை. எனவே, கோசல மன்னன் அன்பு, கைம்மாறு கருதாத அன்பு, என்பதை வெளிப் படையாகக் கூறாமல், 'தாய் அன்பு' என்றுமட்டும் கவிஞன் கூறிவிட்டான்; அடுத்து, "தவம் ஒக்கும் நலம் பயப்பில்," என்றான். குடிகள் விரும்பினாலும், சிலவற்றை உடன் செய்தல் ஆகாது. அதே செயலைச் சில நாள் கழித்துச் செய்தால் பெருநன்மை விளையலாம். இதனை அவர்கள் அந்த நேரத்தில் அறியார் களாயினும், பின்னர் அறிய முடியும். தவம், செய்தவனுக்குத் தப்பாமற்சென்று பயன் தருமேனும், அவன் விரும்பிய நேரத்தில் வருவதில்லை. எனவே, தசரதன் காலமறிந்து உதவி செய்தலின் "தவம் ஒக்கும்," என்று கூறப்பட்டான்.

பிள்ளைகளைப் பற்றிக் கூற வந்தான் ஒரு கவிஞன். "இந்த உலகத்திலும் இசையொடு வாழ்ந்து மறு உலகத்திலும் இடம் பெறுவார் யார் எனில், பகைவரும் கண்டு விரும்பத்தக்க குற்றமற்ற நல்ல பண்பாட்டை உடைய குழந்தைகளைப் பெற்றவரே," என்னும் கருத்துப்பட,

"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுஇன்று எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோர்.'

(அகநானூறு, 66)

எனப் பாடினான். எனவே, கோசல மக்கள் இம்மையிலும் புகழுடன் வாழ்ந்து, மறுமை இன்பமும் விடாமற்பெறப் பேருதவி செய்கிறான் அம்மன்னன் எனில், அம்மன்னன் அவர்கட்கு மகன் போன்றுள்ளான் என்று கவி கூறுவதில் தவறில்லை அன்றோ? மகன் போலவும் தாய் போலவும் மட்டும் இருந்துவிட்டால் மன்னன் கடமை முற்றுப் பெற்றுவிடுமா? எனவே, அவன் கடமையை நிறைவேற்றும் பொழுது நோயாகவும் காட்சி அளிக்கிறான். உடம்பில் நோய் எப்பொழுது வருகிறது? ஏன் வருகிறது? தகாத செயலைச் செய்தால் நோய் வருவது உறுதி. உண்ட உணவு சிரணியாமல் இருக்கவும், மேலும் உண்டால் தவறு அன்றோ? அப்பொழுது அசிரணமாய் நோய் வருகிறது. அந்நோய் கண்ட பொழுது யாரும் உண்ண மாட்டார்; பட்டினி கிடப்பர். அந்த நிலையில் நோய் தானாகவே நீங்கிவிடும். எனவே, அசிரணமாகிய நோய் வரும் பொழுது துன்பம் போலக் காணப் படினும், பிறகு நன்மையையே செய்கிறது. அதேபோலக் குற்றம் செய்தவர்களை மன்னன் தண்டிக்கிறான்; ஆனால், அவர்கட்குக் கொடுமை செய்யவேண்டும் என்ற நோக்கத்தால் அன்று; அவர்களைத் திருத்திப் பணி கொள்ளும் நோக்குடனேயே தண்டனை அளிக்கிறான். எனவே, தண்டனை தரும் பொழுது அதுகொடுமை உடையதாகக் காணப்படினும், பின்னர் நன்மை விளைக்கவே பயன்படுகிறது. ஆதலின், 'நோய் ஒக்கும்' என்றான் கவிஞன்; அடுத்து 'மருந்து ஒக்கும்' என்றும் கூறுவதால் நாட்டிற்கு நன்மை தருவது எனில், அந்த நேரத்தில் மக்கள் அதை விரும்பாவிடினும் ; அவன் செய்யத் தவறுவதில்லை என்ற குறிப்பைப் பெற வைக்கிறான். மருந்து உண்ணும் பொழுது கடுங்கசப்பாய் இருப்பினும், பின்னர் நன்மை விளைப்பது போல, அவனும் மக்கள் அந்த நேரத்தில் விரும்பவில்லை எனினும், பிற்பயத்தல் கருதி நலம் செய்கிறான் என்றான். இறுதியாக, 'நுணங்கு கேள்வி ஆயப்புகுங்கால் அறிவு ஒக்கும்' என்று கூறியது மிகச் சிறந்ததாகும். நுட்பமான பொருள்களையும், பிறர் வாயிலாய்க்கேட்ட செய்திகளையும் ஆராயும்போது இன்றி யமையாதது எது? மனிதன் விலங்கு இனத்திலிருந்து வேறாகப்

பிரிக்கப்படுவது எதனால்? ஆராயும் அறிவாலேதான் அன்றோ? அந்த அறிவாய் விளங்குகிறானாம் அம்மன்னன்.

கம்ப நாடன் காலமாகிய பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை தமிழ் நாட்டில் முடியாட்சிதான் நிலைபெற்று இருந்தது; முடியாட்சியினும் பரம்பரையாய் அரசுரிமை இறங்கி வரும் முடியாட்சியே நிலைபெற்றிருந்தது. ஆகலின், அம்மன்னனைப் பொறுத்த வரை அவன் முழுவன்மை பெற்ற கடவுளாகவே மதிக்கப் பெற்று வந்தான்.

புறநானூறு, பதிற்றுப்பத்து முதலிய சங்க இலக்கியங்களைக் கற்பவர், தமிழ் மன்னர்கள் எவ்வாறு தமிழர்களால் மதிக்கப் பெற்று வந்தார்கள் என்பதை அறிய முடியும். கரிகாற் பெருவளத்தான் என்ற பெரிய அரசனின் வன்மையை இதோ கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்ற புலவர் 'பட்டினப்பாலை' என்ற பாடலில் பாடுகிறார், அம்மன்னன் போர்த்திறம் காணுங்கள்:

''பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்
தொடுதோல் அடியர் துடிபடக் குழீஇக்
கொடுவில் எயினர் கொள்ளை உண்ட
உணவில் வறுங்கூட்டு உள்ளகத் திருந்து
வளைவாய்க் கூகை நண்பகல் குழறவும்
அருங்கடி வைப்பின் ஆர்கவின் அழியப்
பெரும்பாழ் செய்தும் அமையான் மருங்குஅற
மலைஅகழ்க் குவனே கடல்தூர்க் குவனே
வான்வீழ்க் குவனே.''

(பட்டினப்பாலை, அடி, 264-272)

(பசிய கிளிகள் தங்கியிருக்கும் அரிய ஊரில் காலில் செருப் பணிந்த வீரர்கள் புகுந்து நெற்கூடுகளைக் கொள்ளை இட்டுவிட, அந்த நெல்லற்ற காலிக்கூடுகளில் கோட்டான்கள் தங்கி நடுப் பகலிலும் கூவும்படி ஊரைப் பாழடித்தும் மனம் அமைதி அடையாதவனாகி மலையைப் பறிப்பான்; கடலைத் தூர்ப்பான்; வானையும் வீழ்த்துவான்.]

இதில் உயர்வு நவிற்சியணி இருப்பினும், பண்டைத் தமிழ் மக்கள் மன்னனுடைய வன்மை பற்றி யாது கருதினார்கள் என்பதற்கு இப்பாடல் தக்கதோர் எடுத்துக்காட்டாகும். இவ்வாறு வன்மையும் படைவலிமையும் உடையவர்களாய் இவ்வரசர்கள்

இருந்தமையின், இவர்கள் நல்வழி ஒழுகவேண்டிய கடப்பாடும் மிகுதியாயிற்று. பலமில்லாத அரசன் தவறான வழியில் சென்றால், அதனால் தீங்கடைபவர் ஒரு சிலரேயாவர். ஆனால் எல்லாவித வன்மையும் படைத்த அரசன் குடிகள்பொருட்டுத் தான் அரசாள வேண்டும் என்று நினைக்கவில்லையாயின் அதனால் விளையுங் கேடும் எல்லையற்றதாய் முடியும், இது கருதியே ஒரு புலவர் அரசன் ஒருவனுக்கு அறிவுரை வழங்க முற்படுகிறார்.

''நெல்லும் உயிர்அன்றே, நீரும் உயிர்அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால்,
யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே'' (புறம்.186)

என்ற இப்பாடலில் இரண்டு உண்மைகளை ஆசிரியர் குறித்துள்ளார், ஒன்று, அரசன் மக்களுக்கு உயிர் போன்றவன் என்பது; இரண்டாவது, அவ்வாறு உணர வேண்டிய கடப்பாடு சாதாரண அரசனுக்கன்று; நல்லபடை வன்மை படைத்தவனுக்கே என்பது. இவற்றுள் முதலாவதை எடுத்துக்கொள்வோம், அரசன் மக்கட்கு உயிர் போன்றவன் என்பதை வெற்று உவமையாக மட்டும் எடுத்துக்கொள்ளலாகாது. உடம்பைக்காட்டிலும் உயிர் சிறப்புடையதென்பதை யாவரும் அறிவர். அதே கருத்தைத் தான் ஆசிரியர் இங்கும் பேசுகிறார். சாதாரண மக்களைக் காட்டிலும் அரசன் சிறந்தவன். உயிரின் விருப்பம் போல உடம்பு இயங்கும் இயல்புடையது. அதேபோன்று அரசன் விருப்பம் போலக் குடிகள் நடக்கக் கடமைப்பட்டவர்கள் என்ற உண்மை நினைவில் இருத்த வேண்டுவது.

**சங்க காலத்துக்குப் பின்**

மன்னனுக்குரிய இத்தனிச் சிறப்புச் சங்க காலத்திலிருந்த தமிழ் மக்களால் ஒப்புக்கொள்ளப்பெற்ற ஒன்றாகும். இன்னும் பிற்காலத்திலும் இக்கருத்தே தமிழ் நாட்டில் நிலவி வந்தது என்பதற்குப் பின்னர்த் தோன்றிய இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ''மன்பதை காக்கும் நன்குடி'' (காட்சிக் காதை, 103) என்று சிலப்பதிகாரம் பேசுகின்றது. பத்தாம் நூற்றாண்டின தாய 'சீவகசிந்தாமணி' இக்கருத்தை,

''உறங்கு மாயினும் மன்னவன் தன்ஒளி
கறங்கு தெண்திரை வையகம் காக்குமால்'' (248)

என்றே கூறிச் செல்கிறது; 'உடல் இளைப்பாறும் பொழுது உயிர் உறங்காமல் இருந்து உடலைக் காக்குமாறு போல அரசன் குடிகளைக் காக்கிறான்; அவனுடைய ஆணை காக்கிறது, என்பதே இப்பாடலின் பொருள்.

அடுத்துப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய பெரிய புராணமும்,

''மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்குஎலாம்
கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலன்.''
(திருநகரச்சிறப்பு,14)

என்றே கூறுகிறது. மக்கள் பொருட்டு ஆட்சி செலுத்தும் ஒரு மனிதனை அவர்கள் விருப்பின் வண்ணம் ஆளுபவன் என்று கருதாமலும், கூறாமலும், அதற்கு மறுதலையாக அவர்கள் தலைவன் என்றும் உயிர் என்றும் கண் என்றும் கூறுவது அக் காலத்தில் தமிழர் தம்முடைய அரசனை எவ்வாறு கருதினர் என்பதை நமக்கு வலியுறுத்துகிறது. இம்மட்டோ? ஒரு நாடு அரசனை இல்லாமல் வாழ முடியாது என்றுகூட அன்றைத் தமிழர் நினைத்தனர். சங்கப் புலவராய பரணர், தம் காலத்தில் ஒரு காட்சியைக் காண்கிறார். சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்ற சேர மன்னனும், வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி என்ற சோழனும் தம்முள் சண்டையிட்டு இருவருமே போர்க்களத்தில் இறந்துவிடுகின்றனர். போரிடுபவர்கள் இறந்துபடுதல் இயற்கை தான். எனினும், புலவராய பரணர், இவ்வரசர்களை இழந்த இவர்களுடைய நாடுகள் எவ்வாறு வருந்தும் என நினைந்து அந் நாட்டுக்காகத் தாம் வருந்துகிறார்.

''சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகளத்து ஒழிந்தனர்; இனியே
என்னா வதுகொல் தானே கழனி!
...... ..............................
யாணர் அறாஅ வைப்பில்
காமர் கிடக்கைஅவர் அகன்றலை நாடே!'' (புறம்,63)

அரசன் இறந்துபடின் நாடு வருந்தும் என்று நினைப்பது, அவனை உயிர் என்று கருதும் கருத்துக்கு இசையவே அமைந்துள்ளது. சங்ககாலத்தில் காணப்படும் இதே கருத்து, சேக்கிழார் பெருமானாலும் வலியுறுத்தப் பெறுகிறது.

''மன்னனை இன்றி வைகும் மண்ணுலகு எண்ணும் காலை
இன்னுயிர் இன்றி வைகும் யாக்கையை ஒக்கும் என்பார்.''

என்று அப்பெருமான் மூர்த்தி நாயனார் புராணத்தில் (29) பாடுகிறார். ஒரு பாத்திரத்தின் கூற்றாக இவ்வடிகள் அமைந்திருப்பினும், சோழப் பேரரசின் முதலமைச்சர் இவ்வாறே கருதியிருப்பார் என்று நினைப்பதில் தவறு இல்லை. சேக்கிழாருக்கு முற்பட்டுச் சங்ககாலத்திற்குப் பிற்பட்டு வந்த நம்மாழ்வாரும் "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்," (திருவாய் மொழி, 4-ஆம் பத்து; 7-ஆம் பாடல்) என்று பாடுகிறார். ஆகலின், தமிழர் கருத்தேயாகும் இது என்பதில் தடை இல்லை.

### கம்பன் புரட்சி

சங்க காலத்தில் தொடங்கிப் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை பிறழாது வரும் இக்கொள்கை, முதன் முதலாகக் கம்ப நாடனால் உடைத்து ஒதுக்கப்படுகிறது. இன்று நம்முட் பலராலும் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளப்படும் 'குடியாட்சி'க்கு அவனால் வித்திடப்படுகிறது. 'குடியாட்சி' என்ற சொல்லை, அவன் பயன்படுத்தவில்லை என்பது உண்மையே. ஆனால், குடியாட்சியின் உட்பொருளை நன்கு அறிந்து அதனை அவன் கூறுகிறான். மக்கள் ஆட்சியில் உள்ளதாகப் பறை சாற்றப்படும் மாண்புதான் என்ன? இத்தகைய ஆட்சியில் அரசன், என்ற பெயரில்லாமல் 'தலைவன்' என்ற பெயரில் ஒரு தலைவன் உண்டு. அற்றைநாள் அரசனுக்குரிய அனைத்து அதிகாரங்களும் இக் குடியாட்சியில் உள்ள தலைவனுக்கும் உண்டு. அவ்வாறாயின் இருவருக்கும் வேற்றுமையே இல்லையா? இருக்கத்தான் செய்கிறது. எந்த மக்களைப் பழைய கால மன்னன் ஆட்சி செய்தானோ, அந்த மக்கள் அந்த மன்னனை விரும்பினாற்கூட நீக்கவியலாது. அவனாக இறந்தால் ஒழிய, அவன் செங்கோலனாயினும், கொடுங்கோலனாயினும், அம்மக்கட்கு விடுதலை இல்லை. ஆனால், இற்றை நாள் குடியாட்சித் தலைவன் இவ்வாறு அமைந்தவன் அல்லன். மக்கள் விரும்புகிற வரை அவன் தலைவன்; விரும்பாவிடில், அவனை அப்பதவியினின்று மக்கள் நீக்கிவிடலாம். இதுவே. அடிப்படையில் இருவருக்கும் உள்ள வேற்றுமை மக்கள் விரும்புகிற வரை தான் அரசனாக ஒருவன் இருந்தான் என்றால், அவனை மக்கட்கு உயிர் என்று எவ்வாறு கூற முடியும்? உடம்பு விரும்புவதை உயிர் செய்வதில்லையன்றோ? உயிர் விரும்புவதையன்றோ? உடம்பு செய்கிறது!

எனவே, மக்கள் விருப்பப்படி மன்னன் இருக்கிறான் என்றால், அவனை உடம்பு என்று கூறி, அவனால் ஆளப்படும் மக்களை உயிர் என்று கூறுவதுதான் முறையாகும்.

இம்மாதிரி பல காலமாகக் கூறப்பட்டு வந்த உவமையைச் சிறிது மாற்றிவிடுவதால் கம்பநாடன் அரசியல் உலகில் ஒரு பெரும் புரட்சியைச் செய்துவிடுகிறான்.

வழக்கமாக மன்னனை உயிர் என்றும் மக்களை உடல் என்றும் உருவகித்த முறையை மாற்றி, ஆணையிடும் உயிராக மக்களையும், ஆணையின் வண்ணம் ஒழுகும் உடம்பாக மன்னனையும் ஆக்கிய பெருமை கம்பநாடனுக்குரியது.

அதிலும், பெரிய சக்கரவர்த்தியாகிய தசரதனை அல்லவா இப்படி வெற்றுடம்பாகச் செய்துவிட்டான் கம்பன்!

"வயிரவான் பூண்அணி மடங்கல் மொய்ம்பினான்
உயிர்எலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்
செயிர் இலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்."

(அரசியல், 10)

தசரதனை உடம்பாக உருவகித்தது மட்டுமல்லாமல், அவ்வுடம்புக்குக் கட்டளையிடும் உயிர்களாக அக்கவிஞன்கூறியவை மக்களுடைய உயிர்கள், மட்டுமல்ல; "சென்று நின்று வாழ்உயிர் எலாம்" என்று கூறியதால், அஃறிணை உயர்திணை ஆகிய இரு வகை உயிர்களையும் தசரதனை ஆட்டிப்படைக்கும் உயிர்களாகக் கூறிவிட்டான். இந்தக் கருத்தை மேலும் வலியுறுத்தவேண்டி இன்னும் விளக்கமாக அயோத்தியா காண்டத்தில்,

"வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னவன்."

(மந்தரை சூழ். 17)

என்று தெளிவுறுத்துதல் ஒப்பிட்டு உணர வேண்டுவதாகும். இவ்வாறு கூறுவதால், 'மக்கள் விருப்பம் போல ஆட்சி செய்தான்' என்பதும் பெற்றாம். மேலும், குறிப்பாக, அவர்கள் விரும்பியதாலேயே அரசனாய் இருக்கவியன்றது என்பதும் பெற்றாம்.

அரசியல் அமைப்புக்களைக்கூடக் கவிஞன் தனது 'தீர்க்க தரிசனத்'[1] தன்மையால் பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே காண முடிகிறது என்ற கொள்கைக்குக் கம்பநாடனுடைய இந்த இரண்டு அடிகள் நல்ல சான்றாகும்.

---

1. Prophetic power

# 2. மன்னன்

## 2.1 அயோத்தி வேந்தன்

**தசரதன் சிறப்பு**

கம்ப ராமாயணம் என்னும் பெருங்காப்பியத்தில் அளவால் மிகச்சிறு பகுதியைப் பெற்றவன் தசரதன்.

பாலகாண்டத்தின் முற்பகுதியில் தோன்றி, அக்காண்டத்தின் இறுதியில் சில வார்த்தைகள் பேசும் வாய்ப்பு அவனுக்குக் கிடைக்கிறது.

அயோத்தியா காண்டத்தின் முற்பகுதியில் மூன்று படலங் களிலும் அவனுடைய செயல்களே நிறைந்துள்ளன.

அடுத்து வரும் பகுதியில் அவன் இறந்துவிடுகிறான். பத்தாயிரம் பாடல்கட்கு மேல் உள்ள அப்பெருங்காப்பியத்தில் காப்பியத் தலைவனின் தந்தையாகிய அவன் பெறும் இடம் சிறிது தான். ஆம். இராமகாதையில் தயரதனுக்குப் பேரளவு இடம் கொடுக்கமுடியாதுதானே? எனினும், அப்பெருங்காதை நிகழக் காரணமாகிற பெருமை அவனைச் சேர்ந்தது. அறுபதினாயிரம் ஆண்டு (அதாவதுநெடுங்காலம்) ஆட்சி செய்ததாகக் கூறப்படும் அவன், எல்லாவகை வலியாலும் மேம்பட்டவன் என்பது அறிய முடிகிறது.

தசரதனைப் பேரரசனாகவும், கணவனாகவும்,தந்தையாகவும் கம்பநாடன் நமக்குக் காட்டுகின்றான். அவனுடைய செயல் ஒவ்வொன்றிலும் இம்மூன்று நிலைகளும் மாறி மாறி வருகின்றன. அரசியற்படலத்திலேயே அவனது அரச இயல்பைப்பற்றிக் கூறு கிறான் கவிஞன். ஒரு நாட்டின் அரசன் தந்தைக்கு மைந்தனாய்ப் பிறந்த காரணத்தால் மட்டும் அரசனாகிவிடுதல் தவறு. அரசனா

தற்குரிய இயல்புகளும் அவன்பாற் பொருந்தியிருத்தல் வேண்டும். அவ்வியல்புகளுள் தலையாய இயல்பு கல்வி என்பதாகும். இதனாலன்றோ வள்ளுவப் பெருந்தகையார், இறைமாட்சியின் அடுத்த அதிகாரமாகக் கல்வியை வைத்துள்ளார்! கோசல நாட்டு மக்களே கல்வியிற் சிறந்தவர்கள் என்றால், அந்நாட்டு மன்னனைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமா? என்றாலும், தனியே அரசனுடைய கல்வி பற்றியும் பேசப்படுகிறது. ''எண்ணில் நுண்ணூல் ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்,'' (அரசியல்.2) என்ற அடியால் அரசன் கல்விப் பெருக்கம் பேசப்படுதல் அறியப்படும். இத் துணைக் கல்விப் பெருக்கமும் ஏட்டளவில் நின்றுவிடாமல், அம் மன்னனுக்கு வாழ்க்கையிலும் பயன்பட்டதை நாம் அறிகிறோம். தான் அரசனாகப் பிறந்தமையின் தன் கடன்கள் அதிகப்பட்டன என்பதை உணர்ந்து, அதற்கேற்பவே வாழ்ந்தான் அத்திருவுடை மன்னன்.

''தாய்ஒக்கும் அன்பில்; தவம்ஒக்கும் நலம்ப யப்பில்;
சேய்ஒக்கும் முன்னின்று ஒருசெல்கதி உய்க்கு நீரால்;
நோய்ஒக்கும் என்னின் மருந்துஒக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவுஒக்கும் எவர்க்கும் அன்னான்.''
(அரசியல். 4)

என்ற இப்பாடலால் அவ்வரசன் கற்ற கல்வியின் வண்ணம் ஒழுகினான் என்பதை அறிய முடிகிறது.

ஏட்டுக்கல்வி மட்டும் அல்லாமல், நுணங்கு கேள்வியாகிய செவிச் செல்வமும் பெற்றிருந்தமையின், பண்பாடு மிகுவதாயிற்று மன்னனுக்கு. அப்பண்பாட்டால் குடிகட்கும் தனக்கும் உள்ள உறவு முறை எது என்பதைத் தெரிந்துகொண்டான் தசரதன்.

நாட்டில் பகை இன்மையால் சில சந்தர்ப்பங்களில் நாட்டை ஆள்பவர் கவலை இன்றித் திரிய இடமுண்டாகி விடுகிறது. ஐந்து ஆண்டுக்கு ஒரு முறை விண்ணப்பம் செய்து நம்மிடம் வந்து வாக்குரிமை பெற வேண்டும் என்ற கட்டுப்பாட்டில் இருக்கும் பொழுதுகூட நம்மால் தேர்ந்தெடுத்து நாடாள அனுப்பப்படு பவர்கள், தேர்தல் முடிந்தவுடன் தங்கள் வாக்குறுதிகளைக் காற்றில் பறக்க விடுகின்றார்கள். இவ்வாறல்லாமல், பரம்பரை உரிமையாக அரசியல் கிடைத்துவிடுமாயின், அரசன் ஓயாதுகுடி நலன் காப்பதற்குத் தூண்டுகோல் யாதுளது? ஒரு வேளை பகை வர்கள் இருப்பார்களாயின், அவர்களுக்கு அஞ்சியாவது நல்லாட்சி

நடத்துவன். பகைவர் இல்லாத பொழுதும் ஓர் அரசன் செவ்வன் ஆட்சி செய்தான் எனில், அதற்கு அவன் பண்பாடுதவிர வேறு காரணம் ஒன்றும் இருத்தற்கில்லை. இதனை மனத்துட்கொண்ட கவிஞன்,

"எய்என எழுபகை எங்கும் இன்மையால்
மொய்பொருந் தினவுஉறு முழவுத் தோளினான்
வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும்ஓர்
செய்எனக் காத்துஇனிது அரசு செய்கின்றான்."

(அரசியல். 12)

என்று கூறுகிறான். எல்லை மீறிய செல்வமும் மனிதனைக் கெடுத்துவிடும். 'அதிகாரம் கெடுக்கும்; எதேச்சாதிகாரம் முழுவதும் கெடுத்தேவிடும்,' என்று ஆக்டன் பிரபு[1] கூறியதும்." "எங்குச் செல்வம் குவிகிறதோ, அங்கு அழிவும் தொடங்கு கிறது," என்று 'கோல்ட்ஸ்மித்து'[2] என்ற பெரியார் கூறியதும் "பணத்தின் பெருக்கம் பாவத்தின் பெருக்கம்"[3] என்று மகாத்துமா காந்தியடிகள் கூறியதும், "பட்டம் பதவிகெட்ட மாயை" என்று பாரதியார் இசைத்ததும் நினைவில் இருத்தி நாம் இப்பாடலை நோக்க வேண்டும். அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்யும் ஒருவன் செம்மையாக ஆளுவான் என்பது கூறவிய லாதது. அதிலும், அவன் அதிகாரத்தைத் தடை செய்யக்கூடிய பகைவரும் இல்லை எனில், கேட்க வேண்டுமா? எல்லையற்ற அதிகாரம், நீண்ட ஆட்சிக்காலம் என்ற இரண்டுள் ஒன்று இருந் தாலுமே ஓர் அரசன் கெட்டுவிட முடியும். ஆனால், தசரதனுக்கு இவை இரண்டும் இருந்துங்கூட அவன் கெடவில்லை என்கிறான் கவிஞன். 'கெடாது இருந்துவிட்டால் மட்டும் போதுமா? பிறருக்கு நலன் தீங்கு என்ற இரண்டுமே செய்யாத பலர் உண்டே! அது போல இம்மன்னனும் மக்களுக்கு நலத்தையோ தீங்கையோ செய்யாமல் இருந்துவிட்டானோ?' என்பார் ஐயத்தைப் போக்கப் பின் இரண்டு அடிகளைக் கவிஞன் குறித்துவிட்டான். தசரதன் நாட்டை ஆள்வது, 'வறிஞன் ஒருவன்]தனக்குரிய ஒரே நன்செய்யைக் காப்பது போல இருக்கிறது,' என்றான். உவமையாகிய இதில் வைத்த சிறப் பெல்லாம் தசரதன் ஆட்சிக்கும் சென்று சேர்கிறது உவமை இலக்கணப்படி.

1. 'Power corrupts and absolute power corrupts absolutely.' —Lord Aucton.
2. Where wealth accumulates there men decay—Goldsmith
3. Accumulation of wealth is accumulation of sin—Gandhiji

**உவமையின் பொருள்**

'ஒருசெய்' என்பது, அளவால் மிகச் சிறிய இடமாகும்; அத்துடன் உரமிட்டு, நீர் பாய்ச்சி, களை எடுத்து, நன்கு உழைத்துப் பாடுபடவேண்டிய நன்செய் நிலத்தைக் குறிப்பதுமாகும். இந்த இடத்திற் பயிர்செய்து வரும் வருவாயை நம்பியே வாழ்கிறான் ஒருவன். 'வறிஞன்' என்றதால், அவன் வாழ்வுக்கு இந்நிலத்தையன்றிப் பிறிதொரு வழியும்இல்லை என்பது பெறப்படும். எனவே, அவன் எவ்வளவு முயன்று இதனைப் பாதுகாப்பான் என்பது வெளிப்படை. இவ்வுவமையில் பெறப்படும் மற்றொரு பொருளும் உண்டு: வறிஞனுக்கு உவமையாகத் தசரதனும் நிலத்துக்கு உவமையாக வையகமும் காட்டப்பெற்றுள்ளனர். 'நிலத்தை நன்கு காக்கவில்லையாயின், அதனால் விளையும் தீமை வறிஞனுக்கே அன்றி, நிலத்துக்குஅன்று. அதுபோல, நாட்டைநன்குகாவாவிடில் நாட்டுக்குத் தீமை இல்லை; மன்னனுக்கே தீங்கு நேரிடும், என்பதன்றோ பொருளாகும்?இஃது உண்மையா? உண்மையில் மன்னன் தவறு இழைப்பானாயின், மக்களன்றோ அல்லல் அடைவார்கள்? இவ்வுவமையில் ஏற்படும்இப்பிழையை அறியாமலா கவிஞன் பயன் படுத்தினான்? அன்று. நாட்டை நன்கு காவாவிடில், அதனால் விளையும் பயனைக் கண்டு நாட்டு மாந்தர் வருந்துவதைக் காட்டிலும் மன்னனாகிய அவன் வருந்தினான். இவ்வாறு பிறர் பெறுந் துயரைத் தான் பெறுவதாக நினைந்து வருந்தின மன்னன்ஆகலின், வேண்டுமென்றே கவிஞன் இந்த உவமையைக் கையாள்கிறான். இத்தகைய அரசனை நினைக்கும்பொழுது பாரதியார் பாடிய அடிகள் நினைவுக்கு வருகின்றன.

> "நாட்டு மாந்தர் எல்லாம் தம்போல் நரர்கள் என்று கருதார்
> ஆட்டு மந்தை யாம்என்று உலக அரசர் எண்ணிவிட்டார்.,)
> (பாஞ்சாலி சபதம்)

என்று அவர் எவ்வளவு மனம் நொந்து பாடினார்! அத்தகைய மன உளைச்சல் இல்லாமல் பிறர் விரும்பி ஏற்றுக் கொள்ளக்கூடிய மன்னனாகத் தசரதன் விளங்கினான் என்பது வெளிப்படை. இந்த உவமையால் இன்னும் பல பொருள்களையும் கவிஞன் விளக்கி விட்டான். நிலத்தைப் பாதுகாப்பவன் தினந்தோறும் அல்லும் பகலும் அதே கவலையாய் இருந்து பாதுகாத்தல் வேண்டும். நிலத்துச்சொந்தக்காரன் நேரில் சென்று கவனிக்காத நிலம்முழுப் பயன் தராாது என்பதை,

''செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்.'' (1039)

என்ற குறளால் வள்ளுவர் குறிக்கிறார். இவ்வாறு உள்ளநிலத்தை உவமையாகக் கூறினமையின், தசரதன் நாள்தோறும், அல்லும் பகலும், அரசாட்சியைக் கண் எனக் காத்தான் என்பதும் கூறினா னாயிற்று மேலும், நிலத்தை நிலக்கிழவன் நேரேசென்றுபார்த்தல் போலத் தசரதனும் ''காட்சிக்கு எளியனாய் கடுஞ்சொல்லன் அல்லனாய்'' (குறள். 386) வாழ்ந்தான் என்பதும் பெறப்பட்டது.

மாணா உவகையன்:

'இத்துணைச் சிறந்த மன்னன், மனைவி மக்களிடம் எவ்வாறு இருந்தான்?' என்பது அடுத்துக் கவனிக்கப்படல் வேண்டும். தசரதன் மனைவி மாட்டுக் கொண்ட அன்புக்கு எல்லையேஇல்லை. என்னலாம். அவன் அருமை மனைவி கைகேயி கீழே விழுந்து பூ உதிர்ந்த கொம்பு போலக் கிடப்பதைக் கண்டு அவன் பட்ட பாட்டைக் கவிஞன் நன்கு வருணிக்கிறான். பெருந்துயரத்தைத் திடீரென்று எதிர்ப்பட்டவர்கள் கையுங்காலும் எழாமல் தவிப்பது போன்று அவனும் அல்லல் உறுகிறான். அவன் துயரம் எதனால் ஏற்பட்டது என்பதை அறியுமுன்னரே பெரிய பேச்சுக்கள் பேசு கிறான்; ''உனக்கு இத்துயரம் இழைத்தவர் யாவராயினும், அவர் என் வாளுக்கு இரையாவர்,'' என்றும் பேசுகிறான்.

''அன்னது கண்ட அலங்கல் மன்னன் அஞ்சி,
'என்னை நிகழ்ந்தது? இவ் வேழு ஞாலம் ஆள்வார்
உன்னை இகழ்ந்தவர் மாள்வர்! உற்றது எல்லாம்
சொன்னபின் என்செயல் காண்டி; சொல்இது.'
என்றான்.''
(கைகேசி சூழ். 5)

தன் மனைவியாகவே இருப்பினும், அவள் அழுதாள் எனின், காரணம் யாது என்று தெரிந்த பின்னர் இவ்வாறு கூற வேண்டுமே தவிரக் காரணம் அறியுமுன்னர்ப் பேசுவது அரசனாகிய அவனுக்கு இழுக்கையே தரும். '' ஞாலம் ஆள்வார் மாள்வர்! '' என்று அவன் கூறியது நாடகக் குறிப்பாக[1] அமைந்து விட்டதன்றோ? இவ்வார்த்தையின் பொருள் அறியாமல் அவன் பேசிவிட்டான். இறுதியில் நடைபெற்றதென்ன? அவளுக்குத் தீங்கு செய்தவன் அவனேயாகிறான். அதன் பயனாகவே அவன் இறக்கவும் நேரிடு

1. Dramatic Irony.

கிறது. எனவே, அவன் கொண்ட எல்லை மீறிய காதலும் அவனுக்குத் தீங்கு விளைவிப்பதை அறிகிறோம். மனைவியிடம் மட்டும் அவன் எல்லை மீறிய காதல் கொண்டான் என்று கூறுவ தற்கில்லை. அவன் தான் பெற்ற பிள்ளைகளிடமும் இவ்வாறே அன்பு செலுத்துகிறான்.

''இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா
உவகையும் ஏதும் இறைக்கு.'' (432)

என்ற குறளின்படி பிற குற்றங்களை அவன் செய்யவில்லை எனினும், 'மாணா உவகை' அவன் அழிவிற்குக் காரணம் ஆயிற்று இனி வள்ளுவர்,

''காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.'' (440)

என்று கூறிய அறவுரையும் அம் மன்னனால் மறக்கப் பெற்று விட்டது. அதாவது, 'அரசன் தான் மிகுதியும் விரும்பும் பொருள் யாது என்பதைத் தன் பகைவர் அறியாதபடி காக்க வேண்டும். அவ்வாறு காவானாயின், அப்பகைவர் அவன் மிகுதியும் விரும்பும் பொருள் வழியாகவே அவனை வஞ்சிப்பர்,' என்பது கருத்து. இக் குறளும் தசரதன் அளவில் உண்மையாகிவிட்டதை அறியலாம். அவன் மைந்தர் நால்வர் எனினும், மூத்தவனாகிய இராமன்மேல் கழிபெருங்காதல் கொண்டவன் மன்னன். ''மைந்தனை அலாது உயிர்வேறு இலாத மன்னன்'' (கைகேயி சூழ்வினை. 20) என்று கூடக் கூறும் அளவுக்கு இராமன் மேல் அவன் கொண்டிருந்த அன்பைப் பிறர் அறியுமாறு இருந்துவிட்டான். இதனால், வஞ்சனைக் கூனி இராமனைக் காட்டுக்கு அனுப்பி, அதனால் தசரதன் உயிரையே குடித்துவிட்டாள்.

## 2. 2. விசுவாமித்திரன் வருகை

மைந்தர் மாட்டுத் தசரதன் கொண்ட அன்பு பலமுறை சோதனைக்கு உள்ளாகிறது. ஒரு நாள் அரசன் அரண்மனையில் விசுவாமித்திர முனிவன் வந்து தோன்றுகிறான். அவனைக் கண்டவுடன் தசரதன் மிக்க வணக்கத்துடன், பிரமதேவனைக் கண்ட தேவேந்திரன் போல, மிக விரைந்து எழுந்து, மணிகள் பூண்ட தன் மார்பு நிலத்தில் தோய வணங்கினான்; முனிவனை இருக்கச்செய்து, எண்ணரிய உபசரணைகள் செய்தான். இதிலிருந்து தவத்தால் மேம்பட்ட பெரியோர்களிடம் தசரதன் கொண்டிருந்த பெருமதிப்பு வெளியாகிறது. அவன் விசுவாமித்திரனிடம் மட்டும் இவ்வாறு நடந்துகொண்டான் என்பதில்லை; கலைக்கோட்டு முனிவன், தன்னிடம் என்றுமே தங்கியுள்ள வசிட்ட முனிவன் ஆகிய அனைவரிடமும் இவ்வாறே பெருமதிப்புடன் நடந்துகொண்டமை அறிதற்பாலது. புதியவர் களாய் வருபவர்களிடம் அன்பு காட்டிவது ஒரு புறம் இருக்க, ஓயாது தன்னுடன் பழகும் வசிட்டனிடமும் எப்பொழுதும் இம் மரியாதையுடன் நடந்துகொண்டது அவன் பெருந்தன்மையை மட்டுமன்றித் தெளிந்தோர்ப் பேணும் சீர்மையையும் காட்டு கிறது. ஏன் எனில், மிகுதியும் பழகும் ஒருவரிடம் அளவு கடந்து விடாமல், மரியாதை குறையாமல் பழகுவது அவ்வளவு எளிதான தன்று. மிகுந்த பண்பாடு உடையவர்கட்கே இது இயலும் எனவே, தசரதன் பண்பாட்டுக்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு. இந்நிலையில் உள்ள ஒருவன் கோசிகனாகிய விசுவாமித்திரன் வந்தபொழுது எத்துணை அன்புடன் அவனை உபசரித்திருப்பான்! இவன் உபசாரத்தால் கோபக்காரனாகிய அம்முனிவனே பெரிதும் மகிழ்ந்துவிட்டான். மேலும், அம்முனிவர்பிரான், ‘‘உன்பால் ஒரு பயன கருதி வந்தேன்,’’ என்று கூறினவுடன் தசரதன் பெற்ற மகிழ்ச்சி எல்லை கடந்துவிட்டது.

"உரைசெய்யும் அளவில்அவன் முகநோக்கி உள்ளத்தில் ஒருவராலும்
கரைசெய்ய அரியதுஒரு பேருவகைக் கடல்பெருகக் கரங்கள்
அரைசெய்தி இருந்தபயன் எய்தினென்." [கூப்பி
(கையடைப்படலம்,9)

என்று கூறினான். இம்மனநிலையும் எளிதில் வருவதொன்று அன்று. பிறருக்குப் பயன்படுவர் பலர். ஆனால், அனைவரும் விருப்பத்தோடு அவ்வாறு செய்கின்றனர் என்று கூறுவதற்கில்லை. சிலர் வேறு வழியில்லாமல் பயன்படுவர்; இன்னுஞ்சிலர் அதில் வெறுப்புக்கொள்ளாமல் பயன்படுவர்; ஆனால், ஒரு சிலர் பயன் படுகிறோமே என்ற மகிழ்ச்சியால் மனம் மகிழ்ந்து பயன் படுவர். தலையாய மனிதர் இயல்பு இம்மூன்றாம் வகையைச் சேர்ந்ததேயாம், அரசனாய் இருப்பது முறை வேண்டினர்க்கும் குறை வேண்டினர்க்கும் அருளுவதற்கே என்று தசரதன் நினைத் திருந்ததால் அன்றோ இவ்வாறு கூறினான்?

இவ்வளவு மகிழ்ச்சியுடன், 'யாது செய்யவேண்டும்?' என்று வினாவிய அரசனுக்கு முனிவன் கூறிய விடை பெருந்தொல்லையாய் முடிந்தது.

" 'தருவனத்துள் யான்இயற்றும் தவவேள்விக்கு
இடையூறாத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென்று அடைகாம வெகுளிஎன
நிருதர்இடை விலக்கா வண்ணம்
'செருமுகத்துக் காத்தி'என நின்சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதி' என உயிர்இரக்கும்
கொடுங்கூற்றின் உளையச் சொன்னான்."
(கையடை.10)

### தசரதன் சங்கடம்

கழிபெருங்காதல் கொண்ட தசரதனுக்கு நல்ல சோதனையாகும் இது. கேட்டவன் சாதாரண மனிதன் அல்லன். இந்திரனோடும் போட்டி இட்டு, 'மற்றோர் இந்திரலோகத்தை படைப்பேன்!' என்று தொடங்கிய கோசிகன் கேட்கையில் எவ்வாறு இல்லை என்பது? அதிலும் முனிவன் அதிகார தோரணையிற் கேட்கவில்லை; மன்னனைத் 'தந்திடுதி' எனஇரந்து வேண்டுகிறான். தான் எத்தகைய பொருளைக் கேட்கிறான் என்பதை அறியாத முனிவன் மிகவும் கெஞ்சித்தான் கேட்கிறான். எனினும், அது

கூற்றுவன் அழைப்புப்போல இருக்கிறது தசரதனுக்கு. அதிலும் உரிமையுடன் உயிரை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் எடுத்துச் செல்லும் இயல்புடைய எமன், ஒருவனுடைய உயிரைப் பிச்சையாகக் கேட்பின் என்ன செய்வது? அதனாலேதான் கவிஞன், "உயிர் இரக்கும் கொடுங்கூற்று" என்ற உவமையைக் கூறினான். இந்நிலையில் அரசன் யாது செய்வான்? அவன் நிலைமை தரும சங்கடமான நிலைமையாகிவிட்டது. முனிவன் கேட்ட பொருளை இல்லை என்று கூறுவதும் தவறு; துணிந்து கூறிவிட்டாலும், அவன் கோபம் என்ன செய்யும் என்று கூறவியலாது. ஆனால், அவன் விருப்பப்படி இராமனைத் தந்து விடலாம் எனில், அதைவிடத் தன் உயிரையே தர மன்னன் விரும்புகிறான்.

அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்தும், பன்னூறு மனைவியரை மணந்தும் இறுதிக்காலம் வரை பிள்ளை இல்லாமல் இருந்து, கடைசியில் எண்ணரிய தவஞ்செய்து, வேள்வி செய்து பெற்று, அப்பிள்ளையினிடத்துத் தன் உயிரையே வைத்திருக்கும் ஒரு தந்தைக்கன்றோ இந்த அருமை தெரியும்! எனவே,

"எண்இலா அருந்தவத்தோன் இயம்பியசொல்
மருமத்தில் எறிவேல் பாய்ந்த
புண்ணில்ஆம் பெரும்புழையில் கனல்நுழைந்தால்
எனச் செவியில் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துஉந்த
ஆருயிர்நின்று ஊசல் ஆடக்
கண்ணிலான் பெற்றுஇழந்தான் எனஉழந்தான்
கடுந்துயரம் கால வேலான்." (கையடை.11)

[தயரதன் மனநிலையையும், முன்னர்ச் சாபத்தையும் எண்ணிப் பாராத கோசிகன் சொற்கள் வேல் பாய்ந்த புண்ணில் கனல் நுழைந்தது போல வருத்த, உள்ளே துயரம் பிடித்து உந்த, உயிர் ஊசலாட, கண் இல்லாதவன் பெற்று இழந்ததை ஒப்ப வருந்தினான் மன்னன்.]

முனிவன் ஒரு வினாடியிற்கேட்ட வார்த்தைகள் அரசனை எவ்வாறு துன்புறுத்தின என்பதைக் கவிஞன் நன்கு எடுத்துக் காட்டுகிறான். ஏற்கெனவே புண்ணிருந்த பெரிய துளையில் கனல் நுழைந்தது போல இருந்தனவாம் அவன் சொற்கள். வயோதிகத்தில் பெற்ற பிள்ளையாகலின், பிள்ளையின் உண்மை

வன்மையை அறிந்து கொள்ளக்கூடவில்லை மன்னனுக்கு இராமனை இன்னும் குழந்தையாகவே கருதி, அவன் பிரிந்து வெளியே சென்றிருக்கும் பொழுதெல்லாம் அவனுக்கு என்ன ஊறு நேர்ந்ததோ என்று கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறான் மன்னன். சிறு பிரிவைக்கூடப் பொறாமல் மனம் வருந்தும் மன்னனைப் பார்த்துப் 'பிள்ளையைக் கொடுத்துவிடு, என்று கேட்டால், அவன் என்ன பாடு படுவான்! அதுவும் 'அரக்கர்களுடன் போர் புரிவதற்காக இந்த இளம்பிள்ளையை அனுப்பு, என்று கேட்டால், அதனைவிடக் கொடிய செயல் வேறு யாது? கண்ணே இல்லாதவன் கவலை, "ஐயோ! கண்ணில்லையே!" என்ற ஒரே கவலைதான். ஆனால், இடையில் ஒரு முறை கண்கிடைத்து அதனால் இவ்வழகிய உலகைக்கண்டு களித்துக்கொண்டிருக்கும் போது அவன்கண் போய்விடுமானால் அவன் எவ்வளவு வருந்து வான்! அந்த நிலையிலேதான் அரசனும் இருந்தானாம். நெடுங் காலம் பிள்ளைப்பேறு இன்மைக்கு வருந்தி இருந்த மன்னன் பிள்ளைகளைப் பெற்றான். அதனால் இன்பம் பெறுகிற வேளையில் அப்பிள்ளைகள் அவனிடமிருந்து பிரிக்கப்பட்டு விட்டால் அவன் மனம் என்ன பாடுபடும்! இதனையே "கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான் கடுந்துயரம்," என் கிறான் கவிஞன். சாதாரண மனிதனானால், துயரம் வரும் பொழுது அதனை எதிர்த்துப் போராட முடியாமல் வருந்துவது இயற்கை. ஆனால், துயரத்தைத் தடுக்கக்கூடிய வன்மை யுடையவர் வருந்த நேரிட்டால், அது பெருந்துன்பமன்றோ? அதைக் குறிக்கவே கவிஞன் "காலவேலான்" என்று அடைமொழி தருகின்றான்' எந்தப் பகையையும் எதிர்த்துப் போராடும் வேலா யுதத்தை உடைய மன்னன் இந்தத் துயரத்தை எதிர்க்க முடியாமல் துன்புற்றான் என்பதே இங்கு உள்ள பொருள் நயம்.

**சதுரப்பாடான விடை**

ஆனால், தான் படுந்துயரத்தை எடுத்து முனிவனிடம் கூறுதலும் முறையன்று என்று நினைந்த மன்னன், மிக்க வணக்கத்துடன், "ஐயனே, படை வன்மை பயிலாத இராமனா இக்காரியஞ் செய்ய வல்லான்? யானே நீங்கள் விரும்பியபடி வந்து உங்கள் வேள்வியை முடிக்க உதவுவேன்," என்கிறான்.

"தொடை ஊற்றின் தேன்துளிக்கும் நறுந்தாரான்
ஒருவண்ணம் துயரம் நீங்கிப்
'படைஊற்றம் இலன், சிறியன் இவன்; பெரியோய்!
பணிஇதுவேல் பனிநீர்க் கங்கை

புடையூற்றும் சடையானும் நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக்கு இடையூறாய் யான்காப்பன்
பெருவேள்விக்கு எழுக, என்றான்.''
(கையடை.12)

[மாலையணிந்த மன்னன் துயரம் நீங்கி, 'முனிவரே, இராமன் சிறியவன்; உம் ஆணைப்படி யானே வந்து இறைவனும், நான்முகனும், இந்திரனும் தடுத்தாலும் அவர்களைத் தடுத்து உமது வேள்வியை நடத்தி வைக்கின்றேன்; எழுக, என்றான்.]

இது கேட்ட கோசிகன்கொண்ட பெருஞ்சீற்றத்தால் திசைகளும் இருண்டன; தேவர் அஞ்சினர். இத்தகைய ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்துவிடக்கூடாது என்றுதான் அரசன் அஞ்சினான். ஆனால், அவன் அஞ்சியது நிகழ்ந்தேவிட்டது. கோசிகன் கோபங் கொள்வான் என்று தெரிந்திருந்தும் மன்னனை இவ்வாறு கூறத் தூண்டியது யாது? பிள்ளைகள் மாட்டு அவன் கொண்டிருந்த அளவு மீறிய பற்றுத்தான் என்பதில் ஐயமின்று. கோபித்த கோசிகன் சாபம் ஏதாவது இட்டிருப்பின், தசரதன் கதி என்ன ஆகும்? இது தெரியாதா மன்னனுக்கு? தெரிந்திருந்தும் இப்பிழையைச் செய்ய வேண்டுமானால், இப்பிழைக்குக் காரணமான அவன் மக்களன்பின் ஆழத்தை என்னவென்று கூறுவது!

இந்த இக்கட்டான நிலையைச் சரிப்படுத்த நல்ல வேளையாக வசிட்டமுனிவன் அருகிலிருந்தான். உடனே அவன் விசுவாமித்திரன் கோபத்தைத் தணித்துவிட்டு, அரசனை நோக்கி, ''மன்ன, உன் மகன் பெறப்போகும் உயர்ந்த பேறுகட்கு நீ தடையாக இருக்கலாமா?'' என்று கேட்டு, அவன் மனத்தை அமைதியடையச் செய்தான். இரண்டு முனிவர்களும் கூடி, ''நீ இன்னது தான் செய்ய வேண்டும்,'' என வற்புறுத்தும் பொழுது பாவம்! தசரதன் யாது செய்ய இயலும்? உடனே ஒருவனைக் கேட்ட முனிவனிடம் இணை பிரியாத மைந்தர் இருவரையும் வரவழைத்து, அடைக்கலம் தந்துவிட்டான். விசுவாமித்திரன் எத்துணை அன்புடன் அவர்களைப் பராமரிப்பான் என்பது அறிந்திருந்தும், பிள்ளைகளை அவனிடம் ஒப்படைக்கையில், ''ஐயன்மீர், இனி இப்பிள்ளைகட்குத் தந்தை நீர்; 'தனித் தாயரும் நீர்,'' என்று கூறியன்றோ அனுப்புகிறான்? எனவே, அவன் பிள்ளைப் பாசத்திற்கு 'அளவின்மை' காண்கிறோம் இவ்விடத்தில்.

இவனா தசரதன்!

இதனை அடுத்து இராமனைத் தசரதன் காண்பது அவன் திருமணத்தின் போதேயாகும். இராமன் வில் முறித்த காட்சியைத் தசரதன் பார்க்கவில்லை. எனவே, மைந்தனது வீரம் பற்றி அறிய வாய்ப்பே இல்லாமற் போய்விட்டது அவனுக்கு. மண மக்களை அழைத்துக் கொண்டு அயோத்தி வரும் வழியில் சற்றும் எதிர்பாரா விதமாகப் பரசுராமன் வந்துவிடுகிறான். அவன் வருங் கோலமே அச்சத்தை விளைக்கிறது. அவனைக் கண்டவுடன் தசரதன் குஞ்சைக் காக்கும் கோழி போல முன்வந்து, அவன் அடி களில் வீழ்ந்து உபசரிக்க முயல்கிறான். ஆனால், பரசுராமனோ தசர தனைக் கண்ணெடுத்தும் பாராமல், இராமனிடம், "நீ சீதையை மணக்க முறித்த சிவனுடைய வில் முன்னரே இற்றுப்போனது, இதோ! இந்த வில்லை முடிந்தால் வளைத்துப் பார்," என்றான். இது கேட்ட இராமன் விடை கூறுமுன் தசரதன் தன்மதிப்புச் சிறிதும் இன்றி, "ஐயன்மீர், உமக்குச் சிவனே இணை இல்லை யெனில் எம் போன்றார் ஒரு பொருளா? இவ்விராமனும் யானும் உமது அடைக்கலம். எளியேமாகிய எங்கள்பால் உமக்கு ஏன் இத்துணைக் கோபம்?" என்றான்.

"அவன் அன்னது பகரும்அள வையின்மன்னவன் அயர்வான்
'புவனம்முழு வதும்வென்றுஒரு முனிவற்குஅருள் புரிவாய்!
சிவனும்அயன் அரியும்அலர்; சிறுமானிடர் பொருளோ?
இவனும்எனது உயிரும்உனது அபயம்இனி!' என்றான்."
(பரசுராம. 19)

இவ்வாறு கூறுவது அவன் மகன்மேல் கொண்ட பற்றையே அறிவுறுத்துகிறது இங்கும் இராமனையும் தன் உயிரையும் இணைத்துப் பேசுவது மனத்தில் கொள்ளப்பட வேண்டுவதாகும்.

பரசுராமனிடம் தசரதன் பேசும் சொற்களைக்கேட்கும் நமக்கு அவனிடம் ஓர் இரக்கம் உண்டாகிறது. 'தேவர்கள் தலைவனாய இந்திரனுக்கு வந்த இடுக்கண் களைந்தவன் இவனா!' என்று ஐயுறுகிறோம். சம்பராசுரனைப் போர் தொலைத்து இந்தி ரனுக்கும் அவனது பதவியை நிலைபெறச் செய்த பெருவீரனாகிய தசரதன், இப்பொழுது பரசுராமன் எதிரில் பெண்களைப்போல நடந்துகொள்கிறான். பரசுராமன் தசரதனை ஏறிட்டுக்கூடப் பார்க்கமறுக்கிறான் என்றாலும், அவன் எதிரே வழியை மறித்துக் கொண்டு தசரதன் பேசுவது வியப்பையும் நகைப்பையும் தருகிறது:

"'ஒளிவாய்மழு உடையாய்! பொர உரியாரிடை அல்லால்
எளியாரிடை வலியார்வலி என்ஆகுவது?' என்றான்."
(பரசுராம. 20)

'எளியவர்களை எதிர்ப்பதனாலா வலியவர் வலியின் பெருமையைக் காட்ட முடியும்?' என்று தருக்க மூலம் நியாயத்தைப் பரசுராமனுக்கு எடுத்துக் காட்ட முற்படுகிறான் தசரதன். இந்த நியாயத்திற்குப் பரசுராமன் செவிசாய்க்கவில்லை என்பதை அறிந்ததும், தசரதன் அவனைப் புகழத் தொடங்குகிறான் :

"'தனிமாதவம் உடையாய்!'இது பிடிநீ' என நல்கும்
தனிநாயக! உலகுஏழையும் உடையாய்! இது தவிராய்;
பனிவார்கடல் புடைசூழ்படி நரபாலரை அருளா
முனிவாறினை முனிகின்றது முறையோ?' எனமொழிவான்."
(பரசுராம. 21)

[காசியப முனிவனுக்கு ஏழு உலகங்களையும் தானமாகத் தந்தவரே, என் போன்ற அரசர்களை முன்னரே மன்னித்து விட்டவரே, இப்பொழுது ஏன் சினங்கொள்கிறீர்? இதுமுறையோ?]

இவ்வார்த்தைகளும் பரசுராமனைத் தடை செய்யவில்லை என்பது கண்ட மன்னன், அவனைக் கெஞ்சத் தொடங்கிவிட்டான்; இந்த இராமன் உம் பகைவன் அல்லன்; மேலும், இவன்இறந்துபட நேரிட்டால், யானும் என் சுற்றத்தாரும் உயிரை விட்டுவிடுவோம். என் குலம் முழுதும் நாசமடையும்படி செய்யாதீர்! யானும் இவனும் உம் அடைக்கலம்!" என்னும் கருத்தில் பேசுகிறான்.

"'சலத்தோடுஇயைவு இலன்என்மகன்; அனையான்உயிர் தபுமேல்
உலத்தோடுஎதிர் தோளாய்!எனது உறவோடுஉயிர் உகுவேன்!
நிலத்தோடுஉயிர் கதிவானுற நெடியாய்! உனது அடியேன்
குலத்தோடுஅற முடியேல்!இது குறைகொண்டனன்,' என்றான்."
(பரசுராம. 23)

தன் மகனிடம் வெறுப்பும் பகைமையும் பாராட்டி வந்த ஒருவனிடம் சென்று, 'என் மகனைக் கொன்றுவிடாதே!' என்று கூறுவது எவ்வளவு பொருள் அற்ற பேச்சு! சாதாரண வீரனும் செய்யாத இச்செயலைத் தசரதன் செய்கிறான் எனில், அதற்கு ஒரே காரணம் அவன் தன் மகன்மேல் கொண்ட எல்லையற்ற அன்புதான்; பிள்ளைப் பாசந்தான்.

இது வரை கூறியவற்றால் தசரதன் தன் மக்கள் மேற் கொண்ட காதல் எல்லையற்றதென்பதும், அதனால் அவன் பல இடையூறுகளையும் அடிக்கடி அடைகிறான் என்பதும் வெளிப் படுகின்றனவல்லவா?

## 2. 3. அரசியல் சூழ்ச்சி

தசரதன் :

மனைவி, மகன் என்ற இருவர் மாட்டும் கொண்ட கழி பெருங்காதல் காரணமாகத் தசரதன் பட்ட துயர் கொஞ்சமன்று. இக்காதல், இறுதியில் அவன் உயிரைக் குடித்த பிறகே முடிவடைந்தது. உலகில் வாழும் மாந்தர் அனைவரும் தம்மைச் சொல் தவறாதவர் என்று கூறிக் கொள்ளவே விரும்புவர். எனவே, தசரதனும் தன்னை 'உரை தவறாதவன்' என்று பிறர் கூறவேண்டும் என்று எதிர்பார்த்தான்; அதற்கேற்ப நடக்க முயன்றான். ஆனால், அம்முயற்சியில் வெற்றிபெற்றானா? உண்மையில் தசரதன் உரை தவறாமல் வாழ்ந்தானா? 'ஆம்' என்பார் சிலர்; 'இல்லை' என்பார். சிலர் இவ்விரு திறத்தவர் கூற்றையும் ஒரளவு காணலாம்: உரை தவறினான் என்பவர்க்கும்' இல்லை என்பவர்க்கும் கம்பன் பாடிய இராமகாதையில் மேற்கோள்கள் இருக்கின்றன.

'உரை தவறினான்' என்பவர் கூற்றை எடுத்துக் கொண்டு பார்ப்போம்: தசரதன் உரை தவறினான் என்றால், யாரிடம் உரை தவறினான்? ஏன்?

மகன், மனைவி என்ற இருவரிடமும் உரை தவறிவிட்டான் என்பார்கள். இராமனுக்கு முடி சூட்ட முடிவு செய்து முதல் நாள் மந்திராலோசனை நடத்தினான் மன்னவன்; சுற்றத்தாரையும், ஏனைய அரசர்களையும் அப்பாற் போகுமாறு ஏவி விட்டு, மந்திரக்கிழவரை மட்டும் வைத்துக்கொண்டு ஆலோசனை நடாத்தினான் மன்னன். எவ்வாறாயினும், அவனுடைய அமைச்சர்கள் வள்ளுவன் கூறிய இலக்கணம் முற்றும் அமையப் பெற்றவர்கள் என்று கம்பன் கூறுகிறான்.

"குலம்முதல் தொன்மையும் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் பயனும் எய்தினார்
நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்
சலமுதல் அறுத்துஅருந் தருமம் தாங்கினார்."

(மந்திரப்,8)

[நல்ல குலத்தில் பிறந்து, பல கலைகளையும் கற்றுக்கேள்வி ஞானமும் உடையவர்; அரசன் சினந்தாலும், நடுவு நிலை நீங்காமல் அறத்தைத் தாங்குபவர்.]

ஐயத்திற்கிடமான செயல்

இத்துணை மேம்பாடுடைய அமைச்சர்களிடம் அரசன் விரிவாகப் பேசித் தன் கருத்தைத் தெரிவிக்கிறான். 'உரிமை மைந்தனுக்கு உரிய முடியை வழங்குவதற்கு இத்துணைப் பெரிய ஆராய்ச்சி எதற்காக?' என்றதொரு வினா நம்மையும் அறியாமல் எழத்தான் செய்கிறது. உலகத்தில் முடியாட்சி நிலை பெற்ற நாள் முதல் அவ்வாட்சி பரம்பரை உரிமையாகவே இன்றளவும் வந்துளது. அப்பரம்பரையிலும் மூத்தவனுக்கே முடி உரித்தென்பது அனைவரும் ஒத்துக்கொள்கிற ஒன்று அவ்வாறு இருக்கத் தசரதன் தன் மூத்த மைந்தனாகிய இராமனுக்கு முடி கவிக்க ஏன் இத்துணைப் பெரிய மந்திர ஆலோசனை நடத்துகிறான்? ஒரு வேளை அவர்களுக்கும் இது பற்றி முன்னரே அறிவிக்கப்படல் அரசியல் முறை என வைத்துக் கொண்டாலும், அதற்காக அவன் அவர்களிடம் இவ்வளவு கெஞ்சிக் கேட்க வேண்டிய இன்றிமையாமை இல்லையே! பதினேழு பாடல்கள் அவர்களை நோக்கி அவன் பேசுவனவாக அமைந்துள்ளன. இறுதியாக,

"ஆதலால் இராமனுக்கு அரசை நல்கிஇப்
பேதைமைத் தாய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணுவேன்."

(மந்திரப்.33)

என்று கூறி முடித்தான்.

இதுவரை தசரதன் பேசிய பேச்சுகள் ஒரு வித ஐயத்தை நம் மனத்துள் தோற்றுவிக்கின்றன. ஏன் இவ்வளவு பெரிய முகவுரை? ஒரு வேளை அவர்கள் தன் கருத்துக்கு மாறாக ஏதேனும் தடை கூறுவார்கள் என்று நினைத்தானா? அவர்கள் கருத்துக்கு மாறாக ஏதேனும் செய்ய நேரிட்டால், இவ்வளவு

பெரிய முகவுரைக்கும் ஒரு பொருள் உண்டு. ஆனால், அவர்களுடைய விடையைப் பார்க்கும் பொழுது இவ்வையத்திற்கு இடம் இல்லாது போய்விடுகிறது. அவனுடைய இறுதி வார்த்தைகள் அவர்கட்குச் "சிந்தைபுரண்டு மீதிடப் பொங்கிய உவகை ஆங்கு எய்த''ச் (ஷை—44) செய்ததாகக் கவிஞன் கூறுகிறான். அவன் ஐயத்துடன் கூறுவதையும், அதற்கு அவர்கள் தெளிவுடன் விடை இறுப்பதையும் பார்த்தால், நாம் ஒரு முடிவுக்கு வரத் தோன்றுகிறது. அதாவது, அவன் மனத்தில் ஏதோ ஓர் அச்சம் குடிகொண்டுளது. இராமனுக்கு முடி கவிக்க யாரேனும் இடர் விளைப்பர் என்றே அவன் கருதினான் என்ற எண்ணம் எழுகிறது.

இம்மந்திர ஆலோசனை முடிந்தவுடன் சுமந்திரன் என்னும் அமைச்சனுக்கு இராமனை அழைத்து வருமாறு தசரதன் கட்டளை இடுகிறான். இராமன் விரைந்து வந்து வசிட்டனை வணங்கிவிட்டுத் தந்தையையும் வீழ்ந்து வணங்கினான். உடனே தந்தை மகனைத் தன் மார்புடன் அணைத்துக்கொண்டான். பிறகு; பக்கத்திலே இராகவனை அமர்த்திக்கொண்டு அவனிடம் முதல் வார்த்தை பேசத் தொடங்குகிறான் தசரதன்:

" 'நீண்ட தோளினாய்! நின்பயந்து எடுத்தயான் உன்னை
வேண்டி எய்திட ஈவது ஒன்று உளது'என விளம்பும்."
(மந்திரப்.63)

என்ற சொற்களைக் கேட்டவுடன் நம் வியப்புப் பன்மடங்காக விரிகிறது. இது என்ன! தந்தை மைந்தனிடம் பேசுகிற பேச்சா! அதிலும் 'தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை' என்று கருதி அதன்படி வாழ்ந்து காட்டிய இராமனிடம் இவ்வாறு பேசலாமா? ஒரு சக்கரவர்த்தி தன் மைந்தனிடம் இப்படி இரந்து கேட்க வேண்டிய பொருள் எதுவாய் இருக்கும்? இவ்வாறு கேட்டவுடன் எந்த மைந்தனும் வெட்கப்படாமல் இருக்க இயலுமா? அதிலும், பலர் நடுவில் இவ்வாறு கேட்டால், இதைவிட நாணம் தருவது யாது?

இவ்வாறு மன்னன் கேட்டும், இராமன் வாய் திறந்து விடை கூறினதாகவும் தெரியவில்லை. மேலும் மேலும் அரசனே பேசுகிறான். மைந்தரைப் பெறுவர் அடைய வேண்டிய பயன் யாது என்பது பற்றியும், தான் மிக்க மூப்புப் பருவம் எய்தி விட்டமையால் இனித்தவஞ் செய்யப் போக வேண்டிய இன்றி

யமையாமை பற்றியும் பெரியதொரு சொற்பொழிவு செய்கிறான் தசரதன். பத்துப் பாடல்கள் முழுவதும் இச்சொற்பொழிவே நடைபெறுகிறது. இதனிடையே இராமன் இவன் கருத்தை மறுத்தோ, அன்றி ஒப்பியோ, ஒரு சொல்கூடச் சொல்லவில்லை. அவ்வாறு இருக்கவும். 'இராமன் மறுத்துக் கூறிவிடுவானோ!' என்று அஞ்சிய மன்னன், அணை போடுகிறான். தசரதன் எது பற்றிப் பேசுகிறான் என்று கூட இராமன் இன்னும் அறியவில்லை. அந்த நிலைமையில் "மன்னன் சொல்ம றாமகப் பெற்றவர் அருந்துயர் துறந்தார்," (70) என்று கூறுவது நம் பழைய ஐயத்தை உறுதிப்படுத்துகிறது. "புவிக்கெலாம் வே தமேயன இராமனிடம்" (மந்தரை சூழ்ச்சி. 47) அன்புடைத் தந்தையா இவ்வாறு பேசுவது? "தந்தை சொல்லை மீறாத மக்களைப் பெற்றவர் துயரம் அடையமாட்டார்,"என்றா கூறுவது? தசரதன் மூத்த மைந்தனாகிய தனக்கு அரசாட்சியை ஏற்று நடத்துதல் கடமை என்பதை இராமன் அறிய மாட்டானா? அறிந்தால், அதை ஏற்று நடத்துவதில் அவன் ஏன் பின் வாங்க வேண்டும்? இருந்தும், அவன் கருத்தை இது வரை ஒன்றும் வெளியிட வில்லையே! ஆய்ந்து பார்த்தால், தசரதனுடைய இச்சொற்கள் சற்று வியப்பையே தருகின்றன. இதனையடுத்து அரசன் "புனையு மாமுடி புனைந்து இந்த நல்லறம் புரக்க நினைய வேண்டும்; நான் நின்வயின்பெறுவது ஈது" என்றான் (ஷை—71)

இராமன் இந்நிலையிலும் வாய்திறந்து பேசியதாகக் கவிஞன் கூறாமல் விட்டது இன்னும் வியப்பே! ஆனால், ஒரு மௌன நாடகம் மட்டும் நடைபெறுகிறது. அந்நாடகத்தை ஒரு பாடல் மூலம் கவிஞன் கூறுகிறான். இப்பாடலுக்குப் பலர் பலவாறு உரை கூறுவர் எனினும், இது வரை நிகழ்ந்தவற்றை உட் கொண்டு பார்த்தால், அவர்கள் கூறும் உரை சரியானதா என்ற ஐயம் தோன்றும்.

### பழைய பாடலும் புதிய உரையும்

தசரதன் (பத்துப் பாடல்களில்) பேசிய அனைத்திற்கும். இராமன் வாய்திறந்து ஒருசொல்லுங் கூறினான் இல்லை. ஆனால், அவன் மனத்தில் மட்டும் பெரும்போராட்டம் ஒன்று நிகழ்ந்ததை அவன் முகம் குறிக்கின்றது. பெற்று வளர்த்துச் சீராட்டிய தந்தை இம்முகக்குறிப்பை அறியமாட்டானா? நன்றாகத் தசரதன் இக்குறிப்பை அறிகிறான். தசரதன் பேசத் தொடங்கியதுமே அவன் மனத்தில் உள்ளதை இராமனும்

அறிந்துவிடுகிறான். அறிந்த அந்த வினாடியிலிருந்து இப் போராட்டம் இராமன் மனத்துள் நடைபெறுகிறது போலும்! இதைக் கவனித்து விட்ட தசரதன், இராமனுக்கு மேலும் இது பற்றி ஆராய இடங்கொடாதபடி பேசிக் கொண்டே வருகிறான். ஒரு சந்தர்ப்பத்தில் தந்தை சொல்லைத் தனயன் தட்டிநடத்த லாகாது என்பதையும் 'சொல்மறாமகப்பெற்றவர்' என்று குறிப்பாகத் தெரிவித்துவிட்டான் இந்தச் சூழ்நிலையை மனத்துட் கொண்டு இனிப் பாடலைக் காண்போம்.

''தாதை அப்பரிசு உரைசெயத் தாமரைக்கண்ணன்
காதல் உற்றிலன் இகழ்ந்திலன் கடன்இது என்றுஉணர்ந்தும்
'யாது கொற்றவன் ஏவியது? அதுசெயல் அன்றோ
நீதி ஏற்'கென நினைந்தும்அம் பணிதலை நின்றான்.''

''குருசில் சிந்தையை மனக்கொண்டு கொற்றவென் குடையான்
'தருதி இவ்வரம்', எனச்சொல்லி உயிர்உறத் தழுவிச்
சுருதி அன்னதன் மந்திரச் சுற்றமும் சுற்றப்
பொருவின் மேருவும் பொருவருங் கோயில்போய்ப் புக்கான்.''
(மந்திரப்.72,73)

''தந்தைஅவ்வாறு கூறத் தாமரைக்கண்ணானாகிய இராமன் அரசை விரும்பாமலும் வெறுத்து ஒதுக்காமலும் உள்ள மனத்துடன், 'இது கடன்' என்று உணர்ந்தும், 'அரசர் எதனை ஆணை இடுகிறாரோ, அதனைச் செய்து முடித்தலே எனக்கு நீதியாகும், என நினைத்தும், அப்பணியைத் தலைமேற்கொண்டு நின்றான்.'' இதுதான் பாட்டின் நேரிய பொருள். ஆனால் ''கடன் இது என்று உணர்ந்தும்'' என்ற சொற்றொடர் சிறிது ஐயப்பாடான பொருளையுடையது. எதனைக் கடன் என்று இராமன் நினைந்தான்? அரசை ஏற்றுக்கொள்ளுதலையே தனது கடன் என்று உணர்ந்தான் என்று பொருள் கூறிவிட்டால், அடுத்த அடியில் உள்ள ''யாது கொற்றவன் ஏவியது, அது செயல் நீதி,'' என்ற தொடர் பொருள் இன்றி நின்று வற்றும். ''அரசை ஏற்றுக்கொள்வதைக் கடன் என்று உணர்ந்தும் அரசன் கட்டளையை ஏற்றுக் கொள்வதே நீதி என்று நினைந்தும் இருந்தான்,'' என்று கூறினால் இத்தொடர் பொருந்தாமை நோக்கிக்கொள்க' மேலும், ''உணர்ந்தும்'' என்ற சொல்லில் உள்ள உம்மைக்கு இது பொருள் அன்று என்பதும் வெளிப்படும். ''என்னைத் தெரிந்திருந்தும் பேசாது போயினான்,'' என்ற வழிப்

பேசி இருக்க வேண்டியவன் பேசாது போயினான் என்பதை உம்மை அழுத்திக் கூறுவதை அறியலாம்.

அவ்வாறாயின் கடன் இது என்று உணர்ந்தும்'' என்றவிடத்து எதனைக் கடமை என இராமன் கருதினான் என்பது ஆய்தற் பாலது. இந்நிலையில் கம்பநாடன் குறிப்பாக மட்டும் கூறியதும், வான்மீகி விளக்கிக் கூறியதுமான ஒரு நிகழ்ச்சியை நினைவிற்குக் கொண்டு வரல் வேண்டும். அந்நிகழ்ச்சியே கைகேயி திருமணத்தின் போது நடைபெற்றதாகக் கூறப்படுவது. அதாவது, அயோத்தி வேந்தன் தன் கோசலநாட்டைக் கைகேயிக்கும், அவள் வயிற்றில் பிறக்கும் மைந்தர்க்கும் மணப்பரிசிலாக (கன்னியா சுல்கம்) ஈந்துவிட்டான் என்பது. இக்கருத்தைக் கம்பநாடன் திருவடி சூட்டுபடலம் 111-ஆம் பாடலாகக் கூறுகிறான். பரதன் இராமனைத் தேடிக் காடு சென்று அவனைக் கண்டு மீட்டும் வந்து, அவனுக்கு உரிமையான அரசை ஏற்குமாறு கூறுகின்றான். ஆனால், இவ்விடத்தில் சிறந்த பண்பாடுகட்கெல்லாம் உறைவிடமான இராகவன்; பரதன் அறியாத இச்செய்தியை எடுத்துக்கூறி உண்மையில் அயோத்தி அரசு பரதனுக்கே உரியது என்பதை எடுத்துக் காட்டுகிறான்.

''வரனில் உந்தைசொல் மரபி னால் உடைத்
தரணி நின்னதுஎன்று இயைந்த தன்மையால்
உரனில் நீபிறந்து உரிமை ஆதலால்
அரசு நின்னதே; ஆள்க; என்றனன்;
(திருவடி சூட்டு.111)

உன் தந்தையாராகிய தசரதர் (திருமணக் காலத்தில் கன்னியா சுல்கமாகத்) தந்த மரபுபற்றி இத்தரணி நின்னதாய் இயைந்துள்ளது; நீ பிறந்துவிட்டமையின், உனக்கு உரிமையும் ஆகி விட்டது. ஆதலால், இவ்வரசு உன்னுடையதே; ஆள்க, என்கிறான் அவ்வள்ளல். இக்கருத்தை விரிவாக வான்மீகரும் அயோத்தியாகாண்டம், 107-ஆம் சருக்கம், 3-ஆம் சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளார். அதன் மொழிபெயர்ப்பு வருமாறு:- 'உடன் பிறந்தவனே, முற்காலத்தில் உன் தாயாரை நம் பிதா மணஞ் செய்து கொண்ட பொழுது, உன் பாட்டனாரிடம் (கேகய ராஜனிடம், அவர் பெண் வயிற்றுப் பேரனுக்காகத் தமது ராஜ்யத்தைக் கன்னியா சுல்கமாகப் பிரதிக்ஞை செய்து கொடுத்தார்.'' (சோமசுந்தர பாரதியார்; தசரதன் குறையும் கைகேயி நிறையும், பக்கம், 19)

இது வரை கூறியவற்றிலிருந்து இராமன் இவ்வயோத்தி அரசு பற்றிய சிக்கலை அறிந்திருந்தான் என்பது பெறப்படுகிறதன்றோ? இதனைத்தான் முற்கூறிய பாடலில் உள்ள "கடன் இது என்று உணர்ந்தும்" என்ற அடிபொருளாகக் கொண்டுள்ளது. 'இராமன் இதனை அறிந்திருந்தும், தந்தைக்கு அறத்தை எடுத்துக் கூறாமல், அரசை ஏற்றுக்கொள்ளப் புகுந்தது முறையா?' என்ற வினா எழலாம் அன்றோ? அதற்குவிடைதான் மூன்றாம் அடியிற் கவிஞன் தருகிறான். இராமனைப் பொறுத்தவரை தசரதன் அரசனாயும் தந்தையாயும் உள்ளான். தந்தையாய் இருந்து கேட்கும் பொழுது அவனுடன் வாதாடவும் கூடும். ஆனால், அரசனாய் இருந்து ஆணையிடும்பொழுது அது தவறாய் இருப்பினும் ஏற்று நடப்பதை யன்றி வேறு வழி இல்லை. இவ்வாறுதான் இராகவன் நினைந்து நடந்தான் என்பதைக் கவிஞன்தான் பயன்படுத்தும் "கொற்றவன், ஏவியது" என்ற இருசொற்களாலும் குறிக்கிறான். தந்தையைக் குறிக்கும் எத்தனையோ சொற்கள் இருக்கவும், கொற்றவன் என்றும் ஏவியது என்றும் கூறியது, இராமன் இந்நிலையில் அவனை மன்ன னாகவே மதித்தான் என்பதை அறிவுறுத்தவேயாம். இராமன் மனத்துள் நினைத்ததை அவன் கூற்றாகவே கூற வந்த கவிஞன், "தந்தை" என்றோ, "தசரதன்" என்றோ குறிப்பிடாமல், "கொற்றவன்" என்று குறிப்பிட்டது இக்கருத்தை வலியுறுத்தவே யன்றோ?

இதனை அடுத்துள்ள பாடலின் முதல் அடி நம் மனத்தில் இக் கருத்தை இன்னும் ஆழப் பதியச் செய்கிறது. இராமன் மனக் கலக்கத்தைக் குறிப்பால் உணர்ந்த மன்னன், ஒரு வேளை இராமன் இந்நிகழ்ச்சியை எடுத்துக் கூறிப் பலர் முன்னே தன் கட்டளையை நிறைவேற்ற மறுத்து விடுவானோ என்று அஞ்சித்தான் போலும் "தருதி இவ்வரம்," எனச்சொல்லி உயிர் உற அவனைத் தழுவி விட்டான்! பத்து நிமிடங்கட்கு முன்னர் மகனைத் தழுவிய மன்னன், மீட்டு அவனைத்தழுவ என்ன நிகழ்ந்துவிட்டது? இதனை யும் குறிப்பால் உணர்த்த வந்த கவிஞன் "குருசில் சிந்தையை மனக் கொண்டு கொற்றவெண்குடையான்" எனவும் குறிக்கிறான். "இராமனது மன நிலையை மனத்துள் வாங்கிக்கொண்ட தசரதன், உடனே அவனை நோக்கி, 'இவ்வரத்தை எனக்குத் தருவாயாக.' என்று கூறி அவனை மார்புடன் அணைத்துக்கொண்டான்," என்பதே இக்கவியின் பொருள். தன் கருத்துக்கு எதிராக இராமன் ஏதேனும் கூறிவிடுவான் என்று அஞ்சிய மன்னன் இவ்வாறு அவனைப் பேசவிடாமல் தடுத்து விட்டான் என்று கூறுவதில் தவறு இல்லை என்றே தோன்றுகிறது.

இதனை அடுத்து இக்கட்சி பேசுவோர் எடுத்துக் காட்டும் ஒரு நிகழ்ச்சியும் உண்டு. இராகவன் மணமுடித்துக்கொண்டு அனைவரும் மிதிலையிலிருந்து அயோத்தி மீண்ட விரைவிலேயே தசரதன் பரதனை அவனுடைய பாட்டன் நாட்டிற்கு அனுப்பி விடுகிறான். அதனைக் கூற வந்த கவிஞன், ''அண்ணல்(தசரதன்) அப்பரதனை நோக்கி ஆண்டகை எண்ணருந்தகையதோர் பொருள் இயம்புவான்,'' (பரசுராமப் படலம், 46) என்றே குறிக்கிறான். 'தசரதன் பரதனை நோக்கி நினைத்தற்கரிய ஒரு செய்தியைச் சொல்லினான்,' என்பதே இதன் பொருள். நினைத்தற்கரிய இச் செய்தி எதுவாக இருக்கலாம் என்று நாம் வியப்புடன் மேலே சென்றால், காணப்படும் கவிதை இதோ வருகிறது :

'' 'ஆணைநின் தன்முது தாதை ஐய!நின்
காணிய விழைவதுஓர் கருத்தன் ஆதலால்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூண்ஒளிர் மார்ப!நீ போதி.'என்றனன்.'' (பரசு. 47)

'' ஐய, பரத, வயது முதிர்ந்த உன் பாட்டனார் உன்னைக் காணவிரும்புகிறார் ஆகலின், கேகய நாடு சென்று வருக,'' எனஃவினானாம். 'இதுவா எண்ணரும் பொருள்! என்று வியப்படைய வேண்டியுளது. ஆனால், குறிப்பால் அனைத்தையும் உணர்த்தும் கவிஞன், இங்கு அறிவிப்பது ஒன்றுண்டு. இது பரசுராமப் படலத்தின் இறுதிக் கவிதைக்கு மூன்றாவதாய் உள்ளது. இதனை அடுத்து நிகழ்வது மந்திரப்படலந்தான். பரதனைப் பாட்டன் வீட்டுக்கு அனுப்பிய உடனே முடிசூட ஏற்பாடு செய்தான் மன்னன் என்று குறிப்பால் பெறவைக்கிறான் கவிஞன். இதன் உட்கருத்து யாதாக இருக்க முடியும்? இராமன் முடி சூட்டலுக்குப் பரதன் தடையாகலாம் என்று மன்னன் கருதியதால், அவனை நீக்கிவிட்டு உடனே தான் கொண்ட கருத்தை முற்றுவிக்க முனைந்தான் என்பதே இதனால் விளங்குகிறது.

இவற்றிலிருந்து தசரதன்மாட்டு நம்மையும் மீறிக் குறை காணத்தான் தோன்றுகிறது. அவன் கைகேயிக்கு முன்னர்க் கொடுத்த அரசை அவள் அறியாமல் இராமனுக்குக் கொடுக்கின்றான் என்பது மட்டுமன்று. இதில் மட்டும் அவன் உரை தவறி விட்டான் என்பதில்லை: இதனை அடுத்த நிலையிலும் இதே தவற்றைச் செய்கிறான்.

கைகேயி வரம் இரண்டு கேட்டதை உடன் தர இயலாமல் மறுத்துப் பார்த்தும் அவள் விடவேமாட்டாள் என்பது தெரிந்த பின்னர், ''ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம்'' (கைகேசி. 44) என்று வரங்கள் இரண்டையும் தந்ததாகக் கூறிவிடுகிறான் தசரதன். எனினும், அவன் மனத்தில் ஒரு சிறிய ஆசை இருந்துகொண்டுதான் இருக்கிறது. தன்னையும் மீறி இராகவன் காடு செல்லாமல் மீண்டுவிடவேண்டும் என்பதே அவ்வாசை. அரசன் அவ்வாசை யுடன் இருப்பதையும் கவிஞன் குறிப்பாக நமக்கு அறிவிக்கிறான், கைகேயியின் அரண்மனையில் அவள் கேட்ட வரத்தைத் தந்து விட்டு மயக்கமுற்ற நிலையில் வீழ்ந்து கிடக்கும் மன்னனைக் காண வசிட்டன் வருகிறான். வந்த மாமுனி மன்னனை நோக்கி '' அரசே, அயரேல்! அவனை இன்றே ஏகா வண்ணம் தகைவன் உலகோடு!'' என்று கூறிச் செல்கிறான். இவ்வார்த்தைப்படி ஒரு வேளை நடைபெறாதா என்று மன்னன் எதிர்பார்க்கிறான். அவனைத் தேற்ற வேண்டிய கடப்பாடு உடைய கோசலை, மெள்ள அவன் காதின் அருகிற்சென்று, ''முனிவனுடன் நம் ஐயன் வரினும் வருமால் அயரேல் அரசே!' (நகர்.70) என்று கூறுகிறாள். இதிலுள்ள ''வரினும் வரும் '' என்ற உம்மையால், கோசலைகூட வாய்மை வீரனாகிய வள்ளல் இராமன் மீள்வன் என்று எதிர் பார்க்கவில்லை என்பது அறிய முடிகிறது. ஆனால், மன்னன் மன நிலை இதற்கு எதிர் மாறாகவே உள்ளமை கண்கூடு. ''ஒன்றும் தெரியா மம்மர் உள்ளத்து அரசன் மெள்ள, 'வன் திண் சிலைநம் குரிசில் வருமே! வருமே!' என்றான்.'' (நகர். 81). இதனால், தந்த வாக்கை மீறிக்கொண்டு இராமன் வருதலும் தவறன்று என்றே மன்னன் நினைக்கிறான் என்பது பெறப்படுகிறதன்றோ?

இதுகாறும் கூறியவற்றால், ஓர் உண்மை வெளிப்படுதல் கண் கூடு. கம்பநாடன் படைத்த தசரதன், இராமன் மாட்டு எல்லை யற்ற காதல் கொண்டுள்ளான் என்பதும், அக்காதல் காரணமாக ஓர் அளவு அறம்பிறழவும் துணிந்துவிட்டான் என்பதும் வெளிப்படை.[1]

இனி அவன் உரை தவறவில்லை என்பார் வாதத்தையும் மனைவியிடம் அவன் கொண்டுள்ள மனப்பாங்கையும் காண்போம்;

---

1. இக்கருத்துக்கு வான்மீகத்திலிருந்தும் கம்பனிலிருந்தும் வேறு ஏதுக்கள் காட்டி முதன் முதலில் நூல் வடிவாக வெளியிட்ட பெருமை பேராசிரியர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்களுடையதே.

தசரதனாம் அயோத்தி வேந்தனுக்கு இராமன் மகன் மட்டு மல்லன்; உயிராயும் இருந்தான்.

எனவே, உயிராய் விளங்கிய இராமனைப் பிரிந்து வாழத் தசரதன் விரும்பவில்லை.

இவ்வாறு இருப்பினும் தசரதன் தான் கொடுத்த வரம் இரண்டையும் மீட்டும் பெற்றுக்கொள்ள விருப்பவில்லை.

இதனை அவனுடன் தொடர்புடைய அனைவருமே ஒப்புக் கின்றனர். இஃது அவன் உரை தவறாதவன் என்பார் சட்சியாகும். கைகேயி கேட்ட இரு வரங்களையும் தசரதன் இலகுவில் தர வில்லை என்பது உண்மையாயினும், இறுதியில்,

> 'ஈந்தேன், ஈந்தேன், இவ்வரம் என்சேய் வனமாள
> மாய்ந்தே நான்போய் வான் அர சாள்வன்.'' (கைகேயி.44)

என்று ஐயத்திற்கு இடனின்றிக் கூறிவிடுகிறான். இனி இவ் வரங்களைப் பெற்றுக்கொண்டவளாகிய கைகேயியும் இவற்றைப் பெற்றுக்கொண்டதாகவே கூறுகிறாள். தன் ஏவலால் தன்னைக் காண வந்து வணங்கிய இராகவனை நோக்கி,

> '' 'ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீபோய்த்
> தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
> பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
> ஏழிரண்டு ஆண்டில் வாஎன்று இயம்பினன் அரசன்'
> என்றாள்.''
> (கைகேயி.107)

இவ்வாறு அரசன் இயம்பினான் என்று கூற அவளுக்கு என்ன உரிமை இருந்தது என்பது அறியக்கூடவில்லை.

அரசன், 'வரந்தந்தேன்'' என்று கூறினமையின், அவ்வரங்களின் உட்கோளை அவன்மேல் ஏற்றிக் கூறினாள் போலும்! இது எவ்வாறாயினும், அவன் உரை தவறாமல் வரந்தந்துவிட்டான் என்பதை அவளும் ஒப்புக்கொள்கிறாள் என்பதற்கு இதனை எடுத்துக்காட்டாகக் காட்டுவர்.

அடுத்து அரசன் தந்த வாக்கால் அல்லற்பட்டுக் காடு செல்ல வேண்டியவனாகிய இராமனுக்கு அரசன் வாக்குத் தந்ததாகவே ஒப்புக்கொள்கிறான். அரசனுடைய கட்டளையை இராமன் மூலம் கேட்டு வருந்துகிற கோசலை, இராமனுடன் தானும்

காட்டுக்கு வந்துவிடுவதாகவே கூறி அரற்றுகிறாள். அந்நிலையில் இராமன் அவளைத் தேற்றுமுகமாக,

"..........................அருங் கற்பினோய்!
பொய்த்தி றத்தினன் ஆக்குதி யோபுகல்
மெய்த்தி றத்துநம் வேந்தனை நீ?" (நகர்.15)

என்றும், "எந்தையை மறந்தும் பொய் இலன் ஆக்கி" (நகர்.17) என்றும் கூறுகிறான். 'மெய்த்திறத்து நம் வேந்தன்' என்றமையின், இராமனும் தசரதன் உறுதியை அறிந்தவன் போலவே பேசுகின்றான். மேலும், கைகேயியிடம் விடை பெறும் பொழுதுகூட

"எந்தையே ஏவ, நீரே உரைசெய, இயைந்தது உண்டேல்
உய்ந்தனன் அடியேன்!" (கைகேயி.106)

என்றும் கூறுகிறான். ஆகலின், அவன் தந்தையைப்பற்றிக் கொண்டிருந்த எண்ணம் உறுதியாகிறது.

இவ்விருவர் தவிர, வேற்றவரும் இதுபற்றிக் கூறுகின்றனர் இராமனால் மறைந்து நின்று கொல்லப்பட்ட வாலி இராமனை இழித்துப் பேசத் தொடங்குகையில், தசரதன் பெருமையைப் பின் வருமாறு பேசுகிறான்:

"வாய்மையும் மரபும் காத்து மன்உயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்த னேநீ? பரதன்முன் தோன்றி னாயே!,' (வாலி. 76)

இவ்விடத்தும் தசரதன் வாய்மை காத்து உயிரை விட்டவனாகவே பேசப்படுகிறான். இவ்வாறு பலராலும் புகழப் படுகிறான் ஆகலின், தசரதன் தன் சொல்லைக் காத்தவனாகவே கருதப்படல் வேண்டும் என்பது இவருடைய வாதம்.

இவ்வாதத்தில் இராமனும் வாலியும் உண்மையில் நடந்ததை நேரே கண்டு அறியாதவர்கள். எனவே, அவர்களுடைய சொல்லுக்கு அதிக மதிப்புத் தந்து இடர்ப்பட வேண்டா. கைகேயி உண்மையை அறிவாள் எனினும், தன் கருத்து நடைபெறுவதற்காகவேனும் அரசன் கூறிவிட்டான், என்று அவன் கூறாத ஒன்றைக் கூறிவிட்டாள். தசரதனைப் பொறுத்தவரை வாயால் 'வரம் ஈந்தேன் ஈந்தேன், என்று கூறிவிட்டு, செயல் அளவில் அது நனைபெறாதிருக்கப் பாடு படுகின்றான். இவை அனைத்தையும் நோக்கும்பொழுது உண்மையில் தசரதன் உரை தவறாதவன்தானா என்னும் ஐயம் மீட்டும் எழத்தான் செய்

கிறது. 'தன் சொல்லைக் காக்க வேண்டித்தானே அவன் உயிரை விட்டான்?' என்று எவரேனும் கேட்பாராகில், அதற்கும் கவிஞன் விடை கூறுகிறான். அவனையும் மீறியே அவன் உயிர் பிரிகிறது. சாதாரண மக்கள் தங்கள் உயிரைக் காத்துக்கொள்ள எவ்வளவு பாடு படுவார்களோ, அவ்வளவு பாடு அவனும் படுகிறான். மைந்தன் காடு சென்று விட்டால் தன் உயிர் போவது உறுதி என்பதை அவன் நன்கு உணர்கிறான்.

''அண்ணல் வனம்ஏ குதலும், என்றன்
உயிர்வீ குதலும் இறையுந் தவறா.'' (நகர்.89)

என்று அவனே கூறுகிறான். இவ்வாறு இருந்தும், இராமனைச் காட்டுக்கு அனுப்பாதிருக்க அவன் செய்யும் முயற்சிகள் சில அல்ல.

அவன் வரங்கொடுத்த நிகழ்ச்சியை அறிந்த இராமன், அவனை ''மறந்தும் பொய்யிலன் ஆக்க'' (நகர்.17)முற்படுகிறான். கைகேயி தன்னிடம் வந்த இராமனை உள்ளே வரவிடாமல் வெளியே வந்து அவனைக் கண்டு கூற வேண்டியவற்றைக் கூறி விட்டாள். ஒரு நொடியில் நடைபெற்றவற்றைத் தன் கூர்த்த மதியால் அறிந்துகொண்ட இராமன், ஒரு வியப்பான செயலைச் செய்கிறான். இது உலகியலுக்கும் ஓரளவு புறம்பானது ஆகும். கைகேயி கூறிய சொற்களைக் கேட்ட அப்பெருமான்,

''மன்னவன் பணியன்று ஆகில் நும்பணி மறுப்ப னோ? என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ?
என்இதின் உறுதி அப்பால்? இப்பணி தலைமேல் கொண்டேன்
மின்ஒளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்.''
(கைகேயி.110)

என்று கூறிவிட்டுப் புறப்படுகின்றான். இப்பாடலின் முதல் அடியில் உள்ள ''மன்னவன் பணி அன்று ஆகில்'' என்ற சொற்கள் ஓரளவு ஆராய்ச்சிக்கு உரியன. கைகேயி இவனிடம் கூறும் பொழுது, ''இயம்பினான் அரசன்'' (கைகேயி.107) என்றுதானே கூறினாள்? அவ்வாறு இருக்கவும், ''அரசன் பணி அன்றாகிலும்'' என்று இராகவன் குறிப்பிடவேண்டிய இன்றியமையாமை எங்குற்றது? தாயின் சொல்லுக்குத் தான் வைத்திருந்த மதிப்பை இதன் மூலம் வெளியிட்டான் என்று கூறுவர். ஆனால், அவள், ''தந்தையின் ஆணை'' என்று கூறி வாய் மூடு முன், தந்தையின் ஆணை அன்றாகிலும்'' என்று மகன் கூறுவது தந்தையின் மன நிலை பற்றி மகன் கொண்டிருந்த கருத்தை நமக்குப் புலப்

படுத்தாமல் விடாதன்றோ? எக்காரணம் பற்றியும் தன்னைக் காட்டிற்குப் போகச் சொல்லும் ஆணையைத் தந்தை இட்டிருக்க மாட்டான் என்பதை உறுதியாக இராமன் அறிவான். ஆனாலும் அதனை, எடுத்துக்காட்ட இஃது இடமன்று; காலமும் அன்று எனவே, தாயுரையை மெய்யெனவே ஏற்றுக் கொள்கிறான். ஆனால், இராமன் இதனை நம்பவில்லை என்பதை அவன் வாயால் வெளிப்படையாகக் கூறாவிடினும் அடுத்து அவன் செய்யும் செயலால் வெளிப்படுத்துகிறான்.

''தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவம்மேற் கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண்டு ஆண்டில் வர'' ப்போகிற ஒரு மகன் தந்தை யைக் கண்டு விடைபெறாமல் போகலாமா? அதுவும் அத்தந்தை வீட்டினுள் இருக்கவும், வாயிற்படி வரை வந்த மகன் ஒரு வார்த்தை கூட அத்தந்தையிடம் நேரிற் கூறிக்கொள்ளாமல் செல்ல வேண்டிய காரணம் யாது? அத்தந்தையின் உயிரனைய மகனா இவ்வாறு செய்வது? ஆனாலும், அவ்விராமன் தந்தையைக் கண்டு விடை பெறாமல் போய்விட்டான் என்று கவிஞன் கூறுகிறான்.

'' என்றுகொண்டு இனைய கூறி அடிதொழுது இறைஞ்சி மீட்டும்
தன்துணைத் தாதை பாதம் அத்திசை நோக்கித் தாழ்ந்து
......கோசலை கோயில் புக்கான்''. (நகர். 1)

தந்தை அருகிற்சென்று விடை பெறாமல் அவன் இருக்கும் திசைநோக்கி வெளியே இருந்தபடியே வணங்கி விட்டுப்போனான் என்றால், இதன் காரணம் யாது என்பதை ஆயவேண்டாவா? கைகேயி கூறியபடி தசரதனே இராமனைக் காடு செல்ல ஏவினான் என்று இராமன் நம்பியிருப்பின், அவனிடம் நேரிற்சென்று விடை பெறத் தடையாது? எப்பொழுது இராமன் வெளியில் நின்ற படியே வணக்கஞ்செலுத்திவிட்டுப் போனானோ, அப்பொழுதே அவன் கருத்து விளங்குகிறது. தன்னை நேரே கண்டு விட்டால் தந்தை அத்துயரைப் பொறுக்க மாட்டான் என்பதை உணர்ந்த இராகவன், தந்தைக்கு அத்தகைய இக்கட்டான நிலையை உண் டாக்க விரும்பவில்லை. வேறு வழியின்றித் தந்தை தாய்க்கு வரம் கொடுத்த நிலையை மனத்துட்கொண்ட இராமன், இப்பொழுது அவன் தன்னைக் காண நேர்ந்தால் என்ன ஆவானோ என்பதைக் கற்பனை செய்து பார்க்கிறான். ஆதலின், தந்தை தன்னைக்

கண்டு இரண்டு வகையிலும் அல்லலுறும் நிலையிலிருந்து அவனைக் காக்க வேண்டி உள்ளே செல்லாமற் சென்றுவிட்டான். இதனால், தந்தை மகனிடத்துக் கொண்டிருந்த அன்பைப் போலவே மகனும் தந்தையிடம் அன்பு கொண்டிருந்தான் என்பது புலனாகிறது. தந்தையின் குணாதிசயங்களை நன்கு அறிந்தவனாகலின், முடி சூட்ட அவன் பட்ட அவசரம் வினையாய் விளைந்ததை நினைந்து மேலும் தன்னால் இன்னல் விளையாதபடி காக்கவே ஒதுங்கிக் கொண்டான்.

தசரதன் மனைவியரிடத்து—சிறப்பாகக் கைகேயியிடத்து—நடந்துகொள்ளும் முறை ஆராயற்பாலது. மனைவியர்மாட்டுக் கழிபெருங்காதலுடையவன் அரசன் என்பது வெளிப்படை. இன்றேல், ஆயிரக்கணக்கான மனைவியருடன் வாழ்ந்தான் என்பது பொருந்தாதன்றோ! இத்துணைப்பேர் கிழத்தியர் இருப்பவும் சிறப்பாகக் கைகேயி மாட்டு மிகுந்த காதல் கொண்டிருந்தான் என்பதும் அறிய முடிகிறது. அதே போலக் கைகேயியும் அவன் மாட்டு அன்பு கொண்டிருந்திருக்க வேண்டும். என்றாலும், அவனது அன்பைக்காட்டிலும் அவளது அன்பே தூய்மையும் ஆழமும் உடையதாய் இருந்தது. தசரதன் மாட்டுக்கொண்ட பெருங்காதலால் அவனுக்கு உயிர் அனைய இராமனும் கைகேயிக்கு உகந்தவனாயினான். தான் பெற்ற மைந்தனை விட்டு மாற்றாள் மகனிடத்து இத்துணை அன்பு பெருக இதுவே பெருங்காரணமாய் அமைந்தது போலும்! இராமனுடைய நற்பண்பே காரணமெனின், பரதனும் இராமனை ஒத்த—ஏன், மேம்பட்ட—நற்பண்புடையவன். அவ்வாறு இருக்கக் கைகேயி இராமன்மேல் அதிக அன்பு செலுத்தி அவனைத் தன்மாட்டே இருத்தி வளர்க்கக் காரணம், அவன் தன் கணவனாகிய தசரதனுக்கு உயிரினும் இனியன் என்பதேயாம்; இந்நிலை ஊரவர் அனைவரும் அறிந்த ஒன்று என்பது மக்கள் பேசும் பேச்சாலும் வெளிப்படுகிறது. இராமன் சிற்றவை கோயில் நோக்கி வருகையில் மக்கள்,

''தாய்கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தைகிளர் ஞாலம்இவன் ஆள்வான்
ஈகையில் உவந்தனன் இயற்கைஇது என்றால்,
தோகையவள் பேருவகை சொல்லஅரிது என்பார்.''

(கைகேயி. 97)

இதனால், இராமன் மாட்டுக்கைகேயி கொண்டிருந்த அன்பு தொடக்கத்தில் கணவன் காரணமாகத் தொடங்கி இறுதியில் அவன் நற்பண்பு காரணமாக நிலைத்தது எனலாம்.

இஃது இவ்வாறாயின், தசரதன் நிலை யாது? அவன் கைகேயி மாட்டுக்கழிபெருங்காதல் கொண்டது உண்மையாயின், அவள் மகனிடத்தும் அக்காதல் விரிந்திருக்க வேண்டுமன்றோ? அதற்கு மறுதலையாகப் பரதனிடம் அவன் ஓரளவு வெறுப்புமன்றோ கொண்டிருந்திருக்கிறான்? மிதிலையிலிருந்து மீண்டு வந்த சின்னாட்களுக்கெல்லாம் பரதனைக்கேகய நாட்டுக்கனுப்பியதும், அவன் சென்றவுடனே மந்திராலோசனைக் கூட்டம் கூட்டியதும். இராமனுடைய முடி சூட்டு விழாவை விரைவு படுத்தியதும், அம் முடி சூட்டு விழாவிற்கூடப் பரதனை வந்து கலந்துகொள்ளுமாறு சொல்லி அனுப்பாததும் சேர்த்து வைத்து நோக்குகையில், 'தசரதன் எண்ணம் தூய்மையானதுதானா!' என்ற ஐயம் தோன்றத்தான் செய்கிறது.

வரம் என்ற பெயரால் தனக்கு ஆகாதவற்றைப் பெற்றுக் கொண்ட கைகேயியை மன்னன் ஓரளவு வெறுப்பது முறைதான் என்று கூறலாம். அதிலுங்கூட ஒரு வகையான வெறுப்புத் தெரிகின்றது. கைகேயிக்குத் தெரியாமல் தான் ஒரு காரியத்தை முடித்து விட்டதாக மனப்பால் குடித்துக்கொண்டு வந்த தசரதனுக்குக் கைகேயியின் சொற்கள் இடிபோன்றிருந்தன, அமைச்சர் முதலிய பிறரிடமிருந்து தன் கருத்துக்கு (இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற எண்ணத்துக்கு) மாறுபாடு வரலாம் என்று நினைத்தமையாலேயே மந்திர சபையில் பெரிய முகவுரையுடன் பேசினான் தசரதன். ஆனால், அவன் எதிர்பார்த்தற்கு மாறாக அவர் அனைவரும் அவன் கருத்தை உடனே ஏற்றுக்கொண்டனர். இதனால், பெருத்த மனக்களிப்புடன் தசரதன் கைகேயி வீட்டினுள் நுழைந்தான் ஆனால், அவன் சற்றும் எதிர் பாராமல் அவளிடம் பெரிய ஏமாற்றத்தை அடைந்தான். இதனாலும் அவனுடைய கோபம் அதிகமாகிவிட்டது. தன் வீட்டிலேயே தனக்குப் பகை உள்ளது எனபதை அவன் அறியவில்லை. எதிர் பாராத இந்த ஏமாற்றம் மேலும் அவனுடைய கோபத்தைக் கிளறிற்று. இத்துணைக் கோபமும் கைகேயியின்மேல் செல்வது முறை. அவள் நல்லவளோ தீயவளோ, அவன் சினம் அவள்மேல் செல்வதற்கு ஒரு காரணமேனும் காணலாம். அவனுக்கும் அவளுக்கும் இடையே நடந்த இப்போராட்டத்தில் பரதன் பங்கு பெற முறையே இல்லை" என்றாலும், தசரதன் பரதன்மேல் பெருஞ்சிற்றம் கொள்கிறான்' அவனே பரதனைப் பாட்டன் வீட்டிற்கு அனுப்பினான். அப்படிப் பரதன் செல்லுமுன் இராமனுக்கு முடி சூட்டல் நடைபெறும்

என்பதை யாரும் அறியார். அவ்வாறு இருக்க, பரதன் எவ்வாறு கைகேயியின் சூழ்ச்சிக்கு (அது சூழ்ச்சியானால்) உடந்தையா இருக்க முடியும்? அவன் உடந்தையாயில்லை என்றால், அவன் மேல் தசரதனுக்கு ஏன் இத்துணைக் கோபம் வர வேண்டும்? உண்மையில் பரதன்மேல் ஓரளவு அன்பாவது இருந்திருப்பின், அவன்மேல் மன்னனுக்குச் சீற்றம் வரக் காரணமே இல்லை. கைகேயி, பரதன் என்ற இருவர் மேலும் அவன் கொண்ட கோபத்தால் இழிந்த மக்களைப் போல ஏசத் தொடங்கி விடுகிறான். கைகேயியின் தாலியை அறுத்து, அந்தக் கயிற்றினால் பரதனுக்குக் காப்புக் கட்டவேண்டுமாம்! இவை தசரதனுடைய சொற்கள்.

" பழிக்கு நாணாய் மாணாப் பாவி! இனிஎன் பல?உன்
கழுத்தில் நாண்உன் மகற்குக் காப்பின் நாணாம் என்றான்
(நகர்.49)

கோசல நாட்டின் சக்கரவர்த்தி பேசக்கூடிய சொற்களா இவை?

"ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்." (குறள்.139)

என்ற ஒழுக்க நெறியை மறந்து தசரதன் பரதன்மேலும் இத்தகைய கடுஞ்சினம் கொண்டு பேசினான் என்பது, அவன் பரதன்மேல் எப்பொழுதும் அன்பு கொண்டிருக்கவே இல்லை என்ற கருத்தை வலியுறுத்துகிறதன்றோ?

எத்துணைத் தீயவளாயினும் தசரதனுடைய இந்தச் சூழ்ச்சியை முதன்முதலில் காண்பவள் கூனியே. "பரதனைத்

"தேக்குஉயர் கல்அதர் கடிது சேண்இடைப்
போக்கிய பொருள்எனக்கு இன்று போயிற்றால்."
(மந்தரை.58)

'தேக்கமரங்கள் செறிந்த கல் வழியே நீண்ட தூரத்திற்குப் போகுமாறு பரதனை விரைவுபடுத்தி அனுப்பிய காரணம் இன்று தான் எனக்கு விளங்குகிறது," என்று அவள் கண்டுபிடித்த இக் காரணத்தைக் கைகேயிக்கு எடுத்துக் கூறுகிறாள். தசரதனுக்குப் பரதனிடத்தில் யாது காரணத்தாலோ வெறுப்பே நிறைந் திருந்தது என்பதையும் அவளே குறிப்பிடுகிறாள்.

" தந்தையும் கொடியன்! நல் தாயும் தீயளால்!
எந்தையே! பரதனே! என்செய் வாய்!' என்றாள்."
(மந்தரை.59)

என்னும் இவ்வடிகள் தசரதன் மன நிலையை விளக்கப் போது மானவை. தசரதன் கைகேயியினிடத்து உடல் இன்பம் தவிர, உண்மைக் காதல் கொண்டிருந்தானோ என்பது ஆய்தற்குரியது. அவனுடைய காதல் உண்மையானதாய் இருப்பின், அக்காதலின் பயனாகிய பரதன் மாட்டு அவன் விருப்பம் கொள்ளாமல் இருக்கக் காரணமில்லை.

''ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியில் அம்மா!'' (குகப்.35)
என்று குகனாலும்

''நிறைகுணத்தவன் நின்னினும் நல்லனால்'' (நகர் நீங்கு.5)

''எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்அரு ளுக்குஅரு காவரோ?''
(மீட்சிப்படலம்,232)

என்று கோசலையாலும்,

''எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்கள் எல்லாம்
ஒத்தால் பரதன் பெரிதுஉத் தமன்ஆவ துண்டே?''
(வாலி வதை .34)

என்று இராமபிரானாலும் பாராட்டப்படுகின்ற பெருமை இராமாயணம் முழுவதிலும் பரதன் ஒருவனுக்குத்தானே உண்டு? அத்தகைய பரதன்மேல் தசரதனுக்கு வெறுப்போ அன்றிப் பற்றின்மையோ ஏற்படக் காரணம் யாது? இராமன் மாட்டு அவன் கொண்ட கழிபெருங் காதல் ஏனைய மைந்தர் மாட்டும் செல்ல வேண்டிய அன்பைத் தடை செய்துவிட்டதா? அதற்கேற்பவே அவனும் செயல்களை ஆற்றிக்கொண்டே வருகிறான்.

''......'நளினம்போல்,
கையான் இன்றுஎன் கண்எதிர் நின்றும் கழிவானேல்
உய்யேன் நங்காய்! உன்அப யம்என் உயிர்! 'என்றான்.''
(கைகேயி.33)

இவ்வாறு இராமன் பிரிவால் தன்உயிர் போய்விடும் என மன்னன் கருதக்காரணம் யாது? முன்னரே விசுவாமித்திரருடன் இராமனை அனுப்பிய பொழுது இராமனைப் பிரிந்தும் உயிர் வாழ்ந்தவன் தானே? விசுவாமித்திர முனிவனுடன் அக்கரிய செம்மலைக் கூட்டி அனுப்பிய இவன், இப்பொழுது ஏன் இராமன் பிரிவுக்கு இவ்வளவு வருந்தவேண்டும்? இராமன் பிரிந்தால் உயிர் போய்விடும் என்று மன்னன் கூறியது கைகேயியை அச்சுறுத்த எழுந்த

சொற்கள் அல்ல என்பதைப் பின் நிகழ்ச்சிகள் நமக்கு அறிவிக்கின்றன. எவ்வாறாயினும், மகன் மீண்டு வந்துவிடுவான் என்ற நப்பாசையால் உயிரை வைத்துக் கொண்டிருந்த மன்னன் எதிரிலே வசிஷ்டனும் சுமந்திரனும் வந்து நிற்கின்றனர்.

இராமன், இலக்குவன், சீதை என்னும் மூவரையும் காட்டின் எல்லையில் கொண்டு விட்டுவிட்டுச் சுமந்திரன் இரதத்தை மீட்டும் நாட்டுக்கு ஓட்டி வந்துவிட்டான். 'இரதம் திரும்பி விட்டமையின், இராமனும் திரும்பிவிட்டான் போலும்!' என்று மக்களுள் பலர் நினைக்கின்றனர். இந்நிலையில் இரதம் மீண்டு விட்டதென்று அவர்கள் பேசிக்கொள்ளும் பேச்சு மன்னன் காதிலும் விழுகிறது.

''இரதம்வந்து உற்றது என்றாங்கு யாவரும் இயம்ப லோடும்
வரதன்வந்து உற்றான் என்ன மன்னனும் மயக்கம் தீர்ந்தான்;
புரைதபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி
விரதமா தவனைக் கண்டான்' வீரன்வந் தானோ?' என்றான் ''

(தைல மாட்டு. 58)

உடன் நிற்பவர்கள் இரதம் வந்துவிட்டது என்று பேசிக் கொள்வதைக் காதில் வாங்கிய மன்னன் கண்களை அகல விழித்துப் பக்கத்தில் நின்ற முனிவனைப் பார்த்து, ''இராமன் மீண்டு விட்டானா?'' என்று விசாரித்தானாம். இராமன்மாட்டு எல்லையற்ற காதல் கொண்ட தந்தையாயினும் இராமனுடைய ஒப்புயர்வற்ற பண்பாட்டைத் தசரதன் அறிந்துகொள்ளவில்லை; அதனை அறிந்துகொள்ளக்கூடிய மனநிலை தசரதனிடம் இல்லை. தன் சொல் என்ற பெயரால் சிற்றன்னை இட்ட கட்டளையை மீற மாட்டான் என்பதைத் தசரதன் அறிந்திருப்பின், இக்கேள்விக்கு இடமே இல்லை. எனினும், கேள்வி கேட்டுவிட்டான். ஆனால், ''இராமன் போய்விட்டான்,'' என்ற அவச்சொல்லைக் கூற விருப்பம் இல்லாதவனான முனிவன் அப்பாற் போய்விட்டான். முனிவனுடைய முகபாவமும் அவன் விடை இறுக்காமல் அப்பாற்போய்விட்ட செயலும் நடந்தவற்றை உணர்த்தியுங்கூட, அதனால் அரசன் அமைதி அடையவில்லை. மீட்டும் சுமந்திரன் பக்கம் திரும்பி அதே வினாவை எழுப்புகிறான்:

''நாயகன் பின்னும் நல்தேர்ப் பாகனை நோக்கி, 'நம்பி
சேயனோ அணிய னோ? என்று உரைத்தலும் தேர்வ லானும்,

'வேய்உயர் கானில் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்
போயினான்'' என்றான்; என்ற போழ்தத்தே ஆவி போனான்.''

(தைலமாட்டு,60)

[தசரதன் தேர்ப்பாகனை நோக்கி, 'இராமன் தூரத்தே உள்ளானா, அணிமையில் உள்ளானா? என்று கேட்க, அவன், 'இராமன், சீதை, இலக்குவன் என்ற மூவரும் மூங்கில் அடர்ந்த காட்டில் சென்றனர் என்றான். 'சென்றனர்' என்ற சொல் செவிவழிச் சென்றவுடன் மன்னன் உயிரும் சென்றுவிட்டது.]

சம்பராசுரனையும் போர் தொலைத்த தசரத சக்கர வர்த்திக்கு முடிவு ''போயினான்'' என்றசொல்லால் வந்துற்றது! எல்லையற்றுச் செல்லும் அவா அல்லது பற்று நல்ல பாத்திரத் திடத்தில் செலுத்தப்படினும் அதன் முடிவு இவ்வாறுதான் ஆகும் என்பதற்கே தசரதன் எடுத்துக்காட்டாய் விளங்குகிறான்.

வேத முதல்வன் என்று இராவணனாலும் போற்றப்படுகிற இராமனை இவ்வுலகிற்பிறந்து வாழ்ந்து பிறர்க்குப் பயன்படுமாறு செய்த தசரதன் வாழ்வு இவ்வாறு முடிவுறும் என்று யார் நினைத் திருப்பார்? மந்திர ஆலோசனையின் பொழுது தனது எதிர்காலம் பற்றி அவன் கண்ட கனவுகள் எங்கே? அறுபதினாயிரம் ஆண்டுகள் இவ்வுலகை ஆட்சி செய்து, பொறி புலன்கட்கு அடிமையாய் இருந்து, அதனால் மனந்தளர்வுற்ற மன்னன் மந்திர சபையில் யாது கூறுகிறான்?

'' வெள்ளநீர் உலகிடை விண்ணில் நாகரில்
தள்ளரும் பகைஎலாம் தவிர்த்து நின்றயான்
கள்ளரிற் கரந்துஉறை காமம் ஆதியாய்
உள்ளுறு பகைவருக்கு ஒதுங்கி வாழ்வதோ?

'' எஞ்சலில் மனம்எனும் இழுதை ஏறிய
அஞ்சுதேர் வெல்லும்ஈது அருமை ஆவதோ ?''

(மந்திரம். 20, 21)

[இவ்வுலகிலும், தேவ, நாக உலகங்களிலும் பகையை வென்ற யான், கள்வர் போல என் உள்ளத்துள் ஒளித்து நிற்கும் காமம் முதலிய உட்பகையை வெல்ல வேண்டாவா? மனம் எனும் பேய் ஏறிய ஐந்து பொறிகளாகிய தேர்களை வெல்வது அவ்வளவு கடினமா ?

ஆசை முதலிய அகப்பகைகளை வெல்வது எனக்கு அரியதன்று எனவே, நான் அம்முயற்சியில் ஈடுபட வேண்டும் என்று கூறிய மன்னவன், அவ்வாறு கூறிய இருபத்துநான்கு மணி நேரத்திற்குள் அவ்வாசை!காரணமாகவே உயிரை விடுகிறான் என்றால், இதனை என்னென்று கூறுவது!

'' ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்;
ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்;
ஆசைப் படப்பட ஆய்வரும் துன்பங்கள்;
ஆசை விடவிட ஆனந்தம் ஆமே.'' (2615)

என்ற திருமூலர் திருவாக்கு மீட்டும் மெய்யாவதைக் கண்டனம்.

அனைத்து நற்பண்புகட்கும் உறைவிடமாய் விளங்கிய தசரதன், மனைவி மக்கள் மாட்டுக் கொண்ட கழிபெருங் காதலுக்கே இரையானான்.

## 2. 4. கவிஞன் துயரும் மன்னன் துயரும்

**கவிதைக் கலைச்சிறப்பு :**

நுண்கலைகளுள்[1] தலையாய இடம் பெற்ற கவிதைக்கலை, அழகில் ஈடுபட்டு அதனைக் கலையாக மாற்றிப் பிறகும் அனுபவிக்கும் வண்ணம் தரும் இயல்புடையது.

கலைகள் அனைத்திற்குமே இவ்விலக்கணம் பொதுவானதுதான்

ஆதலால், அழகுடைப் பொருள் எதுவாய் இருப்பினும், அதனைப் பயன்படுத்திக்கொள்ளக் கலை தயங்குவதில்லை.

ஓவியக் கலையிலும், சிற்பக்கலையிலும் 'பெண்வடிவம்' அதிக இடம் பெற்றதற்கு இதுவும் ஒரு சிறந்த காரணம்.

கதிரவன் உதயம், காட்டாற்றின் ஓட்டம், நல்ல நிறஞ் செறிந்த காடு, கருங்கடலின் அலை வீச்சு, ஓங்கிவளர்ந்த மலை முகடு ஆகிய இவற்றின் இயற்கை எழிலில் ஈடுபட்ட கலைஞன், இவற்றில் காணப்பெறும் பல்வேறுபட்ட அழகை வடித்துத் தரும் பொழுது அது 'கலை' என்னும் பெயரைப் பெறுகிறது, அக்கலை, சிற்பம் ஓவியம் என்பன போன்ற பருப்பொருளை இடை நிலைப்[2] பொருளாக உடைய கலையாகவும் முகிழ்க்கலாம்; அன்றேல், ஒலியையே இடைநிலைப் பொருளாக உடைய இசையாகவும் முகிழ்க்கலாம்; அன்றி, சொல்லும் பொருளும் ஓசையுமுடைய கவிதையாகவும் மலரலாம்.

இடைநிலைப் பொருள் பருப்பொருளாய் இருக்கும் பொழுது கலை சிறப்பதைவிட அது நுண்பொருளாய் இருக்கும் பொழுது மிகுந்த சிறப்பை அடைகின்றது. கலைஞன் கற்பனையின் ஓட்டத்துக்கு ஏற்பக் கல்லும், வண்ணமும் இடந்தாரா அல்லவா?

---

1. Fine Arts
2. Medium

அவற்றின் எல்லை அளவுதான் கலைஞன் செல்ல முடியும். ஆனால், சொல்லையும் பொருளையும் ஓசையையும் அளவாகவுடைய கவிதையில் கலைஞனுடைய 'சுதந்தரம்' மிகுதிப்படுதல் உறுதி. எனவேதான் கலைகளிலெல்லாம் கவிதைக் கலை சிறந்து விளங்கு கின்றது. கலைஞன் சிறப்புக்கேற்பக் கலை சிறந்து விளங்கும் என்பது கூறத் தேவையில்லை. கவிதைக் கலைஞர்களுள் தலை யிடம் பெறும் மிகச் சிலருள் ஒருவனாகிய கம்ப நாடனின் கலை மிகச் சிறந்திருக்கும் என்று எதிர் பார்ப்பதிலும் தவறு இல்லை. அவன் கைப்படாத பொருளே இல்லை என்று கூடக் கூறிவிடலாம். மேலும், அவன் கைப்பட்டவெல்லாம் பொன்னாக மாறின என்பதிலும் ஐயமில்லை. இரண்டொரு பாடல்களில் காட்சியளித்து மறைகிற 'தோழி' போன்ற சிறு பாத்திரங்களிலிருந்து நூல் முழுதும் காட்சியளிக்கும் 'இராமன்' போன்ற பெரும்பாத்திரம் வரை அனைத்தையும் பொன்னாக மாற்றிய பெருமை அவனுடையதே. ஓர் அங்குல உயரமுடைய தந்தத்தில் ஒப்பற்ற வேலைத்திறனைக் காட்டுவதும் கலைதான்; மிகப்பெரிய தஞ்சைப் பெருவுடையார் கோயில் கோபுரம் போன்ற வற்றில் வேலைத் திறனைக் காட்டுவதும் கலைதான். இவற்றுள் எது சிறந்தது என்று கேட்டலும் ஆராய்தலும் முறையாகாது. கம்பநாடன் தனிப்பெருமை யாதெனில், இவ்விருவகைக் கலையிலும் அவன் வெற்றி கண்டுள்ளதே. இரண்டே பாடல் களில் தோன்றிமறையும் 'நீலமாலை' என்ற தோழியையும், இராமனைப் போலச் சாகாவரம் பெற்றவளாக்கி விட்டான். எனவே, இத்தகைய கலைஞனிடமிருந்து எதனையும் கூசாமல் எதிர் பார்க்கலாமன்றோ?

### கவிதையிற்குழந்தை

அழகுடைப் பொருளையே கலைஞன் கலைக்கு மூலமாக நாடுகிறான் என்று கூறினோம். மக்கட்படைப்பில் 'பெண் இனம்' அழகின் இருப்பிடம். எனவே, கவிதைக் கலைக்கு மூலப் பொருளாகப் பெண் இருக்கிறாள் என்பதும் கண்டோம். பெண்ணை அடுத்து அவ்விடத்திற்கு வரக்கூடிய தகுதியுடைய பொருள் அழகே வடிவான குழந்தை ஒன்றுதான். குழந்தைச் செல்வத்தில் ஈடுபடாத கலைஞனே இல்லை என்று கூறிவிடலாம். அழகே வடிவமான குழந்தை எவ்வாறு கலைஞனைத் தன்னிடம் ஈடுபடுத்தாமல் இருக்க இயலும்?

"இம்மை உலகத்து இசையொடும் பொருந்தி
மறுமை உலகமும் மறுஇன்று எய்தும்
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்" (அகம்.66)

என்றும்,

"மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே." (புறம்.188)

என்றும் சங்கப் புலவர்களால் பாராட்டப்படும் சிறப்புடையது குழந்தைச் செல்வம். பல ஆங்கில நாடகங்களை இயற்றிய ஷேக்ஸ்பியர், தாம் இயற்றிய நாடகங்களில் குழந்தையைப்பற்றிப் பாட வாய்ப்பில்லாமையால்போலும் 'ஜான் அரசன்'[1] என்றதொரு நாடகத்தை உண்டாக்கி, அதில் குழந்தைச் செல்வத்தைக் கலையாக்கி மகிழ்கிறான்! தமிழ் இலக்கிய உலகில் சங்க காலந் தொட்டுக் குழந்தை அழகில் ஈடுபடாத கவிஞனே இல்லை என்று கூறிவிடலாம். கடவுளையும் குழந்தையாக்கி அதிலே ஓர் இன்பங் கண்டவன் அன்றோ தமிழன்? தமிழன் வழிபடும் முருகன் கண்ணன் இருவரும் குழந்தைகள் அல்லரோ? எனவே, குழந்தை இன்பத்தில் ஈடுபடாத மனிதனே இல்லை என்றால், கலைஞனைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

கவிதைக் கலையிலும், தமிழ் இலக்கியத்தில் ஓரளவு குழந்தை இடம் பெற்றுளது. இடைக்காலத்தில் காப்பியங்கள் இயற்றிய பெரும்புலவர் அனைவரும் ஒருவர் நீங்கலாகக் குழந்தைச் செல்வத்தில் ஈடுபட்டு மகிழ்ந்தனர். குழந்தைபற்றிப் பாட வாய்ப்பே இல்லாத சேக்கிழாரும் ஞானசம்பந்தப் பிள்ளையாருக்குப் பத்துப் பாடல்கள் பாடி மகிழ்கிறார். இன்னும் பிற்காலத்தில் இக்குழந்தை ஒரு நூலுக்கே உரிமையாகிவிட்ட புதுமையும் காணக்கிடக்கிறது. உலகில் உள்ள வேறு எந்த மொழியிலாவது 'பிள்ளைத் தமிழ்' என்றதோர் இலக்கியம் கண்டதுண்டா? 'நூறு பாடல்கள் குழந்தையைப் பற்றியே பாடத் துணிந்த தமிழனும் அவன் கலையும் வாழ்க!' என்று வாழ்த்துவது தவிர, வேறு செய்யத்தக்கது யாது? குழந்தை இத்துணை இடம் பெற்ற தமிழ் இலக்கியத்தில் ஒரு நூல் குழந்தையைப் பற்றிப் பாடாதிருந்தால், அது வியப்பினும் வியப்பன்றோ? அதிலும் பல குழந்தைகளைப் பற்றிக் கூறவேண்டிய கட்டுப்பாடு இருந்தும், பதினாயிரம் பாடல்கட்குமேல் உடைய பெருநூலாய் இருந்தும்.

1. King John

ஒரு நூல் குழந்தையைப் பற்றிப் பாடவில்லை என்றால், அந்நூல் எது என்று கேட்கத் தூண்டுகிறதல்லவா? அந்நூல் கம்பநாடனது ஒப்புயர்வற்ற இராமாயணந்தான்.

**ஏனோ பாடவில்லை?**

தெய்வத் தன்மையுடன் மனிதத் தன்மையும் நிறைந்திருந்த இராமனைக் குழந்தையாய்ப் பெற்று இருக்கும் பொழுது ஏனோ கம்பநாடன் அதனைப் பயன்படுத்தி விரிவாகப் பாடவில்லை! தசரதன் பல காலம் தவமிருந்து பெற்ற புதல்வர்களை எவ்வாறு போற்றி மகிழ்ந்து கொஞ்சியிருப்பான்? அதுதான் கிடக்கட்டும் என்றாலும், முதல் தேவியாகிய கோசலையும், அவ்விராமனை வளர்த்தவளாகிய கைகேயியும் அவனைப் பாராட்டியிருக்க மாட்டார்களா? இவைபற்றி ஏனோ கம்பன் ஒரு பாடல்கூடப் பாடவில்லை! இராவணனின் அருமந்த மைந்தராகிய 'இந்திர சித்தன்' 'அக்ஷயகுமாரன்' என்பவர்களையும் அவர்கள் குழந்தை யாய் இருக்கும் பருவம் குறித்துப் பாடவில்லையே! போகட்டும். காப்பியத்திறனாய்வு செய்பவர்கள் இந்த இடத்திற்கு முற்றிலும் தேவையன்று என்று கூறுவர் என்பது அறிந்திருந்தும், பிரகலாதன் வரலாற்றை உயுத்த காண்டத்தில் பெய்து வைத்திருக்கிறானே! அங்கேயாவது அந்தப் பிரகலாதனைப் பற்றிப் பாடியதுண்டா?

இவை அனைத்தையும் நோக்க, ஓர் எண்ணம் உறுதிப் படுகிறது. இது புலவன் மறந்து விட்டுப்போன பகுதியன்று; வேண்டுமென்றே ஒதுக்கிய பகுதி என்றுதான் நினைக்க வேண்டியுள்ளது. கலைஞர் அனைவரும் கண்டால் விட விரும்பாத குழந்தைச் செல்வம், கம்பனால் ஒதுக்கப்படவேண்டிய காரணம் யாதாக இருக்க முடியும்? அவனே நேரில் வந்து அக்காரணத்தைக் கூறினாற்றான் நாம் உறுதியாக அறிய முடியும். அவ்வாறு உறுதியாகக் கூறவியலாவிடினும் ஓரளவு அனுமானத்தால் இது தான் என்று காரணத்தை நாமே குறிக்கலாம். குழந்தைச் செல்வத்தைப் பெற்று வைத்திருந்து, இடைக்காலத்தில் அக் குழந்தை தமக்குப் பயன்படாமல் போயிருந்தால், பின்னர் வாணாள் முழுவதும் குழந்தையைக் கண்டால் பிடிக்காமல் இருப்பவர்கள் இன்றும் உண்டு. பிற குழந்தையைக் காணும் பொழுதெல்லாம் தம் குழந்தை நினைவிற்கு வர, அதனால் தோன்றும் துன்பம் கண்டு. குழந்தைகளையே தம்பால் நெருங்க விடாமல் இருப்பவர்கள் இன்றும் உண்டு. இத்தகைய ஒரு மன நிலை கம்பனிடத்தும் தோன்றியிருக்குமோ எள ஐயப்படுவதில் தவறில்லை.

**மகனை இழந்த கம்பனா?**

'அம்பிகாபதி' என்றொரு மைந்தன் கம்பனுக்கு இருந்தானென்றும் அவன் அரசன் மகள் மேல் கொண்ட காதலால் உயிரை இழக்க நேரிட்டது என்றும் கதை வழங்கி வருதல் நம்முள்பலரும் அறிந்ததே. வேறு ஆதாரம் இல்லாமல் செவிவழிச் செய்தி ஒன்றையே நம்பி வாழும் இக்கதையில் உண்மை நிரம்ப உண்டு என்பதை இராமாயணத்தை ஒருமுறை கற்றவரும் அறிதல் கூடும். இராமனைப் பிரிய நேரிட்ட தசரதன் வருத்தத்தைக் கவிஞன் ஏறத்தாழ எழுபத்தைந்து பாடல்களால் விரிக்கிறான். அப் பாடல்களையும் அவற்றிற்கு முன்னும் பின்னும் காணப்படும் பாடல்களையும் படித்தால், ஒருவேறுபாடு நன்கு தெரியும்; அரசன் வருத்தத்தைக் கூறும் பாடல்கள் கவிஞனுடைய கவிதை வன்மையால் மட்டும் தோன்றியவை அல்ல. அவை அவனுடைய நெஞ்சைப் பிழிந்து எடுத்த அவலத்தில் குமிழியிட்டு வெளி வரும் சொந்த அனுபவமே என்பது நன்கு புலப்படும், வயது முதிர்ந்த பருவத்தில், 'இனி இம்மைந்தன், நமக்குக் கொழு கொம்பாவன்!' என்று நினைந்து தந்தை இறுமாந்து இருக்கும் பொழுது மகன் இறக்கிறான்; இன்றேல் பயனற்ற நிலையில் காடு சென்று விடுகிறான். இறக்கும் மைந்தன் கம்பனுடைய செல்வக்குமாரன்; காடுசெல்லும் மைந்தன் தசரதனுடைய குமாரன். கவிஞன் மகன் இறந்ததும் மன்னனது ஆணையால்; இராகவன் காடு சென்றதும் சிற்றன்னை ஆணையால்; இராமன் காடு செல்வதைத் தசரதன் விரும்பவில்லை. அம்பிகாபதி இறப்பதைக் கவிஞன் விரும்பவில்லை. இராமன் காடு செல்வதை அறிந்தும் அதனைத் தடுக்கும் சத்தியற்றவனாய்த் தசரதன் புலம்புகிறான். அம்பிகாபதி இறப்பதை அறிந்துவைத்தும், தடுக்க வலிமையற்ற புலவன் புலம்புகிறான். அன்றியும், தான் தன் மகனிடம்கண்ட அருமைக் குணங்களையும், அன்பையும், அறிவையும் அறநெறிஒழுக்கையும் கம்பன் இராமனிடமும் கண்கிறான். இவை அனைத்தும் இருவருக்கும் பொதுவாகும். ஆனாலும், கவிஞனுடைய புலம்பலை நாம் நேரே அனுபவிக்க வாய்ப்பு இல்லை. எனவே, தசரதனுட்புகுந்து கம்பன் புலம்புகிறான். இவ்வோர் இடம் மட்டும் கொண்டு இம்முடிபுக்கு வரத் தேவையில்லை தசரதன் மாண்ட செய்தி கேட்டு அலறும் இராமன் வாக்கினின்றும் தன்னுடைய சோகத்தையே கொட்டுகிறான்; சடாயு புலம்பலிலும்

தன் துயரையே பொழிகிறான். இந்திரசித்தனை இழந்த இராவணன் புலம்பலிலும் மண்டோதரியின் அரற்றலிலும், 'காட்டாயோ என்னுடைய கண்மணியைக் காட்டாயோ!' என்று அழுது அரற்றும் தானமாலை வாக்கினிலும் கம்பனுடைய வாழ்க்கையில் வருத்தம் நிறைந்த நெஞ்சப் பிழிவையே காணுகிறோம்.

**தசரதன் துயரம் :**

தசரதன் துயரைச் சற்று விரிவாகக் காணலாம்; மந்திரசபை முடிந்தவுடன் தசரதன் மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருக்கிறான். நீண்டநாளாக அவன் கண்டுகொண்டிருந்த கனவு, பொழுது விடிந்தவுடன் நிறைவேறப்போகிறது. 'யாரேனும் அக்கனவு நனவாகாமல் தடுத்து விடுவாரோ!' என்று அவன் அஞ்சிக்கொண்டிருந்தது பொய்யாகிவிட்டது. இன்னும் சில மணி நேரங்களில் முடி சூட்டு விழா நடைபெறப் போகிறது. அது நடை பெற்று விட்டால், பின்னர் அதனை விரும்பாதவர்களுங்கூட ஒன்றும் செய்ய இயலாது. நடைபெறு முன்னர் அதனைத் தடுக்கக்கூடியவர் அனைவருக்கும் தக்கவழியில் பாதுகாப்புச் செய்துவிட்டான், எனவே, அவன் மகிழ்ச்சிக்குக் காரணம் இருக்கிறது. அரசர்கள் புடை சூழ அவன் இரவு நெடுநேரம் கழித்தே கைகேயியின் கோயில் புகுகிறான். இது வரை அவளிடமும் அவன் இதுபற்றிக்கூறவில்லை. அவன் மகிழ்ச்சிக்கு முழுவதும் எதிராக அங்கே அவன் காதலி படுக்கையிற்கூடக் கிடவாமல் கீழே விழுந்து புரண்டுகொண்டிருக்கிறாள். இந்த வேறுபாடு அவனை மருட்டிவிட்டது. எனவே, 'மானை எடுக்கும் யானை' போல, அவன் தன் நீண்ட கைகளால் அவளை அப்படியே வாரி எடுக்கிறான். அவள் விசும்பிக் கொண்டு மீண்டும் கீழே விழுகிறாள். மன்னன் வருத்தம் எல்லை கடந்து விடுகிறது. வருத்தம் அச்சமாகவும் மாறிவிடுகிறது. அருமை மனைவி இவ்வாறு இருந்ததை இதற்கு முன்னர் அவன் கண்டதும் இல்லை. எனவே,

> " 'என்னை நிகழ்ந்தது? இவ்வேழு ஞாலம் வாழ்வார்
> உன்னை இகழ்ந்தவர் மாள்வார்! உற்றது எல்லாம்
> சொன்னபின் என்செயல் காண்டி; சொல்இது,' என்றான்."
>
> (கைகேயி. 5)

இது கேட்ட அரசி, "பண்டைய இன்று பரிந்து அளித்தி" (கைகேயி-6) என்றாள். இதைக் கேட்டவுடன் அரசன் வருத்தம்

எல்லாம் பறந்துவிடுகிறது. மீட்டும் மகிழ்ச்சியில் திளைக்கிறான்! இராமனையும், முடிசூட்டலையும்; எனவே, வெடிசிரிப்புச் சிரிக்கிறான். அவன் மனத்தின் ஆழத்தில், 'கைகேயி தடை கூறுவாளோ முடி சூட்டு விழாவிற்கு!' என்று அஞ்சிக் கொண்டிருந்தான் போலும்! ஆனால், அவள் 'முன்னர்த்தருகிறேன் என்று கூறியதைக் கொடும்,' என்று கேட்டவுடன் முதலில் அவனது அச்சம் நீங்கிவிடுகிறது. அதனால், ஒரு பெருஞ்சிரிப்புச் சிரித்தான் போலும்! அன்றேல், இத்தகைய சிரிப்புக்கு இங்குக் காரணமே இல்லை. சிரித்துவிட்டுப் பேசுகிறான் :

'' கள்அவிழ் கோதை கருத்துஉண ராத மன்னன்
வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்;
' உள்ளம் உவந்துள செய்வேன்; ஒன்றும் லோபேன்;
வள்ளல் இராமன்உன் மைந்தன் ஆணை,' என்றான்.''

(கைகேயி. 7)

இவ்வாறு மன்னன் கூறலும் கைகேயி, 'இமையோர் சான்றாக நீர் தந்த வரங்கள் இரண்டையும் தருக,' எனக் கேட்க, அரசன், 'தந்தேன்!' என்று கூறிவிடுகிறான். வரங்கள் யாவை என்று அறிந்தவுடன் அவன் படும் பாடு சொல்லும் தரத்ததன்று.

'' சிந்தை திரிந்து திகைத்து அயர்ந்து வீழ்ந்தான்.''
' ஆ!கொடி யாய்!' எனும்; ஆவிகாலும்; 'அந்தோ!
ஓ!கொடி தேஅறம்!' என்னும்; 'உண்மை ஒன்றும்
சாக' எனாஎழும்; மெய்தள் ளாடி வீழும்.''

(கைகேயி. 21)

வீரர் அனைவர் வீரத்தையும் விழுங்க வல்ல வெற்றி வேல் மன்னன் கோழைகள் போலப் பேசத் தொடங்குகிறான் :

'' 'நாரியர் இல்லைஇஞ் ஞாலம் ஏழும் என்னக்
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்
பூரியர் எண்ணிடை வீழ்வன்!' என்று பொங்கும்
வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்.'' (கைகேயி. 22)

### வெற்றி வீரன் உள்ளமா?

வெற்றி வீரன் ஒருவன் மனத்தில் இத்தகைய எண்ணம் தோன்றுமா? உலகத்தில் உள்ள பெண்டிர் அனைவரையும் வாளால் வீசிக் கொன்றுவிட்டு அருநரகிடைவீழ்ந்து கிடக்கவும் முற்படுகிறான். இப்படி ஒரு வீரன் பேசுவதென்றால், அவன் மனம் எவ்வளவு கெட்டுவிட்டது என்பதற்கு இதைவிட எடுத்துக்

காட்டும் வேண்டுமா? எல்லையற்ற வருத்தமே தசரதனை இவ்வாறு நினைக்கவும் பேசவும் தூண்டுகிறது.

இதனையடுத்துத் தசரதன் மனநிலை கணந்தோறும் மாறுபடுகிறது. அம்மாறுபாட்டுக்கேற்ப, அவன் ஒரு முறை அவளைக் கெஞ்சுகிறான். ''உய்யேன் நங்காய்! உன் அபயம் என் உயிர்!'' என்கிறான் ஒருமுறை; (கைகேயி. 33) அடுத்த கணத்தில்

'' இன்றோர் காறும் எல்வளை யார்தம் இறையோரைக்
கொன்றார் இல்லை! கொல்லுதி யோநீ கொடியாளே!''
(கைகேயி. 37)

என்று அவளை ஏசுகிறான்; அடுத்த கணத்தில்,

''விண்ணோர் காறும் வென்ற எனக்குஎன் மனைவாழும்
பெண்ணால் வந்தது அந்தரம் என்னப் பெறுவேனோ?''
(ஷை , 40)

என்று 'தன்னிரக்கம்' கொள்கிறான்.ஒருமனிதன் செய்யத்தகாதன காரியங்களுள் தலையாயது 'தன்னிரக்கம்' தான்.

''எற்றுஎன்று இரங்குவ செய்யற்க; செய்வாவேல்
மற்றுஅன்ன செய்யாமை நன்று.''

என்ற குறளும் இக்கருத்தை வலியுறுத்தவே தோன்றிற்று. சம்பராசுரனை வெற்றி கண்ட தசரதனா இவ்வாறுமாறிவிட்டான்? இத்துணைப் பெரிய அவன் வீழ்ச்சியடையக் காரணம் யாது? எத்துணைப் பெரிய இழிவு வந்துற்றாலும் மனிதன் தன் நிலை குலையாமல் இருப்பதன்றோ மனிதத் தன்மை?

''மலையே வந்து வீழினும் மனிதர்கள்!
நிலையி னின்று கலங்கப் பெறுதிரேல்''
(பொது, தனிக்குறுந்தொகை,5)

என்று திருநாவுக்கரசர் பெருமான் கூறியதும்,

''இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்.'' (குறள் 621)

என்று குறளாசிரியர் கூறியதும் தசரதனைப் பொறுத்த வரையிற் பொய்யாகிவிட்டனவே! இந்த அளவுடன் அவன் நிற்கவும் இல்லை; சாதாரண மக்கள் நிலைமைக்கு இழிந்துவிடுகிறான்; தன் மனைவி என்றும் பாராமல், ''உன் அறுபட்ட தாலிக்கயிறு உன் மகன் மங்கல நாணாகப் பயன்படட்டும்!'' என்றும் கூறத் தொடங்கி விட்டான்.

"பழிக்கு நாணாய் மாணாப் பாவி! இனிஎன் பல?உன்
கழுத்தில் நாண்உன் மகற்குக் காப்பு நாணாம் என்னா"
(நகர்.49)

அவன் கூறும்பொழுது கைகேயியின்மீது அவனுக்கு ஏற்பட்ட கோபத்தைவிட இராமன்மீது கொண்ட பாசத்தின் ஆழத்தை, உறுதியையே நாம் காண்கிறோம்.

**வேந்தன் புலம்பல்**

கைகேயியிடம் தனியே இருக்கின்ற வரை அரசனுக்கு வாய் விட்டு அழவும் விருப்பமில்லை. இந்நிலையில் கோசலையும் வசிட்டனும் வந்துற்றனர். வசிட்டனே கைகேயியை ஏசிவிட்டு இராமனை அழைத்து வருவதாகக் கூறுகிறான். இவர் இரு வரையும் கண்டவுடன் தசரதன் வாய் விட்டே புலம்பத் தொடங்கி விடுகிறான். "அருமை மகனே, உன் முடி சூட்டு விழாவுக்கு நீராட்ட வந்த புனலைப் போய்க்கொண்டிருக்கும் என் வாயில் சற்று ஊற்றி விட்டுப் போகக்கூடாதா?" என்கிறான்.

"நின்மேற் சொரிய
மண்ணும் நீராய் வந்த புனலை மகனே! வினையேன்
உண்ணும் நீராய் உதவி உயர்கான் அடைவாய், என்றான்."

" 'உடையா மகுடம் புனைஎன்று உரையா வுடனே
கொடியேன்
சடைமா மகுடம் புனையத் தந்தேன் அந்தோ! என்றான்.'
(58)

[உன்னை, மகுடம் புனைந்துகொள், என்று யானே கூறி விட்டு உடனே சடைமுடியும் மரவுரியும் தந்தேனே!]

"......... 'தமி'யன் என்னா என்னை இம்மூப்பு இடையே
வெறுத்தாய் இனி நான் வாழ்நாள்
வேண்டேன்! வேண்டேன்! என்றான்.'

['என்னை இக்கிழப் பருவத்தில் விட்டுச் சென்று விட்டாய். ஆகலின், இனி யான் வாழ விரும்பவில்லை.]

" என்னின் முன்னம் வனம்நீ அடைதற்கு எளியேன் அல்லேன்
உன்னின் முன்னின் புகுவேன் உயர்வான் இனியான்

['என்னை விட்டு நீ வனம் புகுதற்கு முன்னரே அக் கொடுமையைக் காணாமல், யான் மோக்ஷம் அடைவேன்.']

''பொற்றேர் அரசே! தமியேன் புகழே! உயிரை! உன்னை,
பெற்றேன் அருமை அறிவேன் பிழையேன்! பிழையேன்!'
என்றான்.'' (ஷி.62)

இத்தகைய இடங்களை வாய்விட்டு உரக்கப் படித்துப் பார்த்தாற்றான் இக்கவிதைகளின் உணர்ச்சிப் பெருக்கில் ஈடுபட முடியும். தசரதனுள் நுழைந்துகொண்டு கம்பனே அம்பிகாபதியை நினைந்து இப்படிப் பிரலாபிக்கிறான் என்பது தோற்றவில்லையா? (நகர்.60, 66)

இன்னும் ஒரு வகை மனநிலையையும் கவிஞன் இப் பாடல்களிற் பெய்து வைக்கிறான். சிறந்த நிலைமையில் இருந்தவர்கள் திடீரென்று அந்நிலை கெட்டு அழிவதானால், அவர்கள்மாட்டு அன்புடையவர்கள் இப்புது நிலையைப் பார்க்க விரும்பமாட்டார்கள். நல்ல நிலையில் வீட்டை விட்டு வெளியேறியவர்கள் அடிபட்டுக் கொடுமையான முறையில் இறந்துபட்டால், தாய்மார் போன்றவர்கள் அதனைக் காணச்சகியார்கள், இதுவும் உலகியலே, இம்மனநிலையையும் தசரதன்மாட்டு ஏற்றிக் கூறுகிறான் கவிஞன். முடி சூட வந்த இராகவன் சீரை புனைந்து காடு செல்ல முன் வந்த கோலத்தைக் காண எந்த அன்புடைய தந்தைக்குத்தான் மனம் வரும்? கட்டழகனாய் இருந்த அம்பிகாபதி, கதைகள் கூறுவது போல வெட்டுண்டு இறந்திருந்தால், எவ்வளவுதான் தத்துவம் உணர்ந்த கவிஞனாயினும்இக்கொடுமையைக் காணச் சகிக்குமா? இத்தகைய மனநிலை இதோ பேசப்படுகிறது:

'' 'தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றிப்
புகுதக் கண்ட கண்ணால் போகக் காணேன்!' என்றான்.''

'' 'பூணார் அணியும் முடியும் பொன் ஆ சனமும் குடையும்
சேணார் மார்பும் திருவும் தெரியக் காணக் கடவேன்,
மாணா மரவுற் கலையும் மானின் தோலும் அவைதான்
காணாது ஒழிந்தேன் நன்றாய்த்து அன்றோ கன்றே
என்றான்''

காரணம் இதுவே போலும்

மேலே கூறிய பாடல்களில் கதைப்போக்கிற்கு ஏற்றபடி தசரதன் புலம்புகிறான் எனினும், அப்புலம்பலின் ஆழத்தில் கவிஞனின் அவலக் குரலே தான் கேட்கிறது. இதிலிருந்து சற்றும் எதிர்பாராத ஓர் உண்மை புலப்படுகிறது. மந்தரை சூழ்ச்சிப்

படலத்தில் கைகேயியைக் கற்புக்கரசியாகவும், கருணைக் கடலாகவும் பேசிய அக்கம்பநாடனே கைகேயி சூழ்வினைப் படலத்தில் அளவு மீறி அவளை ஏசி வெறுப்பதன் காரணமும் ஒருவாறு விளங்குகிறது. முதலில் கைகேயி என்னும் பாத்திரத்தை உண்டாக்கி அதன் பண்பாட்டில் ஈடுபட்டு அவளைப் புகழ்கிறான் கவிஞன். ஆனால், பிற்பகுதியை பாடிக் கொண்டு செல்கையில் அவனையும் அறியாமல் மகனை இழந்த தந்தையின் துயரத்தில் கவிஞன் தன் சுயசரிதையைக் காண்கிறான். தன்னைப் போலவே தசரதனும் வருந்துகிறான் என்பதைக் கவிஞன் உணரத் தலைப்பட்டவுடன் அவ்வுணர்ச்சி அவனையும் மீறி எழுகிறது. அவன் படைத்த பாத்திரங்களைச் செயல் செய்ய ஏவுவதை விட்டு, அவன் அவர்கள் உணர்ச்சியைப்பங்கிடவேண்டிய நிலைக்கு ஆளாகிறான். இந்நிலையில் தசரதனுக்குத் தந்தைஅன்பு குறுக்கிடுகிறது. அவ்வன்பு இராமனிடம் செல்ல முடியாமல் தடுப்பவள் கைகேயிதானே? எனவே, அவளை அவன் முறை திறம்பியும் ஏச முடிகிறது. தசரதன் மனநிலையை இப்பொழுது கவிஞனும் பெற்றுள்ளான். அம்பிகாபதியிடம் அவன் அன்பு செல்ல வொட்டாமல் தடை செய்த மன்னன்மேல் வெறுப்பு முற்றுகிறது. அரசன் மேல்குற்றம் இல்லை: அவன் அக்காலச் சமுதாயப் போக்கிற்கேற்றபடி செய்தான் என்பதை நாம் அறிவோம். ஆனால், தந்தையின் மனம் அவ்வாறு நினைக்குமா! அதே போலக் கைகேயி முறையைத்தான் செய்தாள் என்பதை நாம் அறிகிறோம். ஆனால், தசரதன் இவ்வாறு நினைக்க முடியுமா? அன்பு மிக்கவிடத்துப் பிழை காண்டல் இயலாதன்றோ? இதனாலேயே தசரதனுட்புகுந்து புலம்புகிற கம்பநாடன் அத் தசரதனுக்குப் புத்திரசோகம் உண்டாக்கிய கைகேயியை வாயாரத் திட்டுகிறான், முதற்படலத்தில் அவளைப் புகழ்ந்த தையும் மறந்துவிட்டு, எனவே, அயோத்தி வேந்தன் வாழ்வு வருந்தத் தகுந்த ஒரு முடிவை அடைந்ததிலும் கவிஞன் தன்னையே காண முடிகிறது போலும்! இத்தகைய ஒரு துன்ப அனுபவமே கவிஞன் குழந்தைச் செல்வத்தில் ஈடுபட்டுப் பாடாமைக்குக் காரணம் என்று முடிவு கட்டுவது சரிதானே?

# அரசியர் மூவர்

## 3. சூழ்ந்த தீவினை

### படைப்பு இரு வகை

கம்ப நாடன் காப்பியமாகிய அரிய பூங்காவில் அனைத்து வகையான பூக்களையும் காணலாம். அவற்றுள், மணத்தால் சிறந்தவை சில; நிறத்தால் சிறந்தவை சில; இனிய தேனுடைமையாற் சிறந்தவை சில; மருந்தாகி நிற்பதாற் சிறந்தவை சில; பெரிய வடிவு பெற்றமையாற் சிறந்தவை சில; சிறிய வடிவு பெற்றும் சிறந்தவை சிலவாம்.

இத்தொகுப்பினுள் அடங்காமல் உள்ள மலர்களும் சில உள. அவை விடத்தன்மை நிரம்பியவை; கண்டாலும் தீமை பயக்கும் இயல்பு வாய்ந்தவை. என்றாலும் என்ன? ஏனைய வகைகளிற் சிறந்து விளங்கும் பூங்காவில் இருப்பதாலும், ஏனைய மலர்களின் நன்மையையும் மணத்தையும் எடுத்துக் காட்ட ஏதுவாய் இருப்பதாலும் இவையும் சிறந்து விளங்குகின்றன.

உயர்வும் தாழ்வும் உடைய இம்மலர்கள் அனைத்தும் அக் கவிஞனுடைய படைப்புக்களே என்பதைக் கண்ட பிறகு ஒரு பாத்திரத்திடத்து விருப்பும், மற்றொரு பாத்திரத்திடத்து வெறுப்பும் காட்டுதல் அறிவுடைமையாகாது. இராமனும் சீதையும் கம்பனுடைய படைப்புக்கள்; அப்படியே இராவணனும் கூனியும் அவனுடையவர்களே. இப்பாத்திரங்களைப்பற்றி நாம் காணும்பொழுது கவிஞனின் ஆற்றலைத்தான் காண வேண்டும்.

### கவிஞன் படைப்பின் சிறப்பு

மனித மனம் ஆழங்காண முடியாத அளவு விரிந்தும், ஆழ்ந்தும் இருக்கிறது; மேலும், அதில் சுழியிட்டுத் தோன்றும் சுழற்சி

களுக்குக் காரணகாரியத் தொடர்பு கற்பித்தல் என்பது ஏறத்தாழ இயலாத காரியம். அச்சுழல்களில் சிலவற்றை எடுத்துக் கொண்டு கவிஞன் தன்னுடைய பாத்திரங்களைப் படைக்கிறான். அவனுடைய வெற்றியை அளவிடச் சுலபமான ஒரு வழி உண்டு: எவ்வளவு தூரம் நம் அனுபவத்திற்கு இப்பாத்திரம் பொருத்தமாக இருக்கிறது என்று காணும் பொழுது இவ்வுண்மை வெளிப்படும், யாரோ நாம் அறிந்த ஒருவரிடம் இப்பண்பாடு இருப்பது போலஒரு நினைவு உண்டாகிறது. ஆழ்ந்து பார்த்தால் நம்மிடங்கூடச் சில சமயங்களில் இக்குறைபாட்டைக் காண்டல் கூடும். நம்மிடமே காணப்படும் காரணத்தால், இதை அவ் வளவு தீமையுடையதாகவோ, இவ்வளவு வெறுக்கத் தகுந்தது என்றோ நாம் நினைத்ததில்லை. ஆனால், இதே பண்பைப் பிறரிடம் காணும் பொழுதுதான் இதன் முழுத்தன்மையையும் நாம் அறிய முடிகிறது. இத்தகைய பண்பாடுகள் சிலவற்றை ஒன்று சேர்த்துத்தான் கவிஞன் தன் பாத்திரங்களைப் படைக் கிறான். உதாரணமாக ஒன்றைக் காண்போம்.

**காரணமின்றித் தீமை புரிவோர்**

காரணமில்லாமல் பிறருக்குத் தீமை செய்பவர்களை நீங்கள் வாழ்க்கையில் கண்டதுண்டா? இல்லையானால், நிங்கள் அதிருஷ்ட சாலிகள். ஆனால், உலகில் சிலர் இவ்வாறு இருக்கின்றனர். கூடுமானவரையிற் பிறருக்குத் தீமை செய்வதே இவர் கள் தொழில். தீமை செய்யப்படுபவர் இவருக்கு எந்த விதத் திலும் தொடர்பில்லாதவராகக்கூட இருக்கலாம். அதுபற்றித் தீமை செய்பவருக்குக் கவலை இல்லை. முடிந்த அளவு தீமையைப் பிறருக்குச் செய்வதில் பெருமகிழ்ச்சிகொள்ளும் சீலர்கள் இவர்கள். தாம் நேரே பிறருக்குத் தீமை செய்ய இயலவில்லையாயினும், கவலை இல்லை; பிறர் படும் வருத்தம் கண்டேனும் அதற்கு மகிழ்வர்; "வேணும் சார்! எனக்கு அப்பவே இவர் இவ்வாறு துன்பப் படுவார் என்பது தெரியும்!" என்று கூறித் தம்மகிழ்ச்சியை வெளியிடுவர். பிறர் துன்பங்கண்டு இன்பமடையும் 'இப்பெரியோர்' உலகில் மிகச் சிலர் உண்டு. மிகச் சிலர் என்றாலும், வாழ்ந்து கொண்டிருக்கும் இக்கூட்டத்தாருக்குக் கவிஞன் ஒரு வடிவு கொடுக்க முனைகிறான். அம்முயற்சியின் பயன்தான் 'கூனி' என்னும் பாத்திரம்.

இராம காதையின் கட்டுக்கோப்புக்கு 'மந்தரை' எனப்படும் கூனி மிக இன்றியமையாதவள். அவள் இல்லையானால், இராமன்

காடு செல்லப் போவதில்லை; இராவணன் கொல்லப்படப் போவதில்லை. இவை இரண்டுந்தாம் இராமாயணத்தில் உயிர் நாடிகள் என்றால், இவை நடைபெற நேரடியாகக் காரண மாக இருப்பவள் கூனிதான் என்பதை மறந்துவிடக்கூடாது. எனவே, அவளைப் பற்றி ஆராயும்பொழுது இந்த எண்ணம் நம்முடைய மனத்தின் அடிப்படையில் இருத்தல் வேண்டும். ஆனால், இத்தகைய நன்மை கடைசியில் விளையப்போகிற காரணத்தால் அவள் செய்த காரியத்தைச் சிறந்தது என்று யாருங் கூறிவிட மாட்டார். தவறான வழிகளைக் கடைப் பிடித்து நற் பயன் விளைவிப்பதைச் சிறந்த வழிகளுள் ஒன்றாகச் சில சமய வாதிகள் கருதினும், இந்த நாட்டார்கள் இதனை நல்ல முறை என்று ஒத்துக்கொள்வதில்லை இறுதியில் எத்துணை நன்மை விளைவதாயினும், தவறு தவறுதான்.

கசப்பான மருந்தை உட்கொள்ளுகிறோம் பல சமயங்களில். அம்மருந்து நோயைப் போக்குவது உண்மைதான். எனினும், அக்கசப்பும் மெய்ம்மையானது என்பதை ம்றுக்க முடியாதே கூனியின் செயலால் நன்மை விளையினும், அவள் செய்தது தீமைதான்.

''குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.'' (504)

என்ற குறளை அடிப்படையிற்கொண்டே ஆராய்ச்சி நடைபெற வேண்டும். இவை அனைத்தும் நம் மனத்தில் தோன்றுமாறு கவிஞன் கூனியை அரங்கத்திற்குக் கொணர்கிறான்.

### முரண் அழகு

மந்தரையை நமக்கு அறிமுகம் செய்து வைக்குமுன் ஏறத்தாழ நாற்பது பாடல்கள் மூலம் ஒரு நிலைக்களத்தை அமைக்கிறான் கவிஞன். அயோத்தி மக்கள் இராமன் முடிசூடப் போகிறான் என்பதைக் கேட்டு எல்லை மீறி மகிழ்கின்றார்கள். அவர்கள் மகிழ்ச்சி மிகுதியால் வழியில் கண்டவர் அனைவருக்கும் பொருளை வாரி வழங்குகின்றார்கள்; நாட்டை அலங்கரித்தார்கள்; வீட்டை அலங்கரித்தார்கள்; தம்வீடுகளில் ஏதோ விழா நடப்பது போலவே ஒவ்வொருவரும் நினைத்தனர். அயோத்தியைப் பார்த்தால்,

''பொன்னகர் இதுஎனப் பொலிகிறது.''

(மந்தரை சூழ்ச்சிப் படலம், 38.)

நகர மக்களோ எனில்,

"ஆர்த்தனர்; களித்தனர்; ஆடிப் பாடினர்;
வேர்த்தனர்; தடித்தனர்; சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தனர் மன்னனைப் புகழ்ந்து வாழ்த்தினர்." (ஷ 27)

எல்லை மீறிய இந்த மகிழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் நமக்கு, 'இது ஏதோ ஒரு பேராபத்தின் அறிகுறி!' என்ற எண்ணம் தோன்றத்தான் செய்கிறது. எல்லை மீறிய மகிழ்ச்சியில் திளைக்கும்பொழுது இன்றுங்கூட நம் மனத்தில் இத்தகைய எண்ணம் தோன்றுதல் இயல்பு. பல சமயங்களில் இவ்வச்சம் மெய்ம்மையாக நடைபெற்றும் விடுகிறது. அதே நிலைமையை உண்டாக்கவே கவிஞன் நகரமக்களின் இவ்வாரவாரத்துடன் கூடிய மகிழ்ச்சியை அறிவித்துவிட்டு, உடனே கூனியைக் கொண்டுவந்து நிறுத்துகிறான். அவளை எவ்வளவு அழகாகக் கவிஞன் அறிமுகஞ் செய்கிறான் என்று நினைக்கிறீர்கள்!

"இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்" (ஷ 38.)

என்ற அடிகள் மூலம் இராவணன் செய்யப்போகும் தீமைக்கு முன்னறிவிப்புச் செய்யப்படுகிறது. அதிலும் 'இழைத்த' என்ற சொல்லின் ஓசை நயம் ஆய்ந்து கோடற்குரியது, ஒரு தீமையை 'நடந்தது' நிகழ்ந்தது' என்று கூறுவது பொருத்த முடையது. ஆனால், இங்கு நடைபெறப்போகும் தீமைபிறர் அறியா வகையில். முன்னறிவிப்பு இல்லாமல், மெள்ள ஓசை படாமல் நடைபெறப் போகிறது. கூனியின் சூழ்ச்சியை, அவளும் அவளாற் கொடுக்கப் பட்ட கைகேயியும் தவிர வேறு யாரும் இறுதிவரை அறியவில்லை; அறியக் கூடவில்லை. ஆகலின், ஆசிரியன் 'இழைத்த' என்ற அழகிய சொல்லை இங்குப் பயன்படுத்தினான்.

### காரணப் பெயர்

மேலும், ஒரு பாத்திரத்தை முதல் முதலில் அறிமுகஞ்செய்து வைக்கும் பொழுது அப்பாத்திரத்தின் இயற்பெயரையே கூற வேண்டும். அவ்வாறு கூறாமல், அப்பாத்திரம் பெற்றுள்ள காரணப் பெயரை முதன்முதலில் கூறுவதென்றால், அதற்குத் தக்க காரணம் ஒன்றிருக்க வேண்டும். அக்காரணப் பெயரைக் கூறு முகமாகவே அப்பாத்திரத்தைப்பற்றி நம் எண்ணத்தைத் தூண்ட முயல்கிறான் கவிஞன். சாதாரணமான நிலைமையில் ஒரு பாத்திரத்தை முதல் முதலில் சந்திக்கும் பொழுது விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் சந்திக்கிறோம். பின்னர் அப்பாத்திரம்

செய்யும் செயல்களை வைத்துத்தான் விருப்பு வெறுப்புக் கொள்கிறோம். இதுதான் முறை. ஆனால், இம்முறையை மாற்றி, எடுத்த எடுப்பிலேயே நாம் வெறுப்புக் கொள்ள வேண்டும் என்று கவிஞன் நினைப்பதாலேதான் முதலிலேயே 'கொடுமனக் கூனி' என்ற அடையடுத்த காரணப் பெயரால் அவளை நமக்கு அறிமுகஞ்செய்து வைக்கிறான். கூனிகொடுமை நினைக்கிறாள். ஆனாலும், அதனை நிறைவேற்றும் ஆற்றல் அவள்பால் இல்லை. ஆனால், அக்கொடுமையைச் சிறிதும் விட்டுக் கொடுக்காமல் நிறைவேற்றி வைப்பவளாகிய கைகேயியைக் கவிஞன் எவ்வாறு அறிமுகஞ்செய்கிறான், தெரியுமா?

''நாற்கடல் படுமணி நளினம் பூத்தஓர்
பாற்கடல் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் கண்அருள் பொழியப் பொங்கணை
மேற்கிடந் தாள்,''

(ம. சூழ்ச்சி 42)

என்று அவளை மட்டும் இவ்வாறு உயர்ந்த நிலையிற் கூறக் காரணம் யாது? இவ்விருவரும் இழைத்தது தீமையேயாயினும், இருவர்க்கும் இடையில் கடலனைய வேற்றுமையைக் காண்கிறான் கவிஞன். கைகேயியின் மனம் முதலில் மாறாமல் இருந்து, இறுதியில் மாற்றம் அடைந்தது உண்மைதான். அதற்காகவும் அவளை ஓரளவு போற்றுகிறான் கவிஞன். இயற்கையாகவே அவள் மனம் தூய்மையானது என்பதையும், கூனி மிகவும் முயன்று கெடுத்த பின்னரே அவள் மனந்திரிந்தது என்பதையும் நமக்கு எடுத்துக்காட்டக் கவிஞன் பெரிதும் முயல்கிறான். ''ஆழ்ந்த பேரன்பினாள்'' (47) என்றும், ''தெய்வக் கற்பினாள்'' (43) என்றும், ''வாய் கயப்புற மந்தரை வழங்கிய வெஞ்சொல்'' (62) கைகேயியை ஒன்றுஞ் செய்யவில்லை என்றும் கவிஞன் கூறிப் பரதன் தாயினுடைய பண்பட்ட தன்மையை நன்கு எடுத்துக் காட்டுகிறான்.

### ஒப்பு நோக்கவும்

அவ்வாறு முதலில் தூய உள்ளத்தளாய் இருந்த கேகயன் மகள், இறுதியில் மனம் மாறினாலும், அதற்குத் தக்க காரணங்கள் உண்டு. ஆகவின், அவளை முற்றிலும் கெட்டவள் என்று கூறு தற்கில்லை. மைந்தன் மேற்கொண்ட பாசத்தாலும் அறியாமை யாலுமே அவள் தவற்றைச் செய்கிறாள். மேலும், தான் செய்யும் தவறு இத்துணைப் பெரிய இராமாயணத்திற்கு இடமாகிவிடும் என அவள் கனவிலும் கருதியவள் அல்லள். எனவே, அவளை

நல்லவளாகவே ஆசிரியன் அறிமுகஞ்செய்துவிடுகிறான். ஆனால் கூனியைப் பொறுத்த வரை, அவள் தான் செய்யும் கொடுமையை நினைந்து பார்த்து அதனால் விளையப்போகும் தீமையையும் ஆராய்ந்து வேண்டும் என்றே செய்கிறாள் ஆகலின், அவளை அறிமுகம் செய்துவைக்கும் பொழுதே கொடுமனம் உடையவளாக அறிமுகஞ்செய்து வைக்கிறான். அன்றியும், அவளால் தீமை செய்யப்படும் இராமனோ, அவளுக்கு ஒரு தீங்குஞ் செய்தவன் அல்லன். அப்படி இருக்கவும், அவனுக்குத் தீமை செய்யத் துணிந்த அவள் மன நிலையை என்னென்று கூறுவது! கட்டுரையின் தொடக்கத்தில் கூறியபடி' காரணம் இன்றியும் பிறருக்குத் தீமை செய்ய முற்படும் இழிகுணம் உடையவர்களுள் தலையாயவள் கூனி. எனவே, அவளுடன் பிறந்த இந்த இழிதகைமையை நாம் நன்கு அறிந்துகொள்ள வேண்டும் என்று கருதிய கம்பநாடன்.

'கொடுமனக் கூனி' (ம. சூழ்ச்சி. 38)
'மூன்றுலகினுக்கும் இறுதி மூட்டுவாள்' (ஷை 39)
'காலக்கோளனாள்' (ஷை 42)
'வெவ்விடம் அனையவள்' (ஷை 45)
'சூழ்ந்த தீவினை' (ஷை 47)
வேதனைக் கூனி' (ஷை 53)
'தீய மந்தரை' (ஷை 76)

என்ற தொடர்களால் கூனிக்கு ஓர் 'அருச்சனை' செய்து விடுகிறான். இவ்வாறு தொடர்ந்து அவளை ஏசியது போதாதென்று கருதிப்போலும் 'உள்ளமும் கோடிய கொடியாள்' (80) என்று இறுதியாகச் சொல்லித் தீர்த்துவிட்டான். உள்ளமும் என்ற உம்மையால், உடலும் வளைந்த கூனி என்பதைப் பெறவைத்தான்.

பல வகை முயற்சி

இக்கொடுமனக் கூனி கைகேயியின் மனத்தைத் திரிக்கப் பல வழிகளைக் கையாண்டாள்; முதன்முதலாகக் கைகேயியின் 'தாய்மைக்கு' முறையிடுகிறாள்.

''... ..........'திருவினில் திருவும் நீங்கினான்
இறந்திலன் இருந்திலன் என்செய்து ஆற்றுவான்
பிறந்திலன் பரதன்நீ பெறுத லால்' என்றாள்.'' (ஷை 55)

என்ற முறையில் கைகேயியின் தாய்மனம் இளகுமோ என்று கூறிப்பார்த்தாள்; அம்முறை பயன்படாது என்று கண்டவுடன்

சகக்களத்தியாகிய கோசலை பெறப் போகும் வாழ்வைப் பெரிது படுத்திக் காட்டினாள். அதனைச் சொல்லும் பொழுதே கைகேயி யின் அகங்காரத்திக்கு எண்ணெய் விடுகின்றாள். 'இராமன் முடி சூடிய பிறகு நீ வறுமையடைவாய். நின்னை வந்து இரந்தவர்க்குக் கொடுக்கவும் நின்பால் ஒன்றும் இராது. அந்நிலையில் நீ கோசலையைச் சென்று பணிந்து, அவள் தருவதைப் பெற்றுத் தான் வாழ வேண்டும்,' என்று கூறுகிறாள். இதிலும் கைகேயி மனம் மாறுபடவில்லை. இவ்விரு வகையிலும் கேகயன் மகள் மனம் மாறவில்லை என்பதைக் கண்ட கூனி, இறுதியாக ஒரு 'பிரமாஸ்திர'த்தைப் பயன்படுத்திவிட்டாள்; என்றைக்குமே பெண்களுக்குரிய ஒரு குணத்தைப் பயன் படுத்த முடிவு செய்து விட்டாள்; எந்தப் பெண்ணும் தாய்வீட்டைப் பிறர் குறைகூறப் பொறுத்திருக்கமாட்டாள். அதிலும், சாதாரண இடத்தில் பிறந்து, உயர்ந்த இடத்தில் வாழ்க்கைப்பட்ட பெண்களுக்கு ஒரு வகையான 'தாழ்மை உணர்ச்சி'[1] இருந்துகொண்டேயிருக்கும். அதை யாரேனும் எடுத்துக் காட்டிவிட்டால், புலி போலச் சீறும் இயல் புடையவர்கள் பெண்கள். பெண்ணாகிய கூனிக்கு இது தெரியாதா? எனவே, இதுவரை திரியாத கைகேயியின் மனத்தைத் திரிக்க இம்முறையைக் கையாண்டுவிட்டாள்.

**பிரமாஸ்திரம்**

சக்கரவர்த்தியாகிய தசரதனை நோக்கக் கேகயன் சாதாரண மான சிற்றரசன்தான். தசரதன் ஒரு புறம் இருக்க, ஜனகன்கூடக் கேகயனை நோக்கப் பெரிய அரசன்தான். மேலும், ஜனகனுக்கும், கேகயனுக்கும் பகைமை வேறு உண்டு. என்றாலும், கேகயன்மேல் படையெடுத்தால் அவன் மருமகனாகிய தசரதன் மாமனாருக்கு உதவியாக வருவான் என்று அஞ்சிய ஜனகன், இதுவரை சும்மா இருந்து விட்டான். இப்பொழுது இராமன் மன்னனாகிவிட்டால், ஜனகனுக்குக் குளிர்விட்டுவிடும். இராமன் அரசனாகிவிட்ட பிறகு ஜனகன் கேகயன்மேல் படையெடுத்தால், அவனுக்கு யார் உதவிக்கு வருவார்கள்? ஆகவே, 'உன் தகப்பன் வாழ வேண்டு மானால், இராமன் அரசனாகக் கூடாது,' என்று தருக்க முறைப்படி கூனி கூறுகிறாள்.

''காதல் உன்பெருங் கணவனை அஞ்சிஅக் கனிவாய்ச்
சீதை தந்தைஉன் தாதையைத் தெறுகிலன்; இராமன்
மாது லன்அவன்; உந்தைக்கு வாழ்வினி யுண்டோ?
பேதை உன்துணை யாருளர் பழிபடப் பிறந்தார்?

---

1. Inferiority Complex

''மற்று நுந்தைக்கும் வான்பகை பெரிதுள மறத்தால்
செற்ற போதுஇவர் சென்றுஉத வாரெனின் செருவில்
கொற்றம் என்பதுஒன்று எவ்வழி உண்டது கூறாய்;
சுற்ற முங்கெடச் சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய்!''
(ம. சூழ்ச்சி. 73, 74)

என்ற முறையில் விரிவாகவும் மனத்திற்பதியும் வகையிலும் கேகயன் படப்போகும் துயரத்தைக் கூனி கூறினாள். தன் தாய் வீட்டுக்கு நேரிடப் போகும் இழிவைக் கற்பனையில் காணத் தொடங்கி விட்டாள் கைகேயி. எந்தப் பெண்ணும் பொறுக்க இயலாத ஒரு காட்சியாகலின், அவள் மனம் உடனே மாறி விட்டதாம். இதைக் கவிஞன் அழகாக,

''தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி
தூயசிந்தையும் திரிந்தது.'' (ம. சூழ்ச்சி. 76)

என்றுகூறுகிறான்.

## அறிவுத் திறம்

எதனை எவ்வாறு கூறினால் பயன் விளையும் என்பதை நன்கு அறிந்து கூறும் திறம் படைத்த கூனியின் அறிவுத் திறத்தை நாம் பாராட்டாமல் இருக்க இயலாது. என்றாலும், அவள் அறிவைத் தீமை புரியவே செலவிட்டாள் என்பதை நினைக்க, வருந்தாமல் இருக்கவும்முடியவில்லை. அவளுடைய ஆழ்ந்த தீமை. தனியே காணும் பொழுதும் ஆத்திரம் ஊட்டுவதாகவே உளது, என்றாலும், வஞ்சகத்தை நேர்மையின் அருகிலும் தீமையை நன்மையின் அருகிலும் வைத்துக் கண்டால்தான் உள்ளவாறு அவற்றின் கொடுமையை அறிய முடியும். எனவே, கவிஞன் கூனியின் கொமையைக் கைகேயியின் நன்மையின் எதிரே நிறுத்தி, இரண்டுக்கும் இடையே உள்ள வேறுபாட்டைக் காட்டுகிறான்.

கைகேயியின் அரண்மனையை அடைந்த கூனி, அவள் உறங்குவதைக் கண்டு, அவள் கால்களைத் தொட்டு, அவளுக்கு விழிப்பு உண்டாகுமாறு செய்தாள். விழித்துஎழுந்த கைகேயி, முற்றிலும் துயில்நீங்கப்பெறாதவளாய், கூனி எழுப்பியதன் காரணத்தை அறிய இயலாதவளாய், விழிக்கிறாள். அந்நிலையில் கூனி பேசுகிறாள். ''மிகு நஞ்சு பொருந்திய பாம்பு, தன்னை விழுங்குவதற்காக அருகில் வரவும், அது பற்றிக் கவலை கொள்ளாமல் ஒளி விட்டு விளங்குகின்ற சந்திரனை ஒத்து, பெரிய துன்பம்

உன்னை வந்து அணுகவும் இப்படிக் கவலை இல்லாமல் உறங்கலாமா?'' என்ற கருத்துப்பட,

'' 'அணங்குவாள் விடஅரா அணுகும் எல்லையும்
குணங்கெடாது ஒளிவிரி குளிர்வெண் திங்கள்போல்
பிணங்குவான் பேரிடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவாய் அல்லைநீ உறங்கு வாய்,' என்றாள்.''

(ம. சூழ்ச்சி. 44)

இதனைக் கேட்ட கைகேயி சிறிதும் பதட்டம் அடையவில்லை. ''அரசிற் பிறந்து பின் அரசில் வளர்ந்து அரசில் புகுந்து பேரரசியான'' கைகேயி இதற்கெல்லாம் பதட்டம் அடைவாளா? எனவே, கூனியின் இந்தக் கூப்பாட்டைச் சிறிதும் மதியாதவளாய்,

''தெவ்வடு சிலைக்கைஎன் சிறுவர் செவ்வியர்;
அவ்வவர் துறைதொறும் அறம்தி றம்பலர்:
எவ்விடர் எனக்குவந்து அடுப்பது ஈங்கு?'' (ஷை45)

என்று கேட்கிறாள். இருவரும் நின்று பேசும் இச் சொற்களால் கவிஞன் தீமையின் பதட்டத்தையும் நன்மையின் பொறுமையையும் நமக்கு எடுத்துக் காட்டிவிடுகிறான். கைகேயியின் எதிரே கூனியை வைத்துக் காணும்பொழுது அவள் கொடுமை பன்மடங்கு அதிகரித்துக் காணப்படுகிறது. அடுத்து, 'இராமன் முடி சூடப் போகிறான்,' என்கிறாள் கூனி. இச்சொல்லைக் காதாற் கேட்டதும் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்த கைகேயி, சிறந்த ஒரு நவமணி மாலையைக் கூனிக்குப் பரிசாக நல்கினாள். மகிழ்ச்சியில் திளைத்து மாலையைத் தருகின்ற கைகேயியின் எதிரே கூனி என்ன செய்கிறாள் பாருங்கள்:

''தெழித்தனள் உரப்பினள் சிறுகண் தீயுக
விழித்தனள் வைதனள் வெய்து உயிர்த்தனள்
அழித்தனள் அழுதனள் அம்பொன் மாலையால்
குழித்தனள் நிலத்தைஅக் கொடிய கூனியே.''

(ம. சூழ்ச்சி. 61)

பிறர் அடைகின்ற இன்பத்தைப் பொறாமல் அவர்கட்குத் தீங்கு செய்ய நினைக்கும் கயவர் அனைவரும் கூனியின் இனத்தைச் சேர்ந்தவர். அவர்கள் பிறர் மகிழும் பொழுது அடையும் மனவருத்தத்தைத் தான் இப்பாடல் கூறுகிறது.

இராமனுக்குப் பட்டங்கிடைத்தாலும் பரதனுக்குப் பட்டங் கிடைத்தாலும் கூனியைப் பொறுத்தவரை ஒன்றுதான். தனிப்

பட்ட முறையில் அவளுக்கு ஒன்றும் பயன் ஏற்படாது என்று அறிந்திருந்தும் ஏன் இவ்வாறு சூழ்ச்சி செய்கிறாள்? கூனி செய்யும் இத்துணைப் பெரிய சூழ்ச்சிக்கு ஏதாவது ஒரு காரணம் இருத்தல் வேண்டும். ஒன்று, பரதன்மேல் கொண்ட அன்பினால் அவள் இதனைச் செய்திருத்தல் கூடும். ஆழ்ந்து நோக்கினால் இக் காரணம் நிலைபெறுமாறு இல்லை. பரதன்மேல் கொண்ட அன்பால் தூண்டப்பட்டு இதனைச் செய்தாள் எனில், இறுதி வரை பரதனுக்குப் பட்டம் கிடைக்க அவள் முயன்றிருத்தல் வேண்டும் தன் வேலை முடிந்ததும் அவள் யாதொரு முயற்சியும் செய்ததாகத் தெரியவில்லை. மேலும், பரதன்மேல் கொண்ட அன்பால் இது செய்தாள் எனில், இராமனை ஏன் காட்டிற்கு அனுப்பச் சூழ்ச்சி செய்ய வேண்டும்? பரதனுக்குப் பட்டத்தைப் பெறுவதுடன் அவள் நிறுத்தி இருக்கலாமன்றோ? இராமன் காடு செல்வதற்கும், பரதன் பட்டம் அடைவதற்கும் தொடர்பு யாது? ஒன்றுமில்லை. எனவே, அவள் இராமனைக் காட்டுக்கனுப்பவே இப்பெருஞ் சூழ்ச்சியைச் செய்தாள் என்று நினைய வேண்டி உளது. அச்சூழ்ச்சியை நிறை வேற்றவே கைகேயியையும் பரதனையும் பயன்படுத்திக் கொண்டாள் என்றும் நினைய வேண்டியுளது.

எவ்விதமான காரணமும் இல்லாமல் இராமன் மேலும் கோசலை மேலும் கூனிக்குத் தீராப்பகை மூண்டுவிட்டது. கைகேயி யின் தோழி என்பதற்காக ஒரு வேளை கோசலையாவது கூனியை இழித்துப் பேசியிருக்கலாம். ஆனால்,இராமன் மறந்தும், கூனிக்குத் தவறு இழைக்காதவன். இருந்தும், இவ்விருவருக்கும் தீங் கிழைக்கவே கூனி இவ்வடாத செயலைச் செய்தாள் ஆகலின், அவள் கொடுமனம் உடையவளே.

# 4. கேகயன் மடந்தை

கம்பன் கட்டிய கலைக் கோவிலில் ஓர் இன்றியமையாத பாத்திரமாவாள் கைகேயி. அவளாலேதான் இராம காதை நடைபெறுகிறது. இராமன் உலகில் தோன்றிய பயன்விளைய, அவள் ஒருத்தியே காரணமாகிறாள்.

தேவர் துயரைப் போக்குவதற்காக இராமபிரான் தோன்றியது மட்டும் போதாது. அவன் நாடிறந்து காடு நோக்கிச் சென்றிராவிடின், அவன் அவதாரத்தால் யாதொரு பயனும் விளைந்திராதன்றோ?

## கவிஞன் முறை

இவ்வளவு நன்மை செய்த ஒருத்தியைக் கெட்டவள் என்று எவ்வாறு கூறுவது? என்றாலும், உலகம் அவளைக் கெட்டவள் என்றும் பழி சூடியவள் என்றுந்தான் கூறுகிறது. உண்மையில் கைகேயி தீயவளா? காப்பியம் செய்த கவிஞனுக்கும் இக்கேள்வி பெரிய இடர்ப்பாட்டைத்தான் விளைவித்துள்ளது போலும்! ஒரு காப்பிய ஆசிரியனுக்கு இரண்டு வகைக் கடமைகள் உண்டு. ஒன்று, அவன் படைக்கும் பாத்திரங்களின் பண்பை அவனே விளக்குவது, இதில் அப்பாத்திரத்தைப்பற்றி அவன் என்ன கருதுகிறானோ, அக்கருத்தே இடம் பெறும். மற்றொரு வகையில் அவனுக்கு ஒன்றும் வேலை இல்லை. அவனால், படைக்கப்பட்ட ஏனைய பாத்திரங்கள் தம்முள் பேசுகின்றன. அங்ஙனம் பேசுகையில் ஒவ்வொரு பாத்திரம் பற்றியும் பேச நேரிடுகிறது. இவ்வகைப் பேச்சுகளில் ஒரு பாத்திரத்தைத் தீயதென்றோ நல்லதென்றோ கூற நேரிடும். இவ்வாறு ஒரு பாத்திரம் பிறிதொரு பாத்திரத்தைத் தீயதென்று கூறிய காரணத்தால் மட்டும் அதனைத் தீயதென்று முடிவு கூறக்கூடாது. காப்பியத்தில் காணப்பெறும் ஒரு பாத்திரத்தின் குண ஆராய்ச்சி செய்வதற்கு

நடுவு நிலைமை வேண்டும். ஒரே ஆசிரியன் இயற்றிய ஒரு காப்பியத்தில் சில பாத்திரங்களை விரும்பியும், சிலவற்றை வெறுத்தும் முடிவு கூறல் தவறாகும்.

**தீயோர் இரு வகையினர்**

கேகயன் மடந்தையாகிய கைகேயியைப்பற்றி ஆசிரியனே பலவிடங்களிற் பேசுகிறான்; ஏனைய பாத்திரங்களும் பேசுகின்றன. இந்த இரண்டு கூற்றுக்களையும் படிக்கின்ற நாம் நடுவு நிலைமையுடன் இக் கூற்றுக்களை ஆய்ந்து, கைகேயியின் குறைவு நிறைவுகளை முடிவு கட்ட வேண்டும். குறைவு இல்லாதவர் யாரும் இல்லை. அவ்வாறே முற்றிலும் குறைவேயுடைய நிறைவு இல்லாத மாந்தரும் இல்லை. ஆதலின், கைகேயியினிடத்தும் குறைவு உண்டு. ஆனால், அக்குறைவும் இருவகைப்படும். இயற்கையாய் அமைந்த ஒரு பண்பாட்டால் வரும் குறைவு ஒன்று; ஏனையது, வேண்டுமென்றே தவற்றைச் செய்து குறைவடைவது. ஒரு மனிதன் குறைவடைய வேண்டுமாயின், தவறு செய்ய வேண்டும். அவ்வாறு இழைக்கப்படும் தவறும் இருவகைப்படும்; வேண்டுமென்றே இழைக்கப்படும் தவறு ஒரு வகை; இரண்டாம் வகையில் சூழ்நிலை காரணமாகவும் சில சமயங்களில் தவறு இழைக்க நேரிடுகிறது. முதலாவது வகை மிகக் கொடியது. கருணை இன்றி இவர்கள் செயலைக் கண்டிக்க வேண்டுவது தவிர வேறு வழி இல்லை. தமக்கு ஒன்றும் நன்மை இல்லை என்பதறிந்திருந்தும் தவறு இழைக்கும் இவ்வினத்தார், மந்தரையாகிய கூனியின் இனத்தைச் சேர்ந்தவர்.

இரண்டாவது கூறப்பெற்ற இனமே, கைகேயியின் இனம் இவ்வகையினர் சூழ்நிலை அல்லது சந்தர்ப்பம் காரணமாகவே தீங்கிழைப்பர். இதுவும் குற்றம் எனினும், மன்னிக்கக் கூடிய குற்றமாகும் என்பதை மறந்துவிடக்கூடாது. இவ்வகையினர் வேண்டுமென்று பிறர்க்குத் திங்கு புரிபவரல்லர். எப்பொழுதும் நல்லெண்ணம் இவர்களைச் சூழ்ந்திருக்கும். பிறர்க்குத் தீது செய்தறியாத இவர்கள், சூழ்நிலை காரணமாகச் சில சமயங்களில் தீங்கிழைப்பார்கள், இவ்வாறு இழைக்கும் தீமையும் இவர்களே செய்ததாய் இராது; பிறர் தூண்டுதலின்மேல் தவறான செயலைச் செய்வார்கள். இவர்களிடம் குற்றங் காண வேண்டுமாயின், தவறுடையார் நட்பைப் பெரிதாக மதித்துப் போற்றுகின்றனரே என்றுதான் கூற வேண்டும். கேகயன் புதல்வியும் தசரதன் மனையாட்டியுமாகிய கைகேயி இந்த இனத்தாருக்கு ஓர் எடுத்துக்காட்டாவாள்.

இயற்கையிலேயே பல நற்பண்புகளும் உடைய பெருமாட்டி அவள். 'தெய்வக் கற்பினாள்' ஆழ்ந்த பேரன்பினாள், கேகயர்க் கிறை திருமகள்,, 'தேவி' என்பன அவளுக்குக் கவிஞன் தரும் சில பட்டங்கள். இவை அனைத்தும் அவளது நற்பண்பை நமக்கு அறிவிக்கக் கவிஞன் கையாண்ட சொற்கள். ஏன்? தான் ஆக்கும் ஒவ்வொரு பாத்திரத்தையும் நாம் நன்கு அறிய வேண்டும் என்பதும், அப்பாத்திரத்தின் குண நலன்களையும் நன்கு அறிய வேண்டும் என்பதும் அவனுடைய குறிக்கோளாகும். இம் மட்டோடல்லாமலும், சில சந்தர்ப்பங்களில் சில பாத்திரங்களைப் பற்றி நாம் தவறான முடிபைச் செய்துவிட நேரிடுகிறது. அம் மாதிரி முடிபைச் செய்யாமல் இருப்பதற்கும் கவிஞன் அதிக முயற்சி செய்ய வேண்டி உளது. கைகேயியைப் பற்றிச் சில சமயங்களில் இவ்விடர்ப்பாடு தோன்றக்கூடும். அவள் செய்த செய்கையால் ஒரு பெரிய அரசு கேடுற்றது; அரசன் உயிரை இழந்தான்; அவளும் கணவனை இழந்தாள்; ஆனாலும், இறுதியில் அவள் நினைத்த நினைவு கைகூடவில்லை. எனவே, வீண் துயரத்திற்கும் பழிக்கும் ஆளான அவளை நாம் கொடியளாக முடிவு செய்துவிடக்கூடாது.

### உறங்கும் அழகி

இவ்வளவையும் மனத்தில் வைத்துக் கொண்டு தான் கவிஞன் அவளை நமக்கு அறிமுகம் செய்துவைக்கிறான். கொடுமனக் கூனி, பெரிய சூழ்ச்சி ஒன்றை மனத்தில் வைத்துக்கொண்டு, கைகேயியைத் தேடி வருகிறாள். அவள் வரவையும் அதன் கொடுமையையும் கவிஞன் பெரியவாக்கிக் காட்டுவ தெல்லாம் கைகேயியை அறிமுகம் செய்வதற்கேயாம். கூனியின் தடபுடல் வருகைக்கு ஏற்ற நிலையில் கைகேயி இல்லை. அவள் உறங்கிக் கொண்டிருக்கிறாள், கூனி உள்ளே நுழையும் பொழுது. அந்த உறக்கத்தில் அவளை நமக்கு அறிமுகம் செய்யும் கவிஞன். ஒரு பெரிய பயனைப் பெற்றுவிடுகிறான். எவ்வளவு அழகில் சிறந்தவர் கள் என்று நம்மால் கருதப்பெறுகிறவர்களும் உறங்கும் பொழுது அழகுடன் விளங்கமாட்டார்கள். இதைப் பற்றிச் சந்தேகம் கொள்ளுகிறவர்கள் அனுபவத்தில் பார்த்தே தெரிந்து கொள்ளலாம். இதற்கொரு காரணம் உண்டு. நாம் விழித்திருக்கும் பொழுது மனத்தில் தோன்றும் தவறான எண்ணங்களை எல்லாம் அடக்கிவிடுகிறோம். எனவே, இந்த எண்ணங்களால் தோன்றும் முகக் குறிப்பும் மறைக்கப்பட்டுவிடுகிறது. எவ்வளவு உயர்ந்த

மனப்பண்புடையவர்கட்கும் ஓரளவு தீய பண்புகளும் இருந்தே தீரும். எனினும், அறிவுடையவன் மனத்தில் தோன்றும் இத்தீய பண்புகள் வெளிப்பட வாய்ப்பு அளிப்பதில்லை. ஆனால் உறங்கும் பொழுது இவ்விதத் தடை யாதும் இல்லை. எனவே, மனத்தில் விளையாடும் இவ்வெண்ணங்கள் முகக்குறிப்பிலும் வெளியா கின்றன. இதனாலேயே ஒருவர் தூங்கும் பொழுது அவரது முகத்தில் பல விதமான கோணல்கள் தோன்றக் காண்கிறோம். ஆனால், இளங்குழந்தைகள் உறங்கும் பொழுது அவர்கள் விழித்திருந்த பொழுது தவழ்ந்த அழகு குறையாமல் இலங்கக் காண்கிறோம்.

இந்நிலைக்கு மாறாக யாரேனும் ஒருவர் உறங்கும் பொழுதும் மிக்க அழகுடன் விளங்கினார் என்றால் அதனால் வெளிப்படும் ஓர் உண்மையுண்டு. அதாவது, அம்முகத்தையுடையவர் யாவராயினும், அவர் மிகச் சிறந்த எண்ணமும் பண்பும் உடையவர் என்பதேயாகும். இவ்வுண்மை மனவியலாரும்[1] அறிந்த ஒன்று. இது கருதியே போலும் பொதுமறை தந்த பெரியார்,

''அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.'' (திருக்குறள். 706)

என்று கூறிப் போனார்! இந்த அடிப்படை உண்மைகளை மறவாமல் கம்பநாடன் காட்டும் கேகயன் மடந்தையைக் காண்போம்.

அருள் வழியும் கண்கள்

''நாற்கடல் படுமணி நளினம் பூத்ததுஓர்
பாற்கடல் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் கண்அருள் பொழியப் பொங்கு அணை
மேற்கிடந் தாள்தனை விரைவின் எய்தினாள்.''

(ம, சூழ்ச்சி. 42)

அழகிய பாற்கடல் நடுவில் பவளக்கொடி ஒன்று தாமரை பூத்து விளங்குவது போலக் கடைக்கண் வழியே அருள் பொழியக் கிடந்து உறங்கினாளாம் அப்பெண் கொடி போல்வாள். உறங்குகிற ஒருத்தியைக் கவிஞன் வருணிக்கிற நிலையைச் சற்றுக் கூர்ந்து கவனிக்கத்தான் வேண்டும். முதல் இரண்டு அடிகள் உவமையாகலின், அவற்றை விட்டுவிட்டு, மூன்றாம் அடியின் முதற்பகுதியைச் சற்று உற்று நோக்குவோம். அவ்வழகிய முகத்

1. psychologists

நிற்குப் பேரழகு செய்துகொண்டு விளங்குவன அவளுடைய கண்கள். விழித்திருக்கும் பொழுது அந்தக் கண்கள் எந்த உணர்ச்சியை மிகுதியாகக் கொண்டு விளங்கினவோ, அந்த உணர்ச்சியைத்தானே உறங்கும் பொழுதும் தாங்கிவிளங்கும்? விழித்திருக்கும் பொழுது கண்களின் வழியே வெளிப் படும் உணர்ச்சி அக்கண்கள் மூடி இருக்கும் பொழுது குறைந்து தானே காணப்படும்? எனவே, குறைந்த உணர்ச்சிக்குக் கவிஞன் அளவு கூறுகிறான். 'கடைக்கண் அருள் பொழிய' என்ற சொற் களால் உறங்குகையிற்கூட அருள் வழிந்து ஓடினதாகக் கூறுகிறான். அவ்வாறாயின், அவள் விழித்திருக்கும் பொழுது எவ்வளவு அருள் உடையவளாய்த் திகழ்வாள் என்பதை நம் கற்பனைக்கு விட்டு விடுகிறான் கவிஞன். தன் கணவன் பிள்ளைகள் என்பவர்களிடம் மட்டும் அவள் அன்புடையவளாய் வாழ்ந்திருப்பின், அதனைக் கவிஞன் 'அருள்' என்ற சொல்லால் குறிப்பிட்டிருக்க மாட்டான். தொடர்பில்லாதார் மாட்டுஞ் செல்லும் மன நிலையைத்தானே 'அருள்' என்று பெரியோர் குறிக்கின்றனர்? எனவே, பெருங்குடிப் பிறந்து பெருவாழ்விற் புகுந்தவளாகிய இம்மாதரசி, பெருங்குடி மகளாகவே உள்ளாள் என்பதை நினைவூட்டவே போலும் 'அருள்' பொழிந்தது என்று கவிஞன் கூறுவானாயினன்! "கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்," (575) என்றும் "கண் ணென்னாம் கண்ணோட்டமில்லாத கண்?" (573) என்றும் பொது மறை கூறியதற்கேற்ப, இவ்வரசமாதேவியின் கண்கள் அருளைப் பொழிந்தன என்றே கூறுகிறான்.

இவ்வடியால் கேகயன் மடந்தையின் மனத்தையும், முகவழகையும் நமக்குக் காட்டிய கவிஞன், அடுத்த பாடலில் அவளுடைய கால் அழகையும் காட்டுகிறான். வேதனை விளை விக்கும் கூனி சென்று, உறங்குகிற கைகேயியின் கால்களைத் தொட்டு எழுப்பினளாம். இந்நிலையில் கவிஞன் அக்கால்களுக்கு உவமை கூறுகிறான்.

**காற்கமலம்**

"எய்திஅக் கேகயன் மடந்தை எடுஅவிழ்
நொய்துஅலர் தாமரை நோற்ற நோன்பினால்
செய்தபே ருவமைசால் செம்பொன் சீறடி
கைகளின் தீண்டினாள் காலக் கோள்அனாள்."

(ம. சூழ்ச்சி. 43)

மென்மையாக மலருந் தன்மையுடைய தாமரை பல நாள் தவஞ் செய்ததாம். ஏன் தெரியுமா? பூக்களிற் சிறந்தது தாமரை

என்று மட்டும் இருந்தது போதாதாம். அனைவர் முகங்களுக்கும் தன்னை உவமையாகக் கூறியதும் போதாதாம். ஆனால், அழகிற் சிறந்தவளான கைகேயியின் முகத்திற்குத் தான் உவமையாகா விடினும், அவளுடைய கால்களுக்காவது (பாதம்) உவமையாகிவிட வேண்டுமே என்றுதான் தவஞ்செய்ததாம். இதனைத்தான் கவிஞன் 'நோற்ற நோன்பினால் உவமை சால் சீறடி' என்று குறித்தான். அவள் கால்கள் இத்தகையன எனின், முகம் எத்தகையதாய் இருந்திருக்கும் என்பதை நம் கற்பனைக்கு விட்டு விட்டான் கவிஞன்.

இங்ஙனம் கூனி அவள் கால்களைத் தொட்டவுடனே கைகேயி எழுந்துவிட்டாளாம். இதிலும் ஓர் அழகைக் காண்கிறான் கவிஞன். ஒருவர் காலைத் தொட்ட மாத்திரத்தில் விழித்து விடுதல் என்பது அவ்வளவு எளிதான காரியமன்று. மேலும், உறக்கம் நீங்குகையில் ஏதோ ஒன்றை உணர்ந்துகொண்டு எழுந்தாள் என்றல்லவா கவிஞன் குறிக்கிறான்?

"தீண்டலும் உணர்ந்தஅத் தெய்வக் கற்பினாள்" (ஷை 44)

என்ற அடியால் விழிக்கும் அம்மாதரசியின் மனநிலையை நமக்கு விளக்குகிறான். விழிப்பு வரும் பொழுது ஏதாவது ஓர் உணர்ச்சி வரும் என்று கூறுவதற்கில்லை. ஒரு வேளை உறக்கம் கெட்டு விட்டதே என்ற வருத்தங்கூடச் சில சமயங்களில் தோன்றலாம். அவ்வாறாயின், இங்குக் கைகேயி பெற்ற உணர்ச்சி யாது? பேரரசி யான அவள் உறங்கும் பொழுது யார்தாம் அவளை எழுப்ப அதி காரம் பெற்றவர்? அவள் அருமைக் கணவன் அவ்வாறு செய்யலாம். ஆனால், அவன் அவளுடைய கால்களைத் தொட்டு எழுப்ப வேண்டிய கட்டுப்பாடு இல்லையே! ஒரு வேளை மிக மிக இன்றி யமையாத காரணத்திற்காக வேறு யாரேனும் எழுப்பினார்களோ! அவ்வாறுதான் நினைத்துக்கொண்டு அவள் எழுந்தாள். 'பிறர் ஒருவருடைய கைகள் தன்னுடம்பில் பட்ட மாத்திரத்தில் கற்புடைய மாதரசி ஒருத்திக்கு ஒரு வகைப் பயிர்ப்பு ஏற்படும்' வேறு தன்னை ஒத்த பெண்கள் தொட்டாற்கூட இவ்வாறு உண்டாகுமா?' எனில், 'ஆம்' என்றே கூறல் வேண்டும். ஏன் எனில், பெண்களை அல்லாமல் பிறர் தொடுதல் என்பது இல்லாத ஒன்று. எனவே, கால்களை ஒருத்தி தொட்டாள் என்பதைத் தான் கைகேயி உணர்ந்துகொண்டு எழுந்தாள் என்று கூறுகிறான் கவிஞன். அவ்வாறல்லாமல் தசரதனே ஒரு வேளை தொட்டிருக் கலாமே எனின், அவன் அவள் காலைத் தொட வேண்டிய இன்றி

யமையாமை இல்லை என்க. நல்ல உறக்கத்திலுங் கூடத் தன்னைத் தொட்டவர் தன் கணவனையல்லாத பிறர் என்பதை அவள் உணர்ந்துகொண்டு எழுந்தாள் என்பதை அறிவுறுத்தவே, கவிஞன் 'திண்டலும் உணர்ந்த அத்தெய்வக் கற்பினாள்' என்று கூறினான்.

இத்துணைச் சிறப்புடைய ஓர் அரச மாதேவி உறக்கத்தில் எழுப்பப்பட்டால், அவளை எழுப்பியவர் தண்டனை அடையவுங் கூடுமன்றோ? எனவே, தன் உறக்கம் கலைக்கப்பட்டமை காரண மாக அந்நங்கை கூனியின்மேல் சீற்றங்கொண்டிருந்தால் எவ்வளவு நன்மை விளைந்திருக்கும்? அவள் சீற்றத்தை அஞ்சிய கூனி திரும்பி யிருப்பின், இராம காதையே நடைபெறாமற் போயிருக்குமன்றோ? அவ்வாறெல்லாம் நிகழ விதி இடந்தரவில்லை என்று கவிஞன் கூறுகிறான். "மூண்டு எழு பெரும்பழி முடிக்கும் வெவ்வினை, தூண்டிடக் (கூனி) கட்டுரை சொல்லல் மேயினாள்" (44) என்று கூனியின் பேச்சுக்கு அவன் அடைமொழி கூறுவது, பின்னர்க் கைகேயி மேல் வரப்போகும் பழியின் கொடுமையைக் குறைப் பதற்கே அன்றோ? 'பெரியதோர் இடர் உன்னை நோக்கி வந்து கொண்டிருக்கவும், நீ அது பற்றிக் கவலை கொள்ளாமல் உறங்கு கிறாயே!' என்று கூனி கூறிய சொற்களுக்குக் கைகேயி கூறிய விடை அவள் மனநிலையை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

நன்மைந்தர்ப் பெற்றவள்

"வெவ்விடம் அனையவள் விளம்ப, வேற்கணாள்
'தெவ்வடு சிலைக்கைஎன் சிறுவர் செவ்வியர்;
அவ்வவர் துறைதொறும் அறம்தி றம்பலர்;
எவ்விடர் எனக்குவந்து அடுப்பது ஈங்கு?' எனா

" 'பராவரும் புதல்வரைப் பயந்த யாவரும்
உராவரும் துயரைவிட்டு உறுதி காண்பரால்
விராவரும் புவிக்குஎலாம் வேத மேயன
இராமனைப் பயந்தஎற்கு இடர்உண் டோ?' என்றாள்."

(ம. சூழ்ச்சி. 44, 45)

பெரியதொரு துன்பம் வருகிறதென்று அச்சுறுத்திய கூனிக்குத் தக்க விடையன்றோ இது! "பகைவரை வெல்லும் வில்லேந்திய என் மக்கள் அவரவர்கள் நெறி தவறாமல் இருக்கும் பொழுது எனக்கு எவ்வாறு இடர் வர முடியும்?" என்கிறாள் அத்தாய். இற்றை நாளில் எத்தனை தாய்மார்கட்கு இவ்வளவு துணிச்ச

லுடன் தம் பிள்ளைகளைப் பற்றிப் பேச வாய்ப்பு இருக்கிறது? எனவே, தக்க பிள்ளைகளைப் பெற்ற தாய் தந்தையர் கவலை யின்றி வாழ்ந்து வீடு பேற்றையும் அடைவர் என்ற பழைய அக நானூற்றுப் பாடல் முற்றிலும் உண்மையாதலை அறிகிறோம்.

''இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுஇன்று எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோர்.'' (அகம். 66)

பிள்ளைகள் என்று பெயரளவில் இருந்துவிட்டால் மட்டும் இத்தகைய பெருமிதத்தைத் தாய் பெற முடியாதென்பதையும் கைகேயியின் சொற்கள் குறிக்கின்றன. ''அவரவர்கள் கடமைகளில் தவறாதவர்கள்,'' என்று குறிப்பதால், இக்கருத்து விளங்கும். பொதுவாக எல்லா மைந்தர்களிடத்தும் அத்தாய் கொண்டிருந்த அன்பையும் நம்பிக்கையையுமே முதற்பாடல் குறிக்கிறது. நால்வரிடத்தும் அன்பு செலுத்தும் நற்பண்பைப் பெற்றவளாயினும் கைகேயி இராமன்பால் தனியன்பு பூண்டு ஒழுகினாள் என்பதும் அறிதற்பாலது. கோசலை வயிற்றிற் பிறந்த இராமன் கைகேயி, யிடம் வளர்ந்ததும், இவள் வயிற்றிற் பிறந்த பரதன் கோசலை யிடம் வளர்ந்ததும் அனைவரும் அறிந்தனவே. இராமன் கைகேயி யிடம் வளர்ந்தது மட்டுமின்றி, அவளும் அவனைத் தான் பெற்ற மகனாகவே மதித்தாள்; பேசினாள்; அன்பும் செய்தாள். இக் கருத்தை வலியுறுத்தவே ஆசிரியன் இரண்டாம் பாடலில் ''இராமனைப் பயந்த எற்கு இடருண்டோ?'' என்று அவளைக் கேட்க வைக்கிறான். இத்துணைப் பெருமையும் சிறப்பும் படைத்த மகனைப் பெற்ற எந்தத் தாய்தான் வருந்த வேண்டும்? தம்மையும் உயர்த்திக்கொண்டு தம்மைப் பெற்றவர்களுக்கும், 'என்ன தவம் செய்தார்களோ இத்தகைய பிள்ளைகளைப் பெறு வதற்கு!' என்ற நற்பெயரையும் வாங்கித்தரும் இச்சீரிய மைந்தர், அவரவர் வினையால் தோன்றுபவர் அல்லரோ? இவர்களை நோக்கித்தானே பொதுமறை,

''மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்!' என்னும் சொல்.''

என்று கூறுகிறது? இதுவரை கண்டவற்றிலிருந்து கைகேயியின் உயர்ந்த பண்பாடு எத்தகையது என்பதை உணர்ந்தோம். இனி அவளுடைய மனம் மாறும் வழியைக் காண்போம்,

### கூனியின் சினம்

கோசலை பெற்ற இராமனிடம் எல்லையற்ற அன்பு பாராட்டித் தன் புதல்வனாகவே கருதிப் பேசிய கைகேயிக்குக் கூனி கூறும் விடை மிக அழகாய் அமைந்துள்ளது.

எந்த இராமனைப் 'புவிக்கெலாம் வேத மேயன இராமன்' என்று கைகேயி கூறினாளோ, அந்த இராமனைப் பற்றிக் கூனி யாது கூறுகிறாள் தெரியுமா?

'ஆண்கள் வெட்கித் தலை குனியவும், ஆண்மை என்ற பண் பாடு மாசுறவும் 'தாடகை' என்ற பெயரையுடைய பெண்ணர சியைக் கொன்றவனாகிய இராமன் என்று அவள் குறிக்கிறாள்

" ஆடவர் நகையுற ஆண்மை மாசுறத்
தாடகை எனும்பெயர்த் தைய லாள்படக்
கோடிய வரிசிலை இராமன்" (ம. சூழ்ச்சி. 50)

இதில் வியப்பு என்னையெனில், கூனிக்கு இராமன்மேல் இருந்த விரோதத்தால் அவள் தாடகையைக்கூட நல்ல பெண் என்று கூறத் தொடங்கிவிட்டாள். இது பற்றிக் கைகேயி கவலைப் படுவதாகவே தெரியவில்லை. இராமனுக்கு மறுநாள் முடி சூடப் போகிறார்கள் என்ற உண்மையைக் கைகேயிக்கு முதல் முதல் அறிவித்தவள் கூனியே. இதைக் கேட்டதும் கேகயன் மடந்தையின் மனம் மகிழ்ச்சியால் எக்களிக்கிறது. உடனே இந்த நல்ல செய்தியைக் கூறியதற்காக மந்தரைக்கு 'நாயகம் அனைய தோர்' நவரத்தின மாலை நல்கினாளாம்.

### புது முறை எதிர்ப்பு

அந்த மாலையை எடுத்துத் தரையில் வீசி எறிந்துவிட்டுக் கூனி, பாட்டன் வீட்டுக்குச் சென்றுள்ள பரதனை நினைந்து ஒப்பாரி வைக்கத் தொடங்கிவிட்டாள். இதனாலும் கைகேயியின் மனத்தை மாற்ற முடியாது என்பதைக் கண்ட கூனி, உடனே தனது சூழ்ச்சியை மாற்றிக் கொள்கிறாள். நேரே கைகேயியை நோக்கிப் பேசத் தொடங்கி, அப்பெண்ணரசியின் அகங்காரத்தைக் கிளறிவிடுகிறாள்.

" 'அரசரில் பிறந்துபின் அரச ரில்வளர்ந்து
அரசரில்புகுந்துபே ரரசி யானநீ
கரைசெயற்கு அருந்துயர்க் கடலில் வீழ்கின்றாய்
உரைசெயக் கேட்கிலை உணர்தி யோ?' என்றாள்."
(ம.சூழ்ச்சி.6)

இவ்வாறு கூனி கூறுவதன் நோக்கம் யாது? தான் பிறந்து வளர்ந்த இடம் அரச குடும்பம் என்பதையும் புகுந்த இடம் பேரரசன் வீடு என்பதையும் கைகேயி அறியாதவளா? அப்படி இருக்க, இவற்றைக் கூறுவதால் யாது பயன்? அரசர் வீட்டிலேயே எப்பொழுதும் ஏவல் செய்து பழகிய கூனிக்குச் சில உண்மைகள் தெரியும். அதாவது, ஒரு பெரிய அரசனுடைய வாழ்வில் அவன் கண் எதிரிலேயே அவன் அறியாதபடி பல சூழ்ச்சிகள் நடைபெறுவ துண்டு. இதனை அவன் கவனித்துப் பரிகரிக்கா விடின், பெருந் தீங்காய் முடிவதுண்டு. தான் காண்பன அனைத்தையுமே நம்பிக் கொண்டு ஓர் அரசன் அமைதியுடன் வாழ்வானேயாகில், அவன் நிலை வருந்தத்தக்கதாய் முடிந்து விடும். பரம்பரையாக அரச குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்கட்கு இந்த அரண்மனை சூழ்ச்சி பற்றி நன்கு தெரியும். எனவே, இத்தகைய சூழ்ச்சி ஒன்று இங்கு நடை பெறுகிறதென்பதைக் கைகேயியின் நினைவுக்குக் கொணர விரும்புகிறாள் கூனி. 'ஏனையோராய் இருந்தால், குறிப்புணரும் ஆற்றல் பெற்றிருக்கவியலாது. ஆனால், இங்ஙனம் அரச வாழ்விலேயே பிறந்து அதிலேயே புகுந்துள்ள உனக்குமா இது விளங்கவில்லை?' என்று அவள் அகங்காரத்தைக் குத்திக்காட்டு கிறாள். அம்மட்டோடில்லை, 'பேரரசி ஆன நீ' என்று அவள் கூறும் பொழுது கைகேயி தனது ஆற்றலால் ஏனைய மூத்த அரசி களிடம் தசரதன் அன்பு செல்லவொட்டாமற்றடுத்துத் தன் பால் அவனை இழுத்துக் கொண்டதையும் குறிப்பிடுகிறாள். அத் துணைப் பேராற்றல் பெற்ற நீ, இப்பொழுது உன் நிலைமைக்கு இடையூறு வரவும் சும்மா உறங்கலாமா? என்றுங் கூறுகிறாள்.

இந்தப் புது முறை எதிர்ப்பாலும் மந்தரை ஏதும் பயனைப் பெற்றதாகத் தெரியவில்லை. இதனைக் கேட்ட கைகேயியின் சீற்றம் மிகுதியானது தவிர, வேறு பயன் ஒன்றும் இல்லை. மேலும், தனக்கெதிராக ஒரு சூழ்ச்சி நடைபெறுகிறதென்று கூனி கூறியதை நம்ப மறுத்துக் கூனியே சூழ்ச்சி செய்வதாகவும் குறிப்பித்தாள்.

> ''எனக்கு நல்லையும் அல்லைநீ: என்மகன் பரதன்
> தனக்கு நல்லையும் அல்லை;அத் தருமமே நோக்கின்
> உனக்கு நல்லையும் அல்லை;வந்து ஊழ்வினை தூண்ட
> மனக்கு நல்லன சொல்லினை மதியிலா மனத்தோய்!''
>
> (ம.சூழ்ச்சி. 65)

என்ற கேகயன் மடந்தை கூற்று, இன்னும் அவள் மனம் மாற வில்லை என்பதனையே அறிவிக்கிறது. ''இன்னும் என் எதிர்

நிற்றியேல், உன் அற்பத்தன்மையுடையநாவைத் துண்டித்து விடுவேன்!', (67) என்றும் அவள் அச்சுறுத்தினாள்.

இங்ஙனம் கூனியை அச்சுறுத்திய கைகேயி, வாய் தவறி மற்றொரு குறிப்பையும் கூறிவிட்டாள். ஒரு மனிதன் அடைய வேண்டுவது புகழ். முறை தவறி நடப்பவர்க்குப் புகழ் கிட்டாது. மூத்தவன் இருக்க இளையவன் பட்டம் பெறுதல் முறை கேடானது. எனவே அவள்,

''பிறந்தி றந்துபோய்ப் பெறுவதும் இழப்பதும் புகழேல்,
நிறம்தி றம்பினும் நியாயமே திறம்பினும் நெறியின்
திறம்தி றம்பினும் செய்தவம் திறம்பினும் செயிர்த்திர்
மறம்தி றம்பினும் வரன்முறை திறம்புதல் வழக்கோ?'' (66)
[நிறம்-குணம்; மறம்-வீரம்]

எனக் கூறினள்.

அடிப்படை ஆடிவிட்டது

அரசரிற்பிறந்து வளர்ந்து அரசியான கையேயி இது வரை மூத்தவனுக்கே அரச உரிமை உண்டு என்பதை நம்பி வந்தாள். ஆனால், இவ்வெண்ணத்தை அடிப்படையில் தசர்த்துவிடுகிறாள் கூனி. ''அரச உரிமை மூத்தவனுக்கே உரியதென்றால், தசரதனைக்காட்டிலும் இராமன் இளையவன் தானே? அப்படி இருக்கத் தசரதன் உயிருடன் இருக்கும் பொழுது இராமனுக்கு ஏன் முடி சூட்ட வேண்டும்? அங்ஙனம் முடி சூட்ட அரசன் முடிவு செய்ததே 'மூத்தவற்கே அரசு' என்ற சட்டத்தைப் புறக்கணித்துத் தானே? ஆகலின், ஏன் பரதனுக்கு அப்பட்டம் வரக்கூடாது?'' என்பதே அவள் வாதம். தசரதனை நோக்க இராமனும் பரதனும் இளையவர்கள்தாம். இரண்டு இளையவர்களுள் இராமனுக்கு உரிய ஒன்று ஏன் பரதனுக்கு உரிமை யாகக்கூடாது?

''மூத்த வற்குஉரித்து அரசெனில் முறைமையின் உலகம்
காத்த மன்னில் இளையன்அன் றோகடல் வண்ணன்?''
(ம.சூழ்ச்சி.69)

இவ்வாதம் ஓரளவு கைகேயியை மருட்டி விட்டது உண்மைதான்.

இதனால் கைகேயியின் நம்பிக்கை தளர்ந்துவிட்ட தென்பதைக் கண்ட கூனி, தன் கட்சி வெற்றி பெறும் என்ற உறுதியுடன் மேலும் கூறத் தொடங்கி விட்டாள். ஆனால், இளையவனுக்கும் முடி சூட உரிமையுண்டு என்ற அதையே திருப்பிக் கூறுவதால் பயனொன்றும் இல்லை. எனவே, இரண்டு இளையவர்களுள் இராமன் பட்டம் ஏற்பதால் ஏற்படும் கேடுகளைப்பற்றியே

பேசுகிறாள். ஒரேயடியாக இராமனைக் குறைகூற இன்னம் கூனிக்கு மனத்திடம் வரவில்லை. தன் தலைவ்யின் மனம் எவ்வளவு தூரம் மாறிற்று என்பதை அறிய முடியவில்லையாகலின், மெள்ளப் பொது நீதி ஒன்றைக் கூறுகிறாள்.

''அறம்நி ரம்பிய அருளுடை அருந்தவர்க் கேனும்
பெறல்அ ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்;
அறம்நி னைந்துமை வலிகிலர் ஆயினும், மனத்தால்
இறல்உறும்படி இயற்றுவர் இடையறா இன்னல்.''
(ம. சூழ்ச்சி. 70)

''எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால்
வேறாகும் மாந்தர் பலர்.'' (514)

என்ற அரிய திருக்குறளின் கருத்தே முதலிரண்டு அடிகளிற் கூறப்படுகின்றது. 'உமை வலிகிலர்.........இயற்றுவர்... ....' என்று கூனி பன்மையில் குறிப்பிடுவது நோக்கற்குரியது. இப்பாடலிற் கூறப் பெற்றவர் யார்? யார் பெறுதற்கரிய செல்வத்தைப் பெற்ற பின் மனம் மாறுவர்? யார் அறத்தைக் கருதிக் கைகேயிக்குத் துன்பஞ்செய்யாவிட்டாலும், சிறு சிறு தொல்லைகளாகத் தந்து உயிரை வதைப்பவர்? இந்த வினாக்களுக்கு விடை பாடலில் இல்லை. இது வரை இராமனைப் பற்றிக் கூறிக்கொண்டு வந்த கூனி, இப்பொழுது இன்னுஞ் சிலரையும் குறிக்கிறாள் என்பதை மட்டும் அறிய முடிகிறது. இது வரை ஒருமையில் பேசினவள் இப் பொழுது 'இயற்றுவர்' என்று பன்மையில் குறிப்பது ஒருவருக்கு மேற்பட்டவர்களை என்பது நன்கு விளங்குகிறது.

### புதிய கோணம்

கூனி பன்மையில் குறிப்பிட்டது யார் யாரை என்று கைகேயி எண்ணத் தொடங்கிவிட்டாள். இப்புதிய புதிருக்கு விடை கூறுபவள் போலக் கூனி கோசலையைப் பற்றிக் கூற முற்படுகிறாள். மீட்டும் மீட்டும் இராமன் பெயரைக் கூறிக்கொண்டு அவனால் இடர் விளையும் என்று கூனி கூற விரும்பவில்லை. அதற்கொரு தக்க காரணமும் உண்டு. எவ்வளவு தூரம் கைகேயி மனம் மாறினாள் என்பதைச் செவ்வையாக அறிந்துகொள்ளு முன்னர்க் கூனி இதனைச் செய்ய விரும்பவில்லை. பிறந்த நாள் தொட்டு இராமன் சிற்றன்னையால் வளர்க்கப்பெற்றவன். அவள் அவன் பாற்கொண்ட தாயன்பு சாதாரணமானதன்று என்பதற்கு ''இராமனைப் பயந்த எனக்கு இடருண்டோ?'' என்று அவள்

கூறியதே சான்று. தசரதனும் இதனை நன்கு அறிந்தவனாதலின் ''வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை'' (கை. சூ. 7) என்று கூறுகிறான். எனவே, அந்தத் தாயன்பை அதிகம் கிளறிவிட்டு, அதனால் தான் வெற்றி பெறமுடியும் என்று நினைக்கவில்லை கூனி; அது மிகுதியும் நினைவுறுத்தப்பட்டால் அதனால் என்ன தீங்கு விளையுமோ என்றும் அஞ்சினாள். ஆகலின், இராமனை விட்டுவிட்டுச் சுற்றி உள்ளவர்களால் விளையும் தீங்கு பற்றியே பேசுகிறாள் உள்ளமும் கோடிய அக்கொடியாள்.

**கூனியின் பிரமாஸ்திரம்**

இதனை அறியாத கேகயன் மடந்தை, மெள்ள மெள்ளக் கூனி வீசிய வலையில் வலுவாக அகப்பட்டுக்கொள்கிறாள். இறுதியாக அவள் தாய் வீட்டுக்கும் தீங்கு நேரிடும் என்று கூறினாள் கூனி. இதுவே அவள் இறுதியாக வைத்திருந்த 'பிரமாஸ்திரம்'. எந்தப் பெண்ணும் தப்ப முடியாத இந்த அம்புக்குப் பால் போன்ற பளிங்கு மனம் படைத்த கைகேயி இரையானதில் வியப்பில்லை. தன் தந்தையாகிய கேகயனுக்குத் தீங்கு நேரும் என்றதைக்கேட்ட வுடன் கைகேயி மனம் முற்றிலும் மாறிவிட்டது. இந்த நிலையில் செய்யப்பட வேண்டுவது ஒரு காரியந்தான். தசரதனாகிய கணவன்மேல் அவள் கொண்டிருக்கும் எல்லையற்ற அன்பையும் நம்பிக்கையையும் தகர்க்க வேண்டுவது ஒன்றுதான் எஞ்சியுளது. அதுவும் நேரடியாகச் செய்யப்படும் செயலன்று. கணவன் மாட்டுக் கழிபெருங்காதல் கொண்ட அக்கற்புக்கரசியின் எதிரே அவள் கணவனைக் குறை கூறுவது இடையூறாகவும் முடியலா மன்றோ? ஆகலின், கூனி மறைமுகமாக அவனைத் தாக்குகிறாள். தசரதன் அன்பு பொய்யானதென்று காட்டிவிட்டால், இது எளிதில் முடிந்துவிடும். ஆனால், அவ்வளவு எளிதில் அவன் அன்பைப் பற்றிக் குறை கூறவும் இயலாது. ஏனைய மனைவியர் அனை வரையும் மறந்துவிட்டு இரவு பகல் எந்நேரத்திலும் கைகேயியின் அரண்மனையிலேயே இருக்கும் அவன் அன்பை எவ்வாறு மறுப்பது? புதியதொரு வழியை மேற்கொள்கிறாள் கூனி.

**கணவன் அன்பா?**

தசரதனுக்கு மைந்தர் அனைவரிடமும் அன்பு உண்டென்றும் இராமன்மேல் அதிக அன்பு செலுத்துகிறான் என்றும் நம்பியிருக் கிறாள் கைகேயி. ஆனால், தசரதன் பரதனை வெறுக்கிறான் என்று எடுத்துக்காட்டினால், அவள் தாயுள்ளம் திடுக்கிடும். எவ்வளவுதான் அவளும் இராமனிடம் அதிக அன்பு பாராட்டிச்

சிராட்டினாலும், பரதனைப் பத்து மாதம் சுமந்து பெற்றவள் என்பதை மறந்துவிடக்கூடாது. மேலும், கோசலையிடம் பரதன் வளர்ந்து வருவதால் தசரதனும் கோசலையிடம் காட்டும் அன்பின் அளவுபரதனிடமும் காட்டுவான் என்று கருதினாள். இந்த நிலை மாறித் தசரதன் பரதனை ஒதுக்க முற்படுகிறான் என்று தெரிந்தால், கைகேயி என்ன நினைப்பாளோ? இம்முறையைக் கையாண்டு பார்த்துவிட உறுதி கொண்ட கூனி, குறிப்பாக இதைக் கூறுகிறாள். இந்நிலையில் கம்பனுக்கு ஓர் இடையூறு தோன்றுகிறது. வால்மீகி காட்டியபடி தசரதன் இழைத்த தீமையை முற்றுங் காட்ட விரும்பவில்லை கம்பநாடன். எனவே, அவன் குறிப்பிட விரும்பாத நிகழ்ச்சியைச் சற்று அறிய வேண்டும். நீண்ட நாள் பிள்ளைப் பேறில்லாத தசரதன் கேகயனிடம் கைகேயியைத் தனக்கு மணமுடிக்குமாறு வேண்டினான். ஆனால், முன்னரே பல மனைவியர் உளராகலின், தன் மகள் வயிற்றில் பிறக்கும் குழந்தைக்குப் பட்டம் கிடைக்காதென்று எண்ணிய கேகயன் மகளைத் தர மறுத்துவிட்டான். எவ்வாறாயினும் கைகேயியை மணக்க விரும்பிய தசரதன்பின் விளைவை அறியாமல், கைகேயியின் வயிற்றில் பிறக்கும் மகனுக்குப் பட்டம் தருவதா வாக்களித்துவிட்டு அவளை மணந்துகொண்டான். இராமன் முதற் பிள்ளையாகப் பிறந்ததிலிருந்தே தசரதனுக்கு இவ்வாக்குறுதி மன வருத்தத்தைத் தந்து வந்தது. என்றாலும், பட்டாபிடேகச் சமயத்தில்பரதன் அங்கு இல்லாமற் செய்துவிட்டால் பாதிக்கவலை குறையும்என்று நினைந்து, முடி சூட்டு விழாவுக்குச் சில காலம் முன்னர் ஒரு காரியம் செய்தான். பிறந்ததிலிருந்து பாட்டன் வீடு சென்றறியாத பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பிவிட்டான் தசரதன் தாய்ப் பாட்டனாரைப் பார்க்கப் பரதனை அனுப்பியதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் அவனை அனுப்பியவுடன் முடி சூட்டு விழாப் பற்றிய மந்திர ஆலோசனை செய்து மறு நாளே நாளும் குறித்தது கூனிக்குப் பழைய ஐயத்தைக் கிளப்பிவிட்டது. மேலும், அவள் கைகேயியின் நாட்டிலிருந்து அவளுடன் சீதனமாக வந்தவள் ஆதலின் இந்தப் பழைய வரலாற்றை அறிந்திருந்தாள். அவள் அறிந்திருந்த இதனைத் தக்க சமயத்தில் பயன்படுத்த விரும்பினாள். என்றாலும், இதனை வெட்ட வெளிச்சமாகக் கூறினால் கைகேயி நம்புவாளோ என்ற ஐயம் வேறு இருந்தது அவளுக்கு. ஏன் எனில், கைகேயி அறியாத ஒரு நிகழ்ச்சியன்று இது. அவள் அறிந்திருந்தும், ஏன் இது பற்றி ஒன்றும் செய்யவில்லை என்ற ஐயம் வேறு கூனிக்கு உண்டு. ஆதலின், நேரடியாக

இதனைக் கூறாமல் மறைமுகமாகவும் குறிப்பாகவும் கூறுகிறாள். பெண்களுக்கே உரிய குறிப்பு மொழியால் அவள் இதனைக் கூறுவது அறிந்து ஆராய்தற்குரியது. "அரசனுடைய ஆணையாலே, தேக்க மரங்கள் நிறைந்ததும், கல் நிறைந்ததும், நீண்ட தூரம் உடையதுமான கேகய நாட்டுக்குப் பரதனைக் கொண்டு சென்று விட்டதன் கருத்து எனக்கு இப்பொழுதுதான் வெட்டவெளிச்சமாய்த் தெரிகிறது!" என்ற பொருள்பட அவள் கூறுகிறாள்.

"பாக்கியம் புரிந்திலன் பரதன் தன்னைப்பண்டு
ஆக்கிய பொலங்கழல் அரசன் ஆணையால்
தேக்குஉயர் கல்அதர் கடிது சேண்இடைப்
போக்கிய பொருள்எனக்கு இன்று போயிற்றால்,"

(ம. சூழ்ச்சி, 59)

அதாவது, "பாட்டனைப் பார்த்துவிட்டு வரட்டும் என்ற உயர்ந்த எண்ணத்தால்தான் தசரதர் அனுப்பினார் என்று அன்று கருதினேன். ஆனால், உண்மை வேறு விதமாகவன்றோ இருக்கின்றது! அவனை அப்புறப்படுத்திவிட்டுச் சூழ்ச்சி செய்வதற்கன்றோ தசரதர் அவனை அனுப்பியுள்ளார்! இது அன்று எனக்குத் தெரியவில்லை. ஆனால், இன்று தெரியத் தொடங்கி விட்டது." என்பதே இதன் பொருள்.

**இமயம் சாய்ந்தது**

வரிசையாகவும் அடுக்கியும் கூறப்பெற்ற இவ்வாதங்களின் முன்னர்க் கைகேயி நிலை குலைந்துவிட்டாள். அவளுடைய தாய்மை, பிறந்த வீட்டுப்பற்று, எதிர் காலத்தைப்பற்றிய ஏக்கம், சகக்களத்தியின் செல்வாக்கில் ஏற்பட்ட காழ்ப்பு, கணவன் அன்பில் கொண்ட ஐயம் என்ற இத்தனையுஞ் சேர்ந்து அவள் தூய சிந்தையையும் திரித்து விட்டன.

**சாயக் காரணம்**

இத்துணைக் காரணங்களும் கூடிய வழியே மனந் திரிந்தாள் எனினும், ஆழ்ந்து நோக்கினால், ஓர் உண்மை விளங்காமற் போகாது. இத்துணைக் காரணங்களிலும் ஒன்றையாவது அவள் தானே நினைந்து பார்க்கவில்லை. எல்லாவற்றையும் ஒன்றுகூட விடாமல் எடுத்துக்காட்டியவள் கூனியல்லவா? எடுத்துக் காட்டிய தோடல்லாமல் அவற்றின் உட்பொருளையும் கருத்தையும் விளக்கியவள் அவள் அல்லளோ? அவள் காட்டிய இக்காரணங்கள் உண்மையானவைகளா என்று நினைந்து பார்க்கவும், ஆராயவும் அந்த அரசிக்குப் பொழுது இல்லையே! அப்படியானால், அவள்

கூறிய அனைத்தையும் தசரதன் தேவி அப்படியே நம்பிவிட்டாள் என்றுதானே பொருளாகிறது? நம்பினதோடு மட்டுமன்றி, அந் நம்பிக்கையின் மேல் செயலாற்றவும் தொடங்கி விட்டாளே! ஆய்ந்து ஒய்ந்து பாராத இச்செயல்களால் யாது பயன் விளையும் என்று நினையாத இவள், அரசியாய் இருக்கத் தகுதியுடையவளா? கேவலம் ஒரு வேலைக்காரியாகிய கூனியின் சொற்களில் வைத்த நம்பிக்கையால் இவ்வளவு கேட்டையும் விளைக்கப்போகும் இவளை எவ்வாறு அரசியென்று கூறுவது? பேரறிவுடையவனாகிய தசரதன் கேவலம் வேலைக்காரிக்குச் செவி சாய்க்கும் ஒருத்தியை நம்பியா அரசியாக்கினான்? "அரசரில் பிறந்து, அரசரில் வளர்ந்து, அரசரில் புகுந்து பேரரசி ஆன'' வள் செய்கை அல்லவே இது!

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.'' (குறள், 433)

என்றும்,

"எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.'' (குறள்,365)

என்றும் சாதாரண மக்களுக்குக்கூட அற நூல் சட்டம் விதிக்கிறதே! அனைவருக்கும் உரிய இச்சட்டத்தை, நாட்டை ஆளும் மன்னனும், அம்மன்னன் ஏற்றுக்கொண்ட மனைவியும் மறந்து விடுவார்களாயின், இவ்வுலகம் என்ன ஆகும்? இங்ஙனம் மறந்த அவர்கள் அரசன் அரசி என்று எவ்வாறு மதிக்கப்படுவர்?

கைகேயி செய்த செயலை நோக்கினால், அவள் இச் சட்டத்தை மறந்துவிட்டதாகவே தோன்றுகிறது. அவ்வாறாயின், இக்குற்றம் அவளை மட்டும் சாராமல், அவளைப்பெற்று வளர்த்த கேகயனையும், அவளை மணந்துகொண்ட தசரதனையும் அல்லவோ சாரும்!

ஆனால், இவ்வாறு மூன்று பேரையும் தவறு செய்தவர்களாகக் காட்டக் கம்பநாடன் விரும்பவில்லை. எனவே, கைகேயியின் மனம் மாறுபட்டமைக்கு வேறு காரணங்களும் உண்டு என்று கூறுகிறான். "கேவலம் கூனியின் மொழிகளால் கைகேயி மனம் மாறினாள் என்று கருதிவிட வேண்டா. அவள் மாறுவதற்குப் பின் வரும் காரணங்களும் துணை புரிந்தன: தேவர்கள் சூழ்ச்சி, அவர்கள் பெற்றுள்ள வரங்கள். அந்தணர்கள்

இயற்றிய அருந்தவம், அரக்கர் பாவம், அல்லாதவர்கள் இயற்றிய அறம் இவை யாவும் கூடியே இவ்வாறு செய்தன,'' எனக் கூறுகிறான்.

''தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி
தூய சிந்தையும் திரிந்தது சூழ்ச்சியின் இமையோர்!
மாயை யும்அவர் பெற்றுள வரம் உண்மை யாலும்
ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத் தாலும்''

''அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்அறம் துறந்தனள் தூமொழி மடமான்
இரக்கம் இன்மையன் றோஇன்று இவ்வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின் றதுவே!''
(ம. சூழ்ச்சி. 77, 78)

பரிவுடன் காண்க

இத்துணைப் பேர்களும் கூடி இயற்றிய தவமும் அறமும் வாளா இருந்துவிடுமா? அவை அனைத்தும் பயன் தர வேண்டுமாயின், இராமன் காட்டுக்குப் போக வேண்டுமன்றோ? அவன் காடு செல்ல வேண்டுமாயின், யாராவது ஒருவர் அதற்குரிய பழியையும் சுமந்துதானே ஆக வேண்டும்? எனவே, கைகேயியின் மனம் திரியக் காரணமும் கூறி, அதன் அடிப்படையையும் கவிஞன் கூறிவிட்டான். இங்குக் கூறப்பெற்றவை அனைத்தும் இரு பிரிவினுள் அடங்கும்; ஒன்று தவமும் அறமும்; ஏனையது அரக்கருடைய பாவம். அறமும் பாவமும் சேர்வதில்லை. ஆனால், இப்பொழுது இவை இரண்டும் சேர்ந்தே ஒரு தொழிலைச் செய்துவிட்டன என்கிறான் கவிஞன். இந்நிலையில் புறப்பாடல் ஒன்று நினைவிற்கு வருகிறது. குமண வள்ளலைப் பாடிய பெருஞ்சித்திரனார் என்ற புலவர், தாம் குமணனைத்தேடி வந்தமைக்குக் காரணங் கூறுகிறார்: ''என்னுடைய வறுமை பின்னே இருந்து தள்ளியது; ஆனால், அதே சமயத்தில் உன் புகழ் முன்னே இருந்து இழுத்தது. ஆதலின், இவண் வந்தேன்,'' என்ற கருத்துப்பட, ''இன்மை துரப்ப இசைதர வந்து நின்''...(புறம். 161) என்று பாடிச் செல்கிறார். பின்னே இருந்து ஒருவர் தள்ளினால் முன்னே எங்காவது ஓரிடத்தில் போய் விழ நேரிடும். ஆனால், அதே சமயத்தில் முன்னிருக்கும் ஒருவர் இழுத்தால் உறுதியாக ஓரிடம் செல்ல முடியுமன்றோ? அதே போலத் தேவர் சூழ்ச்சியாலும், அந்தணர் தவத்தாலும், அல்லவர் இயற்றிய அறத்தாலும் தள்ளப்பட்ட இராமன், எங்கோ சென்று

பயனற்றுப்போய்விடாமல் இருப்பான் வேண்டி, அரக்கர்கள் பாவம் முன்னே இருந்து இழுத்தது என்றும் கவிஞன் கூறுவது எத்துணைச் சுவை பயப்பதாய் உளது! இவ்வாறு முன்னும் பின்னும் உந்தப் பெற்றதால் இராமன் காடு செல்வதைக் கைகேயியின் சொற்களால் அவன் வனம் புகுந்தான் என்று கூறுவது எவ்வளவு அறியாமை என்று கூறுவான் போலக் கூறிக் கைகேயியின் குறையை ஓரளவு குறைக்கிறான் கவிச் சக்கரவர்த்தி யாகிய கம்பநாடன். இனி இக்கவிஞனே அத்தேவியை இழித்துப் பேசுவதையும் அதற்குரிய காரணங்களையும் காண்போம்.

அயோத்தி அடைந்த தவ்வை

'தேவி' என்றும், 'தூய சிந்தை உடையாள்' என்றும் எந்தக் கைகேயியைக் கவிஞன் பாராட்டினானோ, அந்தக் கைகேயியையே இப்பொழுது ஏசத் தொடங்குகிறான்.

மந்தரை சூழ்ச்சியால் மனந்திரிந்த அம்மங்கைநல்லாள் அரசன் வரவை எதிர்பார்த்து அந்தப்புரத்தில் இருக்கிறாள். எவ்வாறு எதிர்பார்க்கிறாள் என்று நினைக்கிறீர்கள்? காதல் மனைவி கணவன் வரவைக் கருதிக் காத்திருப்பது போல இருப்பாள் என்றுதானே நினைக்கிறீர்கள்? அதுதான் இல்லை. சூழ்ச்சி என்பதை அறியாத வெள்ளை உள்ளம் படைத்த அப்பெண்ணரசி, இப்பொழுது பெரிய சூழ்ச்சிக்கு அடிகோலிவிட்டாள்.

கூனி சென்று விட்ட பின்னர்க் கைகேயி அருமையான மலர்ப் படுக்கையினின்றும் இறங்கி விட்டாள். மேகம் போலத் திரண்ட கரியகூந்தலிற் சுற்றிய பூக்களைப் பிய்த்து எறிந்தாள்; மேகலையை அறுத்து வீசினாள்; கைகளில் அழகு பெற்று விளங்கிய வளையல் களை உடைத்து எறிந்தாள். இவை அனைத்தையும்விடக் கொடுமையான ஒரு செயலையும் செய்யத் துணிந்துவிட்டாள். கணவனுடன்வாழும் அவள் நெற்றியில் மங்கலக் குறியாக வைக்கப் பட்டிருந்த அழகிய பொட்டையும் துடைத்துவிட்டாள். எந்த நேரத்தில் தன் திலகத்தை அழித்தாளோ, தெரியவில்லை! அடுத்து அதனை வைக்கக்கூடிய வாய்ப்பையே இழந்து விட்டாள்! சீரிய கலன்கள் அனைத்தையும் சிந்திய அவள் புழுதியே பாயலாகக் கூந்தலைப் பரப்பிக் கொண்டு புரளத் தொடங்கிவிட்டாள். அவள் கிடக்கும் இந்நிலைமையைக் கவிஞன் இதோ நமக்குப் படம் எழுதிக் காட்டுகிறான்.

'மான் ஒன்று கீழே வீழ்ந்து கிடந்தது போலவும், கலாபம் விரித்து ஆடின மயில் ஒன்று களைத்துத் தோகை விரித்தபடியே படுத்துவிட்டது போலவும் கைகேயி கிடந்தாள்' என்று கூறத் தொடங்கிவிட்டான். ஆனால், அவள், புறத்தோற்றத்தில் ஈடு பட்டு இங்ஙனம் உவமைகளை அடுக்கிவிட்ட கவிஞனுக்கு, 'ஏன் இவ்வாறு இவள் வீழ்ந்து புரள்கிறாள்?' என்ற கேள்வி உடனே எழுகிறது. 'இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டும் என்ற கொடிய நினைவால் அல்லவா இவ்வாறு படுத்திருக்கிறாள்?' என்று அந்த வினாவிற்கு விடையும் உடனே கிடைத்துவிடுகின்றது. இந்த விடை கிடைத்தவுடன் கவிஞன் மதிப்பில் கைகேயி வீழ்ந்து விடுகிறாள். அவள் நல்லவள் அல்லள் என்ற எண்ணம் தோன்றி விடுகிறது. மான் என்றும் மயில் என்றும் அவளைப் புகழ்ந்த கவிஞன், அதே பாடலில் 'மூதேவி' என்றும் ஏசத் தொடங்கி விடுகின்றான். இது சற்று வியப்பாகவே இருக்கிறது. ஒரே மூச்சில் மான், மயில் என்று தொடங்கி மூதேவி என்று முடிப்பது முறையா? இவ்வாறு கவிஞன் கூற வேறு காரணம் கூறவியலாது. அவள் புறத்தோற்றத்தில் ஈடுபட்டு நின்ற கவிஞன் அடுத்து அவள் மனத்தில் கை வைத்தவுடன் தன் ஈடுபாட்டை இழந்து விடுகிறான்.

அம்மட்டோடும் நிற்கவில்லை. அவளை 'மூத்தவள்' என்று பழிப்பதற்குக் காரணமும் காட்டுகிறான் அதே பாடலில். இலக்குமியாகிய சிதை வனம் புகுந்துவிடப் போகிறாள் ஆகலின், அவள் இருந்த அயோத்தி வெறுமையாய் இருக்கக்கூடாது என்று நினைத்து இங்கு வந்துசேர்ந்த மூதேவி போலக் கிடந்தாள் என்றும் கூறுகிறான்.

> ''நவ்வி வீழ்ந்தென நாடக மயில்துயின்று என்னக்
> கவ்வை கூர்தரச் சனகியாம் கடிகமழ் கமலத்து
> அவ்வை நீங்குமென்று அயோத்திவந்து அடைந்தஅம்
> மடந்தை
> தவ்வை யாம்எனக் கிடந்தனள் கேகயன் தனையை.''
> (ம. சூழ்ச்சி. 88)

கைகேயி இவ்வாறு படுத்திருக்கும் நிலையில் உள் நுழைந்த தசரதன், யானை ஒன்று மானைத் துதிக்கையால் அள்ளி எடுப்பது போல எடுக்கவும், அவள் அவன் கையினின்றும் வழுவி வீழ்ந்தாள். அவன் மிகுதியும் வேண்டிக்கொண்ட பின்னர் அவன் தருவதாக முன்னர்க் கூறிய ஒன்றை இப்பொழுது தர வேண்டுமென்று

கேட்டாள். சாதாரணமாகக் கேட்கக்கூடிய ஒன்றைக் கேட்பதற்கு இத்துணை முகவுரை ஏன் என்பதை மன்னன் ஆராய்ந்திருந்தால், ஒரு வேளை சற்றுத் தாமதித்திருப்பான். ஆனால், அவன் மனம் இன்று மகிழ்ச்சிக் கடலில் திளைத்து நிற்கிறது. நீண்ட நாளாக அவன் கொண்டிருந்த கருத்தை இன்று முடித்துவிட்டான். எவ்வித இடையூறும் இன்றி இவ்வளவு எளிதாக முடி சூட்டுவிழா முடிவாகிவிடும் என்று அவன் கருதவில்லை.

**தந்திடுக மன்னரே!**

எனவே, பொழுது விடிந்தவுடன் தன் எண்ணம் நிறைவேறி விடும் என்று நம்பியிருக்கும் அவன் மனத்தில் மகிழ்ச்சியைத் தவிரக் கவலைக்கோ ஐயத்திற்கோ இடம் ஏது? தன்னிடம் என்றுமே அன்பாக நடந்துகொள்ளும் காதலி, இன்று தான் மிக்க மகிழ்ச்சியோடு இருக்கும் வேளையில் கவலையுடன் இருப்பது அவன் மனத்தைப் பிளந்துவிட்டது. என்ன காரணமோ என்று வருந்திய மன்னனுக்கு அவள் வாய் திறந்து முன்னர்த் தருவதாகக் கூறிய இரண்டை இப்பொழுது தருக என்று கேட்ட வுடன் பெரிய பாரம் நீங்கினது போல ஆகிவிட்டது. பெரியதொரு வெடிசிரிப்புடன், "நீ எது வேண்டினும் தருகிறேன்! உன் மைந்தன் இராமன் மேல் ஆணை" என்றான்.

"கள்அவிழ் கோதை கருத்துஉண ராத மன்னன்
வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்;

'உள்ளம் உவந்துஉள செய்வேன் ஒன்றும் லோபேன்;
வள்ளல் இராமன்உன் மைந்தன் ஆணை, என்றான்,"
(கை. சூழ்வினை. 7)

இவ்வாறு மன்னன் கூறியவுடன் கைகேயி மீண்டும் பெரிய தொரு முகவுரையுடனேயே பேசத் தொடங்குகிறாள். "என் கவலையை நீர் போக்குவதானால், முன்னர்த் தேவர்கள் சான்றாக இரண்டு வரங்கள் தருவதாகக் கூறினதுண்டல்லவா? அவற்றை இப்பொழுது தந்திடுக மன்னரே!"

"சான்றுஇமை யோர்குலம் ஆக மன்ன நீஅன்று
ஏன்ற வரங்கள் இரண்டும் ஈதி' என்றாள்."
(கை. சூழ்வினை.8)

கணவனிடம் மனைவி கேட்கும் நிலையில் அவள் பேச விரும்ப வில்லை என்பதை இறுதியில் உள்ள 'மன்ன' என்ற சொல்

அறிவிக்கிறது. இதற்கு ஒரு காரணமும் உண்டு. மனைவி கணவனிடம் கேட்கும் அனைத்தையும் கணவன் தந்து தீரவேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை.

முன்னரே தருவதாக உறுதி கூறப்பெற்ற பொருளாயினும், கணவன் மனைவி என்ற உறவு முறை பற்றிக் கணவன் இப்பொழுது அதனைத் தர மறுத்துவிடினுந் தவறு இல்லை. ஆனால், மன்னன் நிலை வேறு. சொன்ன சொல்லை எவ்வாறாயினும் காக்க வேண்டிய கடப்பாடு அரசனுக்கே உண்டு. எனவே, கைகேயி தசரதனுக்கு இக்கடமையை நினைவூட்ட வேண்டிப்போலும் மன்ன' என்று விளித்தாள்! இதையும் அம்மன்னன் அறிந்து கொண்டதாகத் தெரியவில்லை. "வரங்கொள இத்துணைமம்மர் அல்லல் எய்தி இரங்கிட வேண்டுவதில்லை," (9) என்று அவன் கூறும் அடுத்த வார்த்தைகள் அவன் பைத்தியக்காரத்தனத்தை நன்கு விளக்குகின்றன.

**சீதை கேள்வன்**

இவ்வளவு நம்பிக்கையையும் அன்பையும் தன்மாட்டுக் கொண்டுள்ள அரசனுக்குப் பெரியதொரு வருத்தத்தைத் தரப் போகிறோமே என்ற கவலை கைகேயிக்கு இருந்ததாகவே தெரியவில்லை. கவலைப்படுபவளாக இருப்பின், அவள் மெள்ளத் தயங்கித் தயங்கியே தன் கருத்தை வெளியிட்டிருப்பாள். ஆனால், அவ்வாறல்லாமல் மிக விரைவில் தன் கருத்தை ஒரே வாக்கியத்தில் முடித்து விடுகிறாள்.

"'ஏய வரங்கள் இரண்டில் ஒன்றி னால்என்
சேய்உலகு ஆள்வது; சீதை கேள்வன் ஒன்றின்
போய்வனம் ஆள்வது' எனப்பு கன்று நின்றாள்
தீயவை யாவையி னும்சி றந்த தீயாள்."

(கை.சூழ்வினை. 10)

என்ற இப்பாடலில் முதல் மூன்று அடிகளே அவளுடைய சொற்கள். 'ஒரு வரத்தால் என் பிள்ளை உலகாளவும், மற்றொன்றால் சீதை கணவன் வனம் ஆளவும் வேண்டும்', என்றாள். இராமனைப் பொறுத்தவரை அவள் மனம் எவ்வளவு மாறிவிட்டது. என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

"விராவரும்புவிக்கெலாம் வேதமேயன இராமன்" என்று கூறிய அதே கைகேயியா இவள்? ஆம்! அவ்விதஞ் சொல்லிய பத்து நாழிகைக்குள் அவன் பெயலரக்கூடக் கூற விருப்பம் இல்லாமல்

'சீதை கேள்வன்' என்று கூறும் மனநிலை ஏன் வந்தது? இவ்வாறு இவள் வெறுப்படைய இராமன் என்ன தீங்கிழைத்தான் இவளுக்கு?

அவன்மாட்டுப் பரிவு காட்டும் முதல் வாக்கியம் கூறிய பிறகு இவள் இன்னும் இராமனைச் சந்திக்கக்கூட இல்லையே! ஏன் இவ்வளவு காழ்ப்பு அவன்மேல்? கூனிக்காவது இராமன்மேல் ஒரு பழைய பகைமை உண்டு. அவன் இளையனாய் இருக்கையில், விளையாட்டுத் தன்மையால் அவள் கூன் முதுகின்மேல் வில் உண்டையால் அடித்தானாம். குணத்தால் யானையை ஒத்த கூனி இச்செயலைப் பிள்ளை விளையாட்டு என்று கருதாமல், அவன் மேல் தீராப் பகை கொண்டு விட்டாள். எனவே, வாய்ப்பு நேர்ந்த பொழுது தன் பகை முடித்துக்கொள்ள வேண்டிக் கைகேயியை ஏவி விட்டுவிட்டாள். ஆனால், இராமன்மேல் பகைகொள்ளக் கைகேயிக்கு என்ன காரணம் வந்தது? கேவலம் வேலைக்காரி கூறியதை நம்பிக்கொண்டு அவன்மேல் வைரம் கொள்வதா? அப்படித்தான் அவ்வேலைக்காரி இராமன் கெட்டவன் என்பதற் குரிய காரணம் ஏதாவது காட்டினாளா? அவனுக்குப் பட்டம் கிடைத்தால் அதனால் ஏற்படும் விளைவுபற்றிக் கூறிப் பரதனுக்கு அப்பட்டத்தைப் பெறுமாறு அறிவுறுத்தினாள். இதைக் கூறிவிட்டு அரசனிடம் இதற்கு உறுதி பெறும் முறையை எடுத்துக்காட்டு கையில் போகிற போக்கில் இராமனைக் காட்டுக்கு அனுப்பும் வரம் ஒன்றையும் பெறுமாறு கூறினாள்.

**என்னே கொடுமை!**

இவை இரண்டில் பரதனுக்கு முடிபெறவேண்டிய இன்றியமை யாமை பற்றிக் கூனி கூறிய காரணங்கள் கைகேயிக்கு ஏற்புடையன வாகப் பட்டிருப்பின், தாராளமாக அவள் தன் மகனுக்கு முடியைப் பெற்றிருக்கலாம். அதோடு இராமனைக் காட்டுக்கு அனுப்ப வரம் கேட்டது, காரணமில்லாமல் கொடுமை செய்யும் பண்பல்லவா? அதிலும், தான் போற்றி வளர்த்த மகனை இவ்வாறு செய்யச் சொல்லுவது கலப்பற்ற கொடுமையன்றோ? அதனால் தனக்கு ஏதாவது பயன் விளைவதாக இருந்தாலும், 'தன்னலம்' என்றாவது கூறிவிடலாம். தனக்கும் நன்மை பயவாது பிறருக்கும் தீங்கு புரியும் இச்செயலை ஏனோ கைகேயி செய்யத் துணிந்தாள்! துணிந்ததைக் காட்டிலும் கொடுமை அவன் பெயரைக்கூடக் கூற விருப்பம் இல்லாதவள் போல, 'சீதை கேள்வன்' என்று அவனைக்

குறிப்பிட்டதாகும். ''இராமனைப் பெற்ற எனக்கு இடருண்டோ?'' என்று கேட்ட அதே கைகேயி, சில நாழிகை நேரத்துள் இப்படி மாறுவாளானால், அவளை என்னவென்று குறிப்பது? இதை நன்கு ஆய்ந்த கவிஞன், இதோ விடை கூறுகிறான்! அவளுக்கு அடை மொழிகளைப் பாட்டின் நான்காம் அடியில் தருகிறான், ''தீயவை யாவையினுஞ் சிறந்த தீயாள்'' என்று அவன் கூறும்பொழுது இதே கவிஞன் சென்ற படலத்தில் கைகேயியை நமக்கு அறிமுகம் செய்து வைக்கையில், அவளைப்பற்றிக் கூறிய சொற்களை நினைவில் கொண்டு பார்க்க வேண்டும். அவ்வளவு உயர்ந்த முறையில் அவளைக் கூறியவன் ஏன் இவ்வாறு கூறுகிறான்? காரணம் விளக்கப்பட்டிருக்கிறது முன்னிரண்டு பத்திகளிலும்.

### மன்னிக்க முடியாது

இந்த இடத்தில் தொடங்கி வரிசையாக அவளுக்கு வசை மாரி பெய்து செல்கிறான் கவிஞன். காரணம் இந்த ஒன்றுமட்டும் அன்று. ஆய்ந்து பார்த்தால், இதுவே மன்னிக்க முடியாத பெரும் பிழை. காரணமின்றி அவள் கேட்ட இரண்டாவது வரம் எத்தனை பேருக்குத் துன்பம் விளைவிக்கிறது என்பதை நினைக்கையில் அவளை எவ்வளவு பழித்தாலும் தகும் என்றே தோன்றுகிறது. ஆனால், குற்றம் இம்மட்டோடு நிற்கவில்லை.

பல சமயங்களில் மனிதன் பிழை செய்ய நேரிடுகிறது. இவற்றுட்சில அறிந்தும், சில அறியாமலும் செய்யப்படுகின்றன. அறியாமல் செய்யப்படும் பிழை வேண்டுமென்று செய்யப் படுவதன்று. எனவே, அதை எடுத்துக்காட்டினால் உடனே செய்தவர்கள் அப்பிழையைப் போக்கிக் கொள்ள வேண்டும். அவ்வாறு போக்க முன் வரவில்லையாயின், அது இரண்டாவது பிழை. இராமனை ஒரு குற்றமும் செய்யாதிருக்கையில் காட்டுக்குப் போக வேண்டும் என்று கைகேயி விரும்பியது முதலாவது பிழை. இது பிழை என்று அவள் அறிந்து செய்தாளா, அன்றி அறியாமற் செய்தாளா என்பதை நாம் அறியோம். கவிஞனும் இது பற்றி ஒன்றுங் குறிக்கவில்லை. எனவே, நமது ஐயத்தின் பயனை, கைகேயிக்குத் தந்து அவளை மன்னித்துவிடலாம் எனில், உடனே இரண்டாவது பிழையைச் செய்துவிடுகிறாள். எவ்வளவு தாழ்ந்து பணிந்து அவள் கால்களில் வீழ்ந்து தசரதன் கெஞ்சுகிறான்!

---

1. Benefit of the doubt

எதற்காக? அவள் கேட்டவற்றுள் ஒன்றைப் பெற்றுக் கொண்டு மற்றொன்றை விட்டுத் தருவதற்காகவே.

தசரதன் வேண்டல்

''கண்ணே வேண்டும் என்னினும் ஈயக் கடவேன்; என்
உண்ணேர் ஆவி வேண்டினும் இன்றே உனது அன்றோ?
பெண்ணே! வண்மைக் கேகயன் மாதே! பெறுவாயேல்
மண்ணே கொள்நீ; மற்றையது ஒன்றும் மற,' என்றான்.''
(கை. சூழ்வினை. 28)

இந்தப் பாடலில், 'கண்ணை வேண்டினும், தருவேன்; என் உயிரையே வேண்டினும், அது உன்னுடையதாகும். வள்ளலாகிய கேகயன் மகளே, இந்த அரசை வேண்டுமாயினும், பெற்றுக்கொள். ஆனால், மற்றொன்று கேட்டாயே, அதை மட்டும் மறந்துவிடு!' என்று மன்றாடுகிறான் அந்த மன்னன். இராமனைக் காட்டுக்கு அனுப்புதல் என்பதுதான் 'மற்றையதொன்று' என்று குறிக்கப் பட்டது. தசரதன் தன் வாயாற்கூட இதனைக் கூற அஞ்சி 'மற்றையதொன்று' என்று குறிக்கிறான் எனில், இராமன் மாட்டு எத்தகைய அன்பு பாராட்டினான் அவன் என்பதைக் கூறவும் வேண்டுமா? தசரதனைப் பற்றிக் கூற வந்த கவிஞன், ''மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னன்'' என்று குறிக்கிறான். இவ்வளவு வேண்டியும் கேகயன் மடந்தை மனம் மாறவில்லை எனில், அது இரண்டாவது குற்றம் அன்றோ? இனி மூன்றாவது ஒரு குற்றமும் இழைக்க முற்பட்டுவிட்டாள் அவள்.

எந்தக் குலப் பெண்ணுக்கும் கணவன் தெய்வமாவான் என்பது பண்டையோர் கொண்ட கொள்கை. அவனைத் தெய்வம் என்று வழிபடாவிடினும், அவளுக்குச் சிறந்தவர்கள் பட்டியலில் அவனே முதலிடம் பெறுபவன் என்பதில் ஐயமின்று, மறுமணம் செய்துகொள்ளும் பழக்கம் இல்லாத நாட்டில் அவளுடைய நல் வாழ்வின் ஆணிவேராய் அவன் இருக்கிறான் என்பதிலும் ஐயமின்று. எனவே, எந்தப் பெண்ணும் கணவனுக்குத் தீங்கு நேர விட்டுக்கொண்டிருக்கமாட்டாள். அவ்வாறு இருக்க, தானே தன் கணவன் உயிரை வாங்க ஒருத்தி முற்படுவாளா? மாட்டாள் என்பது அனைவரும் உறுதியாக ஒப்பக்கூடியதொன்று. ஏனைய பெண்களைப் பொறுத்தவரை இதுவே முறையாய் இருப்பினும் கைகேயியைப் பொறுத்தவரை இது மாறுபடுதலைக் காண்கிறோம். தான் கேட்ட இரண்டு வரங்களையும் உறுதியாகப்

பெற்றுவிடுவதாயின், அதனால் தசரதன் உயிருக்குத் தீங்கு நேரும் என்று அறிந்திருந்தும், அவள் பிடிவாதம் செய்தது வெறுக்கத்தக்க செயலேயாகும். அவன் உயிருக்கு இறுதி நேரும் என்பதை அவள் அறியவில்லை என்றும் சொல்வதற்கில்லை. ஏன் எனில், அவனே பன்முறை அதைக் குறிப்பிடுகிறான்.

''......... ......... ..... ......'நளினம்போல்
கையான் இன்றுஎன் கண்எதிர் நின்றுங் கழிவானேல்
உய்யேன் நங்காய்! உன்அப யம்என் உயிர்,' என்றான்.''
(கை. சூழ்வினை 33)

''ஒன்றாய் நின்ற ஆருயி ரோடும் உயிர்கேள்வர்
பொன்றா முன்னம் பொன்றினர் என்னும் புகழ்அல்லால்
இன்றோர் காறும் எல்வளை யார்தம் இறையோரைக்
கொன்றார் இல்லை; கொல்லுதி யோநீ? கொடியாளே!''
(கை சூழ்வினை 37)

''நாஅம் பால்என் ஆர்உயிர் உண்டாய்!'' (கை. சூ. 38)

''விண்ணோர் காறும் வென்ற எனக்குஎன் மனைவாழும்
பெண்ணால் வந்தது அந்தரம் என்னப் பெறுகேனோ?'' (40)

என்று வரும் அடிகள் அம்மன்னனே அவள் வரத்தால் விளையப் போகும் கேட்டைப் பற்றிக் கூறியதை அறிவிக்கின்றன. இவை அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்தும் ஒருத்தி மனங்கலங்க வில்லை எனில், அவளை எவ்வாறு பெண் என்று கூறுவது?

### உரங்கொள் மனத்தவள்

தசரதன் கூறிய இத்துணை அடைக்கல அரற்றல்களுக்கும் அவள் செவி சாய்க்கவில்லை என்பது மட்டும் அன்றி, மேலும் அவனைத் துன்புறுத்தவே தொடங்குகிறாள். தன்னை மறந்த நிலையில் அவன் தரையில் விழுந்து புரள்கின்ற அந்த நேரத்தில் சிறிதும் கருணை காட்டாமல், அவள், ''இவ்வரங்களை இப்பொழுது தரப்போகிறீரா? அல்லாவிடின் யான் உயிரை விடட்டுமா?'' என்கிறாள்.

''ஊழில் பொய்த்தால் என்உரை இன்றே உயிர்மாய்வன்''

என்றும்.

"அரிந்தான் முன்ஓர் மன்னவன் அன்றே அருமேனி
வரிந்தார் வில்லாய் வாய்மை வளர்ப்பான் வரம்நல்கிப்
பரிந்தால் என்னை?' என்றனள் பாயும் கனலேபோல்
எரிந்துஉர றாதே இன்னுயிர் உண்ணும் எரியன்னாள்."
(கை. சூவினை. 42, 43)

என்றும் கூறும் மனநிலை, எல்லாப் பெண்களுக்கும் வரக்கூடிய ஒன்றன்று.

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்." (56)

என்ற குறளுக்கு முற்றும் எதிராக நடக்கத் தொடங்கி விட்டாள் கைகேயி. இந்நிலையில் அரசன் யாது செய்வான்!

" 'வீந்தா ளேஇவ் வெய்யவள்,' என்னா மிடல்வேந்தன்,
'ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம்; என்சேய் வனமாள
மாய்ந்தே நான்போய் வான்அரசு ஆள்வன்; வசைவெள்ளம்
நீந்தாய் நீந்தாய் நின்மக னோடு நெடிது,' என்றான்."

"ஊறா நின்ற சிந்தையி னாளும் துயில்வுற்றாள்."
(கை. சூழ்வினை. 42, 45)

அரசன் 'வரத்தைத் தந்தேன்,' என்று கூறினவுடன் அவள் உறங்கிவிட்டாள். என்னே அவள் நெஞ்சின் உறுதி இருந்தவாறு! எத்துணை கொடுமை படைத்த நெஞ்சினளாய் இருப்பினும், அரசன் படும்பாட்டைப் பார்த்து எவ்வாறு கவலையற்று இருக்க முடியும்? அதனினும் மேலாக, எவ்வாறு உறங்க முடியும்?

தீர்ந்த கொலையாளருங்கூடத் தம்மால் அன்பு செய்யப் பட்டாரிடத்தும்,தமக்கு வேண்டியவர்களிடத்தும் அன்பு பாராட்டு கின்றனர் என்று கூறுவார்களே! அப்படி இருக்க, கேகயன் மடந் தைக்கு யார்மேலும் அன்பு இல்லாதபடி வற்றக் காரணம் யாது? இயற்கையிலேயே இத்தகைய மனப்பண்பு உடையவள் அல்லளே இவள்! சேர்க்கையால் வந்த குணக்கேடா? ஆம்! மந்தரை கூறிய சொற்களால் மனந்திரிந்துவிட்டாள் என்றால், இவ்வளவு எதிர்ப் பையும் தாங்கி நிற்கக்கூடிய பண்பாட்டை யாண்டுப் பெற்றாள் இவள்? இது ஒரு புதிராகவே இருக்கிறது. எனவே, முற்கூறியபடி மூன்று குற்றங்களை இழைத்துவிட்டாள் இம்மாதரசி.

**சிந்தை கலங்கியவள்**

அடுத்து நாம் கைகேயியைச் சந்திக்கின்ற இடம். கணவன் இறந்து, இராமன் காடு சென்ற பிறகு, பரதன் மீண்ட நிலையிலே

தான். பாட்டன் வீட்டிலிருந்து வந்த பரதன் நேரே தாயைச் சென்று வணங்குகிறான். அவனைத் தழுவிய அவள், தன் தந்தை, தாய், சோதரிமார் அனைவரும் நலமா என வினவுகிறாள். அக்கேள்விகள் அனைத்திற்கும் ஒரே மொழியில் விடை தந்து விட்டுத் 'தந்தையார் எங்கே இருக்கிறார்?' என்று கேட்கிறான் அவன். அதற்கு அவள் தரும் விடை நமக்குக்கூட வெறுப்பைத் தருகிறது.

''தானவர் வலிகெட நிமிர்ந்த தானைஅத்
தேனமர் தெரியலான் தேவர் கைதொழ
வானகம் எய்தினான்; வருந்தல்: நீ,' என்றாள்.''

(பள்ளியடைப்படலம். 44)

இவ்விடையால் நடுங்கி மயக்குற்று வீழ்ந்த பரதன், ஒருவாறு மனந்தேறிய பின்னர், ''அம்மா, நீயலது பிறர் இவ்வாறு உரை செய நினைப்பரோ!'' என்றுகூடக் கேட்டுவிட்டான். இந்நிலையில் கைகேயியின் மனம் கல்லாகிவிட்டதையும், அது எந்த உணர்ச்சியையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிடுகிற நிலையையுங் காண்கிறோம். தான் விளைத்த செயலின் எதிர்பார்த்ததும் எதிர்பாராததுமான பயன்களைக் கண்டு அவளே நடுங்கிவிட்டாள். அந்நடுக்கத்தால் ஓரளவு உணர்ச்சியைக்கூட அவள் இழந்துவிட்டாள் என்றே எண்ண வேண்டியுள்ளது. அன்றேல், கணவன் இறந்துவிட்ட செய்தியை இவ்வாறு கூற எந்தப் பெண்ணுக்குத்தான் மனம் வரும்! பரதனுடன் பேசுகிற நிலையிலும், அடுத்து அவளை இன்னார் என்று பரதன் குகனிடம் அறிமுகம் செய்து வைக்கும் நிலையிலும் கைகேயி நிற்கும் நிலை நம்முடைய பரிவையே தூண்டு கிறது. தன் செயலின் விளைவறியாமல் குடி இருந்த வீட்டிற்குத் தீ வைத்துவிட்ட குழந்தை போலச் செயலற்று நிற்கிறாள் அவள். அனைவரும் அவளை ஏசுகின்றனரே தவிர, அவள் அடையுந் துயரத்தில் பங்கு கொள்வார் எவரும் இலர். அவளே தேடிக் கொண்ட துன்பந்தானே இது என்று மட்டும் கூறிவிடுவதால் பயன் இல்லை. தவற்றை இழைத்தவளாயினும், இப்பொழுது நெஞ்சு கலங்கி நிற்கிறாள். தனக்கு முடிவேண்டா என்று மறுக்கும் பரதனைக்கூட அவள் வலியுறுத்தி முடியைப் பெற்றுக்கொள்ளு மாறு தூண்டவில்லை. ஏன்? அவள் கதி கலங்கிச் செய்வது அறியாமல் நிற்கிறாள் என்பதற்கு அதுவே எடுத்துக்காட்டாகும். மூன்றாம் மனிதனைப் பற்றிக் கூறுவது போல, 'வானகம்

எய்தினான்; வருந்தல் நீ,' என்று தசரதன் இறந்ததைப்பற்றிக் கூறும் பொழுது கைகேயியின் தன்னை மறந்த நிலையைக் காண் றோம்.

தந்தைக்காகப் பெரிதும் வருந்திய பரதன், அடுத்தபடியாகக் கேட்கும் வினா, ''அண்ணன் எங்கு உளான்?'' என்பதேயாகும். இவ்வாறு வினாவாக அவன் அவளை நோக்கிக் கேட்கக்கூட வில்லை. தானே தனக்குக் கூறிக்கொள்பவன்போல, அண்ணனைப் பார்த்தால் ஒழியச் ''சிந்தை வெங்கொடுந்துயர் தீர்கலாது,'' என்றான். இவ்வாறு அவன் கூறிக்கொண்ட சொற்களைக் கேட்ட அவள் கூறுகிறாள்.

''அவ்வுரை கேட்டலும் அசனி ஏறுஎன
வெவ்வுரை வல்லவள் மீட்டுங் கூறுவாள்:
'தெவ்வடு சிலையினாய்! தேவி தம்பிஎன்று
இவ்விரு வோரொடுங் கானத் தான்,' என்றாள்.''
(பள்ளியடை. 59)

கைகேயி கூறிய இவ்வார்த்தைகள் பரதனைப் பெரிதும் மருட்டிவிட்டன. இப்பொழுதுதான் அவன் அவளையே ஐயங் கொள்ளத் தொடங்கினான். கிழவனான தந்தை இறந்தான் என்றால் இதில் அவளை ஐயுறக் காரணம் யாதுமில்லை. ஆனால், இராமன் ஏன் காடு செல்ல வேண்டும்? ஒரு வேளை அவன் பெருங் குற்றம் இழைத்து அதற்காக அரச தண்டனையாகக் காட்டுக்கு அனுப்பப் பெற்றானா? ''தீயவை இராமனே செய்யும்?'' என்று கூறி, ''அப் பெருமகன் செய்யுமேல், அவை தாய் செயல் அல்லவோ தலத்துளோர்கட்கு எலாம்?'' என்று கூறும் பொழுது தாய்மீது குற்றஞ்சாட்டுவது வெளிப்படை. இப்பொழுது வெளிப்படை யாகவே கைகேயி,

''வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடை; போக்கிப் பார்உனக்கு
ஆக்கினேன்; அவன்அது பொறுக்க லாமையால்
நீக்கினான் தன்னுயிர் நேமி வேந்து', என்றாள்.''
(பள்ளியடை. 65)

இப்பாடலில் அவள் இராமனைப்பற்றி 'மைந்தனை' என்றும், பரதனைப்பற்றி 'உனக்கு' என்றும் கூறுதல் அறிதற்குரியது. இராமன் பரதன் என்ற இருவருமே அவளுடைய செயலை அறிந்தவரே. நெஞ்சு அறிந்து அவள் இராமனுக்குத் தீமை புரிந்தாள். பரதனுக்கு நன்மை புரிய வேண்டும் என்று வரம் கொண்டது ஒன்று. ஆனால், அதற்காக இராமனைக் காட்டிற்கு

அனுப்பியிருக்க வேண்டியதில்லை. அவ்வாறு இருந்தும், அவளால் கொடுமை செய்யப்பட்டவனான இராமன் சிறிதும் அவள்பால் வருத்தம் கொள்ளவில்லை; அதற்கு மறுதலையாகப் பணிவுடனும் அன்புடனும் 'எந்தையே ஏவ, நீரே அருள் செய,' (106) என்றும் 'மன்னவன் பணியன்று ஆகில் நும்பணி மறுப்பனோ? (110) என்றும் கூறிவிட்டுக் காடு சென்றுவிட்டான். ஆனால், யாருக் காகக் கைகேயி இத்தனை பாடுகளும் பட்டாளோ, அந்தப் பரதன் இப்பொழுது அவளைக் 'கொன்று விடுகிறேன்!' என்கிறான். இதைவிட அவள் மனத்தை ஒடிக்கக்கூடிய செயல் வேறு யாது? எனவே, காடு சென்றவனும் தன்னால் தீங்கிழைக்கப் பெற்றவனும் ஆன இராமனையும், வீட்டில் இருப்பவனும் தன்னால் முடிவாங்கித் தரப்பட்டவனும் ஆன பரதனையும் அவள் ஒப்பிட்டுப் பார்க்கிறாள். பழைய மன நிலையை அடைந்தவளாய், இராமனை மீட்டும் தன் மைந்தன் என்று பேசுகிறாள். தசரத னிடம் அஞ்சாமல் ''உரங்கொள் மனத்துடன்'' வரங்கேட்ட கைகேயி, இப்பொழுது தான் பெற்ற பிள்ளையிடம் அஞ்சுவதைக் காண்கிறோம்! ஏன்? தசரதன் தானும் ஒரு தீமை அவளுக்குப் புரிந்துவிட்டானாகலின், அவளை எதிர்த்துப் போராட அவனால் இயலவில்லை. அவளும் அவன் எதிரே அஞ்சவில்லை. ஆனால், தூய்மையே வடிவான பரதன் முன் அவள் இப்பொழுது நடுங்கு கிறாள். வாய் பேசாது நிற்பதைத்தவிர அவள் செய்யத்தக்க செயல் ஒன்றும் இல்லை. பரதன் தன் பிழைக்காகத் தன்னைக் கொன்றாலும் கொன்றுவிடுவான் என்று எதிர்பார்த்தே அவள் நிற்கிறாள். அவளைக் கொல்லத் துணிந்துவிட்ட அவன்கூட ''தாய் என்ற பாசத்தால் நான் உன்னைக் கொல்லாமல் விடவில்லை. ஆனால், 'நெடியவன் முனியும் என்று அஞ்சி நின்றனன்,'' (பள்ளி. 70) என்றே கூறுகிறான். ஒரு வேளை பரதனே அவளைக் கொன்றிருந்தாலும், அவள் துன்பத்திற்கு ஓர் அமைதி கிட்டி இருக்கும். ஆனால், இன்னும் இருந்து பெரிய தண்டனையை அடைவான் வேண்டிப்போலும் அவனும் அவளை விட்டுவிட்டான்! எனவே, இதுவரை கைகேயியை மூன்று நிலைகளிற் கண்டோம். தூய்மையே வடிவான கைகேயி, தீயினும் கொடிய கைகேயி, தன் செயலிழந்து நிற்கும் கைகேயி என மூன்று நிலைகளில் ஒருத்தியைக் காட்டிக் கவிஞன் மனிதன் தன் செயல் களால் எவ்வாறு உயர்வையும் தாழ்வையும் தானே தேடிக் கொள்ள முடியும் என்பதை அழகுற எடுத்துக்காட்டுகிறான்.

# 5. முதல் தேவி கோசலை

## கவிஞன் படைப்பு

காப்பியத்திற்றோன்றும் எல்லாப் பாத்திரங்கட்கும் வடிவு தரவேண்டியவனாகிறான் கவிஞன்.

சிறந்த முறையில் பாத்திரப் படைப்பு அமைய வேண்டுமாயின், கவிஞன் படைத்த பாத்திரம் என்று இல்லாமல், அவனே பாத்திரமாக அமைந்துவிட வேண்டும்.

வேறு வகையாகக் கூறுமிடத்து: அவன் படைக்கும் ஒவ்வொரு பாத்திரமாகவும் அவன்மாற வேண்டும்.

சிறிய பாத்திரமேயாயினும், காப்பியத் தலைவனேயாயினும், இவ்விதிக்கு விலக்கில்லை. சிறந்த ஓவியம் எனின், முழுத் தோற்றம் நன்கு அமைவதோடு சிறு சிறு பகுதிகளும் செம்மையாக அமைய வேண்டும் அல்லவா? சிறந்த ஓவியர் தீட்டிய ஓவியங்களில் ஒவ்வொரு வளைவிலும் ஒவ்வொரு கோட்டிலும் அவ்வோவியரின் தனிச்சிறப்பைக் காண முடியும் என்று கூறுவர். ஓவியத்திற்கு மட்டும் அல்லாமல், கவிதைக் கலையிலும் இக்கூற்று உண்மை யாகும். பிற்காலக் கவிஞர் தம் பாடலைப் பிறர் அறிந்து கொள்ளப் பாட்டின் இறுதியில் 'முத்திரை அடி' என்ற ஒன்றை வைத்துப் பாடுவர். அதேபோல முத்திரை அடி இல்லாவிடினும், கம்பனுடைய ஒவ்வொரு பாடலிலும் அவனுடைய தனித் தன்மையைக் காண முடியும். கம்பனைப் போன்ற பெருங்கவிஞர் களிடத்தில் நாம் இம்முறையை எதிர்பார்ப்பதில் தவறு இல்லை.

இவ்வாறு அமைப்பதில் உள்ள சிக்கலையும் சிந்திப்பது நன்று. ஆண் மகனாய்ப் பிறந்து வளர்ந்த ஒரு கவிஞன், தான் ஆடவன் என்பதை மறக்க இயலாதன்றோ? எந்தச் சூழ்நிலையில்

இருப்பினும், ஓர் ஆண் மகனுடைய பல்வேறு மன நிலைகளையும் அவன் கற்பனை செய்துகொள்ள முடியும். உயர்ந்த அரசன் முதல் தாழ்ந்த ஏவலாளன் வரை அனைவரும் ஆண் என்ற பொதுத் தன்மை உடையவரேயாவர். எனவே, ஒரு குறிப்பிட்ட சந்தர்ப் பத்தில் அரசன் எவ்வாறு நடந்துகொள்வான், ஏவலாளன் எவ்வாறு நடந்துகொள்வான் என்றுஅறுதியிட்டுக் கூறல் இயலும். இயலும் என்று கூறினதால், 'யாவர்க்கும் இது இயலுமோ!' என்று ஐயுற வேண்டா. பெருங்கவிகட்குமட்டுமே இது இயலும். அதிலும் அரசனும் ஏவலாளனும் உரையாடும் ஒரு சூழ்நிலையில் ஒரு வினாடி அரசனாகவும் அடுத்த வினாடி ஏவலாளனாகவும் இருந்து கதையை நடத்திச் செல்ல நேரிடும். மேலும், இத்தகைய சந்தர்ப்பங்களில் உவமைகளுடன் பேசவேண்டிய இன்றியமை யாமை ஏற்படுவதும் உண்டு. அரசன் பேசும் உவமையும் ஏவலாளன் பேசும் உவமையும் ஒன்றாயிருப்பது தவறு. வாழ்க்கையில் அவனவன் தகுதி முதலியவற்றிற்கேற்பவே உவமை கூறப்படல் வேண்டும். இத்தகைய சந்தர்ப்பங்களில் இடம், பாத்திரம் என்பவைகட்கேற்ப உரையாடல் முதலியன அமைப்பதே கவிஞனின் சிறப்பும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

### பாத்திரப் பண்பு

இம்முறையில் பாத்திரப் பண்பை விளக்குவது கடினமேயா யினும், அது இயலாததன்று. காரணம், அரசனும் ஏவலாளனும் வாழ்க்கைத்தரத்தில் எத்துணை வேறுபாடு உடையவராயினும், அடிப்படையில் ஆண் மக்களே. ஆனால், எப்பொழுதும் ஆண் களைப் பற்றி மட்டுமா காப்பியம் பேசுகிறது? பெண்பால் இல்லாத காப்பியமே உலகில் இல்லை என்றுகூடக் கூறி விடலாமே! அவ்வாறாயின், இப்பெண் மனத்தைக் கவிஞன் எவ்வாறு கூறுகிறான்? "பெண் மனத்தை அறிதல் இயலாது," என்று கூறுகிறார்களே! காப்பியத்தில் காணப்பெறும் பெண்கள், உலகில் காணப்படும் பெண்கள்பற்றிக் கூறப்படும் இப்பழமொழிக்கு விலக்கா? உலகில் காணப்படாத பெண்களைப்பற்றியா காப்பியம் பேசுகிறது? இல்லை. காப்பியங் கற்றவர் அனைவருக்கும் இவ் வுண்மை நன்கு தெரியும். வாழ்க்கையில் காணப்பெறும் பண் பாடுகளுடன் பாத்திரங்கள் படைக்கப்பட்டாற்றான் அவை நம் மனத்தைக் கவரும். பெரும்பான்மையான காப்பியங்கள் நம் மனத்தைக் கவர்கின்றன. அவ்வாறாயின், அவற்றில் காணப் பெறும் பாத்திரங்களும் உலகியலில் காண்பவையாக அமைதல்

வேண்டும். இதிலிருந்து ஒன்றை அறியலாம். காப்பியம் பாடும் புலவன் நாம் காணமுடியாதவற்றைக் காணும் இயல்புடையவன். எந்தப் பெண் மனத்தை நாம் காண முடியாது என்று கூறு கிறோமோ, அந்தப் பெண் மனம் அவனைப் பொறுத்தவரை உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்குகிறது. ஆதலின், கவிஞன் சாதாரண மக்களினும் வேறுபட்டவன் என்பது வெளிப்படை.

**பெண் மனம்**

பெண் மனத்தைக் கூறுவதிலும் பல வகைகள் உண்டு. ஆண் களுக்கும், பெண்களுக்கும் பொதுவான சில பண்புகள் உண்டல்லவா? அவற்றைப் பற்றிக் கவிஞன் கூறுதல் எளிது என்று நினைக்கலாம். பசி, நீர்வேட்கை போன்றவைகூட இருவருக்கும் பொது எனினும், ஆண், பெண் இருவரும் இவற்றிற்கு வெவ்வேறு முறையில் எதிர் நடப்பர். எனவே, கவிஞன் இருவர் மன நிலையை யும் தனித்தனி ஆய்ந்துதான் கூற வேண்டும். 'அனைவருக்கும் பொதுவான ஒன்பது சுவைகளில், பெண் மனம் எவ்வாறு ஈடு படுகிறது! அவற்றை எவ்வாறு அனுபவித்துப் பிரதிபலிக்கிறது?' என்று கூறுவதே சற்று வியப்பைத் தரும் ஒரு செயல். காதல் என்ற சுவையை எடுத்துக்கொண்டாற்கூட, ஆணும் பெண்ணும் வெவ்வேறு வகையில் இதில் ஈடுபடுகின்றனர். எனவே, கவிஞன் தொழில் தொல்லை தருவதாகிவிடுகிறது. ஒரளவு தன் ஆண் அனுபவத்தை வைத்துக்கொண்டு கவிஞன் இதனைப் பெண் அனு பவமாக மாற்றிக் கூறுகிறான் என்று கூறினாலும் தவறு இல்லை. ஆனால், ஆண் மகன் என்றும் அனுபவிக்காததும் அனுபவிக்க முடி யாததுமான சில அனுபவங்கள் உண்டு அல்லவா? அவற்றைக் கவிஞன் எவ்வாறு கூற முடிகிறது? உதாரணமாகக் கணவனை இழந்த காதலியின் மனத்தை எவ்வாறு ஓர் ஆண் மகன் அறிதல் கூடும்? "பெற்றவட்கே தெரியும் அந்த வருத்தம்; பிள்ளை பெறாப் பேதை அறிவாளோ?" என்று தாயுமானவ அடிகளே அருளியிருக் கின்றாரே! பிள்ளைப்பேறு இல்லாத பெண்ணுக்குக்கூடப் பிள்ளை பெற்றவளின் மனநிலையை அறிதல் கூடாதாம்! என்றாலும், பிள்ளை பெற்ற தாயின் மனநிலையைக் கவிஞன் கூறாமலா இருக்கிறான்? கூறுகிறான்; அழகாகவும், மெய்ம்மையுடனும் கூறுகிறான். பிள்ளை பெற்ற தாய்மார்களும் அதனைப் படித்து விட்டு, 'இவ்வனுபவம் மெய்ம்மையானது, என்று கூறக் கேட் கிறோம். இது எவ்வாறு இயன்றது? "கவிஞன் ஒரு தனிப் பிறவி," என்று முன்னர்க் கூறியதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு.

தமிழ் இலக்கியத்தில் காணப்படும் பாடல்களில் நூற்றுக்கு எண்பத்தைந்து அகத்துறைப் பாடல்களே. அவற்றுள்ளும் பெண் மனத்தைப் பாடியனவே ஏறத்தாழ அனைத்தும் என்றும் கூறி விடலாம். அவற்றைப் பாடியவருள் நூற்றுக்குத் தொண்ணூற் றெட்டுப் பேர் ஆடவரே. ஆடவர் பெண்டிரின் மன நிலையைப் படம் பிடித்துக்காட்டுகின்றனர்; அதுவும் தாம் கண்டவாறு அன்று; பெண்களே சரி என்று ஏற்றுக்கொள்ளும் முறையில் அப்பாடல்கள் அமைந்துள்ளன என்றால், இது வியப்பு அல்லவா?

## காப்பியத் தலைவன்

இராமாயண காப்பியத் தலைவனாகிய இராமனைப் பெறா விட்டாலும், வளர்த்த தாயாகிய கைகேயியின் மனநிலையைக் கவிஞன் கூறிய அழகை முன்னர்க் கண்டோம். இனி அக் கைகேயியின் மாற்றாளும் இராமனைப் பெற்றவளும் ஆகிய கோசலையைச் சற்றுக் காண்போம்:

தசரதன் தேவியர்களுள் கோசலையே மூத்தவள். "மூன் றுலகும் ஈன்றானை முன் ஈன்றானைப் பெற்ற" பெரும்பேறு உடையவள்; "கோக்கள் வைகும் முற்றத்தான் (தசரதன்) முதல் தேவி" (குகப் .65) என்றெல்லாம் பரதனால் பாராட்டப்படுபவள். 'ஆற்றல் சால் கோசலை" (மந்தரை. 50) என்று காப்பிய ஆசிரியனே அவளுக்கு அடைமொழி தருகிறான். அவள் தசரதன் உட்பட அனைவராலும் நன்கு மதிக்கப் பெறுபவள்; இராமனைப் பெறும் பேறும் இராமனையும் விஞ்சிய நற்பண்புகள் உடையவ னாகிய பரதனை வளர்க்கும் பேறும் உடையவள். கைகேயியின் மகனாய்ப் பிறந்தும் அவளுடைய தீயபண்புகளுள் ஒன்றும் இன்றிச் சிறந்தவன் என்ற பெயரைப் பரதன் எடுத்தான் அன்றோ? "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா!" (குகப்.35) என்று குகனாலும் பாராட்டப்படும் பண்பாடு பரதனுக்கு எங்கிருந்து வந்தது? கோசலையிடமே முற்றிலும் வளர்ந்தவ னாகலின், அவன் நற்பண்புகட்கு அவள் பெருங் காரணம் என்றால், அதனை மறுக்க இயலாது. அறிவுடைய தாய் என்பதற் கேற்ப, அவளே பரதனைப் பற்றியும் நன்கு அறிந்திருந்தாள். இராமன் அவளைக் கண்டு, "நும் காதல் திருமகன் எம்பி பரதனே துங்கமாமுடி சூடுகின்றான்," (நகர் நீங்கு. 4) என்று கூறிய பொழுது கோசலை அது பற்றி வருந்துவதாகவே தெரியவில்லை. அதற்கு மறுதலையாக, "நிறை குணத்தவன் நின்னினும்

நல்லனால்'' (நகர் நீங்கு.5) என்றே கூறுகிறாள். இவ்வாறு மாற்றாள் மகனைத் தன் மகனாகவே கருதும் இயல்பு எளிதில் வருவதொன்று அன்று. அவ்வாறு கருதுவதிலும் கோசலை அன்பு தனிப்பட்டது. சாதாரண நிலையில் இவ்வாறு கருதுவதிலும், அக் குழந்தை இடத்து அன்பு பாராட்டுவதிலும் வியப்பு ஒன்றும் இல்லை. தனக்கும் தன்னால் அன்பு செய்யப்பட்டவர்கட்கும் இடையூறு நேராத வரை பிறர் மாட்டு அன்பு செய்பவர் உண்டு. அப்பிறர் மாற்றாள் மைந்தரேயாயினும் தன்னலத்துக்கு இடையூறு நேராதவரை அன்பு காட்டுபவர் உண்டு. ஆனால், மாற்றாள் மகனிடம் கொண்ட அன்புக்குஉண்மையான சோதனை வரும் காலமும் உண்டு. கோசலைக்கு நேர்ந்த சந்தர்ப்பமும் இத் தகையதுதான். அவள் அருமை மைந்தன், உலகம் முழுவதும் விரும்பி ஏற்றுக்கொண்டு கொண்டாடும் இராமன், ''விராவரும் புவிக்கெலாம் வேதமேயன'' இராமன், நாளைப்பொழுது விடிந்ததும் அரசனாகப் போகிறான் என்று அறிந்தாள் அப்பெற்ற தாய்.

**தசரதன் முடிபு**

மந்திர சபையில் அமைச்சர் முதலாயினவரோடு சேர்ந்து தசரதன் செய்த முடிபு மறு நாள் இராமனுக்கு முடி சூட்ட வேண்டும் என்பது. அம்முடிபைத் தசரதனே இன்னும் வெளியார் யாருக்கும் கூறவில்லை. அத்தகைய மறைச்செய்தி பணிப் பெண்கள் மூலம் கோசலைக்கு எட்டிவிடுகிறது. இச்செய்தியை அறிவித்தவர்கட்கு ''நல்நிதிக்குவை நனி நல்கி'' விட்டு, உடனே '**தன் துன்னு காதற் சுமித்திரையோடும் போய் மின்னும் நேமியான் மேவிடம் மேவினாள்.**'' (மந்திரம்.94) இராமன் கைகேயியின் காதற்புதல்வனாய் அவளிடமே வளர்கின்றான். இந்தச் சந்தர்ப் பத்தில் கைகேயிக்கு இச்செய்தியைத் தெரிவிக்க வேண்டுமென்று கோசலை ஏனோ நினைக்கவில்லை! அதற்கு மறுதலையாகச் சுமித்திரையை அழைத்துக் கொண்டு திருமால் கோயில் புக வேண்டிய இன்றியமையாமை யாதோ, அறிகிலோம்! 'முடி சூட்டு விழாவில் கைகேயி தலையிடக்கூடும் என்று கோசலையும் தசரதனும் நினைத்திருந்தனரோ!' என்று ஐயுறவேண்டி உளது, பின்னர் நிகழும் நிகழ்ச்சிகள் கொண்டு காணுமிடத்து, அவ்வாறு ஐயுறுதற்கு ஏதுவாகவே கோசலையின் செயல் அமை கிறது. அது எதுவாய் இருப்பினும், கோசலையின் செயல் சற்று

வியப்பாகவே இருக்கிறது. ஒருவேளை, அரசன் அன்பைப் பூரண மாகப் பெற்றவள் ஆகலின், அச்கைகேயிக்குத்தான் இதனைக்கூற வேண்டா என்று நினைத்திருக்கலாம். அன்றேல், இராமன் முடி சூட்டு விழாவில் தன்னைப் போலக் கைகேயி மகிழ்ச்சி அடைய மாட்டாள் என்று கோசலை எண்ணிவிட்டிருக்கலாம். கைகேயி மகிழ்ச்சி அடையாதது ஒரு புறமிருக்க, அவளால் இராமன் முடி சூட்டு விழாவுக்கு இடையூறு ஏற்படலாம் என்றுகூடஅவள் நினைத்திருக்கலாம். இக்கருத்தைக் குறிப்பால் பெற வைக்கவே கவிஞன் "தன் துன்னு காதல் சுமித்திரை" என்றும் கூறுகிறான். திருமால் கோயில் புகுந்த கோசலை இறைவனை வேண்டுவது மீண்டும் நம் வியப்பையே கிளறுகிறது.

"'என்வ யின்தரு மைந்தற்கு இனி அருள்
உன்வ யத்தது'என் றாள்உலகு யாவையும்
மன்வ யிற்றின் அடக்கிய மாயனைத்
தன்வ யிற்றின் அடக்கும் தவத்தினாள்."

(மந்திரம்,96)

'என் பிள்ளையைக் காக்க வேண்டிய பொறுப்பு இனி உன்னுடையதாகும்,' என்று கடவுளைத் தொழும் நிலை இப்பொழுது என்ன வந்துவிட்டது? ஏன் இவ்வாறு அவள் வேண்ட வேண்டும்? சாதாரண மனநிலையுடைய தாய் ஒருத்தியும் மறு நாள் முடி சூட்டு விழா நடைபெறப்போகும் மகனுக்குக் கடவுள் துணை வேண்டும் என்று கருதி வழிபடுவாளே! அந்த மன நிலையிலேதான் கோசலையும் வழிபட்டாள் என்று கூறலாமேனும், முன்னும் பின்னும் நடந்தவற்றையும் நடைபெறப்போகின்ற வற்றையும் வைத்து நோக்குகையில் கோசலை மனத்தில் ஒரு பெரிய ஐயம் இருந்து வந்தது என்பது புலப்படும்.

**கோசலையின் நிலை**

கடவுட்பூசை முடித்த பிறகு நல்ல தவசிகள் முதலாயினவர் கட்குக் 'கன்றுடைப் பசுவும், சோறும், தளிராடையும் நல்கித் தொல்லை நோன்புகள் யாவும் தொடங்கினா'ளாம். விரதம் மேற்கொண்டு நிற்கும் கோசலைக்கு இரவில் நடந்த செய்தி ஒன்றும் தெரிய நியாயமில்லை. பொழுது விடிவதை ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டு உறக்கம் துறந்து நிற்கிறது அத்தாய் உள்ளம்.

இரவு முழுவதும் அவள் உறங்கவில்லை. அவள் மனம் கற்பனை உலகில் சஞ்சரிக்கிறது. எத்தனையோ எண்ணங்கள் ஒன்றன் பின் ஒன்றாய் அலை மோதி எழுகின்றன. இதுவரை அவள் பட்டத்து அரசி. எவ்வளவுதான் தசரதன் கைகேயி மாட்டு மயங்கி நிற்பினும் கோசலையின் முதல் இடத்தை ஒன்றுஞ் செய்யவில்லை அல்லவா? ஆனால், நாளைப் பொழுது விடிந்தால் அவள் முதல் தேவியல்லள் அல்லவா? அருமை மைந்தனே முடி சூடுவதாயினும், அவள் கணவன் அரசியல் திருவை இழக்கிறான் என்ற எண்ணமும் ஒரோவழித் தலை காட்டாமல் இல்லை. எனவே, மைந்தன் முடி சூடுவதாற்பெறும் இன்பமும், கணவன் திருவை இழப்பதால் பெறுந் துன்பமும் மாறிமாறித் தோன்ற, ஒரு நிலைப்படாத மனநிலையுடன் பொழுதைக் கழிக்கிறாள். பெண் ஒருத்திக்கே உரிய இம்மன நிலையைக் கவிஞன் 'தாயுள்ளம்' பற்றிய தன் கற்பனையின் உதவி கொண்டு இதோ பேசுகிறான்.

"சிறக்கும் செல்வம் மகற்குஎனச் சிந்தையில்
பிறக்கும் பேர்உவ கைக்கடல் பெட்புஅற
வறக்கும் மாவட வைக்கனல் ஆனதால்
துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே."

(மந்திரம். 93)

மறுநாட் பொழுதும் விடிந்துவிட்டது. இராம காதையின் மிக முக்கியமான பகுதி நடைபெற்றுவிட்டது. கரிய மேனியை உடைய இராமனின் வாழ்க்கையில் ஒப்பற்ற ஒரு மாறுதல் கரிய நிறமுடைய இருட்டில் நடந்து முடிந்துவிட்டது. உலகீன்ற நான்முகனைப் பெற்று எடுத்த இராமனின் வாழ்வில் ஏற்பட்ட பெருமாறுதலை அவ்விராமனைப் பெற்ற தாயே அறிந்திலள். எனவே, பொழுது விடிந்ததும் விடியாததுமான நிலையில் அவள் வீட்டு முற்றத்திற்கும் உள்ளுக்குமாக நடந்து நடந்து அலுத்த நிலையில் இருக்கிறாள். 'அருமை மைந்தன் வரும், வரும்,' என எதிர் பார்த்து நிற்கின்றது தாயுள்ளம். நேரம் ஆகிக்கொண்டிருக்கிறது. முடி சூட்டலின் முன்னரே மைந்தன் தன்னைக் கண்டு செல்வான் என்று எதிர் பார்த்து நின்றாள் அப்பெற்றெடுத்த தாய். ஆனால், முடி சூட்டலுக்கு வகுத்த நேரம் நெருங்கிவிட்டது. இனித் தன்பால் வந்து மீட்டும் முடி சூட்டலுக்குச் செல்லக்கூட நேரம் இல்லை என்பதை உணர்ந்தவுடன் அத்தாய் மனம் வேறு வழியில் அமைதி அடைய முயல்கிறது. வேறு யாராய் இருப்பினும், 'தாயை இப்பொழுது மறந்துவிட்டான் போலும்!' என்று கூட நினைக்க

லாம். ஆனால், இராமன் அத்தகைய மைந்தன் அல்லனே! எனவே, வாராமைக்குக் காரணந்தேடி மனத்தை அலட்டிக்கொள்ள விரும்பவில்லை அந்நற்றாய். தடுக்க முடியாத காரணத்தாற்றான் முடி சூட்டலுக்கு முன்னர் அவன் வரவில்லை என்பதை நினைந்து அமைதி அடைந்துவிட்டாள் கோசலை. ஆனால், யாருக்காகவும் நில்லாத கால தேவன் ஓடிக்கொண்டேயிருக்கிறான். இதோ இந் நேரம் முடிசூட்டல் நிகழ்ந்திருக்கும்! இனி அருமை மகன் வந்து விடுவான்! இனி வரப்போகும் அவன் எவ்வாறு காட்சி அளிப்பான்? குழந்தைப் பருவத்தில் இருந்த இராமன் அவள் மனக்கண் முன் தோன்றுகிறான்.

குழந்தைகள்

குழந்தை இல்லாதவர்கள் வீட்டில் நீண்ட நாட்களுக்குப் பின் தோன்றும் குழந்தைகளை வளர்ப்பதே ஒரு தனி முறையாய் இருக்கும். எல்லையற்ற செல்வாக்குடன் கட்டுப்பாடுகள் எவையும் இன்றிக் குழந்தைகள் வளர்க்கப்படுதல் கண்கூடு. அதிலும், அக் குழந்தையின் பெற்றோர்கள் பணக்காரராகவும் இருந்துவிட்டால், கேட்க வேண்டுவதில்லை. வேளைக்கு ஓர் அணியும், வினாடிக்கு ஒரு துணியுமாக அக்குழந்தை அலங்கரிக்கப்படும். உண்மையான கண்ணனுக்குக்கூட யசோதை 'கிருஷ்ணன் கொண்டை' என்று இந்நாளில் வழங்கப்படும் முறையில் தலையை அலங்கரித் திருப்பாளோ என்பதை நாம் அறியோம். ஆனால், அப்பெயருடன் சேர்த்து வழங்கப்படும் தலையலங்காரத்துடன் இன்றுகுழந்தைகள் காட்சி நல்குகின்றன. இது கருதியே போலும் 'நல்கூர்ந்தார் செல்வ மகள்' (கலித்தொகை 50) என்று சங்கப் புலவன் யார் மகளையோ பார்த்துப் பாடினான்! குழந்தைச் செல்வம் இல்லாமல் ஏனைய செல்வம் படைத்தவர்கட்கு வயதுமுதிர்ந்த காலத்தில்ஒரு குழந்தை பிறந்துவிட்டால், கேட்க வேண்டுவதில்லை! தசரதன் வீட்டில் அனைத்துச் செல்வங்களும் நிரம்பியிருந்தும், நீண்ட நாட்களாகக் குழந்தைச் செல்வம் மட்டும் இல்லை. தசரதன் இறுதிக் காலத்தில் நால்வர்மைந்தர்தோன்றினர். இவருள் இராமனும்பரதனும்பெற்ற தாயரிடம் வளராமல், மாறி வளர்ந்தனர். வயதால் இளைய கைகேயி இராமனை வளர்க்கும் கடப்பாட்டில் நின்றாள்; விதவித மாக இராமனுக்குக் கோலம் புனைந்து மகிழ்ந்திருப்பாள். அவ்வாறு கோலம் புனைந்து தான் அதனை அனுபவிப்பதுடன் அமையாமல், தன் மாற்றாளும் இராமனைப் பெற்ற தாயும் ஆன கோசலை கோயிலுக்கும் அவனை அனுப்பியிருப்பாள். மாற்றாள்

செய்தனுப்பிய கோலமாயினும், அக்கோலம் புனைந்துள்ளவன் தான் பெற்ற மகனாகலானும், அனைவரும் விரும்பும் பண்பாட்டினன் ஆகலானும், கோசலை அதனை மிகவும் பாராட்டியிருப்பாள் அல்லளோ! பன்னாட்கள் அவன் புனைந்து வெளிப்பட்ட கோலங்களில் அரசக் கோலமும் ஒன்றாய் இருந்திருக்கலாம். நாளை அரசனாக வேண்டியவன் ஆதலின், இராமனுக்கு அரச வேடம் முற்றிலும் பொருத்தம் உடையதாகவே இருந்திருக்கும். இவ்வாறு இளம்பிள்ளையாய் இருந்த பொழுது அரச வேடம் புனைந்து காட்சியளிக்கையிலும் அரசனுக்கு அறிகுறியாகக் கருதப்படும் இரண்டு பொருள்கள் இருத்தற்கில்லை. அவை இரண்டும் அரசனுக்கு இன்றியமையாத அறிகுறிகள் அல்லவா?

### ஆட்சிச் சின்னம்

கொற்றக்குடையும் மௌலியாகிய கிரீடமும் இல்லாத அரசனை எங்கேனும் கண்டதுண்டா? அதிலும் பழந்தமிழ் நாட்டில் இவை இல்லாத அரசன் பெயரளவிற்கூட இருந்திருக்க மாட்டான். ஆதலின், அரசனுக்குரிய இவ்விரண்டு அடையாளங்களும் அவன் வெளியில் வரும் பொழுது பயன்படுவன அல்லவா? அரசனுடைய ஆட்சிச் சின்னத்தின் அறிகுறியாகவும், அவன் குடிகள் மாட்டுக் காட்டும் தண்ணருளின் அடையாளமாகவும் உள்ள 'கொற்ற வெண்குடையைக்' குழந்தைக்கு அரச வேடம் புனையும் பொழுது யாரும் தரமாட்டார். எனவே, மகன் வரவைக் கற்பனை செய்து கொண்டிருக்கும் கோசலை, அவன் முடி சூட்டலின் பிறகு வரும் பொழுது கொற்ற வெண்குடையுடன் வருவான் என நினைக்கிறாளாம். தலைமையின் அடையாளமாக, அவன் வரும் பொழுது, இருபுறமும் கவரி வீசி வருவார்கள்; கொற்ற வெண்குடையுடன் வருவான். அத்தாய் மனம் இதற்கு முன்னர்க் காணாத இக்காட்சியை உறுதியாகக் கற்பனை செய்து கொண்டு தான் இருக்கும். எந்தத் தாய்க்கும் இது இயல்புதான். இராமனுடைய பல்வேறு தோற்றங்களையும் கண்டு மகிழ்ந்த தாய்க்கு இதுவரை காணாத இக்காட்சியில் மனஞ்செல்லுதல் முற்றிலும் பொருத்தமே. இவ்வாறு அவள் எதிர்பார்த்தாள் என்று நேரடியாகக் கவிஞன் இதனைக் குறிப்பிடவில்லை. அதைவிடச் சிறந்த முறையில் இவற்றுள் ஒவ்வொன்றையும் கூறிவிட்டு, இவற்றுள் ஒன்றும் இல்லாமல் வந்தான் என்று கூறுகிறான்.

இல்லாப் பொருள்களைக் குறிப்பிட வேண்டிய இன்றியமையாமை யாது? ஆனாலும், கவிஞன் கூறுகிறான். 'குழைக்கின்ற

கவரி இன்றிக் கொற்றவெண் குடையும் இன்றி'' என இங்ஙனம் வாராப் பொருள்களைக் கூறி அவை இல்லாமல் என்று குறிப்பிட்டதற்கு ஒரு கருத்து இருத்தல் வேண்டும். அக்கருத்து யாது என்பதை நாம் ஊகித்து அறிய அடுத்த அடி பயன்படுகிறது. வாராதவைகளை முதல் அடியிற் கூறிய கவிஞன், இரண்டாம் அடியில் வந்தவை இரண்டைக் குறிப்பிடுகிறான். இதில் சிறப்பு யாதெனில், மகன் வரவை எதிர்பார்த்து நிற்கும் தாயானவள், மகனுடன் இரண்டு பொருள்கள் வரவேண்டும் என்று எதிர் பார்த்தாள். ஆனால், அப்பொருள்கள் வரவில்லை; அவற்றிற்கு மறுதலையாக அவள் எதிர் பாராத பொருள்கள் வந்தன என்பதே சிறப்பாகும். இன்னும் ஒரு சிறப்பும் இதில் உண்டு. கண்ணாற்காணக் கூடிய இரண்டை (கவரியும் குடையும்) அவள் எதிர்பார்த்தாள் மகனுடன். இவற்றுள் கவரி அவன் முன்னிற்பவரால் வீசப் பெறும்; குடை பின்னிற்பவரால் பிடிக்கப்படும். இவை இரண்டுமே கண்ணால் காணக்கூடியவை. ஆனால், இப்பொழுது மகன் வருகிற நேரத்தில் கண்ணாற் காணக்கூடாதவை இரண்டு முன்னும் பின்னும் வருகின்றன. அவை யாவை தெரியுமா? இதோ கவிஞன் கூறுகிறான். ''இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம் பின் இரங்கி ஏக'' என்ற அடியால், வருகின்ற மகனின் முன்னும் பின்னும் வருகிறவர் யார் என்பது தெரிகிறதல்லவா? கவரிக்குப் பதிலாக விதியும், குடைக்குப் பதிலாக அறக்கடவுளும் வருகின்றனராம்.

கவரி எவ்வாறு செல்லும்? மேலும் கீழும் வீசிக் கொண்டு தானே கவரி செல்லும்? அதே போல விதியும் ஏதோ செய்து கொண்டுதான் வருகிறதாம். அது செய்யும் செயலைத்தான் கவிஞன் 'இழைக்கின்ற' என்ற சொல்லால் குறிப்பிடுகிறான்.

தான் செய்யும் செயலைப் பிறர் அறியாத வகையில் செய்தலை இழைத்தல் என்று கூறலாம். முடிசூட வேண்டிய அரசகுமாரனைக் காடாள அனுப்பிய விதி தான் நினைத்த செயலை முடித்து விட்ட பெருமிதத்துடன் தலை தூக்கி முன்னர் நடப்பதைக் கவிஞன் 'விதி முன் செல்ல' என்று குறிப்பிட்டான். ஆனால், இராமன் பின்னர் வருகிற 'அறக் கடவுள்' விதியைப் போலச் செருக்குடன் வர வழியில்லை அன்றோ? எனவே, இராமன் போய்விடுகிறபடியால் இனித் தனக்கும் அயோத்தியில் இடம் இல்லையே என்பதறிந்த அறக்கடவுள், மிக்க வாட்டத்துடன் இராமனைப் பின் தொடர்ந்து வருகின்றானாம். 'இனி எமக்கு

யாது கதி?' என்று கவலைப்படுபவர்கள் தலையில் கை வைத்துக் கொண்டு செல்வது போலத் 'தருமம் பின் இரங்கி ஏகு'கிறதாம். இவ்விருவரும் கோசலை கண்ணிலும் ஏனையோர் கண்ணிலும் படாமல் வருகின்றனர். நல்ல வேளையாக இவ்விருவரும் பெற்றவள் கண்ணில் படவில்லை. தான் எதிர்பார்த்த இரண்டிற்கு மாறாக இவ்விருவரையும் கண்டிருந்தால் அத்தாயுள்ளம் என்ன பாடுதான் பட்டிருக்கும்! இதோ அவள் மனத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறான் கவிஞன்.

''குழைக்கின்ற கவரி இன்றிக்
கொற்றவெண் குடையும் இன்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத்
தருமம்பின் இரங்கி ஏக
மழைக்குன்றம் அனையான் மௌலி
கவித்தனன் வரும்என்று என்று
தழைக்கின்ற உள்ளத் தன்னாள்
முன்னொரு தமியன் சென்றான்.''

(நகர் நீங்கு. 2)

அத்தாயின் மனத்தில் ஊற்றெடுக்கும் ஏக்கம் முழுவதையும் மூன்றாம் அடியின் இறுதி மூன்று சீர்களும் கொட்டிவிடுகின்றன. ''கவித்தனன் வரும் என்று என்று'' நினைக்கிறாளாம், அத்தாய்! அந்நினைவு எவ்வளவு ஆழமானது என்பதை நான்காம் அடியின் முதற்சீர் தெரிவிக்கின்றது. 'வரும் வரும்' என்ற நினைவால் தழைக்கின்ற உள்ளமாம் அது. அத்தழைப்புக்குக் காரணத்தை ஆராயும் பொழுதுதான் இறுதி அடியில் உள்ள 'ஒரு தமியன்' என்ற தொடரின் பொருட்சிறப்பு நன்கு விளங்கும். தழைக்கின்ற பொருளுக்குத் தண்ணீர் மூலகாரணமாக இருப்பதுபோல, இத் தாயின் மனம் தழைப்பதற்கு அம்மைந்தனின் மௌலி (கிரீடம்) மூல காரணமாயிற்று. தழைக்கும் பயிருக்குத் தண்ணீர் இல்லாமற் செய்வது போல, அவளுடைய தழைப்புக்குக் கிரீடம் இல்லாமற் போய்விட்டது. தண்ணீர் அற்ற பயிர் கருகிவிடுதல் போல, அவள் மனமும் மௌலியற்ற மைந்தன் தலையைக் கண்டவுடன் சாம்பி விட்டது என்றதைக் குறிப்பால் அறிவிக்கவே. ''தழைக்கின்ற உள்ளத்து அன்னாள் முன் ஒரு தமியன் வந்தான்,'' என்று கவிஞன் கூறுகிறான்.

மேலும் ஓர் அழகு இப்பாடலில் புதைந்துள்ளது. தூரத்தே இருந்து பார்ப்பவர்க்கு முதலில் தெரிவன கவரியும் குடையும்

அல்லவா? இன்னும் நெருங்கி வரும் பொழுதுதானே தலையில் கவித்திருக்கும் முடி தெரியும்? அந்த முறை பற்றியே கவிஞன் கவரியையும் குடையையும் முதலில் கூறி, முடியை மூன்றாம் அடியிற் கூறுகிறான்.

இதுவரை மகனைக் கண்ணாற் காணுமுன் இருந்த தாயின் நிலையைக் கண்டோம். இவ்வாறு மைந்தனைக் காணுமுன்னர் ஒரு தலையாய தாய்க்கு ஏற்படும் மனநிலைகளை அழகாகப் படம் பிடித்துக் காட்டத் தலைசிறந்த கவிஞன் ஒருவனுக்கே இயலும். முன் இரண்டு அடிகளில் அவள் எதிர் பார்ப்பனவற்றைக் குறிப்பாகக் காட்டி அவை வரவில்லை என்று கூறிப்பின் இரண்டு அடிகளில் எதிர்பாராதவற்றைக் கூறியதை மேனாட்டுத் திறனாய்வாளர் மிகவும் போற்றுவர். இதனை 'அவலநகை'[1] என்று கூட ஓரளவு குறிப்பிடலாம். மூன்றாம் அடியில் உள்ள 'என்று என்று' என்ற இரு சொற்களும் காத்து அலுத்து மீட்டும் எதிர்பார்க்கும் தாய் மனநிலையை நன்கு காட்டுகின்றனவல்லவா?

**எதிர் நோக்கும் தாய்**

மகன் வரவைத் தாய் எதிர்பார்க்கிறாள். பெற்ற தாய்க்கன்றோ பிள்ளை அருமை தெரியும்? அதிலும், பேரரசனாக முடி சூடிக்கொண்டு வரப் போகிறான் என்று தழைக்கின்ற உள்ளத்தாளாகக் காத்து நிற்கும் கோசலை முன்னர், மழைக்குன்றம் அனையானாகிய இராமன் ஒரு தனியனாய் வருகிறான். தூரத்தே வரும்பொழுதே அத்தாய் மகன் வரவைக் கண்டுவிட்டாள்.

மகன் வருகிறான் என்பதில் மகிழ்ச்சி; ஆனால், புடை சூழ்ந்து வரவேண்டியவர் யாவரும் எங்குச் சென்றுவிட்டனர்! முடி சூடிக் கொண்டவனை இவ்வாறு தனியே வர விடுவார்களா? ஒரு வேளை தாய் வீட்டுக்கு வருகிற காரணத்தால் உடன் வரவேண்டியவர்கள் ஒதுங்கி நின்றுவிட்டார்களா! ஐயத்தின் மேல் ஐயம்' அப்பெற்ற மனத்தைப் பிடித்து ஆட்டுகின்றது! 'என்ன காரணமோ மைந்தன் தனியே வருதற்கு?' என்பதை ஆயமுற்பட்ட அத்தாய் மனம், விடை காண முடியாமல், இறுதியில் மகனைக் கூர்ந்து நோக்கத் தலைப்பட்டது. ''மௌலி புனைந்தனன் வரும் என்று என்று'' எதிர்பார்த்த மனம் உடையவள் ஆகலின், முதலிச்

---

1. Grim Humour

மைந்தனுடைய முகத்தைக்கூடக் கவனியாமல், அவனுடைய தலையைக் கவனித்தாள் கோசலை. மகன் இன்னும் தூரத்திற்றான் வந்துகொண்டிருக்கிறான்.

இராமனின் தலையைத் தூரத்தே இருந்து கண்ட தாயின் வயிறு கரிக்கத் தொடங்கிவிட்டது. காரணம், இராகவன் தலையில் முடி இல்லாமையே. ''புனைந்திலன் மௌலி'' என்பதை அறிந்து கொண்டாள். 'ஒரு வேளை நல் வேளையை மாற்றி விட்டார்களோ!'' என்ற ஐயம் மனத்தில் தோன்றிற்று. முடி இல்லாத தலையைக் கவனித்தாள். 'ஆ! இதென்ன புதுமை! முடி சூட்டலுக்கு முன்னர் நடைபெற வேண்டிய திருமஞ்சனம் கூடவா நடைபெறவில்லை? என்ன நிகழ்ந்திருக்கும்!' என்று ஆராயத் தொடங்கிவிட்டாள் கோசலை. அவளுடைய ஐயத்திற்கு முடிவு காணுமுன்னர் வீரனாகிய இராமன் வந்து அவள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

''புனைந்திலன் மௌலி! குஞ்சி
மஞ்சனப் புனித நீரால்
நனைந்திலன்! என்கொல்!' என்னும்
ஐயத்தாள் நளின பாதம்
வனைந்தபொன் கழற்கால் வீரன்
வணங்கலும், குழைந்து வாழ்த்தி,
'நினைந்ததுஎன்? இடையூறு உண்டோ
நெடுமுடி புனைதற்கு?' என்றாள்.''

(நகர் நீங்கு. 3)

இராமன் தலையில் புதியதாக அமர வேண்டிய முடி அவன் தலையில் இல்லாத காரணத்தால் கவிஞன் 'பொன்னால் ஆகிய வீரக் கழலை அணிந்தவன்' என்று கூறுகிறான். 'வனைந்த பொன் கழல் கால் வீரன்'' என்று கூறியதில் மற்றும் ஒரு பொருட்சிறப்பும் அமைந்து கிடக்கிறது. இராமன் முடி புனையப் போகிறான் என்ற மகிழ்ச்சியில் அனைவருடனும் சேர்ந்து நாமும் மகிழ்ந்திருக்கும் வேளையில் அவன் காடாள வேண்டிய கட்டம் வந்துவிடுகிறது. நம்மையும் அறியாமல் அவனுடைய துன்பத்தில் நாம் பங்கு கொள்கிறோம். இக்கொடுமையை இன்னும் அறிந்துகொள்ளாமல் முடி இல்லாத அவன் தலையைக் கண்டு வருந்துகிற தாயுடன் சேர்ந்து நம் வருத்தமும் மிகுதியாகிறது. இந்தச் சந்தர்ப்பத்தின் வருத்தத்தைக் குறைக்க வேண்டிக் கவிஞன் இராமனுடைய வீரத்தை நினைவூட்டுகிறான். 'பொன்முடி தலையில் இருக்க

இராமன் கொடுத்து வைக்கவில்லையே!" என்று வருந்தும் நம்மை நோக்கிக் கவிஞன் அந்தப் பொன்முடி அவனுடைய தலையை அடையத் தகுதியற்றது என்பான் போல, அவனுடைய காலிலே தான் பொன்னாலாகிய வீரக் கழல் இருக்கிறது என்கிறான். அன்றியும், அவன் வீரன் என்று குறிப்பிட்டமையின், தூய வீரனாகிய அவனுக்குத் தன் நாடும் காடும் ஒன்றுதான் என்பதையும் குறிப்பாற் பெற வைக்கிறான்.

### நடுவு நிலைமையும் அமைதியும்

சாதாரணத் தாயாய் இருப்பின் இராமன் முடியற்று நிற்கும் நிலையைக் கண்டு தன்னை மறந்த நிலையில் ஒப்பாரி வைக்கவும் தலைப்பட்டிருக்கலாம். அவ்வாறு ஒரு தாய் செய்திருப்பின், அதில் பெருந்தவறு என்று கூறுதற்கு ஒன்றுமில்லை. உணர்ச்சியைப் பிறர் அறிய வெளிப்படுத்தல் தவறு என்று கூறினால், தாயன்பின் முன்னர் இச்சிறு தவறுகள் தவிடு பொடியாகிவிடும். ஆனால், சாதாரண நிலையிலுள்ள ஒரு தாய் செய்யக்கூடிய இச்செயலைக் கோசலை செய்துவிட்டால், அது தவறாகிடும். 'தசரதன் முதல் தேவி, இராமனைப் பெற்ற தாய், இவ்வாறு செய்யலாமா?' என்ற வினாவிற்கு விடை அளிப்பது சிறிது தொல்லைதான். சிறந்த நிறை உடையவளும் ஆண்டிலும் அனுபவத்திலும் முதிர்ந்தவளுமாகிய அப்பெருமாட்டியிடம் நடுவு நிலைமையையும் அமைதியையும் எதிர் பார்க்கலாம் அல்லவா? இவை இரண்டும் தோன்றவே, அவளுடைய பேச்சு அமைகிறது. மனத்துள் நிகழும் பெரும் போராட்டத்தைச் சிறிதும் வெளிக்காட்டாமல் 'குழைந்து வாழ்த்து' கிறாளாம். எத்தனை பெரிய மனக்கலக்கமாயினும், வணங்கினவரை வாழ்த்தலே முறை.எனவே, அவள் வாழ்த்தினாள். அவ்வாழ்த்தலின் பின்னர் உள்ள மனம் எத்தகைய நினைவில் இருந்தது என்பதைக் கவிஞன் 'குழைந்து' என்ற சொல்லால் குறிப்பிட்டுவிட்டான். நிறையுடைய தேவியாகலின், மனவருத்தம் மிகுந்து பிதற்றாமல் மைந்தன் மேல் உள்ள அன்பு விஞ்ச வாழ்த்தி னாளாம். குழைவு என்ற ஒரு சொல்லால் கோசலையின் மனம் முழுவதும் எதிரே திறந்து கிடக்கும் புத்தகம் போல நமக்கு விளங்குகிறது.

இம்மன நிலையுடன் அவள் தன்னை வணங்கிய இராமனை வாழ்த்திவிட்டுக் கேட்கும் கேள்வியிலும் அவளுடைய மன நிலையைக் கவிஞன் விளக்குகிறான். "நினைந்தது என்?

இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?'' என்றாள். இவை அனைத்தும் ஒரே அடியாகக் கேட்கப்படினும், இதனுள் மூன்று கேள்விகள் இருப்பதைக் காணலாம். இப்பாடலுக்கு உரை எழுதின பெரியார்கள் ''நினைந்தது என்?'' என்ற வினாவுக்குச் 'சக்கரவர்த்தியாகிய தசரதன் என்ன நினைக்கிறான்?' என்று பொருள் கூறிப் போயினர். ஆனால், இவ்வடிக்கு அவ்வாறு பொருள் கூறாமல், இராமனையே கேட்டதாக வைத்துக் கொள்ளுதல் நலமோ எனத் தோன்றுகிறது. வினாவின் முன்னர் ''நீ'' என்ற எழுவாயைப் பெய்துகொண்டால், புதிய பொருள் வரக் காண்கிறோம். கோசலையைப் பொறுத்தவரை தசரதன் மேல் எள்ளளவும் ஐயங்கொள்ளவில்லை. மேலும், அவன் மந்திர சபை கூட்டி அனைவரையும் கலந்து யோசித்த நிகழ்ச்சியையும் அவள் கேள்வியுற்றிருந்தாள் என்பதைக் கண்டோம். இன்னும் கூறப்போனால், மந்திரசபையில் நடந்தவற்றைப் பிறர் அறியு முன்னர் அறிந்த கோசலைக்கு அங்கு நடைபெற்றவை அனைத்தும் தெரிந்தே இருக்கும் அல்லவா? மன்னன் மிகுதியும் இராமனை வேண்டியதும் இராமன் மறு மொழி ஒன்றும் தாராதிருக்கவே, மன்னன் அவனைத் ''தருதி இவ்வரம் எனச் சொல்லி உயிர் உறத் தழுவி''க்கொண்டு (மந்திர ம. 73.) அரண்மனை புகுந்த செய்தியும் அவள் அறிந்தே இருப்பாள். அதனை அடுத்துக் கைகேயி கோயிலில் நடைபெற்றவற்றுள் ஒன்றையும் அவள் அறியவில்லை. இந்நிலையில் தசரதனுடைய செயலில் அவள் ஐயம் கொண்டு ''(தசரதன்) நினைந்தது என்?'' என்று கேட்க, இன்றியமையாமை இல்லை. மந்திர சபையில் தசரதன் அவ்வளவு வேண்டியுங்கூட வாய் திறந்து பேசாமல் இருந்தவன் இராமன் ஒருவனே, எனவே, கோசலை இராமனே முடி சூட்டலுக்குத் தடை கூறிவிட்டான் போலும் என்று நினைப்பதில் தவறு இல்லை. 'நீ என்ன நினைத்து இவ்வாறு வந்துள்ளாய்?! என்பது முதற்கண் கேட்கப்பட்ட கேள்வி யாகும், ''இடையூறு உண்டோ?'' என்ற அடுத்த கேள்வி இராமனது விடையை உளப்படுத்திக் கேட்பதாகும். 'நீ என்ன நினைந்தாய்?' என்பதற்கு அவன், 'யான் ஒன்றும் நினைக்கவும் இல்லை; கூறவும் இல்லை', என்று விடை இறுப்பதாக வைத்துக் கொண்டு அடுத்த வினாத் தோன்றுகிறது. 'இடையூறு உண்டோ? என்பதில் ''முன்னரே முடிவு செய்யப்பெற்றவைகள் நடைபெற'' என்பது தொக்கு நிற்கிறது. இனி மூன்றாம் வினாவில் இதனையும் உடன் கூட்டி, ''இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?'' என்று கேட்டதாகவும் கொள்ளலாம். இவ்வினாக்களில் அவ்வம்மை

தசரதனைச் சந்தேகித்ததாகவோ, அவனால் தடை உண்டோ என்று கேட்டதாகவோ கொள்ள ஒரு சிறிதும் இடம் இன்மை காண்க.

**எதிர் பாரா விடை**

இத்தனை விவாக்களும் சாதாரணமான முறையிலேயே கேட்கப்படுகின்றன. அவள் சற்றும் எதிர்பாராத விடை அவளை இப்பொழுது தாக்குகிறது.

> ''மங்கை அம்மொழி கூறலும் மானவன்
> செங்கை கூப்பி, நின் காதல் திருமகன்
> பங்கம் இல்குணத்து எம்பி பரதனே
> துங்க மாமுடி சூடுகின் றான்,' என்றான்.''
>
> (நகர் நீங்கு. 4)

''இடையூறு ஏதேனும் உண்டோ முடி சூட?'' என்ற கேள்வி ஓரளவு பொருத்தம் இல்லாமல் வந்துவிட்டது கோசலையி விடத்து, 'ஏன் முடி சூடவில்லை?' என்று கேட்டிருக்கலாம். அப்பொழுது இராமன், ''பரதன் முடி சூடப் போவதால்'' என்று விடை கூறியிருப்பான். ஆனால், 'இடையூறு என்ன?' என்று கேட்ட பிறகு ''பரதன் முடி சூடப் போகிறான்,'' என்று இராமன் மொட்டையாகக் கூறி இருப்பின், ''பரதன்தான் இடையூறாகக் குறுக்கே நிற்கிறான்,'' என்றல்லவா பொருள் பட்டு விடும்? அவ்வாறு கூறுவது இராமனுடைய எண்ணமே அன்று. கோசலை கேள்வியோ, இக்கட்டாய் அமைந்துவிட்டது. எனவே அக்கேள்விக்கு உரிய விடையைத் தாராமல், இராமன், ''நின் காதல் திருமகன்'' என்றும், 'பங்கம் இல் குணத்து எம்பி'' என்றும் பரதனுக்கு அடைமொழி தரத் தேவைப்படுகிறது. இராமனுக்கு முடி சூட்ட இடையூறு நேரும் என்று கோசலை கனவிலும் கருதவில்லை. அவ்வாறு கருதி இருப்பினும், பரதன் காரணமாக இடையூறு ஏற்படும் என்று, அவள் கற்பனையிலும் கருத இடம் இல்லை. ஆதலால்தான் இத்தகைய வினாவை அவள் கேட்கிறாள்.

இவ்விடை கோசலையை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது என்றுதான் கூற வேண்டும். மைந்தன் வரவை எவ்வளவு ஆவலுடன் அவள் எதிர் பார்த்து நின்றாள் என்பதைச் சென்ற பாடலிற் கண்டோம். வாழ்நாள் முழுவதும் ஒன்றை எதிர்

பார்த்து நிற்க, இறுதியாக அது நடைபெற்றுவிட்டது என்று மகிழ்ந்து நிற்கும் வேளையில் அது தடைபட்டு விட்டது என்று அறிந்தால், ஒரு தாய்மனம் என்னபாடு படும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? அவள் எதிர்பார்த்து அஞ்சிய ஒன்று நடந்தே விட்டது. ஆனால், அஞ்சத் தக்க ஒன்று நடைபெற்று விட்டால், உலகில் உள்ள மக்கள் அவரவர்கள் பண்பாட்டிற்கு ஏற்ப மனம் மாறுபடுவார்கள். பண்பாட்டின் முடியாய் விளங்குகிற கோசலை இதனைக் கேட்டுப் பெரு வருத்தம் அடைந்தனளாயினும், அதனைக் காட்டிக் கொள்ளவில்லை. மேலும், அவளால் முற்றிலும் அன்பு செய்யப்பட்டவனேயாவான் பரதனும். இந் நிலையில் அவள் கூறுஞ்சொற்கள் அவள் பண்பாட்டை நமக்கு அறிவுறுத்துகின்றன. இதோ கோசலை பேசுகிறாள்.

“ ‘முறைமை அன்றுஎன்பது ஒன்றுஉண்டு; அதல்லது
நிறைகு ணத்தவன் நின்னினும் நல்லனால்:
குறைவு இலன், எனக் கூறினள் நால்வர்க்கும்
மறுஇல் அன்பினில் வேற்றுமை மாற்றினாள்,”

(நகர். 5)

‘இவ்வாறு செய்வது ‘முறைமை அன்று’ என்பது தவிரப் பரதன் உன்னைவிட நல்லவன்,’ என்று கூறினாள் நால்வரிடத்தும் ஒரே வகையான அன்புடைய கோசலை.

இதுவே கவிஞன் கோசலையைப் பற்றிக் கூறும் முடிபு. இவ்வாறு அவளைப் பற்றிக் கூறியது எவ்வளவு பொருத்த முடையது என்பதை அடுத்து வரும் அவளுடைய சொற்கள் காட்டுகின்றன.

“என்று பின்னரும், ‘மன்னவன் ஏவியது
அன்று எனாமை மகனே! உனக்குஅறம்;
நன் நும்பிக்கு நாநிலம் நீகொடுத்து
ஒன்றி வாழுதி ஊழி பல’, என்றாள்” (நகர் நீங்கு.6)

**அன்னையின் அறவுரை**

“மகனே, உன் தந்தை ஏவியது (அறம்) அன்று என்று எண்ணாமல், இந்நிலத்தை உன் தம்பிக்குத் தந்து நீவிர் நால்வரும் ஒற்றுமையுடன் பல காலம் வாழ்வீர்களாக!” என்று அறவுரை கூறுகிறாள். இப்பாடலின் முதல் அடி கூர்ந்து நோக்கற்குரியது. “மன்னவன் ஏவியது அன்று எனாமை” என்று பாடல் நேரே

செல்லவும், உரைகாரர் 'ஏவியது (அறம்) அன்று' என்று ஒரு சொல்லை வருவித்துப் பொருள் கூறியுள்ளனர். இராமன் கூறிய விடையில் "பரதன் முடி சூடப் போகிறான்," என்று கூறினானே தவிர, அவன் முடி சூட ஆணை தந்தது யார் என்பதைக் குறிப்பிட வில்லை. அவ்வாறு இருந்தும், கோசலை கூற்றாய் அமைந்துள்ள இப்பாடல், ''அரசன் ஆணை இடாவிடினும்'' என்று தொடங்கு கிறது. இதனால் ஏற்படும் சிக்கல் பெரியது. மன்னன் ஆணை இது என்பதைக் கோசலை எவ்வாறு உணர்ந்தாள்? இத்துணைப் பெரிய செயலை அரசனை அல்லாமல் வேறு ஒருவரும் செய்ய இயலாது என்று கோசலை ஊகித்துக் கூறியதாக அவர்கள் நினைக் கின்றார்கள் போலும்!

மைந்தனாகிய இராமனை அல்லாமல் தசரதனுக்கு உயிர் வேறு இல்லை என்பதை நன்கு அறிந்த ஒருத்தி உண்டெனில் அவள் கோசலையே. அப்படி இருக்க, மன்னவன் இவ்வாறு துணிந்து கூறி இருப்பான் என்று எவ்வாறு கோசலை முடிவுக்கு வந்தாள்? இராமன் கூறியவுடனே இவ்வாறு பரதனுக்கு முடியைப் பெறக்கூடியவர். யார் என்பதை அவள் ஊகித்துவிட்டாள். பன்னெடுங்காலம் தசரதனுடன் வாழ்ந்து, அவன் முதற்றேவியா கவும் உள்ள கோசலைக்குத் தசரதனுடைய மனநிலை விளங் காமலா போய்விடும்? 'அவன் எவற்றைக் கூறுவான்? எவற்றைக் கூறத் துணியமாட்டான்?' என்பவற்றை அப்பெண்ணரசி அறிய முடியாதா? இராமன் கூறினவுடனே கோசலைக்கு இவ்வாறு யார் கூறி இருக்க முடியும் என்ற ஊகம் பிறந்து கைகேயியைப் பற்றி முடிவு செய்துவிட்டாள். பெண்களுக்கு இயற்கையாகவே காரணம் இன்றியும் ஒன்றனை அறியும் ஆற்றல்[1] உண்டு என்று கூறுவர். அந்த ஆற்றல் காரணமாகக் கோசலை உண்மையில் ஆணை இட்டவள் கைகேயியே என்பதை ஒரு நொடியில் அறிந்து கொண்டாள் என்றும் கூறலாம். கம்பனுடைய கோசலைக்கு இத் தகைய பண்பாட்டைத்தான் கூறமுடியும். ஆனால், வான்மீகரின் கோசலை தசரதனுடன் சேர்ந்து முடியை இராமனுக்குப் பெறச் சூழ்ச்சி செய்கிறாளாகலின், அவள் உண்மை கண்டது வியப்பன்று. ஆனால், கம்பநாடன் கோசலை சூழ்ச்சி செய்ததாகக் கூற இடமே இன்று. எனவே, அவள் அறிவுத் திறத்தாலும், இராமனுடைய சொற்களில் மன்னவன் பெயர் வாராமையாலும், இந்த முடிவுக்கு வந்தாள் என்று கூறியது பொருத்தமே. தசரதன் நேரே கூறி

1. Intution

இருப்பின், இராமன் அதைக் குறிப்பிடாதிருக்க நியாயம் இல்லை. ஆனால், அரசனையல்லாமலும் அவன் பெயரில் ஆணை இட வேண்டுமாயின், அரசன் உரிமை மனைவியாகிய கைகேயி தவிர, யாரால் முடியும்? எனவே, இந்த முறையிலும் அவள் முடிவு செய்தாள் என்றும் கூறலாம். தன் கணவன் வாயால் இவ்வாறு கூறத் துணியமாட்டான் என்பதைக் கோசலை நன்கு அறிவாள். இக்கருத்து முறையானது என்பதைக் கம்பராமாயணத்தை ஒரு முறை கற்றாரும் நன்கு அறிய முடியும். தசரதன் வாயால் இராமனுக்கு முடி இல்லை என்றோ அவன் வனம் புக வேண்டுமென்றோ ஒரு முறைகூடக் கூறவில்லை. எனவே, அவனைப் பற்றிக் கோசலை கொண்ட கருத்தும் பொருத்தம் உடையதே ஆகும். அரசன் கருத்தை ஏற்றோ ஏற்காமலோ கைகேயிதான் இவ்வாறு கூறியிருக்க வேண்டும் என்றும், அதனாற்றான் இராமனும் இது மன்னன் ஆணை என்று கூறவில்லை என்றும் அவ்வறிவுடைப் பெருமகள் கண்டு கொண்டாள். எனவே, மகனுக்கு அறவுரை கூறுமுகமாக, ''இது அரசன் ஆணை அன்று என்று ஒதுக்கிவிடாமற் கீழ்ப்படிதல் முறை,'' என்று கூறினாள். இதனால் விளைந்த தொல்லையை உணர்ந்த இராமன், அடுத்த பாடலில் விரிவாகக் கூறுகிறான்.

**கோசலைக்கு உற்ற பேரிடி**

''தாய்உ ரைத்தசொல் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தைஅத் தோமில் குணத்தினான்,
'நாய கன்எனை நல்நெறி உய்ப்பதற்கு
ஏயது உண்டுஓர் பணி,' என்று இயம்பினான்.

''ஈண்டு உரைத்த பணி என்னை?' என்றலும்;
' ஆண்டுஓர் ஏழினொடு ஏழ்அகள் கானிடை
மாண்ட மாதவ ரோடுஉடன் வைகிப்பின்
மீண்டு நீவரல் வேண்டும்என் றான்,'என்றான்,''

(நகர் நீங்கு.7, 8)

இப்பாடல்கள் ஆய்ந்து கொள்ளற்கு உரியன. முதற்பாடலில் கோசலையின் எண்ணத் தவறுதலை எடுத்துக்காட்டுவான் போன்று, ''நாயகன் ஏயது ஒரு பணி உண்டு,'' என்று கூறி விடுகிறான். இந்த அளவில் கோசலைக்குத் தன் கணவன்தான் ஏவினான் என்ற எண்ணம் தோற்றுகிறது. இனி இதனை அடுத்து

மற்றோர் பணி யாதாக இருக்கும் என்று அவள் கேட்பது அசட்டையோடு கூடி உள்ளது. அவளைப் பொறுத்தவரை இராமனுக்கு முடி இல்லை என்று கூறுவதைக்காட்டிலும் கொடிய செயல் வேறு ஒன்றும் இருத்தற்கில்லை போலும்! எந்தக் கணவன் இவ்வாறு கூறத் துணியமாட்டான் என்று அவள் முழு உறுதியோடு நம்பினாளோ, அந்தக் கணவனே கூறினான் என்று இராமனே கூறிவிட்டமையின், தசரதன் அவளுடைய மதிப்பில் மிகுதியும் இறங்கிவிட்டான். ஆதலாற்றான், "நாயகன் ஏயது ஓர் பணி உண்டு," என்ற இராமன் கூறவும் கோசலை சாவதானமாக, "ஈண்டு உரைத்த பணி என்னை?" என்று கேட்கிறாள். அணையப் போகிற விளக்கு மிக்க ஒளியுடன் எரிவது போலப் பெருந் துன்பத்தில் ஆழப்போகிற கோசலைக்கு இப்பொழுது ஒரு வினாடி அமைதி கிட்டுகிறது. இராமனுக்கு முடி இல்லை என்ற செய்தி யால் தாக்குண்ட அவளுக்கு இன்னும் அச்செய்தியின் முழு ஆற்றலும் நன்கு விளங்கவில்லை. மனத்திற்குப் பெரிதும் அதிர்ச்சியைத் தரும் செய்தியைக் கேட்டால் உடனே அது முற்றிலும் விளங்குவதில்லை. சிறிது நேரம் சென்ற பிறகுதான் செய்தியின் கருத்து நன்கு விளங்கும். இந்த இடைப்பட்ட நேரத்தில் ஒரு வகை அமைதி குடி கொண்டிருக்கும். அத்தகைய அமைதியிலே தான் இப்பொழுது கோசலை இருக்கிறாள். இரண்டாம் பாடலின் பின் இரண்டு அடிகள், அவள் வாழ்வையும் உயிரையும் குலைக்கப் போகிற நிகழ்ச்சியைக் கூறுபவை. என்றாலும், பண்பாட்டின் முடி என விளங்கும் இராமன் எவ்வளவு அந்நிகழ்ச்சியின் கொடுமையைக் குறைக்க முடியுமோ, அவ்வளவு குறைக்கிறான். வனம் புகுந்து வாழ வேண்டிய கால எல்லை இன்றியமையாத தாகலின், அந்த அளவைக் குறைப்பதுபோலக் கூறுகிறான். பதினான்கு ஆண்டுகள் என்று கூறி அவள் மனத்தை அதிர அடிக் காமல் "ஏழிரெண்டேழு" என்று கூறுவது கோசலையினது தாயுள் ளத்தின் மென்மை கருதியே. 'புண்ணிய நதிகளாடி வரப் போகி றேன்,' என்று காடு சென்று வருதற்கு இராமன் கூறிய காரணமும் இது கருதியேயாகும்.

**தசரதனின் நிலை**

இச்சொற்கள் காதிற்பட்டவுடன் அத்தாய் "ஏங்கினாள், இளைத்தாள், திகைத்தாள், மனம் வீங்கினாள், விம்மினாள், விழுந்தாள்," (நகர். 9) என்று கூறப் பெறுகிறது. உள்ளே அடைக்கும் இவ்வுணர்ச்சி வெளிப்பட்ட பின் அவள் பேசுகிறாள்.

''வஞ்ச மோமக னே!உனை மாநிலம்
தஞ்ச மாகநீ தாங்குஎன்ற வாசகம்?
நஞ்ச மோ? இனி நானுயிர் வாழ்வெனோ?
அஞ்சும் அஞ்சும்என் ஆருயிர் அஞ்சுமால்!''

(நகர் நீங்கு. 10)

இம்முறை வாய் திறந்தவுடன் கோசலை தசரதனைப் பற்றித் தான் நினைக்கிறாள். அவள் தன் கணவனைப் பற்றி இதுவரை நினைக்கவும் துணியாதவற்றை இப்பொழுது வாயாற்கூறுகிறாள். தசரதன் இராமன்மேற்கொண்ட அன்புகூடப் பொய்யோ என்ற ஐயம் அவள் மனத்தில் தோன்றுகிறது. முதல் நாள் அவனாகக் கூப்பிட்டு 'இவ்வரசை நீ ஏற்றுக்கொள்,' என்று ஏன் கூறவேண்டும்? இன்று, 'உடனே நீ காடு செல்,' என்று ஏன் கூறவேண்டும்? கோசலைக்கு ஒன்றுமே விளங்கவில்லை. தசரதனுடைய நல்லெண்ணத்திற்கூட ஐயம் தோன்றிவிட்டது அத்தாய்க்கு. தான் பெற்றபிள்ளைக்கே வஞ்சம் இழைத்துவிட்டானோ தந்தை என்று கேட்கிறாள். இராமனைக் காடு அனுப்ப ஒரு காரணம் வேண்டித் தான் 'முடி தருகிறேன்,' என்று கூறினானா? தசரதன் உண்மை நிலையை அவள் எவ்வாறு அறிய முடியும்? மகனே தந்தையின் ஆணை என்று கூறிய பிறகு அதில் ஐயங்கொள்ள வேண்டிய இன்றியமையாமை ஏது? எவ்வளவு ஆராய்ந்தாலும் மன்னவன் செயலுக்குக் காரணம் காண முடியவில்லை அக்காரிகையால். இராமன் அருங்குண விசேடத்தை நன்கு அறிந்திருந்தும், அவன் தவறு என்பதைக் கனவிலும் கருதாதவன் என்பதை நன்கு அறிந்திருந்தும், ''அன்பு இழைத்த மனத்து அரசற்கு நீ என் பிழைத்தது?'' (நகர். 13) (உன்பால் கழிபெருங்காதல் உடைய அரசனுக்கு நீ யாது பிழை செய்தாய் மகனே) என்று கூடக் கேட்டு விடுகிறாள் கோசலை. இவ்வஞ்சத்தக்க நிகழ்ச்சி நடைபெற யார் காரணம் என்பதை நினைத்துப் பார்க்கிறாள் கோசலை. தசரதன் இராமன்மேற் கொண்டுள்ள அன்பையும் அவள் அறிவாள்; இராமன் தவறு இழைக்காதவன் என்பதையும் நன்கு அறிவாள். எனவே, முதலில் அரசன் செய்தது வஞ்சமோ என்று கோசலை அதனை ஒத்துக் கொள்ள மறுத்து, 'மகனே, தவறு இழைத் தாயோ?' என்று வெம்புகிறாள். தசரதன் இராமன்மேல் கொண்டுள்ள காதலை நன்கு அறிவாள் ஆகலின், தசரதன் வாயால் இவ்வாறு கூறியிருக்கமாட்டான் என்றே கருதுகிறாள். ஆனால், அரசனே கூறினான் என்பது ஐயமறத் தெரிந்துவிட்டது. எனவே, அவன் அவ்வாறு கூறக் காரணத்தை ஆராய்கிறது தாய்

மனம். ஒரு வேளை மகன்தான் பொறுத்தற்கு அரிய பிழையைச் செய்து விட்டானோ என்றும் கேட்கிறாள். இராமனோ தந்தைக்குத் தவறு இழைப்பவன்! இவ்வாறு நினைக்கக்கூட அவள் மனம் வெதும்புகிறது. ஆனாலும். வேறு வழி இல்லை. எனவே, புவிக்கெலாம் வேதமேயன இராமனை'ப் பார்த்து, 'நீ தவறு இழைத்தாயோ?' என்று கேட்கிறாள்.

அறக் கடவுளின் துணை வேண்டல்

இதனை அடுத்து மகன் தவறு செய்யாதவன் என்ற எண்ணமும் மீதூர, அத்தாய் பிறர்மேல் குற்றம் காணவியலாமல், அறக் கடவுளை நோக்கித் துணை வேண்டுகிறாள் "'அறம் எனக்கு இல்லையோ?' என்னும்; 'ஆவிநைந்து இற அடுத்தது என் தெய்வதங்காள்!' என்னும்." (நகர், 14) ("அறக் கடவுளே, நீயாவது எனக்குத் துணையாக இருக்கமாட்டாயா? தெய்வங்களே, இவ்வளவு தீவினை என்னை வந்து அடுப்பதற்கு யான் என்ன தவறு இழைத்தேன்?" என்று அலமருகிறாள்). இவ்வாறு கூறி அத்தாய் மயக்கமுற்றுக் கீழே விழ, உடனே இராமன் அவளைக் கையில் தாங்கிக்கொண்டான். இடர்க்கடலில் வீழ்ந்து நையும் தாயை நோக்கி இராமன் கூறும் சொற்கள் ஆய்தற்குரியன.

"இத்தி றத்தின் இடர்உறு வாள்தனைக்
கைத்த லத்தின் எடுத்து,அருங் கற்பினோய்!
பொய்த்தி றத்தினன் ஆக்குதி யோபுகல்
மெய்த்தி றத்துநம் வேந்தனை நீ'எனா" (நகர். 15)

இந்த நிலையில் இடர் உற்ற தாயைக் கைகளால் எடுத்து, 'அரிய கற்பினை உடையவளே, மெய்ம்மை கூறும் மன்னனைப் பொய் பேசுபவனாக்கப் போகிறாயா?' என்றான்.

மைந்தன் அறவுரை

'அவசமுற்ற நிலையில் உள்ள தாயை அமைதி கூறிச் சாந்தப் படுத்த வேண்டிய இராமன் இவ்வாறு கூறலாமா?' என்றுகூடக் கேட்கத் தோன்றுகிறது. 'மெய்ம்மைக்கு உறைவிடமான நம் மன்னனை நீ பொய்யுடையவன் ஆக்குவது முறையோ?' என்று இராமன் கூறக் காரணம் யாது? இப்பாடலின் நான்காம் அடியில் அதற்கு விடை கூறுகிறான் கவிஞன். இராமனைப் பொறுத்த வரை தசரதன் தந்தையாவான்; கோசலையைப் பொறுத்த வரை கணவனாவான். எனவே, இவ்விருவரும் அவனிடம் மன்றாடித் தாம் வேண்டியவற்றைப் பெறுதல் முறை. ஆனால், இவை

அனைத்தினும் மேலாக அவன் மன்னன் என்ற முறையில் உண்மை ஒன்றுக்கே அவன் கட்டுப்பட வேண்டுமே தவிர, மனைவி மகன் போன்ற உரிமை இங்குப் பாராட்டப்பட நியாயமில்லை. தசரதன் மகன்மேற்கொண்ட காதலால் தவறு இழைத்தாலும், உலகம் மன்னன் தவறு இழைத்ததாகவே தூற்றும். தன் தந்தை மகன் மேற்கொண்ட காதலால் குலத்துக்கே பழி தேட எந்த மைந்தன்தான் விரும்புவான்? ஒரு வேளை தாய் தன்னுடைய பெண்மையாலும், மகன்மேற்கொண்ட காதலாலும் அதனை மறந்துவிடப் போகிறாளோ என்று அஞ்சிய மைந்தன், அக்கடமையை அவட்கு நினைவூட்டுவான் போல, 'நம் வேந்தனை' என்று குறிப்பிடுகிறான். அன்றியும், இராமன் அவளைத் 'தாயே' என்று விளிக்காமல், 'அருங்கற்பினோய்', என்று விளிப்பதிலும் ஒரு கருத்து அடங்கியுள்ளது. 'கணவனுக்குத் துணையாய் நின்று கடமையை நிறைவேற்றுவதா, மகன் மாட்டுக் கொண்ட காதலால் கணவனுக்கு விரோதமானவற்றைச் செய்வதா?' என்ற தரும சங்கடமான நிலையில் நிற்கிறாள் கோசலை. இந்த நிலையில் அவளது கடமை முதலில் கணவனுக்கும் பிறகே மகனுக்கும் என்பதை நினைவூட்டுகிறான் கடமையைப் போற்றத் தோன்றிய வள்ளலாகிய இராமன். 'கற்பைக் காப்பது கணவன் பக்கம் நிற்றலே,' என்பதை 'அருங்கற்பினோய்', என்ற விளியால் அவளுக்கு அறிவுறுத்திவிட்டான். இவ்வாறு கோசலையின் கடமையை நினைவூட்டிய பிறகு மிக அமைதியாகவும் அழகாகவும் சொல்ல வேண்டியவற்றை அவள் மனத்திற்பதியும்படி கூறினானாம் அவ்வாறு அவன் யாது கூறினான்? ''சிறந்த தம்பி திருவுற எந்தையை மறந்தும் பொய்யிலன் ஆக்கிப் பின் மீள்வன்,'' என்பதே அவன் கூறிய வாசகம். மகன் பதினான்கு ஆண்டுகள் வனத்திடை வாழப்போகிறான் என்பதையும் அதனைத் தடுக்கத் தனக்கு வன்மை இல்லை என்பதையும் உணர்ந்துகொண்ட அத் தாய் மனம், வேறு வழி இன்றி எஞ்சியுள்ள ஒரே முடிவைச் செய்யத் துணிந்துவிட்டது. இராமனைத் தன்பால் நிறுத்திக் கொள்ள இயலவில்லையாயின், தான் இராமனிடம் சென்று விடலாம் அன்றோ?

''‘சாக லாஉயிர் தாங்கவல் லேனையும்
போகில் நின்னொடும் கொண்டனை போ’கென்றாள்.''
(நகர் நீங்கு. 19)

தாய் மனம் செய்த இந்த முடிவை மகன் ஏற்றுக்கொள்ள முடியுமா? எத்துணைச் சிறந்த தலையாய தாயன்பேயாயினும்

கணவன் உயிருடன் இருக்கின்ற வரை அவனுக்குச் செய்ய வேண்டிய கடமையின் பின்னே வர வேண்டுவது அன்றோ அத் தாயன்பு? எனவே, சிறந்த பண்புடையவனாகிய இராமன், அதனை இப்பொழுது நினைவூட்டுகிறான்.

'''என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுஉடன்
துன்னு கானம் படரத் துணிவதே?
அன்னை! நீஅறம் பார்க்கிலை ஆம்,' என்றான்.

''வரிவில் எம்பிஇம் மண்அர சாய்அவற்கு
உரிமை மாநிலம் உற்றபின் கொற்றவன்
திருவில் நீங்கித் தவம்செயும் நாளுடன்
அருமை நோன்புகள் ஆற்றுதி யாம்அன்றே?''

(நகர் நீங்கு. 20,21)

எது வரினும், எது போகினும் கணவனுடைய நலம் தீங்குகளிற் பங்குகொள்ள வேண்டிய கடமையே ஒரு பெண்ணுக்கு முதன்மையானது என்பதை இராமன் தன் அருமைத் தாய்க்கு நினைவூட்டுகிறான். இராமன் வேண்டுகோளின் உண்மையை உணர்ந்த கோசலை அதனை மறுக்கவும் மாட்டாமல், ஏற்றுக் கொள்ளவும் மாட்டாமல் திகைப்பெய்திவிட்டாள்! இத் திகைப்பைக் கண்ணுற்ற இராமன், ''சித்தம் நீ திகைக்கின்றது என்?'' என்றும், ''பதினான்கு ஆண்டுகளும் பதினான்கு பகல்கள் தாமே?'' என்றும் கூறி, அப்பிரிவின் கொடுமையைக் குறைக்க முயல்கிறான். அப்பதினான்கு ஆண்டுகளிலும் தான் வனத்திடைத் தங்கி அரிய தவங்கள் செய்து, முனிவர்களுடைய நட்பையும் ஆசியையும் பெற்று வரப் போவதாகவும் அவன் கூறுகிறான். இவ்வாறு கூற ஒரு காரணமும் உண்டு. எந்தத் தாய்தான் தன் மகன் பெறப் போகும் நற்பேறுகளை வேண்டா என்று மறுப்பவள்? மகன் நல்ல நிலை அடைய அதனால் சிறிது தனக்குத் துன்பம் வரினும் தாய் அதனை மகிழ்வுடன் ஏற்றுக்கொள்ளத்தானே செய்வாள்? சிறந்த தாயிடம் காணப்படும் இவ்விலக்கணத்திற்குக் கோசலை விலக்கா மாறு எங்ஙனம்?

### அறவழி வாழ்க்கை

அறம் மிகவும் கடுமையானது. அதனைக் கடைப்பிடிப்பவர் இன்பமாக வாழ்வது கடினம். அடுத்த உலகில் அவர்கள் பெறப்

போகும் பயனைக் கருதி இவ்வுலகில் வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ள உறுதி பூண்டவர்களே அறத்தை விடாமல் இறுதிவரைக் கடைப்பிடிக்க முடியும்.

அறத்தைப் போற்றுபவர் இரு வகையினர். ஒரு வகையார், மறு உலகத்தில் பெறப்போகும் பயன் கருதியே இவ்வுலகத்தில் அதனை ஏற்று வாழ்கின்றனர். இவர்களும் ஒரு வகையில் வணிகர் களே.

இன்னும் ஒரு வகையார் இவ்வாறு பயன் கருதி அறவழி ஏடப்பதில்லை. அறத்தை அறத்துக்காகவே மேற்கொள்பவர்கள் இவர்கள். இவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவாயினும், உலகிற்கு உயிர் போன்றவர்கள் இவர்களே.

இராமன் இந்த இரண்டாவது வகையைச் சேர்ந்தவன். அவன் அறவழி நடக்கையில் விருப்பு வெறுப்புகட்கு ஆளாகவில்லை. அவனுக்கு மிக வேண்டியவர்களும், வேண்டாதவர்களும் ஒன்றா கவே கருதப்படுகின்றார்கள். தசரதன், கோசலை என்பாரிடம் கொண்டிருந்த அன்பு காரணமாகவும் அவன் கடமை பிழைத்து விடவில்லை இராவணன் மாட்டுக் கொண்ட பகைமை காரண மாகவும் அவன் கடமை பிறழவில்லை. தசரதன் இறந்துவிடுவான் என்பதை அறிந்திருந்தும், இராமன் காடு சென்றுவிட்டான்; இராவணன் தீமையை அறிந்திருந்தும், அங்கதனைத் தூதாக அனுப்பினான்; முதல் நாட்போரில் அவனுக்கு உயிர்ப்பிச்சை நல்கி மறுநாள் வருமாறு ஏவினான். உண்மை அறத்தை அறிந்து அதனை அவ்வறத்தின் மேற்கொண்ட காதலால் கடைப்பிடிப்பவர் கட்கு ஈடு இல்லை.

**இராமனை அறியாதவர்**

இராமனுடைய இந்த ஒப்புயர்வு அற்ற பண்பாட்டை அவ னுடைய தாய் தந்தையரே முற்றிலும் அறிந்து கொள்ளவில்லை என்று நினைய வேண்டி உளது. அல்லாவிடில், இறுதி வரை அவனைக் காடு செல்லாமல் மீட்டுவிடத் தசரதன் ஏன் முயல் கிறான்? தன்மேல் பழி வாராமல் வசிட்டன் எவ்வாறேனும் அவனை அழைத்து வர வேண்டும் என்று ஏன் கூறுகிறான்? இவன் ஒரு புறம் இருக்க, பெற்றெடுத்த தாயாகிய கோசலைகூட இராமனை முற்றிலும் அறிந்துகொள்ளவில்லை. அறிவால் சிறந்த கோசலை இதனை அறியவில்லை என்றால், அதற்குக் காரணம் அவளுடைய தாயன்பே தவிர, வேறு ஒன்றும் இருத்தற்கில்லை.

"இவன்இஞ் ஞாலம் இறந்துஇருங் கானிடைத்
தவம்நி லாவகை காப்பன் தகைவுஇலாப்
புவனி நாதன் தொழுது." (நகர் நீங்கு. 28)

என்று முடிவு செய்துகொண்டு போகிறாள் அத்தாய்.

இந்த முடிவுடன் கோசலை தன் கணவன் இருக்கும் கைகேயி கோயிலுக்குச் செல்கிறாள். கைகேயி அரண்மனைக்குப் புறப்பட்டுச் செல்கையில் கோசலையின் மனத்தில் தசரதனைப் பற்றிய மிகத் தவறான எண்ணமே நிறைந்திருந்தது. பிறர் சூழ்ச்சிக்கு அவன் பலியாகிவிட்டான் என்பதை அறியாத அந்தப் பேதை, அவனை ஒரு பெரிய சூழ்ச்சிக்காரன் என்றே மதித்துவிட்டாள். "தகைவு இலாப் புவனி நாதன்" (28) என்று அவள் கூறும் பொழுது தசரதனைப் பற்றி அவள் கொண்டிருந்த எண்ணம் புலனாகிறது. இவ்வாறு தசரதனைப் பற்றி அவள் தவறாக நினைக்கத்தக்க காரணமும் உண்டு. சூழ்ச்சியின் அடிப்படை கைகேயியினிடம் தொடங்கிற்று என்று முழுவதும் நம்பி இருந்த அவளை இராம னுடைய சொற்கள் மனமாற்றம் கொள்ளச் செய்தன. ஆனாலும், தசரதன் வேண்டா வெறுப்புடன் வேறு வழி இன்மையாலேதான் இவ்வாறு கூறினான் என்பதைக் கோசலைக்கு அவன் கூறவில்லை அல்லவா? மேலும், இராமனுக்கே அதுபற்றி உறுதியாக ஒன்றுந் தெரியாது. ஆதலாலேதான் கோசலை தசரதனைப் பற்றிய தவறான எண்ணத்துடன் கைகேயியின் அரண்மனை புகுந்தாள். ஆனால், அங்கு அவள் சற்றும் எதிர்பாராத காட்சி கிட்டுகிறது. கணவன் அவசமுற்றுப் பார்மிசை வீழ்ந்து கிடக்கும் நிலையைக் காண்கிறாள். "உயிர் உடைந்த போது உடல் வீழ்ந்ததென்ன"(30) அவளும் அவன் மேல் வீழ்ந்து அரற்றுகிறாள். அப்பெருமாட்டி அரற்றுவதாக அமைந்த நான்கு பாடல்களிலும் அவளைப் பற்றி நாம் மிகுதியாக அறிய முடிகிறது. பன்னெடு நாட்களாகவே தசர தன் கைகேயியிடத்துக் கழிபெருங்காதல் கொண்டு அவளிடமே தங்கிவிட்டாலும், கோசலைக்கு அவன்மாட்டு இருந்த காதல் சற்றுங் குறையவில்லை என்பதை இப்பாடல்கள் அறிவுறுத்து கின்றன. "பிரியார் பிரிவு ஏது என்னும்", "தமியேன் வலியே என்னும்" (31) இவ்வாறு புலம்பும் அவள் அன்பின் ஆழத்தை இதோ ஒரு பாடல் தெரிவிக்கிறது.

"'திரையார் கடல்சூழ் உலகின் தவமே! திருவின் திருவே!
நிரையார் கலையின் கடலே! நெறியார் மறையின் நிலையே!

கரையா அயர்வேன் எனைநீ கருணா லயனே! என்என்று
உரையா இதுதான் அழகோ? உலகுஏ ழுடையாய்!'
என்னும்.'' (நகர். 33)

இதற்கு முன் உள்ள பாடல் தசரதன் மாட்டு அவள் கொண்டிருந்த பெருமதிப்பையும் காட்டுகிறது. ''உலகம் பொருள் அற்று அருளக் கருதிற்று!'' என்ற அடியால் தசரதன் இறந்து பட்டால் உலகம் பிரளயம் வந்து அழிந்தது போலக் கலங்கிவிடுமே என்று கலங்குகிறாள். ஏனைய மன்னர்களைப் போலத் தன் கணவனும் ஒருவனே என்று நினையாமல், இவ்வாறு கூறுவதால், அவனிடம் அவள் கொண்டிருந்த பெருமதிப்பே வெளியாகிறது. அடுத்து இதன் காரணத்தை இன்னும் முற்றும் அறிந்துகொள்ளக் கூடாமையின், ''மன்னன் தகைமை காண வாராய் மகனே!'' என்னும் கோசலையின் இந்தப் பெருந்துயரம் வசிட்டன் வரை எட்டி, அவனும் அங்கு வந்துவிட்டான்.

தசரதன் மயக்கமுற்ற நிலையில் அவனிடம் இருந்து அரற்றும் பொழுது கோசலைக்கு ஒரு புதிய நினைவு வருகிறது. 'மாற்றாளே இந்தத் துயரைச் செய்தாள்,' (52) என்பதை உடன் அறிந்து கொண்டாள். ஆனால், இராமன் இதுபற்றி ஒன்றும் அறியாமல் அரசன் தானாகவே இவ்வாறு செய்துவிட்டான் என்று நம்பித் தானே தன்னிடம் கூறினான்? எனவே, இராமனை இப்பொழுது 'வாராய்' என அழைக்கிறாள். தன் கணவன் ஒரு நாளும் இம் மாதிரி தானே வேண்டுமென்று செய்திருக்கமாட்டான் என்ற அவளுடைய எண்ணம் உண்மையாகிவிட்டது. எனவே, தன் கணவனைப்பற்றித் தவறான எண்ணங்கொண்டுள்ள மகனுடைய மன நிலையை மாற்ற வேண்டும் என்று கருதியதால், ''மன்னன் தகைமை காண வாராய் மகனே,'' (நகர். 34) என்று ஓலமிடுகிறாள்.

வசிட்ட முனிவன் வந்து உபசரித்த பின்னரே தசரதன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். அம்முனிவனும் மன்னனும் தனித் தனியே வேண்டியும், கைகேயி சற்றும் இணங்க மறுத்துவிட்டாள். இம்மூவரும் பேசிக்கொண்டதைக் கேட்ட பிறகுதான் கோசலை மனத்தை அழுத்திக்கொண்டிருந்த பெரும் பாரம் குறையலாயிற்று. கணவனே இராமனைக் காட்டுக்கு அனுப்பக் காரணமாய் இருந்தானோ என்று அவள் மனத்தில் ஒரு மூலையில் தோன்றிய ஐயம் இப்பொழுது முற்றிலும் நீங்கிவிட்டது.

''மாற்றாள் செயலாம் என்றும்
கணவன் வரம்ஈந்து உள்ளம்
ஆற்றாது அயர்ந்தான் என்றும்
அறிந்தாள் அவளும் மனத்தைத்
தேற்றா நின்றாள் மகனைத்
திரிவாய் என்றாள் அரசன்
தோற்றான் மெய்என்று உலகம்
சொல்லும் பழிக்குச் சோர்வாள்.''

(நகர் நீங்கு 52)

இராமன் காடு செல்ல நேரிட்டமைக்கு முற்றிலும் பொறுப்பாளி தன் மாற்றாளாய கைகேயியே என்பதைத் தெரிந்து கொண்ட கோசலை, ஒரு நல்ல செயலைச் செய்ய முனைந்தாள். பெண்ணாய்ப் பிறந்த அவளுக்கே மற்றொரு பெண்ணின் மன நிலையைக் காண முடியும். எனவே, அவள் முனிவனைப் போலத் தானும் கைகேயியை நோக்கி வேண்டவில்லை. இறுதிவரை இராமனைப்பெற்ற தாயாகிய அவள், கைகேயியை நோக்கி ஒரு சொல்லைக்கூடச் சொல்லாதது சற்று வியப்பையே தருகிறது. உலகம் முழுதும் அஞ்சி மரியாதை செய்யும் வசிட்டமுனிக்கும் காதற்கணவனுக்கும் இரக்கம் காட்டாத கைகேயி, மாற்றாளாய தன் சொல்லுக்கு உறுதியாகச் செவி சாய்க்க மாட்டாள் என்பது கோசலைக்கு நன்குதெரியும் எனவே, சொல்லி வாய் இழப்பதைக் காட்டிலும், சொல்லாமலே தன் மானத்தைக் காப்பாற்றிக்கொள் கிறாள் அப்பெண்ணரசி. இராமன் பிரிவால் தசரதனைக்காட்டிலும் வருந்தப் போகிறவள் கோசலைதான் எனினும், பெண் குலத்துக்கே உரிய முறையில் தன் பிள்ளைப்பாசத்தையும் அன்பையும் ஒரு புறம் ஒதுக்கிவிட்டு இப்பொழுது கடமையை மேற்கொள் கிறாள் கோசலை. தன்னைக் காத்துக்கொள்ளுதலின் அடுத்தபடியிலே நிற்கின்ற கடமை தன் கொண்டானைப் பேணுதல் அன்றோ?

''தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.'' (குறள். 56)

இதோ தசரதனுக்கு அறிவுரை கூறத் தொடங்கி விட்டாள் கோசலை.

**கோசலையின் அறிவுரை**

''அரசரே, தள்ளத் தகாத பெருமையுடைய வாய்மையை ஏற்றுக்கொண்டு அதன் வழி நிற்கும் பொழுது மகன்மேல் அன்பு

கொண்டு இருத்தல் உம் பெருமைக்கு இழிவு தருமானால் அதனை உலகம் ஏற்றுக்கொள்ளுமா?'' என்ற கருத்து அமைய,

''தள்ளா நிலைசால் மெய்ம்மை தழுவா வழுவா வகைநின்று
எள்ளா நிலைகூர் பெருமைக்கு இழிவாம் என்றால் உரவோய்!
விள்ளா நிலைசேர் அன்பால் மகன்மேல் மெலியின் உலகம்
கொள்ளாது அன்றோ?' என்றாள் கணவன் குறையக்
குறைவாள்.'' (நகர். 53)

என்று வரும் பாடல் ஆய்ந்து நோக்கற்கு உரியது.

தரும சங்கடம்

''சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.'' (குறள். 664)

என்ற முதுமொழி யாண்டும் பொய் ஆவதில்லை அல்லவா? கணவன் இத்தனை காலம் வாழ்ந்துவிட்டு இறக்கப்போகும் தறுவாயில் 'சொல்லைக் காப்பாற்றாதவன்' என்ற பெயருடன் இறப்பதை அவள் விரும்பவில்லை. அவனைச் 'சொல் தவறியவன்' என்ற பழியிலிருந்து காக்க வேண்டுமாயின், அதற்கென அவள் செய்ய வேண்டிய தியாகம் எத்துணைப் பெரிது! தான் பெற்ற ஒரே மகனை இழப்பது தான் அந்தத் தியாகம். ஊரில் வாழும் மாந்தர் அனைவருங்கூட, ''உய்யாள் பொன்கோசலை என்று ஓயாது வெய்துயிர்ப்பார்'' (நகர். 108) என்றால், பெற்ற தாயின் துயரைப் பேசவும் வேண்டுமோ! எனவே, கணவனை நோக்கி ''வருந்த வேண்டா,'' என்று கூறிய கோசலை, தரும சங்கடம், என்று கூறப்பெறும் இடர்ப்பாட்டில் சிக்கிக்கொள்கிறாள். அறம் எத்துணைக் கொடிது என்பதை முன்னர்த் தசரதன் அறிந்தது போல இப்பொழுது இத்தாய் அறியத் தொடங்கிவிட்டாள். ஒரு புறம் கணவனும் அவனுடைய புகழும்: மற்றொரு புறம் காதல் மைந்தன். இருவருக்கும் நன்மை தேடத் தன் உயிர் தேவைப்படின் அதனை அவள் விருப்பத்தோடு தருவாள். ஆனால், இப் பொழுதைய நிலையில் யாரானும் ஒருவரைத் துறந்துதான் மற்ற வரை அடைய வேண்டும். யாரை விட்டு யாரை வேண்டுவது? கற்புடையவள் என்ற முறையில் கணவன் நலம் பெற்றால் சரி என்று நினைப்பதா, பெற்ற தாய் என்ற முறையில் மைந்தன் நலம் பெற்றால் சரி என்று நினைப்பதா? கோசலையின் நிலை மிக இரங்கத் தக்கதாகிறது! கோசலை யாராவது ஒருவரைக் காத்தலே முறை என்று மற்றொருவரைத் தியாகம் செய்ய முடிவு செய்வ

தாக வைத்துக்கொள்வோம். அப்பொழுதும் அவள் எண்ணம் முற்றுப் பெறும் என்று கூறுவதற்கில்லை. இவற்றின் இடையே நாம் சற்றும் எதிர்பாராத ஒரு நிலை வருதலும் கூடுமன்றோ? இராமனும் தந்தை கட்டளையை மீறக்கூடாது என்ற கருத்தில் அடவி சென்றுவிடலாம். இராமனுடைய பிரிவுத் துயரம் தாங்காத தசரதன் இறந்துபடவும் கூடும். "வாய்த்தவிடும் போய் அடுப்பு நெருப்பும் இழந்தது போல" என்பது பழமொழி. அதுபோல இராமனையும் உயிருடன் இழந்து தசரதனையும் இழக்கும் நிலை ஏற்படலாம். அத்தகைய கொடுமையைக் கோசலை நினைக்கவும் அஞ்சுகிறாள். ஆனால், அந்த நிலை வந்தே தீரும் என்று தோன்று கிறது அவளுக்கு. சில சமயங்களில் சில நினைவுகளை மனத்தால் நினைக்கவும் அஞ்சுகிறோம்; ஆனால், அந்நினைவுகளை அகற்றவும் முடிவதில்லை. நினைப்பதும் பெருந்துன்பம்; நினையாதிருப்பதும் இயலாத காரியம். இது போன்ற ஒரு நிலை கோசலைக்கு உண்டாவதைக் கவிஞன் இதோ கூறுகிறான். 'மகன் போகாமல் இருக்கப் போவதுமில்லை; கணவன் இறவாமல் இருக்கப் போவது மில்லை; இவ்விரண்டு எண்ணங்களாலும் அலைப்புற்றாள்; கணவன் புகழ் அழிந்து விடுமோ என்று அதற்கு அஞ்சிக் கொண்டு நின்றாள்.

"போகாது ஒழியான் என்றாள் புதல்வன் தன்னை; கணவன்
சாவாது ஒழியான் எனறென்று உள்ளம் தளர்வுற்று அயர்வாள்;
காவாய் என்றாள் மகனை; கணவன் புகழுக்கு அழிவாள்;
ஆவா! உயர்கோ சலையாம் அன்னம் என்உற் றனளே!"

(நகர் நீங்கு. 54)

உலகத்தில் மக்களாய்ப் பிறந்தவர் அனைவர்க்கும் இன்பம் துன்பம என்ற இரண்டும் மாறி மாறி வருதல் உண்டு பல சமயங் களில் கடமையை நிறைவேற்ற வேண்டுமானால் அது கசப்பாய் இருக்கும். ஆனால், கடமையை நிறைவேற்றி விட்டோம் என்ற மகிழ்ச்சி அதன் பயனாய் இருக்கும். கடமையை நிறைவேற்றும் இயல்பு அனைவர்க்கும் அமைந்து விடுவதொன்று அன்று. அவ்வாறு நிறைவேற்ற வேண்டிய இன்றியமையாமை ஏற்படும் பொழுது 'தரும சங்கடம்' என்ற நிலை வந்துவிடுமாயின், அது இன்னும் வருந்தத் தக்கதேயாகும். தருமசங்கடம் என்பது, இரண்டும் கடமை போலத் தோன்றுகிற நிலைதான். இரண்டில் யாதானும் ஒன்றை நிறைவேற்றப் புகுந்தால், மற்றொன்றுக்குத்

தீமையாய் முடியும். இதுவே தருமசங்கடம் எனப்படும். இத் தருமசங்கட நிலையில் எதனை மேற்கொள்வது, எதனை விடுவது என்ற தொல்லை ஏற்பட்டுவிடும்; எந்த முடிவுக்கும் வர முடியாமல் திண்டாட நேரிடும். கோசலையின் நிலையும் இத்தகையதே. இதனை நினைத்துத்தான் ஆசிரியன், "ஆவா! உயர்கோ சலையாம் அன்னம் என் உற்றனள்!" என்று வருந்திக் கூறுகிறான். இத்தகைய தரும சங்கடம் ஏற்பட்டாலும், தன் தாயன்பை உள்ளே இருத்திக் கொண்டு கணவனுக்குரிய கடமையில் அவள் நின்றது போற்றற்குரிய பண்பாகும். அதிலும் அக் கணவன் தன் மாற்றாளாய கைகேயியின்பால் கழிபெருங்காதல் பூண்டு அவ்வன்பின் மிகுதியால் இந்த இடரை அடைந்தான் என்று அறிந்த நிலையிலும் அவள் தன் கடமையைச் செய்தாள் என்றால், தலையாய கற்புடையவள் என்று அவளைக் கூறுதல் முற்றிலும் பொருத்தம் உடையதே.

### இறுதி முயற்சி

இதனை அடுத்த நிலையில் வசிட்டன் சொல்லைக் கேட்ட மன்னவன், இராமன் ஒரு வேளை வருவான் என்று நினைத்திருந்த எண்ணம் பொய்யாகிவிட, மீட்டும் மயக்கம் அடைந்து விட்டான். அவன் மயக்கத்தைக் கண்ட கோசலை, "இறந்தான் கொல்லோ அரசன்!" என்னா இடர் உற்று அழிவாள், மீட்டும் மன்னவனைத் தேற்ற வேண்டும் என்ற உறுதி பூண்டவளாய்த் தன் மனம் நம்பாத ஒன்றைப் பேசுகிறாள். இராமன் உறுதியாக வர மாட்டான் என்பதை நன்கு அறிந்திருந்தும், "முனிவன் உடன் நம் ஐயன் வரினும் வருமால்; அயரேல் அரசே?" (நகர். 70) என்று கூறுகிறாள்.

"பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்." (குறள் 292)

என்ற குறளை வாழ்க்கையில் செய்து காட்டுகிறாள் அப் பெண்ணரசி. வாராத இராமனை வந்தாலும் வருவான் என்று கூறுவது பொய்யேயாயினும், அதனால் கணவனுடைய துயரத்தை ஓரளவு, குறைக்க முற்படும் அக்கற்புடை மங்கையின் திண்மையை என் என்று போற்றுவது! எவ்வாறாயினும் கணவனுடைய சென்று கொண்டிருக்கும் உயிரை இழுத்துப் பிடிக்க முயலும் கோசலையின் பெரு முயற்சியைக் கண்டு நாம்

வியவாமல் இருக்க முடியாது. அவள் செய்யும் முயற்சியின் அடிப்படையில் எத்துணைப் பெரிய தியாகம் மறைந்து கிடக்கிறது என்பதையும் அறிதல் வேண்டும்.

அரசனுக்கு அமைதி கூறும் ஒவ்வொரு வினாடியிலும் அவளிடத்தே அடங்கியுள்ள தாயன்பு வாள் கொண்டு அவள் மனத்தைப் பிளக்கிறது. அதனைத் தாய்க்கே உரிய மனநிலையில் பொறுத்துக் கொண்டு அவள் கணவனுக்குத் தேறுதல் கூறுகிறாள். பழைய கிரேக்கக் கதைகளில் வரும் தாய்மார்கள் கடமையை நிறைவேற்ற வேண்டி மகன் அன்பைத் துறத்தல் போலக் கோசலையும் செய்கிறாள்; எனவே, இலக்கியத்திலும் அதன் மூலம் நம் மனத்திலும் அழியா இடம் பெற்று விடுகிறாள்.

கோசலையால் மனம் தேற்றப் பெற்ற மன்னவன், அவளுக்குப் பழைய வரலாறு ஒன்றைக் கூறுமுகமாக ஓர் உண்மையை வெளியிடுகிறாள்; 'புத்திர சோகம்' என்ற மைந்தரால் வரும் துன்பத்திற்குத் தான் பலியாகி உயிர்விடப் போவதை அறிவிக்கிறான். முன்னர்த் தனக்கு ஏற்பட்ட சாபம் ஒன்றை அவளுக்குக் கூறித் தான் இராமன் பிரிவால் உயிர் விடப்போவது திண்ணம் என்று எடுத்துக் கூறுகிறான்.

''அந்த முனிசொற் றமையின் அண்ணல் வனம்ஏ குதலும்
என்றன் உயிர்வி குதலும் இறையும் தவறாது,' என்றான்,''

(நகர் நீங்கு. 90)

தன் மனத்தில் எவ்வாறாயினும் மன்னவன் துயரை மாற்றி அவனது செல்லும் உயிரையும் நிறுத்திவிடலாம் என்று நம்பிக் கொண்டிருந்த கோசலைக்கு அரசனுடைய இச்சொற்கள் இடி போல அமைந்தன. அவனைத் தேற்ற வேண்டும் என்று முடிவு செய்து கொண்டு இவண் வந்த அவள் உடனே மூர்ச்சையாகி விட்டாள்.

பரதனுக்கு இழைத்த பிழை

இதனை அடுத்து நாம் கோசலையைக் காண்பது பரதன் மீண்ட பிறகேயாகும். கேகய நாட்டிலிருந்து மீண்ட பரதன், தன்னைப் பெற்ற தாய் செய்த பெரும் பிழையை அறிந்து, அவளை வெறுத்து ஏசிவிட்டுக் கோசலையினிடம் சென்று ஆறுதல் பெறலாம் என்ற கருத்துடன் வந்து, அவள் காலடியில் வீழ்ந்து அரற்றுகிறான். அவன் அரற்றும் அந்த நேரம் வரையில் கோசலை

பரதனைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளாமல், அவன்மேல் ஓர் ஐயம் கொண்டே இருக்கிறாள். தன் மாற்றாளாய கைகேயி செய்த சூழ்ச்சிக்கு அவள் மகனாகிய பரதனும் உடந்தையாய் இருந்தான் என்றே அவள் முடிவு செய்து விட்டாள். பிறந்த நாள் தொட்டுப் பரதனை அவளே வளர்த்திருந்தாலும், பரதன் இத்தகைய காரியம் செய்வானா என்று ஏனோ அவள் நினைந்து பார்க்கவில்லை? எல்லையற்ற துன்பங்கள் ஒன்றின்மேல் ஒன்றாக வந்து மோதினவுடன் அம்மங்கை நல்லாள் நடுவு நிலையுடன் ஒன்றை ஆராயும் இயல்பை இழந்து விட்டாள் போலும்! அன்றேல், பரதனைப் பற்றிய இத்தவறான எண்ணத்தை அவள் கொள்ளக் காரணம் இல்லை. பரதனே முடி சூடப்போகிறான்,' என்று முதல் முதலாக இராமனே அவளிடம் தெரிவித்த பொழுது கூட அவள் வருந்தவில்லை; வருந்தாதது மட்டும் அன்றி, ''நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்'' (நகர். 5) என்று அல்லவா கூறுகிறாள்! அவ்வாறு பரதனை இராமனைவிட நல்லவன் என்று கூறிய கோசலை ஏன் இவ்வாறு அப்பரதன்மேல் ஐயங்கொள்ள வேண்டும்? அவளுடைய நிலையில் யார் இருந்தாலும் இவ்வாறு தான் ஐயங்கொண்டிருப்பர். ஆட்சியைத் தன் மகனுக்கு ஆக்கிக் கொள்ளக் கைகேயி முயன்றதை அவள் நம்ப முடியும். ஆனால், இராமனைக் காட்டுக்கு அனுப்ப வேண்டும் என்று கைகேயி ஏன் நினைக்க வேண்டும்? அரசைப் பறிகொடுத்த இராமன் நாட்டில் இருந்தால் கலகம் விளைப்பான் என்ற கருத்துடையவரே இராமனை வெருட்ட முடிவு செய்திருப்பர். இவ்வாறு முடிவு செய்ய ஒரு பெண்ணால் இயலுமா? அதிலும், தான் அன்புடன் வளர்த்த மகனை வெருட்ட எந்தத் தாய்தான் விரும்புவாள்? எனவே, இராமனைக் காட்டுக்கு அனுப்பச் சூழ்ச்சி செய்தது கைகேயியின் செயலாய் இருக்க முடியாது என நம்பிய கோசலை, அடுத்து யாரை ஐயுற முடியும்? இராமனுடைய அரசை யார் பெற்றுக் கொள்கிறானோ அவன்தானே இராமனை நாடு கடத்தவும் விரும்பி இருத்தல் கூடும்? தருக்க முறைக்கும் இது அடுத்ததுதானே? ஆதலால், கோசலை இது பரதனுடைய சூழ்ச்சி என்று நினைத்ததில் தவறு ஒன்றும் இல்லை.

**எல்லை மீறிய தாயன்பு**

அவ்வாறு இராமனைப் பெற்ற தாயாகிய கோசலை நினைத்த தில் பெருந்தவறு இல்லை என்றாலும், ஆழ்ந்து நோக்கின், அதில் ஓரளவு தவறு உள்ளது என்பது விளங்காமற் போகாது. பரதனை

ஆதியிலிருந்து வளர்த்த கோசலை அவனைப்பற்றி நன்கு தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அறிவால் மிக்க கோசலை பரதனை நன்கு அறிந்து கொள்ளவில்லை எனில், இது கொண்டு அவளது அறிவைக் குறை கூறல் இயலாது. ஆனால், அவள் கொண்ட இந்த முடிவு தவறு என்பதிலும் ஐயமில்லை. அவ்வாறாயின், குறை எங்குளது? அவளுடைய தாய்மைதான் இக்குறைபாட்டை ஏற்படுத்தியது. எல்லை மீறிய தாயன்பு காரணமாகவே அவள் பரதனுக்கு இத்தவற்றைச் செய்துவிட்டாள்.

தாயிடம் தங்கியிருக்க விரும்பாத பரதன், கோசலையிடம் வந்து விழ்ந்து அவள் பாதங்களைப் பிடித்துக்கொண்டு பலபடியாகப் புலம்புகிறான்; கேகயத்திலிருந்து தான் மீண்டது 'இம் மறுக்கம் காணவோ?' (பள்ளியடை 90) என்று அரற்றுகிறான். அம்மட்டோடு அப்பெருந்தகை நிறுத்தவில்லை; கோசலை மேல் ஒரு பெரிய குற்றத்தையும் சாட்டுகிறான். 'ஏன் காடு செல்லும் இராமனைக் கோசலை தடுத்து நிறுத்தவில்லை?' என்பதுதான் அவன் வினா. அவ்வாறு அவள் இராமனை நிறுத்தாமல் விட்டது பெரும் பிழை என்றும் கூறுகிறான்.

''அடித்தலம் கண்டிலென் யான்என் ஐயனைப்
படித்தலம் காவலன் பெயரற் பாலனோ?
பிடித்திலிர் போலும்நீர் பிழைத்தி ரால்,'எனும்
பொடித்தலம் தோளுறப் புரண்டு சோர்கின்றான்''

(பள்ளியடைப். 91)

இவ்வாறு அரற்றி வருந்த யாரால் இயலும்? இராமனுடைய போக்குக்குச் சூழ்ச்சி செய்த எவனும் இவ்வாறு கதற இயலாதன்றோ?

''கடியவள் வயிற்றினில் பிறந்த கள்வனேன்
முடிகுவன் அருந்துயர் முடிய!' என்னுமால்.'' (92)

என்றெல்லாம் வருந்தும் பரதன் எவ்வாறு சூழ்ச்சிக்காரனாய் இருக்க இயலும்? மேலும், இராமன் பிறந்த அதே குடியில் தானும் பிறப்பதா என்றுகூடக் கேட்கிறான்.

'''வரதனில் ஒலிபெற வளர்ந்த தொல்குலம்
பரதன்என்று ஒருபழி படைத்தது!' என்னுமால்''

(பள்ளியடைப். 93)

இவ்வாறு தன் கண் எதிரே துயர் அடையும் பரதனைக் கண்ட கோசலை; தன் பிழையை உடனே உணர்ந்துவிட்டாள்; தன்

பிழைக்கும் கழிவிரக்கம் கொள்ளும் அந்த நிலையில் பரதனுக்கு மனஅமைதி கூற வேண்டிய இன்றியமையாமையினையும் உணர்ந்துவிட்டாள்.

''புலம்புறு குரிசில்தன் புலர்வு நோக்கினாள்
குலம்பொறை கற்புஇவை சுமந்த கோசலை
'நிலம்பொறை ஆற்றலன்; நெஞ்சம் தூய்து,'எனாச்
சலம்பிறிது உறமனம் தளர்ந்து கூறுவாள்.''

(பள்ளியடைப். 95)

'சலம் பிறிது உற' என்ற சொற்களால் பரதன்மேல் கோசலை கொண்டிருந்த கோபம் தணிந்த செய்தியைக் கவிஞன் கூறுகிறான் அவ்வாறு அவள் ஆராயாமல் கோபம் கொண்டிருந்தது முறையா என்று நினைக்கும் நம் போன்றவர்கட்கு விடை கூறுமுகமாக அவளுடைய பொறுமை, குடிப்பிறப்பு, கற்பு என்ற இவற்றை நினைவு ஊட்டுகிறான். இத்தனை பெருமையுடைய கோசலை ஒரு தவறு செய்வாளாயின், அதில் ஒரு கருத்து அடங்கி இருக்கும் என்ற குறிப்பே அங்குக் கிடைக்கிறது.

இதன் பின்னர் அவள் பேசும் பேச்சுத்தான் அவள் பெண் என்பதைக் காட்டிக்கொடுத்து விடுகிறது. ஆண் மகனாய் இருப்பின், இவ்வளவில் தான் கொண்ட ஐயம் நீங்கப்பெற்றிருப்பான். ஆனால், பெண்ணாகிய கோசலை பரதன் வாய் மூலமாகவே அவன் குற்றம் அற்றவன் என்பதைக் கேட்டுவிட விரும்புகிறாள். இச்செயல் கொஞ்சம் அதிகப்படி என்றுதான் நினைய வேண்டி உளது.

''மையறு மனத்தொரு மாசு ளான்அலன்
செய்யனே என்பது தேரும் சிந்தையாள்,
'கைகயர் கோன்மகள் இழைத்த கைதவம்
ஐயநீ அறிந்திலை போலு மால்,' என்றாள்.'' (பள்ளி. 96)

'உன் தாயின் செயலை நீ அறியவில்லையா?' என்று கேட்க வேண்டிய கோசலை, பண்பாடுடையவள். ஆதலால், அதனை மாற்றிக் கூறுகிறாள். உன் தாய் என்று சுட்டிக் கூறினால் பரதனுடைய வருத்தம் மிகுதிப்படும் என்று நினைத்த கோசலை ''கைகயர் கோன் மகள்'' என்று தன் மாற்றாளைக் குறிக்கிறாள். இது கேட்ட பரதன் பெருந்துயர் அடைந்தவனாய்த் தனக்குக்

கைகேயியின் சூழ்ச்சி இதுவரை ஒன்றும் தெரியாது என்பதைக் குறித்துப்பல வஞ்சினங் கூறி எடுத்துக்காட்டினான். உடனே கோசலையின் மனம் மாறி அவனை இறுகத் தழுவிக் கொண்டு, வாயும் மனமும் குளிர,

"'முன்னை நின்குல முதலி னோர்கள்தாம்
நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?
மன்னர் மன்னவ!' என்று வாழ்த்தினாள்
உன்ன உன்னநெஞ்சு உருகி நைகுவாள்." (பள்ளி. 1.0)

இப்பாடலின் மூன்றாம் அடி கூர்ந்து நோக்கற்குரியது. பரதனை 'மன்னர் மன்னவ!' என்று ஏன் கூறவேண்டும்? எந்த அயோத்தி அரசைப் பரதன் கவர்ந்துகொண்டான் என்று அவள் மனம் வருந்தினாளோ, அந்த அரசை அவளே மனமுவந்து பரதனுக்கு இப்பொழுது தரவிரும்புகிறாள். பரதனுடைய பெருமையை இப்பொழுது நேரடியாக அறிந்து கொண்டமையின், அப்பெருமாட்டி அவனை 'மன்னவ!' என்றே விளிக்கிறாள்.[1]

முதல் தேவியாம் கோசலை அறிவு, பண்பாடு, கணவனிடத்துக் காதல், கடமை உணர்ச்சி ஆகிய அனைத்திலும் முதல் இடம் பெறுபவளாகவே அமைந்துள்ளாள். வான்மீகர் கண்ட கோசலைக்கும் கம்பநாடன் கண்ட கோசலைக்கும் கடலனைய வேற்றுமை உண்டு. தமிழர்கள் தலையாய கற்புடைய ஒரு மனைவிக்கு எவ்வித கடமைகள் இருக்கவேண்டும் என்று நினைத்தார்களோ அவை அனைத்தையும் நிறைவேற்றுபவளாகவே கோசலை காட்சியளிக்கிறாள். மலை போல அடுக்கி வரினும் துயரத்தைக் கண்டு அஞ்சியோடாமலும், அதன் பொருட்டுப் பிறரைக் காரணம் உள்ள பொழுதும் இல்லாத பொழுதும் நொந்து கொள்ளாமலும் தன் கடமையை விடாது செய்யும் பெருமாட்டியாகவே கோசலை காணப்படுகிறாள். தான் எதிர்பார்த்த ஒன்று நடைபெறாத பொழுது மனத்துயர் அடைதலும், அதனை நடைபெறவொட்டாமற் செய்தவர்களைப் பழித்தலும் உலக இயற்கை. தசரதன் கைகேயியைப் பேசும் பேச்சுகளிலிருந்தே இதனை அறியலாம். ஆண் மகனாகிய தசரதன் அவ்வாறு நடந்து

---

[1] 'கம்பன் கலை' மூன்றாம் பகுதியில் 'பரதன் என்ற தலைப்பில் பரதன் கோசலை இருவர் உறவு பற்றியும் விரிவாகப் பேசப்படுகிறது.

கொண்டுங்கூடப் பெண் மகளாகிய கோசலை முற்றிலும் வேறு விதமாக நடந்த கொள்கை அறிதற்பாலது. 'அன்பே வடிவானவர் கள் ஆயினும் தமிழ்ப் பெண்கள் கடமையின் எதிரே அன்புக்கு இரண்டாம் இடந்தான் தருவர்,' என்ற ஓர் உண்மையைக் கோசலை மூலம் நன்கு வெளியிடுகிறான் கம்பநாடன். கைகேயி மூன்று நிலைகளிற் காட்சியளிப்பதுபோல இல்லாமல் எல்லா நேரத்திலும் ஒரு படியாகவே காணப்படுகிறாள் கோசலை. வயதால் ஏனைய இருவருக்கும் மூத்துள்ள அவளுடைய இச்செயல் மிகவும் பொருத்தமானதே என்று அறிந்து மகிழ வேண்டியுளது.

எனவே தசரதன் முதல் தேவியாகிய கோசலை அனைத்துப் பண்பாடுகளும் நிறைந்தவள் என்பதும், தாய்மையைத் துறந்து கடமையை நிறைவேற்றிய கற்புடை மடவாள் என்பதும் நன்கு விளங்குகின்றன அல்லவா?

# 6. இளைய மென்கொடி

## இருவகைப் படைப்புகள்

கம்பன் என்ற கலைஞன் படைத்த எழுநிலை மாடங்கள் இராமன், இராவணன், இலக்குவன், பரதன், சீதை போன்றவர்கள். இத்துணைப் பெரிய மாடங்களைப் படைக்கும் ஆற்றல்சால் கலைஞனாகிய கம்பனே, இரண்டங்குல உயரமே உடைய தந்தப் பதுமைகளையும் படைத்துள்ளான். 'பெரிய கலைப் படைப்பில் மட்டுமே அவனது வன்மையைக் காட்ட வாய்ப்பு இருந்தது; எனவே, அவற்றை ஒப்புயர்வற்ற முறையில் படைத்து விட்டான்,' என்று யாரும் நினைத்துவிட வேண்டா. அளவால் மிகச் சிறிய படைப்புக்களிலும் அவன் கலைத் திறனையும் படைப்பு வன்மையையும் நன்கு காணலாம். அவனைப் பொறுத்தவரை இவ்விருவகைப் படைப்புக்களும் ஒன்றுதான். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' அன்றோ? படைக்கின்ற அவனுக்கு இவை இரண்டும் ஒன்றேயாயினும், அனுபவிக்கின்ற நம்மைப் பொறுத்த வரை ஒரு வேறுபாடு உண்டு.

பெரிய படைப்புக்களை எளிதிற் காணலாம்; அனுபவிக்கலாம். இரண்டொரு நுண்மையான பகுதிகளை நாம் காணத் தவறி விட்டாலும், தீங்கு ஒன்றும் இல்லை. அதனால், கலைப் பொருளினது முழுத் தன்மை கெட்டுப் போவதில்லை. அந்நுண் பகுதிகளைப் பற்றிய சிறப்பை நாம் அறிந்து அனுபவிக்க வில்லை என்ற குறைபாட்டைத் தவிர, முழு அழகையையும் அனுபவிக்க இத்தவறு குறுக்கே நிற்பதில்லை. மேலும் இத்துணைப் பெரிய படைப்பை அண்மையில் நெருங்கிக் காணாமல் தூரத்தே இருந்த படியே கூட அனுபவிக்கலாம்.

மிக நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த சிறிய தந்தச் சிற்பத்தைக் கண்டு அனுபவிக்க வேண்டுமாயின், தூரத்தே இருந்து கண்டு பயனில்லை. மிகவும் அண்மையில் இருந்தே காணவேண்டும்.

பல சந்தருப்பங்களில் "பெருக்காடி"[1] கொண்டு காண நேரிடுவது முண்டு. அப்பொழுதுதான் அச்சிற்பத்தின் முழு அழகையும் அனுபவிக்க முடியும். சில பகுதிகளைக் காணாவிட்டாலும் தவறில்லை என்று இங்கே கூற முடியாது. சிறு பகுதிகளை விட்டு விட்டால், முழு அழகையுமே இழக்க நேரிடும். எனவே, மிகவும் கவனத்துடன் கையில் கொண்ட பெருக்காடியுடன் இச்சிற்பச் சிறப்பைக் கண்டு களிக்க வேண்டும்.

**இளையவளா, மூத்தவளா?**

தசரதன் மனைவியும் இலக்குவன் தாயுமாகிய சுமித்திரை இராம காதையுள் இலைமறை காயாகவே இருந்து வருகிறாள். கோசலையும் கைகேயியும் பெற்ற அளவு பாடல்கள்கூட இவள் பெறவில்லை. அதிகப் பாடல்கள் பெறாமையின் இவளுடைய சிறப்புக் குறைந்துவிட்டதாக நினைத்துவிட வேண்டா. இராமனுடைய நிழல் என்று கூறும்படி இலக்குவன் உடனுறை வதைக் காண்கிறோம். அதே போல, இராமனைப் பெற்ற தாயான கோசலையின் நிழல் என்று கூறும்படி இலக்குவனைப் பெற்ற தாயான சுமித்திரை அமைந்து விடுகிறாள். கம்ப ராமாயணம் முழுவதிலும் இவளைப்பற்றி வரும் பாடல்கள் ஏறத்தாழப் பத்துக்குள்ளாகவே அமைந்துள்ளன. ஒரே ஒரு முறைதான் இம்மாதரசி வாய் திறந்து பேசுகிறாள். ஆம்! இவளுடைய இரண்டாவது அருமை மைந்தன் சத்துருக்கினனும் ஒரே ஒரு முறைதான் பேசுகிறான். என்றாலும், என்ன?

"பலசொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்." (குறள். 649)

என்ற குறளுக்கு எதிர்மறை இலக்கியமாகி விட்டனர் தாயும் மைந்தனும் காப்பியத்தில் இவ்வளவு சிறிய இடத்தைப் பெறினும், சுமித்திரை கற்பார் இதயத்தில் நீங்கா இடம பெற்று விடுகிறாள். காப்பியத்தில் மட்டும் என்ன! தசரதன் மனத்திலுங்கூட இவள் மிகச் சிறிய இடத்தையே பெற்றுள்ளாள் என்று நினைக்க வேண்டியுளது.

முதனூலாசிரியராகிய வான்மீகியார் சுமித்திரையைத் தசரதனுடைய இரண்டாம் மனைவியாகவும் கைகேயியை மூன்றாம் மனைவியாகவும் கூறுகிறார். ஆனால், கம்பநாடன்

1. Magnifying glass

கைகேயியை இரண்டாம் மனைவியாக்கிச் சுமித்திரையையே மூன்றாம் மனைவியாக்குகிறான். அதனால் சுமித்திரையை 'இளைய மென்கொடி' (திருவவதாரப் படலம், 114) என்று குறிக்கிறான். இந்த முறை மாற்றம், மேலாகக் கவனிக்கும் பொழுது பெரிதாகப்படாமற் போயினும், ஆழமான உட்கருத்துடன் செய்யப்பட்டிருத்தலை ஆய்பவர் காண்டல் கூடும். கைகேயியை இளையாளாகக் கூறிய வான்மீகியார் இலக்குவன் கூற்றாகவும், தம் கூற்றாகவும் தசரதனைப் பன்முறையும் 'காம பரவசன்' என்று கூறிப் போகிறார். இவ்வாறு கூறாவிட்டாலுங்கூடக் கைகேயியை இளையாள் என்று கூறிய உடன் தசரதன் செயல்கட்குப் புதுப்பொருள் காணும் நிலைமை ஏற்பட்டு விடுகிறது. கைகேயிக்குத் தசரதன் வரம் தந்த நிகழ்ச்சி இப்பொழுது புதிய கோணத்தில் காட்சி அளிக்கிறது. வாய்மையைக் காக்க வேண்டி அவன் வரமீந்தாலுங்கூட, அவ்வரத்தைப் பெற்றுக் கொண்ட கைகேயி இளமனைவி என்றால், பொருள் வேறாகிவிடுகிறதன்றோ? 'வாய்மை காப்பாற்றுவதைப் பற்றித் தசரதன் கவலையுறவில்லை. இளமனைவியைத் திருத்திப்படுத்தவே வரமீந்தான் போலும்!' என்று சிலர் மனத்திலாதல் தோன்றக்கூடும். ''பனை மரத்து அடியில் நின்று பாலைக் குடித்தாலும், உலகம் கள்ளெனக் கொள்ளும்,' என்ற தமிழ்நாட்டு முதுமொழி பெரும்பான்மை தவறுவதில்லை. வான்மீகியார் கூற்றின்படி தசரதனுடைய மூன்றாம் மனைவியாகக் கைகேயியைக் கூறினால், இந்தக் குற்றம் தசரதன்மேல் வருவதை யாரும் தடுக்கவியலாது.

மாற்றக் காரணம்

இக்குறைபாட்டை நன்கு அறிந்தான் கம்பநாடன். வாலி முதல் அனைவராலும் தசரதன் 'வாய்மை காத்தவன்' என்று புகழப்படுகின்றான். ''வாய்மையும் மரபுங் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல் தூயவன்'' (வாலி வதைப். 76) என்பது வாலியின் கூற்று. இவ்வாறு தசரதன் புகழப்பட வேண்டுமாயின், அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. தசரதன் கைகேயிக்கு வரம் ஈந்தது, தான் சொன்ன சொல்லைக் காப்பாற்றவே அன்றி, அவளுடைய இளமை அழகில் மயங்கி அன்று என்பதை வெளிப்படுத்த வேண்டும். கைகேயியின் மாட்டுத் தான் கொண்ட கழிபெருங் காதலைப் பிறர் அறியும்படியே அரசன் காட்டிக்கொண்டு வாழ்கிறான். இந்நிலையில் அவள்தான் இளையவள் என்று கூறப்படுமானால், அவனுடைய காதல் அவளுடைய புற அழகில் ஈடுபட்டுத்

தோன்றியதே என்று கொள்ள நேரிடும். இந்த இடுக்கணைத் தீர்ப்பதற்குக் கம்பன் கையாண்ட வழியே சிறந்தது. இவ்வாறு அவளை மூத்தவளாக்கிச் சுமித்திரையை இளையாளாக்கினதால், மற்றொரு பயனும் கிடைக்கிறது. கைகேயி தான் இளையாள் என்ற காரணத்தால் தன் அழகைத் துணையாகக் கொண்டு தன் கருத்தை நிறைவேற்றிவிட்டாள் என்ற பழிச் சொல்லும் இல்லாமற் போகுமன்றோ? இளையாளாய சுமித்திரை இருக்கவும் தசரதன் கைகேயிமாட்டு அதிக அன்பு செலுத்தினான் எனின், அஃது அவளுடைய சிறந்த பண்பாட்டைக் கருதியே என்றுதான் நினைக்கத் தோன்றும். எனவே, தலையாய கலைஞனாகிய கம்பநாடன் வால்மீகியின் போக்கை மாற்றியமைத்ததால் இரண்டு பெரிய செயல்களைச் செய்துவிடுகிறான். முதலாவது, தசரதன் மீது ஏற்படும் அடாப்பழியைக் குறைத்தது. இரண்டாவது, கைகேயியின் மீது ஏற்படக்கூடிய பழியைக் குறைத்தது. மூலத்திலிருந்து கதைப் போக்கை மாற்றும் இடங்களில் எல்லாம் கம்பன் ஒரு பெரும்பயனை விளைக்க வேண்டியே மாற்றுகிறான் என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு.

### முதற்சந்திப்பு

சுமித்திரையை நாம் முதன்முதல் சந்திப்பது யாகசாலையிலாகும். அவியுணவை மனைவியர் மூவர்க்கும் தரத்தொடங்கிய தசரதன், முதலில் கோசலைக்குத் தந்தான்; எஞ்சியுள்ளதில் ஒரு பகுதியைக் கைகேயிக்குத் தந்தான்; எஞ்சியதைச் சுமித்திரைக்குத் தந்தான். இவ்வாறு அவன் தந்த முறையிலும் சுமித்திரைதான் மூன்றாம் மனைவி என்பதைப் பெற வைக்கிறான் கவிஞன். அனைவர்க்கும் தந்த பிறகும் தட்டில் உதிர்ந்து கிடந்தது ஒரு சிறு பகுதி. அதனை வயதாற் சிறியவளாய சுமித்திரைக்கே மீட்டும் தந்தான். இவ்வாறு தசரதன் இரண்டாம்முறை சுமித்திரைக்கே தந்தது சாலவும் பொருத்தம் உடையது. உண்ணும் பொருள்களில் அதிகப்படியானதை இன்றும், ஆண்டில் இளையவர்க்குத் தருதலே மரபாகும். எவ்வளவுதான் கைகேயியிடம் மன்னன் அதிகப் பற்று வைத்திருப்பினும், அதை இப்பொழுது காட்டவில்லை. ஆண்டால் இளையவள் என்ற ஒரே காரணத்திற்காகப் போலும் எஞ்சியதைக் கைகேயிக்குத் தாராமல் சுமித்திரைக்கே தந்துவிட்டான்! அவன் இருமுறை சுமித்திரைக்கு அளித்ததை இதோ கவிஞன் பாடுகிறான்.

"நமித்திரர் நடுக்குறும் நலங்கொள் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையின்
சுமித்திரைக்கு அளித்தனன்; சுரர்க்கு வேந்து, 'இனிச்
சமித்ததுஎன் பகை!' எனத் தமரொடு ஆர்ப்பவே.

"பின்னும்அப் பெருந்தகை பிதிர்ந்து விழ்ந்தது
தன்னையும் சுமித்திரை தனக்கு நல்கினான்." (திருவ.90,91)

[பகைவர்கள் நடுங்கும்படியான பலத்தையுடைய நிமி என்னும் அரசனது மரபில் பிறந்தவனாகிய தசரதன் சுமித்திரைக்குத் தந்தான். அவன் தந்தவுடன் தேவேந்திரன், 'என்பகை அழிந்தது!' என்று சுற்றத்தோடு மகிழ்ந்தான். மறுபடியும் சிதறியதைத் தசரதன் அவளுக்கே அளித்தான்.]

இவை இரண்டு பாடல்களின் மூலம் நடைபெற்ற நிகழ்ச்சியை அறிய முடிகிறதே தவிரச் சுமித்திரையைப் பற்றி ஒன்றும் அறியக் கூடவில்லை. மன்னன் மறுமுறை தந்ததைத் தடை கூறாமல் ஏற்றுக்கொண்டாள் என்று மட்டும் அறிய முடிகிறது. மேலும், தான் இளையாளாய் இருந்தும் மன்னன் தன்பால் ஒன்றும் தனிப்பட்ட முறையில் பரிவு காட்டவில்லையே என்று அவள் வருந்தவில்லை என்பது அறிய முடிகிறது. அன்றியும், ஆண்டில் மூத்தாளாய கோசலை முதலில் பெற்றதற்காக அவள் மாட்டுப் பொறாமை கொள்ளவில்லை என்றும் அறிகிறோம்.

## இரண்டாம் சந்திப்பு

இனி அடுத்து நாம் சுமித்திரையைக் காண்பது அவள் கருவுயிர்த்த காலத்திலாகும். அங்கு அவள் ஒன்றும் பேசக்கூடிய நிலையில் இல்லை. நாமும் அவள் பேசுவாள் என்று எதிர்பார்க்கவும் இல்லை. ஏனைய அரசியர் இருவரும் மைந்தரைப் பெற்றது போலவே அவளும் முதலில் ஒரு மைந்தனைப் பெற்றாள்.

"இளையவன் பயந்தனள் இளைய மென்கொடி" (திருவ. 105)
என்று கவிஞன் அதனைக் குறிக்கிறான். சுமித்திரை சிறிது நேரம் தாழ்த்து மீட்டும் ஒரு புதல்வனைப் பெற்றாள். முதலில் பிறந்த இலக்குவனுடைய பிறப்பைக் கூற வந்த கவிஞன் இந்திரன் மகிழும்படி பிறந்தான் என்றான்; ஆனால், சத்துருக்கினன் பிறப்பைக் கூறும் பொழுது இவ்வுலகத்தார் மகிழ அவன் பிறந்தான் என்கிறான்.

"படங்கிளர் பல்தலைப் பாந்தள் ஏந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடகம்
மடங்கலும் மகமுமே வாழ்வின் ஓங்கிட
விடங்கிளர் விழியினாள் மீட்டும் ஈன்றனள்." (திருவ. 106)

[ஆதிசேடனாலே தாங்கப்பெற்ற இப்பூமி மகிழ்ச்சி அடையவும், வேதங்கள் மகிழ்ச்சி நடனம் புரியவும் சிம்மராசியிலே மக நாண் மீனில் விஷம் கக்கும் கூரிய விழியையுடைய சுமித்திரை மீட்டும் ஒரு மகனை ஈன்றாள்.]

ஏனையோர் போல ஒரு மகனை அல்லாமல் இரு மைந்தரைப் பெற்றதால் சுமித்திரை அதிகம் மகிழ்ந்தாளா, அன்றி வருந் தினாளா என்பது பற்றிக் கவிஞன் ஒன்றும் கூறாமல் விட்டு விட்டான். இப்பொழுதும் அவள் கூற்றாக ஒன்றும் பேச்சு இன்மையின், அவள் மனத்தை அறிந்துகொள்ளும் வாய்ப்பு நமக்குக் கிட்டவில்லை.

**சீற்றம் விளையாத நிலம்**

சுமித்திரையை அனைவரும் மறந்துவிட்ட நேரம். தலை நகரம் அல்லோலகல்லோலப்படுகிறது. அரசன் கைகேயி கோயிலில் மயக்கமுற்ற நிலையில் இருக்கிறான். இராமனைக் காடு செல்ல உத்தரவிட்டு விட்டாள் கைகேயி. இராமனும் கோசலை கோயில் புகுந்து அவள் வருத்தத்திற்கு ஆறுதல் கூறி விட்டுப் புறப்பட்டு வருகிறான். வெளியே உயிரினும் இனிய தம்பி இலக்குவன் கடுஞ் சீற்றம் உற்றவனாய்ப் போருக்குத் தயாராகிறான். சுமித்திரையின் அடக்கம் எங்கே, அவள் அருமை மைந்தன் இலக்குவன் சீற்றமும் படபடப்பும் எங்கே! நினைக்கவும் முடியவில்லை இலக்குவன் சீற்றத்தின் எல்லையை!

"...................... ....... ....... யாவ ராலும்
முட்டாத காலக் கடைத்தீஎன மூண்டு எழுந்தான்."

(நகர் நீங்கு. 112)

அவன் நின்ற நிலை ஆதிசேடனை நினைவூட்டுகிறது.

"அண்ணல் பெரியோன் தனதுஆதியின் மூர்த்தி ஒத்தான்."

(ஷை 113)

இலக்குவனுடைய வில்லின் நாணொலி கேட்டு இராமன் ஓடோடியும் வருகிறான். தம்பியின் கோலத்தைக் காணத் தமையனுக்கு வியப்பே மேலிடுகிறது. இலக்குவன் கைகேயி

மேலும் பரதன் மேலும் தீராத சினம் கொண்டுள்ளான் என்பதை அறிந்த இராமனுக்கு ஒரு கணம் சுமித்திரை நினைவு தோன்றுகிறது. அவளுடைய அடக்கமும், அன்பும், தியாக புத்தியும் நினைவுக்கு வருகின்றன. அமைதியே வடிவான சுமித்திரை மகனா இலக்குவன் என்று அவன் வியப்படைந்துவிட்டான். தாய் தந்தையருடைய பண்பாடுகள் தாமே குழந்தைக்குப் படியும் என்று கூறுவார்கள்? அவ்வாறானால், இலக்குவனுக்கு இத்தகைய மனப்பான்மை எங்கிருந்து வந்தது? எங்கிருந்து வந்தாலும், அவன் தோன்றி வளர்ந்த அவ்வருமைத் தாயின் மனத்தில் இத்தகைய சீற்றத்திற்கு இடமே இல்லை. இவ்வாறு நினைந்த இராமன் இலக்குவனை நோக்கி இதோ கேட்கிறான். ''ஐயனே, நேர்மையான நீதிக்கு மாறாமல் உன் அறிவு அமைந்திருக்கும் அல்லவா? அழியாத அறம் கெடும்படியாகவும் நன்னெறிக்கு மாறாகவும் உள்ள கோபத்திற்குச் சற்றும் இடம் கொடாதவள் உன் தாய். அவள் வயிற்றில் வளர்ந்த உனக்கு இக்கோபம் எங்கே தோன்றியது'' என்னும் கருத்துப்பட இதோ பேசுகிறான்.

''இளையான் இதுகூற, இராமன், 'இயைந்த நீதி
வளையா வரும்நன் னெறிநின் அறிவுஆகும் அன்றே?
உளையா அறம்வற் றிடஊழ் வழுவுற்ற சீற்றம்
விளையா தநிலத் துனக்குஎங்ஙன் விளைந்தது?' என்றான் ''
(நகர் நீங்கு. 129)

விளையாத நிலத்துத் 'தோன்றிய' அல்லது பிறந்த உனக்கு' எவ்வாறு வந்தது?' என்று 'தோன்றிய' என ஒரு சொல் வருவித்து ஈற்றடிக்குப் பொருள் கொள்ளல் நலமோ என்று நினைக்க வேண்டியுளது. பிறர் இந்த அடிக்கு ''விளையாத உன் மனத்தில் எங்ஙனம் இக்கோபம் தோன்றிற்று?'' என்று பொருள் கூறுகின்றனர். 'நிலத்து' என்ற சொல்லுக்கு 'மனத்தில்' என்று அவர்கள் பொருள் கூறுகின்றார்கள். ஆனால், 'நிலத்து' என்ற சொல்லுக்கு (சுமித்திரை) 'வயிற்றில்' என்று பொருள் கொண்டு 'தோன்றிய' என்ற ஒரு சொல்லையும் வருவித்துக்கொண்டால் பொருள் சிறந்து விடுகிறது. 'விளையாத நிலத்துப் பிறந்த உனக்கு' என்று பொருள் கொள்வது, சுமித்திரையைப்பற்றி இராமன் கொண்டிருந்த கருத்தையும் அறிய இடம் தருகிறது. இராமன் சுமித்திரையைச் சந்திக்கும் இடத்தில் அவள் நடந்து கொள்ளும் விதம் இவ்வாறு பொருள் கொள்வது சரியே என்று சான்று பகர்கிறது.

இராமன் பெருஞ்சீற்றத்துடன் இருந்த இலக்குவனை அமைதியடையச் செய்தபின் இருவரும் சுமித்திரையிடம் செல்கின்றனர். இதற்குள் அப்பெருமாட்டிக்கு எவ்வாறோ செய்தி எட்டிவிட்டது. வருகின்ற மைந்தர் இருவரும் காடு செல்லும் உறுதியுடன் வருகின்றனர் என்ற கருத்துடன் அவர்களை அத்தாய் பார்க்கிறாள்.

''கண்டாள் மகனும் மகனும் தனகண்கள் போல்வார்
தண்டா வனம்சார் வதற்கே சமைந்தார்கள் தம்மை;
புண்தாங்கு நெஞ்சத் தினளாய்ப் படிமேற்பு ரண்டாள்
உண்டாய துன்பக் கடற்குஎல் லைஉணர்ந்தி லாதாள்.''

(நகர் நீங்கு. 144)

[தன் இரு கண்கள் போல்வாராகிய பெற்ற மகனும் பெறாத மகனும் வனம் சேர்வதற்குத் தயாராக வருவதைக் கண்ட சுமித்திரை, புண் நிறைந்த நெஞ்சத்தை உடையவளாகிப் பூமி மேல் விழுந்து புரண்டாள்.]

இருவரும் வருவதைக் கண்டாள் அவள். ஆனால், இராமன் காடு செல்லவேண்டும் என்றுதான் கைகேயி கட்டளை இட்டாளே தவிர, இலக்குவனைப் பற்றி அவள் ஒன்றும் பேசவில்லையே! அவனும் வனம் போகப் போகிறான் என்று சுமித்திரையிடம் யார் கூறினார்கள்? இலக்குவன் தானும் உடன் வருவதைக் குறித்து (இராமனிடம் கூட) ஒன்றும் கூறவில்லையே! அவ்வாறிருக்க, இருவரும் வனம் புகப் போகின்றனர் என்று சுமித்திரை நினைக்க என்ன நிகழ்ந்தது? ஒன்றும் இல்லை. என்றாலும், மகன் செல்லப் போகிறான் என்ற முடிவுடன் இருக்கிறாள் (அத்தாய்) என்றால், தான் பெற்ற மகன் என்ன செய்வான் என்பதை அறிந்திருந்தாள் என்பதே கருத்து.

### தாயும் மைந்தரும்

இலக்குவனைக் கண்டு அத்தாய் ஒரு சொல்கூடச் சொல்லவில்லை. அவள் மைந்தன் என்ன செய்யக்கூடும் இத்தகைய சந்தருப்பத்தில் என்பதை நன்கு அறிந்தாள் எனில், அதற்குக் காரணம் யாதாய் இருத்தல் கூடும்? தன்னைத்தான் நன்கு அறிந்திருந்த சுமித்திரை, தன் வயிற்றில் பிறந்த மைந்தன் எவ்வாறு நினைப்பான் என்பதையும் அறிந்துள்ளதில் வியப்பொன்றும் இல்லை. 'தாயைத் தண்ணீர்த்துறையில் பார்த்தால் பிள்ளையை வீட்டிற் சென்று பார்க்க வேண்டா', என்பது தமிழ்நாட்டு முதுமொழி. இராமன் மாட்டும், அவன்

தாயாகிய கோசலை மாட்டும் எல்லையற்ற அன்பு கொண்டிருந்தாள் சுமித்திரை. இவள் காட்டிய அன்பைக் கோசலையும் பிரதிபலிக்கிறாள்.

இராமனுடைய முடி சூட்டலைத் தோழிகள் மூலமே முதலிற் கேள்விப்படுகிறாள் கோசலை; எல்லையற்ற மகிழ்ச்சி அடைகிறாள். ஆனால், இராமனை வளர்த்தவளாகிய கைகேயியிடம் தன் மகிழ்ச்சியைப் பங்கிட்டுக்கொள்ள வேண்டும் என்று ஏனோ அவள் நினைக்கவில்லை? அதற்கு மறுதலையாகச் சுமித்திரையிடம் செல்கிறாள் அம்மாதரசி. இராமன் பொருட்டுக் குலதெய்வத்தை வணங்க வேண்டும் என்று கருதிய அவள், சுமித்திரையை உடன் அழைத்துக்கொண்டு செல்கிறாள். கோசலையின் இச்செயலைக் குறிக்க வந்த கவிஞன், ஓர் அடைமொழி தருகிறான் சுமித்திரைக்கு.

'துன்னு காதல் சுமித்திரை யோடும்போய்
மின்னு நேமியான் மேவிடம் மேவினாள்.' (மந்திர. 94)

கோசலை தன் ஆசைக்குப் (காதல்) பாத்திரமான (துன்னு) சுமித்திரையோடும் திருமால் கோயிலுக்குச் சென்றாளாம் பூசனை புரிய. வயதால் முதிர்ந்த கோசலையின் ஆசைக்குப் பாத்திரமானவள் வயதால் இளைய சுமித்திரையா? முறைப்படி இருக்க வேண்டுமாயின், கோசலை தனக்கடுத்த கைகேயியிடம் அல்லவா அன்பு பாராட்ட வேண்டும்? மேலும், கைகேயி தானே இராமனைப் பரிவுடன் வளர்ப்பவள்? அவ்வாறிருந்தும், கோசலையின் காதல் சுமித்திரையிடம் செல்லக் காரணம் யாது? விடை எளிதில் காணக் கூடியதே. ஆண்டால் இவர்கள் இருவரிடையேயும் வேறுபாடிருப்பினும், ஏனைய பல ஒற்றுமைகள் இலங்கக் காணலாம். அவற்றுள் தலையாய ஒன்று, இருவருமே தசரதனால் அதிகம் கவனிக்கப்படாதவர் என்பதுதான். கைகேயியிடம் அரசன் கொண்ட கழிபெருங்காதல் ஏனையோரைக் கவனியாதபடி செய்துவிட்டது. ஆண்டால் இளைய சுமித்திரையைக்கூட அவன் கவனியாமல் விட்டது வியப்பேயாகும். இந்த ஒரு காரணமே சுமித்திரையைக் கோசலைபால் செலுத்தி இருக்க வேண்டும். இருவரும் துன்புறுவது ஒரே காரணத்தாலாகலின், இருவரும் அதிகம் நெருங்கி ஒருவர் மாட்டு ஒருவர் அன்பு கொள்ளலாயினர். யாவரினும் மூத்தவளும் யாவரினும் இளையவளும் ஒன்றுகூட இதைத்தவிர வேறு காரணம் காண்டல் அரிதாகும். மகிழ்ச்சி துயரம் என்ற இரண்டையும் பகிர்ந்துகொள்ள இவ்விருவரும் ஒருவர் மற்றவரை நாடலின் உட்கருத்தும் இதுவேயாம்.

இக்காரணத்தோடல்லாமலும் சுமித்திரையின் இயற்கையான நற்பண்புகள் யாவராலும் போற்றப்பட்டன. கோசலை இராமன் ஆகிய இருவரும் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளும் பண்புடையவளாய்ச் சுமித்திரை இருந்ததை நன்கு அறிகிறோம். எனவே, அவள் மைந்தனாகிய இலக்குவனும் அவளுடைய நற்பண்புகளைப் பெற்றிருப்பான் என்று எதிர்பார்ப்பதிலும் தவறில்லையல்லவா? இதனை மனத்துட் கொண்டுதான் போலும் இராகவன் இலக்குவன் சிற்றத்தைப் பார்த்துக் கூறுகையில்,

''விளையாத நிலத்து உனக்கு எங்ஙன் விளைந்தது?' என்றான்.''

### தாய் துயரும் மகன் விடையும்

இந்த அடிப்படையில் சுமித்திரையைக் காணும் பொழுது அவள் செய்த செயலின் உட்கருத்தை நன்கு உணர முடிகிறது. மைந்தர்களைக் கண்ட மாத்திரையில் தரைமேல் வீழ்ந்து புரண்டு அழுத சுமித்திரையை மைந்தர் இருவரும் தேற்ற முற்படுகின்றனர். அவளுக்கு மன அமைதி கூற வந்த இராகவன் கூறிய வார்த்தைகள் ஆழ்ந்து நோக்கற்குரியன.

''சோர்வாளை ஒடித் தொழுதுஏத் தினன்துன்பம் என்னும்
ஈர்வாளை வாங்கி மனம்தேற் றுதற்குஏற்ற செய்வான்
'போர்வாள் அரசர்க்கு இறைபொய்த் தனன்ஆக்க கில்லேன்
கார்வான் நெடுங்கான் இறைகண்டு இங்ஙன்மீள்வன்,'
என்றான்.'' (நகர். 145)

[மனம் சோர்ந்து வீழ்ந்த சுமித்திரையின் திருவடிகளில் தொழுது அவள் மனத்தில் பதிந்த துன்பம் என்னும் வாளை எடுத்துவிட்டு மனந் தேற்றவந்த இராமன் கூறினான்: ''சக்கரவர்த்தியைப் பொய்யனாக்க யான் விரும்பவில்லை. காட்டைச் சற்றுப் பார்த்துவிட்டு உடன் மீண்டு விடுகிறேன்.'']

இப்பாடலின் மூன்றாவது அடி கவனித்தற்குரியது. 'அரசனைப் பொய்யனாக்க யான் விரும்பவில்லை', என்று இராமன் ஏன் கூற வேண்டும்? அரசன் பெயரிலோ, கைகேயி பெயரிலோ சிறிதும் ஐயங்கொள்ளவில்லையே சுமித்திரை! கொண்டாலும் கொள்ளாவிட்டாலும், அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் இன்னும் வெளி வரவில்லையே! அவ்வாறு இருக்க, இராமன் இதனை ஏன் கூற வேண்டும்? இதனை முதலிற் கூறி விட்டு அடுத்த பாடலில், 'யான் எங்கிருப்பினும் அதுவே எனக்கு

அயோத்தியாகும். எனக்கு யார் துன்பஞ் செய்யப் போகிறார் கள்? நீங்கள் என் பொருட்டுச் சிறிதும் வருந்த வேண்டா', என்று கூறுகிறான். இது முறைதான். வருந்துகிறவர்களை 'வருந்த வேண்டா', என்பதற்குக் காரணம் காட்டி, 'வருந்தற்க,' என்று கூறுவது முற்றிலும் பொருத்தமானதே! ஆனால், இதனைக்கூடக் கூறுவதற்கு முன்னர் அரசனைப் பற்றிய குறிப்பு ஏன் வர வேண்டும்? அறிவிற் சிறந்த இராமன் இதை எளிதிற் கண்டு கொண்டான். அவன் தன் தாயாகிய கோசலையிடம் சென்ற பொழுது அவள் ஒன்றும் அறியாதவளாய் நின்று கொண்டு அவனையே நோக்கி,

''நினைந்ததுஎன்? இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?'
என்றாள்.'' (நகர் நீங்கு. 3)

ஆனால், தன்னைக் கண்ட மாத்திரையில் கீழ் வீழ்ந்து அழுகிறாள் சுமித்திரை என்றால், அவள் முன்னரே இது பற்றி அறிந்துள்ளாள் என்பது தானே கருத்தாகும்?

நடைபெற்ற நிகழ்ச்சி ஓரளவு சுமித்திரைக்குத் தெரிந்துவிட்ட தென்பதை இராமன் அறிந்து கொண்டான். ஆனால், இது யாரால் நடைபெற்றது என்பதை அவள் அறிவாளா இல்லையா என்பதை அவன் அறியான். எனவே, அவள் கைகேயிமேல் ஐயப்பட்டு வீண் வருத்தம் கொள்வதைக் காட்டிலும் முதலிலேயே அவளுக்கு உண்மையை உணர்த்தி விடவேண்டும் என்று கருதி னான். அவ்வாறாயின், உடனே அவள் வருத்தம் கணவனாகிய தசரதன் மேல் திரும்பிவிடலாமன்றோ? அதையும் இராகவன் விரும்பவில்லை. எனவே, மிகவும் ஆராய்ந்த சொற்களால் தசரதனும் வேறு வழி இல்லாமல் அகப்பட்டுக் கொண்டான் என்று கூறுவானைப் போலப் பேசுகிறான். ''அரசனைப் பொய்ய னாக்க யான் விரும்பவில்லை,'' என்று கூறுவதால், அரசன் முன்னரே வாக்குக் கொடுத்து அதில் அகப்பட்டுக் கொண்டான் என்ற கருத்தையும் தெரிவித்து விட்டான். அறிவிற் சிறந்த சுமித்திரை ஒரு நொடிப் பொழுதில் இச்சொற்களின் உட் பொருளை உணர்ந்து கொண்டாள். இது தரும சங்கடமான நிலை என்பதும் அவளுக்கு விளங்கி விட்டது. கணவன், மைந்தன் என்ற இருவருள் ஒருவரை இழந்துதான் மற்றவரைக் காக்க முடியும் என்பதை அவளுடைய கூர்த்த மதி உடன் கண்டு கொண்டது.

எனவே, அவள் அடுத்துச் செய்யப்பட வேண்டுவதைப் பற்றி ஒரு வினாடி நினைந்து ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். இது வரை இராமன் பேசும் பொழுது மிகவும் கவனத்துடன் தன்மை ஒருமையையே பயன்படுத்துகிறான். உடன் நிற்கும் இலக்குவனை அவன் உளப்படுத்தவே இல்லை.

'கான்இறை கண்டு இங்ஙன் மீள்வன்.'
'எனையார் நலிகிற்கும் ஈட்டார்?' (நகர்-145, 6)

இவ்வாறு இராமன் கூறினாலும், சுமித்திரை இலக்குவன் விஷயத்தில் முன்னரே ஒரு முடிவிற்கு வந்து விட்டாள்.

## இலக்குவன் குறிப்பு

இந்நிலையில் கைகேயியிடமிருந்து வந்த பணிப் பெண்கள் மரவுரியைத் தாங்கி வந்தார்கள். அவர்கள் மரவுரியை இராமனுக்காகவே கொணர்ந்தாலும் தான் முன்னே நின்றமையின், இலக்குவனே அதைப் பெற்றுக் கொண்டான். பெற்றுக் கொண்ட பிறகே இலக்குவனுக்கு ஓர் ஐயம் தோன்றிற்று. இராமனுடன் வனஞ்செல்ல வேண்டும் என்று விரும்பிய தன்னைத் தாய் மனவமைதியுடன் ஏற்றுக் கொள்வாளா என்பதே அவனது ஐயம். தந்தையிடம் உத்தரவு பெற அவன் விரும்பவில்லை. அவனைப் பொறுத்த வரையில் தசரதன் ஒரு பகைவனே ஆகிவிட்டான். எனவே, அவனைப் பற்றி இலக்குவன் கவலைப்படவில்லை. என்றாலும், சுமித்திரை யாது கூறுவாளோ என்ற ஐயம் மட்டிலும் அவனை வருத்துகிறது. இராமனையும் உடன் வைத்துக்கொண்டு தாயிடம் தன் கருத்தைக் கேட்பது நாகரிகம் அற்ற செயலாகும். கேளாவிட்டாலும், மிஞ்சிவிடும் நிலைமை ஏற்பட்டுவிடும். "யாது செய்யலாம்?' என்று நினைந்த இலக்குவன், ஒரு முடிவுக்கு வந்தான்; தாயின் நுண்ணிய அறிவை நன்கு அறிந்தவனாகலின், தன் முடிபைக் குறிப்பால் அவளுக்கு உணர்த்த முடிவு செய்தான்.

மரவுரி தந்தவர்களிடமிருந்து அதைப் பெற்றுக் கையில் வைத்துக்கொண்டு, உடனே விழுந்து தாயை வணங்கினான். மரவுரியைக் கையிலேந்தி வணங்கியதால் தாய் அக்குறிப்பை அறிந்து கொள்வாள் எனக் கருதினான் மைந்தன். ஆனால், சுமித்திரை முன்னமே இதுபற்றி ஒரு முடிவுக்கு வந்துவிட்டதை அவன் அறிந்து கொள்ளவில்லை. இவ்வாறு பின்வரும் பாடலுக்குப் பொருள் கூறாமல் அவன் வாய்விட்டுக் கேட்டான் என்று கூறுவதால் ஏற்படும் சுவைக்குறைவை அறிக.

''அன்னான் அவர்தந்தன ஆதரத் தோடும் ஏந்தி
இன்னா இடர்தீர்ந்து, 'உடன்ஏகு எனஎம்பி ராட்டி
சொன்னால் அதுவே துணையாம்' எனத்தூய நங்கை
பொன்னார் அடிமேல் பணிந்தான்; அவளும் புகன்றாள்.''

(நகர் நீங்கு. 147)

'அதுவே துணையாம் என' என்ற தொடருக்கு 'இவ்வாறு என் தாய் கூறினால் அதுவே நலமாகும் என்று நினைத்து' என்று பொருள் கொள்ளுதல் நேர்மையானது. 'என' என்ற சொல்லுக்கு 'என்று நினைத்து' என்று ஒரு சொல் வருவித்துப் பொருள் கொள்ளுதலினால் தவறில்லை.

முதற்பேச்சு

இலக்குவன் இக்குறிப்பை மனத்தில் வைத்துக் கொண்டு வணங்கினவுடன் சுமித்திரை பேசுகிறாள். இராமாயண வரலாற்றில் இப்பொழுதுதான் வாய் திறந்து அம்மாதரசி பேசுகிறாள். இரண்டு பாடல்கள் அவள் கூற்றாய் அமைந்துள்ளன. ''இராமன் செல்லும் அந்த வனம் உனக்கு மட்டும் செல்லத் தகாதது அன்று (உடன் செல்லலே உனக்குத் தகுதி); அந்த வனமே உனக்கு இனி அயோத்தியாகும். மிகுதியும் உன்பால் அன்பு கொண்ட இராமனே மன்னனாவான். இவ்வுலகை இராமன் பரதனுக்கு ஈந்துவிட்டுக் காடு செல்கிறான் என்பதை அறிந்தும் உயிரை வைத்துக்கொண்டிருக்கும் நாங்கள் உன் தாயர் அல்லேம். சீதையே உன் தாயாவாள். உடனே புறப்படு. இனி நீ காலந் தாழ்த்தலும் முறையன்று,'' என்னும் கருத்துப்பட,

''ஆகாதது அன்றால் உனக்குஅவ் வனம்இவ்வ யோத்தி;
மாகாதல் இராமன் அம்மன் னவன்; 'வையம் ஈந்தும்
போகா உயிர்த்தாயர் நம்பூங் குழற்சீதை' என்றே
ஏகாய்; இனிஇவ் வயின்நிற் றலும்ஏதம்,' என்றாள்.''

(நகர் நீங்கு. 151)

இலக்குவன் தன்னுடைய தாய் எங்கே உத்தரவு தர மறுத்து விடுவாளோ என்று ஐயுற்றதற்கு நேர்மாறாக, இவ்வாறு சுமித்திரை கூறிவிட்டாள். இச்சொற்களில் எவ்வளவு தூரம் அவளுடைய உள்ளக் கிடக்கையை வெளியிட்டுவிட்டாள்! தான் பெற்ற மகன் காடு செல்வதை எந்தத் தாய்தான் விரும்புவாள்? ஆனாலும், இதோ ஒரு தாய் மகனைச் செல்க என்று ஏவுகிறாளே ! இது முறையா? இலக்குவன் மன நிலையை நன்குணர்ந்த

தாயாகலின், இவ்வாறு பேசுகிறாள். தாமரைப்பூ நீரில் வாழும் இயல்புடையது. கொடிய பனியாயினும், கடு வெயிலாயினும், அது நீரில் நின்றால் செழித்து வளரும். ஆனால், பஞ்சுப் படுக்கை யாகவே இருப்பினும், தாமரைக்கு அது ஏற்றதன்று. தாமரை மலரிடத்து நாம் கொண்ட அன்பைத் தெரிவிப்பதற்காக அம் மலரை நீரிலிருந்து பறித்து மலர்ப் படுக்கையில் வைத்தாலும், அது வாடிவிடும். அதே போல, இராமன் உள்ள இடத்தில் செழித்து வாழக் கூடியவன் இலக்குவன். இராமன் அயோத்தியில் இருந்தாலும், வனத்தில் இருந்தாலும், அதுபற்றிக் கவலை இல்லை. இலக்குவனும் உடன் இருக்க வேண்டுபவனே தவிரத் தனித்து வாழக்கூடியவனல்லன். இதனை நன்கு அறிந்தமையின், சுமித்திரை, 'அவ்வனம் உனக்கு ஆகாததன்று,' என்று கூறினாள். இதுவரை இலக்குவன் இராமனைத் தமையன் என்றே கருதி வந்தான். தமையனிடம் சில உரிமைகள் எடுத்துக் கொள்ளலாம். ஆனால், இனி அது கூடாதென்பதை அறிவிப்பாள் போல, 'இராமன் அம்மன்னவன்,' என்று குறிப்பிட்டாள். மன்னவன் ஏவல் ஏற்று நடப்பதே குடியின் கடமையும் இயல்புமாகும். அவ்வாணையை ஏன் என்று கேட்கவோ, அதன் நலந்தீங்குகளை ஆராயவோ குடிகட்கு உரிமை இல்லை. அதே போல, இனி இராமன் கட்டளையைத் தலைமேல் தாங்கி நடப்பதே இலக்குவனுக்குக் கடமையாகும் என்பதைக் குறிப்பிட விரும்பிய அத்தாய், இராமனை 'மன்னவன்' என்று குறிப்பிட்டாள். மன்னன் பதவியை அப்பொழுதுதான் துறந்துவிட்டு வந்த மகனை 'அம்மன்னவன்' என்று சுமித்திரை குறிக்கும் பொழுது அவளது மனத்திட்பத்தை நாம் வியவாமல் இருத்தல். இயலாது. தசரதனும் கைகேயியும் - ஏன்? - உலகத்தாரனைவருமே கூடிக்கூட முடியை இராமனிடமிருந்து பறித்துப் பரதனுக்கு நல்கலாம். ஆனால், சுமித்திரை அச்செயலை ஏற்றுக்கொள்வதாக இல்லை. அவளைப் பொறுத்தவரை இராமனே இன்னும் மன்னவன்; அவன் காடு சென்றாலும் கவலை இல்லை; அவனே மன்னன். பிறரைப் பற்றி ஒரு வார்த்தைகூடக் குறையாகவோ பழியாகவோ கூறாமல், தன் மனக்கருத்தைச் சந்தருப்பம் வந்த பொழுது அழுத்தமாகக் கூறும் இம்மாதரசியின் வன்மை சிந்திக்கத் தக்கது.

ஒப்புயர்வற்ற பேச்சு

இராமனை மன்னன் என்று மதித்து அவன் ஏவலின் வழி நிற்க எனக் கட்டளை இட்டுவிட்ட பிறகு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை, சுமித்திரைக்கு! உடனே தன் சொற்களை மாற்றி விட்டு, வேறு கூறுகிறாள்.

''மகனே, இவன் பின்னே செல்வாயாக. ஆனால், தம்பி என்ற கருத்துடன் செல்லாதே! அடியானைப் போல ஏவல் செய். இவன் இவ்வயோத்திக்கு வருவதுண்டாயின், பின்னே வா. அவ்வாறில்லை யாயின், இவன் முன்னம் முடிந்திடு,'' என்ற கருத்தில் இதோ பேசுகிறாள்.

''பின்னும் பகர்வாள்; 'மகனே! இவன்பின்செல்; தம்பி
என்னும் படியன்று; அடியா ரினின்ஏவல் செய்தி;
மன்னும் நகர்க்கே இவன்வந் திடில்வா; அது அன்றேல்
முன்னம் முடி,' என் றனள்வாள் விழிசோர நின்றாள்.''

(நகர் நீங்கு. 152)

அரசனிடத்துக் குடிமகன் போல நடந்துகொள்ள வேண்டும் என்று கூறினால். அதனால் வரும் இடர்ப்பாட்டை உடன் கண்டு கொண்டாள் அவ்வரசி. குடிமக்கள் நலத்திற்காகத்தான் அரசன் இருக்கிறானே தவிர, அவன் நலத்திற்காகக் குடிமக்கள் இல்லையே! முற்கூறியபடி கூறிவிட்டால், இலக்குவன் நலந்தீங்குகளுக்காக இராமன் பொறுப்பாளியாக நேரிடும். எனவே, அக்கருத்தை மாற்றி அமைத்துவிட்டாள் அரசியான சுமித்திரை.

'தம்பி என்று நினைத்துப் போதல் வேண்டா,' என்பதால், இலக்குவனைக் காக்கும் பொறுப்பு இராமனுக்கு இல்லையாதல் காண்க. அதே கருத்தை மேலும் வலியுறுத்தவும், கண்டதற் கெல்லாம் இராமன் கையை எதிர்பார்க்க வேண்டா என்பதை இலக்குவனுக்கு அறிவுறுத்தவும், 'அடியாரினின் ஏவல் செய்தி,' என்றாள். கொடுக்கப்பட்ட வேலையின் உயர்வு தாழ்வு கருதாமலும், அது தன்னால் இயலக் கூடியதா என்பதை ஆராயாமலும், உயிருள்ளவரை செய்து தீர்க்கும் கடப்பாடு ஏவலாளர்க்கே உண்டு. அதே போல, இலக்குவன் நினைந்து வாழவேண்டும் என்பதற்காகவே இதனைக் கூறினாள் சுமித்திரை. 'குடிமகன்போல நடந்துகொள்,' என்று கூறும் பொழுதே இவ்வாறு ஆணை வழி நடத்தல் வேண்டும் என்ற குறிப்பும் பெறப்பட்ட தேயாயினும், அதனால் வரும் இடையூற்றை அழகான முறையில்

நீக்கிவிட்டது அறிந்து மகிழ்தற்குரியது. இனி அடியானுக்கும் ஆண்டானுக்கும் உள்ள தொடர்பையும் எண்ணிப்பார்த்தல் வேண்டும். குடிமகன் கடமையைச் செய்துகொண்டு கூட மன்னனிடத்தில் அன்பில்லாதவனாய் இருக்கலாம். மன்னனிடம் பகைமை பாராட்டாமலும் அன்பு பாராட்டாமலும் இருந்து விட்டால், அதில் தவறு கூறுவதற்கு ஒன்றும் இல்லை. 'நொது மலர்' என்ற முறையில் இலக்குவன் இருந்துவிடக்கூடாதென்பதை அறிவுறுத்தவே ஆண்டான் அடிமை உறவு முறையைக் குறித்தாள் மூவரினும் மேம்பட்ட அக்கற்பரசி. அடிமை ஆண்டானிடம் உயிரைக் கொடுக்கும் அளவுக்கு அன்பு பாராட்ட வேண்டும். தனக்கென ஒரு நிலை இல்லாதவனாய் இருத்தலே அடிமையின் இலக்கணம். ஆண்டானிடத்து முழு அன்பு பாராட்டி அவனுடைய நலம் தீங்குகளே தன்னுடைய நலம் தீங்குகளும் ஆகும் என்று நினைத்து வாழும் மன நிலையே அடிமையின் இயல்பாகும். இந்த மன நிலையுடன் இலக்குவன் காட்டில் வாழவேண்டும் என்றே சுமித்திரை குறிக்கிறாள்.

இந்த அளவோடும் விடாமல், இன்னும் ஒரு படி மேலே சென்றும் ஒரு கட்டளை இடுகிறாள் மூன்றாம் அடியில். எத்துணைச் சிறந்த அடிமையிடமும் இதனை எதிர் பார்த்தல் ஆகாது; அவ்வாறு எதிர்பார்த்தல் முறையும் அன்று. ஆண்டானிடம் அன்பு பூண்டு பணி புரியும் ஓர் ஏவலன் அவ்வாண்டான் இறக்க நேரிட்டால் தானும் இறந்துவிட வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. மிகச் சிறந்த அடிமையாயின், தன் உயிரைத் தந்தேனும் ஆண்டானுக்கு உண்டாகும் இடரைத் தீர்க்க முயலவேண்டும். ஆனால், ஆண்டான் விதியால் இறக்கநேரிட்டால், அதனை நீக்க அடிமை செய்யத்தக்கது யாதுமில்லை. இதனையும் மாற்றிச் சுமித்திரை ஏவுகிறாள். 'அடிமையாகச் செல்கிற நீ, உன் ஆண்டானாய இராமன் இவ்வூருக்கு மீண்டால், மீண்டு வா; அவ்வாறு இல்லையாயின், அவனுக்கு முன்னே முடிந்துவிடு,' என்னும் கருத்தில்,

''மன்னும் நகர்க்கே இவன்வந் திடில்வா; அது அன்றேல்,
முன்னம் முடி,' என்றனன்.''

இவ்வாறு மகனைக் கட்டளை இடும் தாயை இதுவரையிற் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. அதுவும் மாற்றாள் மகனுக்

காகத் தன் மகனை இவ்வாறு கட்டளை இடும் தாயை மானிடப் பிறவியில் சேர்க்காமல் தெய்வப் பிறவியாகவே கொள்ளல் தகும். இவ்வாறு கூறுவதிலும் ஓர் அழகு பொருந்தக் கூறுவதையும் காண்டல் வேண்டும். 'மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வா,' என்று கூறிய அத்தெய்வம், அதனையடுத்து யாது கூறியிருத்தல் வேண்டும்? 'அவ்வாறன்றி, அவனுக்கு ஏதேனும் தீங்கு நேருமாயின், அவன் முன்னரே நீ முடிந்துவிடு,' என்று தானே கூறல் வேண்டும்? அவ்வாறு கூறினாலும் தவறு ஒன்றும் இல்லை.

ஆனால், 'இராமனுக்குத் தீங்கு நேர்ந்தால்' என்ற அமங்கலமான சொல்லை வாயாற் கூறக்கூட அம்மானிடத் தெய்வம் அஞ்சுகிறது. 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன' இராமனுக்குத் 'தீங்கு நேர்ந்தால்' என்று கூற எவ்வாறு நாத்துணியும்? எனவே, அதனைச் சொற்களாற் கூறாமல், குறிப்பால் பெறவைக்கிறாள்.

> ''மன்னும் நகர்க்கே இவன்வந் திடில்வா; அதுஅன்றேல்
> முன்னும் முடி,' என்றனள்.''

'அது அன்றேல்' என்ற சொற்களாலேதான் அவள் அஞ்சிய அச்சத்தை வெளியிட முடிந்தது. ஆனால், தன் மகனைக் கூறும் பொழுது 'முன்னம் முடி,' என்கிறாள். 'இராமனுக்கு முன்னரே நீ இறந்துவிடு,' என்பதே இப்பகுதியின் பொருள். அயல் வீட்டிலிருந்து வந்து வாழ்க்கைப்பட்ட சிதைக்குக்கூட இச்சொற்களைக் கேட்டவுடன் ஒரு துணுக்கம் ஏற்படுகிறது.

சரியான நேரத்தில் சிதைக்கு இச்சொற்கள் நினைவுக்கு வருகின்றன. பிரமாத்திரத்தாலே கட்டுண்டு இறந்தவனை யொப்பக் கிடக்கும் இலக்குவனைக் காண்கிறாள் பிராட்டி. தன்னால் நேர்ந்த இக்கொடும்பழியை நினைத்து ஆவி சோர் கிறாள் அக்கற்பரசி. காடு நோக்கிப் புறப்படுகையில் தன் மாமி கூறிய இச்சொற்கள் பிராட்டியின் நினைவுக்கு வருகின்றன. உயிர்துடிக்க, உள்ளந்துடிக்க, இதனைக் கூறுகிறாள். 'தீவினையின் பயனாய்க் கடுமையான காட்டுவழியில் எங்கள் இருவரோடும் செல்லப் புறப்பட்ட பொழுது 'இளையாய், அறிவுடையோனே, உனக்கு மூத்தவனாகிய இராமன் விதியால் இறக்கநேரிட்டால் அவனுக்கு முன்னரே முடிந்துவிடு,' என்று கூறிய உன் தாயாரின் வார்த்தைகளைக் கடைப்பிடித்துவிட்டாயோ!' என்ற கருத்தில்,

"'மேதா! இளையோய்! விதியார் விளைவால்
போதா நெறிஎம் மொடுபோ துறுநாள்
'மூதான் அவன்முன் எம்முடிந் திடு'எனும்
மாதா உரையின் வழிநின் றனையோ?"

(சிதை களங்காண். 18)

என்றும் கூறியழக் கேட்கிறோம்.

இரண்டு பாடல்கள் அளவே வாய் திறந்து பேசும் சுமித்திரையை ஓரங்குல உயரத் தந்தத்தில் குடைந்து செய்யப் பட்ட ஒப்பற்ற சிற்பமாகச் செய்து விட்டான் கம்பநாடன்! அவள் கூற்றாகிய இரண்டாம் பாடலை நோக்க, அவள் கோசலையினும் மேம்பட்டவளாகவே காட்சியளிக்கிறாள்.

# தம்பியர் இருவர்

## 7. குகன்

### 7. 1. நாவாய் வேட்டுவன்

இந்தப் பரந்த உலகில் பல்வேறு வகைப்பட்ட மனிதர் இருக்கின்றனர். ஒரு சிலரைப் பார்த்ததும் அவருடன் நட்புக்கொள்ள விரும்புகிறோம்; சிலரைக் கண்டதும் வெறுக்கிறோம்; அவருடன் நட்பினராய் இருந்தாலும், எப்பொழுது அவரிடமிருந்து விடுதலை பெறலாம் என்றே முயல்கிறோம். கூடுமானவரை இந் நியதி தவறுவதில்லை. சில சமயங்களில் ஒருவரைப் பார்த்த அளவில் விருப்பு வெறுப்புக் கொள்வது தவறாக வும் முடிகிறது. ஒருவர் உடல் அமைப்பு, முகத்தோற்றம் கண்கள் முதலியவற்றிலிருந்து அவருடைய குணநலங் களை முடிவு செய்யலாமேனும், சில நேரங்களில் இம் முறை பெரிதும் பிழைபட்டுவிடுகிறது. மிகக் கடுமையான புறத்தோற்றம் உடையவர், மிக இனிய பண்புடையவ ராய் இருத்தலும்; மிகவும் விரும்பத்தக்க புறத்தோற்றம் உடையவர், மிகக்கேடான பண்பாடுடையவராய் இருத் தலும் உண்டு. எந்தப் பொது நியதிக்கும் புறநடைகள் உண்டு என்பதை மறத்தலாகாது. இவ்வுண்மை நம்முள் பலரும் உலகானுபவத்தில் அறிகிற ஒன்றாகும்.

இலக்கியத்திலும் இவ்விதப் படைப்புக்களைக் கவிஞன் படைக்கிறான். 'கொடுமனக் கூனி'யை எடுத்துக் கொள்வோம் 'உள்ளமும் கோடிய கொடியாள்' என்று கவிஞன் அவளைக் குறிப்பிடுகிறான். 'உள்ளமும்' என்ற சொல்லில் காணப்பெறும் 'உம்'மை அவள் புற உடலும் அழகற்றுக் கூனலாய் வெறுக்கத் தக்கதாய் உளது என்பதைக் குறிக்கிறதன்றோ? இதே போன்று, 'ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய்' என்று இராமனை வாலி

விளிக்கிறான். இத்துணைப் புற அழகுடைய இராமன் அக அழகும் உடையவனாய் இருப்பதையும் அறிகிறோம். இவ்விருவரும் கவிஞனுடைய படைப்புக்களே. இனி இச்சட்டத்திற்கு மாறாகவும் படைக்கப்படலாம். கைகேயி மிக்க அழகுடையவள் என அவளுடைய பகைவருங்கூடப் பேசுகின்றனர். தசரதன் அவளுக்கு அடிமையானதே அவளுடைய புற அழகைக் கண்டு மயங்கித்தானே? இத்துணை அழகிய அப்பெருமாட்டி—அரசரிற் பிறந்து, அரசரிற் புகுந்து, பேரரசியான அவள்—இறுதியில் தீய பண்பு உடையளானாளன்றோ? அழகெல்லாம் திரண்டு ஓர் உருவாய் அமைந்த கைகேயி இவ்வாறு தீயவள் ஆனாள் என்ற காரணத்தால், அழகுடையவர் அனைவருமே தீயவர் என்ற முடிபுக்கு வருதல் நேரிதா? புறஅழகு ஓரளவு மனப்பண்பைக் காட்டுவது உண்மையே எனினும், இதற்கும் புறநடைகள் மிகுதியும் உண்டு என்பதை மனத்தில் இருத்த வேண்டும்.

இந்த அடிப்படையில் கம்பநாடன் கலைக்கோயிலிற் காணப் பெறும் 'குகன்' என்ற பாத்திரத்தைக் காண்டல் வேண்டும். ஒரு வகையான 'முரண்' (Contrast) அணியுடன் கவிஞன் குகனை நமக்கு அறிமுகம் செய்து வைக்கிறான். கங்கைக் கரையில் இராமன் வனம் புகு கோலத்துடன் வந்து தங்கியுள்ளான். அவனைச் சுற்றிலும் முனிவர்களும், யோகிகளும், அந்தணர்களும் நிறைந்துள்ளார்கள். புறந்தூய்மை அகந்தூய்மைகளுடன் இருக்கிறார்கள் அப்பெரியவர்கள். அவர்களுடைய முகத்தூய்மை போலவே அவர்கள் தங்கியுள்ள இடமும் தூய்மையாய் விளங்குகிறது. வழிபாடு செய்கின்ற இடம் நறுமணத்துடன் திகழ்வது போல, இராமன் தங்கியுள்ள இடமும் நறுமணத்துடன் விளங்குகிறது. திடீரென்று அந்த இடத்தில் மீன் நாற்றம் வீசுகிறது. தவசிகள் கூடிய கூட்டத்தில் எவ்வாறு மீன் நாற்றம் வீசமுடியும்? அனைவரும் திரும்பிப் பார்க்கின்றனர் வியப்புடன். இலக்குவன் மிக்க பணிவுடன் வந்து நின்று வாய் புதைத்துப் பேச முற்படுகிறான். ''அண்ணலே, கங்கையில் படகோட்டும் வேடர்கட்கெல்லாம் இறைவனான குகன் என்பவன் பெருங்கூட்டமான சுற்றத்தாருடன் வந்துள்ளான். அவன் உள்ளம் தூயவன்; தாயைக் காட்டிலும் நல்லவன். உனது காட்சிக்காக வெளியே காத்து நிற்கிறான்,'' (கங்கை. 40) என்று கூறுகிறான்.

அப்பொழுதுதான் புதியவனாய் வந்துள்ளான் குகன். இலக்குவனை அவன் முன் பின் பார்த்ததில்லை. இருவரும் முதன்

முறையாக இப்பொழுதுதான் சந்தித்தனர். இலக்குவன் குகனிடம் பேசியவை இரண்டே சொற்கள். 'நீ யார்?' என்பனவே அச்சொற்கள். இவ்வினாவிற்குக் குகன் கூறிய விடையும் சுருக்க மானதே. ''தேவா, நின்னைச் சேவிக்க வந்தனன், நாவாய் வேட்டுவன் நாயடியேன்,' என்றான்.'' (கங்கைப் படலம். 38) இவ்வார்த்தைகளுடன் குகன் வந்திருப்பதை அறிவிக்க இராமனிடம் சென்றுவிட்டான் இலக்குவன். குகனிடம் இரண்டே சொற்கள் பேசியிருப்பினும், அவனைச் சில வினாடிகளே பார்த் திருப்பினும், அறிவாற்றல் மிக்க இலக்குவன், குகனை அளந்து விட்டான்; முதற் பார்வையிலேயே குகன் தாயினும் நல்லவன் என்ற முடிவுக்கு வந்துவிட்டான். இலக்குவனுடைய கூர்மையான அறிவாற்றலுக்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டாகும். குகனைப் பற்றி இலக்குவன் கொண்ட இந்த முடிபு எத்துணை உண்மை யானது என்பதைப் பின்னரும் காணலாம். இதில் ஒரு சிறப்பு என்னவென்றால், குகன் வந்திருக்கும் நிலைமைக்கும், அவன் வந்துள்ள இடத்திற்கும் சிறிதும் பொருத்தமே இல்லை. மீன் நாற்றம் மூக்கைத் துளைக்கிறது அவன் சென்ற இடமெல்லாம்! போதாக்குறைக்குப் பக்குவம் செய்த மீன் உணவையும் கையில் கொண்டு வந்துள்ளான். ஏன் தெரியுமா? தன் தலைவனாகிய இராமனுக்குக் காணிக்கையாம், பக்குவப்படுத்தப் பெற்ற மீனும் தேனும்! முனிவர்கள் தங்கியுள்ள பர்ணசாலைக்கு அணித்தேயும் கொண்டுவரக்கூடிய பொருளா மீன்? ஆனாலும், அதைப்பற்றிக் கடுகளவும் கவலைப்படாமல் கொண்டு வந்துவிட்டான் அத்தாயினும் நல்லானாகிய நாவாய் வேட்டுவன். இலக்குவனே வந்திருப்பவனை 'உள்ளம் தூயான்' என்றும் 'தாயினும் நல்லான்' என்றும் கூறிய பிறகு இராமன் அதுபற்றி அறிய வேண்டுவது யாது? ஒன்றுமில்லை அல்லவா? எனவே, இராமன் அவனை உடனே உள்ளே அழைத்து வருமாறு பணிக்கிறான்.

இதோ குகன் உள்ளே வந்து இராமனை விழுந்து வணங்கி விட்டு, வாய் புதைத்து நிற்கிறான். சுற்றிலும் உள்ள முனிவர் பெருமக்கள் அவனை வெறித்து நோக்குகின்றார்கள். அவனது புறத்தோற்றம் அவ்வளவு வெறுப்பை உண்டாக்குவதாய் இருக் கிறது. மிக நல்ல உயரம் உடையவனாய் நிற்கிறான் குகன். நல்ல கறுப்பு நிறம், மையை உடல் முழுவதும் பூசினாற்போல இருக் கிறது. நாண் ஏற்றப்பட்ட வில் இடத்தோளில் தொங்கிய அடையாளம் இருக்கிறது. அவ்வளவு பெரிய வில் தொங்குவதற்கு

ஏற்றது அவனுடைய மலை போன்று திரண்ட தோள். கையில் துடி ஒன்றும் இருக்கிறது. இப்பொழுது அவனுடைய கால்களில் செருப்பு இல்லையாயினும், தோல் செருப்பின் அடையாளம் அவனுடைய பாதங்களில் அழுந்தியிருக்கிறது. அவன் புறப்படும் பொழுது ஒலிக்கும் வாத்தியங்கள்கூட அச்சத்தை விளைக்கும் கொம்பு பறை முதலியனவாகும். பம்பை முதலிய சில வாத்தியங்கள் அவன் இடையைச் சுற்றியுள்ளன. அவன் 'காழம்' என்ற பெயரை உடைய அரைக்காற்சட்டையை அணிந்துள்ளான். அவன் இடையிலிருந்து கால் வரை ஒரு புலியின் வால் தொங்கிக் கொண்டிருக்கிறது. உடையை இறுக்குவதற்கும் புலி வாலையே கச்சையாகக் கட்டியுள்ளான். அவன் அணிந்திருக்கிற ஆபரணங்கள் உடையைக்காட்டிலும் விசித்திரமானவை. பற்களை ஒழுங்குற தொடுத்தாற்போன்ற பலகறைகளால் தொடுக்கப்பெற்ற மாலையை அணிந்துள்ளான். அவனுடைய கால்களைப் பார்த்தால், 'இவை கற்களோ!' என்னும் ஐயம் தோன்றும். ஆண் மக்களுடைய தலை மயிர் கறுப்பு நிறம் உடையதாகவேதான் இருக்கும். ஆனாலும், குகனுடைய தலையில் இருள் கவிந்திருப்பது போன்ற கருநிறம் தங்கியிருக்கிறது. இந்த அழகான தலை மயிரில் இறகு வைத்து அலங்காரம் செய்துகொள்வது போல முற்றியுள்ள ஒரு நெற்கதிரைச் செருகியுள்ளான். அவனுடைய கைகளே பார்ப்பதற்கு வேடிக்கையாய் உள்ளன. கமலம் என்று கூறத்தக்க கைகளையுடைய இராமபிரான் பக்கத்தில் நிற்கும் குகனுடைய கைகளைப் பாருங்கள்! இராமனுடைய கையைப் பார்த்தால், தாமரை மலர் நினைவுக்கு வரும். குகனுடைய கையைப் பார்க்கும் பொழுது பனைமரத்தைப் பார்க்கும் எண்ணந்தான் தோன்றும். ஏன் தெரியுமா? பனை மரத்தில் வலிமையான சிறாம்புகள் மேல் நோக்கி வரிவரியாய் இருக்கக் காண்கிறோமல்லவா? அதே போல முழங்கைப் பகுதியெல்லாம் வலிமையான மயிர் கீழ் நோக்கித் தடித்து வளர்ந்திருத்தலினால் அந்தக் கையைப் பார்க்கும் பொழுது பனை மரத்தின் நினைவு உண்டாகிறது. பிற வீரர்களுடைய மார்பைக் 'கல் போன்ற மார்பு' என்று கூறுவது மரபு. ஆனால், குகனுடைய மார்பைக் கூற வந்த கம்பநாடனுக்கு அந்த உவமை சரியானதாகத் தெரியவில்லை. எனவே, கூறும் முறையை மாற்றிவிட்டான். "கண் அகன் தடமார்பு எனும் கல்லினன்" (கங்கை. 33) என்று கூறிவிட்டான். அதாவது மார்பு என்ற பெயருடன் மார்பு இருக்க வேண்டிய இடத்தில் கல் இருந்தது

என்று கூறுமுகத்தான் கம்பன் நம்முடைய மனத்தில் ஒரு தனி மதிப்பை உண்டாக்கிவிட்டான். எவ்வளவுதான் 'கல் போன்ற தோள்கள்' என்று கூறினாலும், ஏனையோர் தோள்களைப் போல இவையும் வலிமையான தோள்கள் என்ற பொருள் கிடைக்குமே தவிர, குகனுடைய தோள்களுக்கு என்று தனி மதிப்புக் கிடைக்காது. எனவே, கவிஞன் இப்புது வழியைக் கையாண்டு 'மார்பு எனும் கல்லினான்' என்று உவமையை உருவகமாக்கி நம் மனத்தில் குகனுடைய மார்புக்கு ஒரு தனி மதிப்பைப் பெற்றுத் தந்து விட்டான். இந்த மார்பைத் தாங்கும் குகனது இடுப்பு இன்னுஞ் சற்றுக் காண்டற்குரியது 'உண்டோ' என்று ஐயுறும் படியான இடையை உடைய சீதை இருக்கும் அதே பர்ண சாலையில் இதோ குகனும் நிற்கிறான்! அவனுடைய இடையைப் பார்த்தவுடன் நாம் காணாததும், ஆனால் அதிகம் கேள்வியுற்றது மான இந்திரனுடைய 'வச்சிராயுதம்' நம் நினைவிற்கு வருகிறது. அவனுடைய இடையில் கட்டிய வாளில் இரத்தக் கறை படிந்திருக் கிறது. அதைத் துடைத்துத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணங்கூட அவனுக்கு இல்லை போலும்!

இவை அனைத்துமே அவ்வளவு விரும்பத் தக்கன அல்ல என்பது தெளிவு. என்றாலும், ஒரு மனிதனுடைய கண்களைக் கொண்டு அவனைப் பற்றி முடிபு செய்யலாம். இத்தனை புறத்தோற்றமும் நன்றாய் இல்லை என்றாலும், அவனுடைய பார்வையாவது குளிர்ந்ததாய் இருக்குமா என்றால், விடமுடைய பாம்புகளும் நடுங்கும் பார்வை உடையவன் என்று கூறப்படுகிறான். 'நச்சு அராவும் நடுக்குறு நோக்கினான்' (கங்கைப்.34) என்று கவிஞன் கூறி முடிக்கும்பொழுது குகனைப்பற்றிய முழு வடிவமும் நம் கண்முன் தோன்றிவிடுகிறது. இன்னும் ஒன்றே ஒன்றுதான் எஞ்சியுளது. அதாவது, 'இத்தகைய புறக்கோலம் உடையவன் எவ்வாறு பேசுவானோ!' என்று நாம் ஐயுறுவோம் அல்லவா? இதோ கவிஞன் விடை கூறுகிறான். பைத்தியக்காரனைப்போல முன்னுக்குப் பின் தொடர்பில்லாத சொற்களைப் பேசுகின்றான் என்ற கருத்தில் 'பிச்சராம் அன்ன பேச்சினன்' (34) என்றே கூறுகிறான். இத்துணையும் போதாவிடில் அவன் அணிமையில் இருக்கும் பொழுது உண்டாகும் தீய நாற்றம் உறுதியாகவே வெறுப்பை விளைக்கும். ஊனையும் மீனையுமே மிகுதியும் உண்பதால் அவற்றின் நாற்றமும் அவனுடனேயே வருகிறது. இத்துணை வெறுக்கத் தக்கவை இருந்தும், அவனுடைய முகத்தில்

ஓரளவு புன்சிரிப்பாவது இருக்குமாயின், இவ்வெறுப்பை மாற்றும் எனலாம். அதற்கும் இடம் தாராதபடி அவனுடைய முகத்தில் சிறிதும் புன்முறுவல் இல்லையாம். அது மட்டுமா? 'சீற்றம் இன்றியும் தீயெழ நோக்குகின்றனனாம்!' (35) எப்படி இருக்கும் அத்தோற்றம்? கோபம் இல்லா நேரத்திலுங்கூடத் தீயெழ நோக்கும் பழக்கத்தைப் பெற்றுவிட்டான் போலும்! வாய் திறந்து பேசத் தொடங்கிவிட்டால்தான் எத்துணை இனிமையான குரல்! தென்திசைக் கோனாகிய எமதர்மனும் அஞ்சும்படியான இடிக் குரலுடன் பேசுகிறான். இத்தகைய வடிவழகுடன் விளங்கும் குகன், கங்கைக் கரையில் இருக்கும் **'சிருங்கிபேரம்'** என்னும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு, அதனைச் சுற்றியுள்ள பகுதியை ஆட்சி செய்கிறான்; பெரியவனாகிய இராமனைக் காணவரும் பொழுது காணிக்கைப் பொருளாக மீனையும் தேனையும் கொண்டுவந்துள்ளான்.

இத்தகைய வடிவையும் குரலையும் உடைய குகனை இலக்குவன் சில வினாடிகளே கண்டான்; இரண்டொரு சொற்களே பேசினான். என்றாலும், என்ன? அவனுடன் பலகாலம் அறிந்து பழகியவன் போலச் சில கருத்துக்களை இராமனிடம் கூறுகிறான். இது எவ்வாறு முடிந்தது? புறத்தோற்றத்திற்கும் அகப்பண்பிற்கும் நேர் முரணாய் உள்ள பாத்திரப் படைப்பாகும் இப்படைப்பு. இது பலாப்பழத்தைப் போலப் புறப்பகுதி முள்ளாகவும், சுரசுரப் பாகவும் இருக்கிறது. காண்பதற்குப் பலாப்பழம் வெறுப்பைத் தருவதாயினும், அதனைப் பொறுத்துக் கொண்டு உள்ளே நோக்கினால் இனிய சுளைகள் காணப்படுகின்றன அல்லவா? அதே போலக் குகனது புறத்தோற்றத்திற்கு முற்றிலும் மாறாக அவனுடைய அகமும் பண்பாடும் காட்சி நல்குகின்றன. இதனை விடச் சிறப்பான செயல் என்னவெனில், இலக்குவன் இவ்வுண்மையைக் கண்டு பிடித்ததாகும். எத்துணை அறிவாற் சிறந்தவர்களையும் பிறருடைய புறத்தோற்றம் ஓரளவு ஏமாற்றி விடுகிறது. மிகச்சில கூர்த்த மதியினரே இப்புறக்காட்சியால் மயங்கிவிடாமல் உள்ளே ஊடுருவிநோக்கி உண்மை காணு கின்றனர். அத்தகைய கூர்த்தமதியினருள்ளும் தலைசிறந்தவனாய் இருக்க வேண்டும் இலக்குவன் என்று உறுதியாகக் கூறலாம். தன்னைப் பெற்றெடுத்த தாய் அழகியா அல்லளா என்று யாரும் சிந்திப்பதில்லை. அதே போன்று குகனது புறத்தோற்றம்

கவனிக்கப்பட வேண்டாதது என்பதைச் சுட்டிக்காட்டுவான் போல இளையவன் இராமனிடன் 'தாயினும் நல்லன்' என்று கூறுகிறான்.

## தாய் போல உணவு தந்தது

குகனுடைய அன்புடைமை முதலிய பண்பாடுகளைக் கூறியதுடன் அமையாது அவன் வாழ்க்கையில் எந்தத் தரத்தில் உள்ளான் என்பதையும் இலக்குவன் குறிப்பது, அவனது நுண்மாண் நுழைபுலத்தையே குறிக்கிறது. 'எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை குகன்' என்று கூறும் பொழுது, குகன் பல படகுகளை வைத்து ஆளும் அரசச் செல்வம் படைத்தவன் என்பதையும் இலக்குவன் குறித்தமை காண்க.

இவ்வாறு இலக்குவன் கூறவேண்டிய இன்றியமையாமை யாது? இராமன் காட்டில் வந்து தங்கியிருப்பினும் அவன் சக்கர வர்த்தி திருமகன் என்பதும், இன்று இல்லாவிடினும் ஒரு நாள் சக்கரவர்த்தி ஆக வேண்டியவன் என்பதும் மறக்கற்பாலன அல்ல. எனவே, அவன் ஒருவரை இன்னார் என்று அறியாமல் வரவேற்றல் இயலாது; ஒருவரைப் பார்த்த பின்னரும் அவரது புறத்தோற்றத் தைக் கொண்டு மரியாதை முதலியன செய்தல் இயலாது. ஆனால், அரசனாய் உள்ளவன் வருபவர் தரம் அறிந்து சிலரை அமரச் செய்ய வேண்டும்; சிலரை நின்றபடியே பேசி அனுப்பவேண்டும். எனவே, வருபவனை இராமன் எவ்வாறு வரவேற்க வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறான் இளையவன். குகன் வேடனாயினும், அவனது புறத்தோற்றம் நன்கு அமையாவிடினும், அவன் ஓர் அரசன் என்பதும், யாருக்கும் கட்டுப்பட்டவன் அல்லன் என்பதும் கருத்தில் இருத்த வேண்டியவை. இராமனை வந்து பார்க்க வேண்டிய கடப்பாடு உடையவன் அல்லன் குகன். பின்னர் ஏன் இவ்வளவு சுற்றத்தாரோடும் வந்துள்ளான் எனில், அவனுடைய அன்பு ஒன்றே காரணம் என்க. எனவே, உரிமை யுடைய ஓர் அரசன், தன் நாட்டிற்குள் வந்து தங்கிய பக்கத்து நாட்டின் மன்னனைக் காணும் நிலையில் குகன் இப்பொழுது வந்துள்ளான் ஆகலின், அவனை வரிசை அறிந்து வரவேற்றல் இராமனுடைய கடமைகளுள் தலையாய ஒன்றாகும். எனவே, இலக்குவன் இதனைப் பலர் நடுவில், இராமனுக்கு நினைவூட்டல் ஆகாது என்ற கருத்தால் குறிப்பாக உணர்த்துகிறான். வந்திருப்பவனும் சுதந்தரமுடைய ஓர் அரசன் என்ற சொற்களை

இறுதியில் கூறுவதால் இக்கருத்தைப் பெறவைத்துவிட்டான் இலக்குவன். தன்னிடம் தோற்றவனாயினும் 'புருடோத்தமனை' அரசமரியாதைகளுடன் நடத்திய அலெக்ஸாண்டரும் இவ்வுண் மைக்கு ஓர் எடுத்துக்காட்டு அன்றோ? இன்று இங்கிலாந்தின் அரசியாராய் அமர்ந்துள்ளவரும் தம்முடைய உலக யாத்திரையின் போது இவ்வாறு நடந்துகொண்டதைச் செய்தித்தாள்களின் மூலம் அறிந்தோம் அல்லவா?

இலக்குவன் கூறிய குறிப்பை அருகில் இருந்தவர்கள் அறிந்து கொண்டிருத்தல் இயலாது. எனினும், இராமன் அதனை உடன் உணர்ந்துகொண்டான் என்பதை இராமன் செய்த செயலால் அறியலாம். உடனே குகனை அழைத்து வருமாறு இலக்குவனை நோக்கி இராமன் கூறவும், அவன் சென்று அழைத்து வந்து விட்டான். உள்ளே வந்த குகன் 'கண்ணனைக் கண்ணில் நோக்கிக் களித்தனன்' (கங்கை. 41); உடனே கீழே வீழ்ந்து மண்ணுற வணங்கி எழுந்து உடலை வளைத்து வாய் புதைத்து நின்று விட்டான். அவ்வாறு குகன் தானும் ஓர் அரசன் என்பதையும் கருதாமல் கீழே விழுந்து வணங்கிவிட்டு அருகில் வாய் புதைத்து நின்றாலும், அவன் ஓர் அரசன் என்பதை இராமன் மட்டும் மறந்துவிடவில்லை. எனவே, இலக்குவன் கூறிய குறிப்பையும் மனத்துட்கொண்டு அக்கமலக் கண்ணன் வாய்திறந்து முதலிற் பேசிய சொற்கள் 'இருத்தி ஈண்டு' (42) என்பனவாகும். இராமன் 'அமர்க' என்று கூறினாலும் குகன் உட்கார விரும்பவில்லை. ஒரு சிலரைக் கண்டவுடன் நம்மனம் அவர்களிடம் நம்மையும் அறியாமல் மரியாதை செலுத்தத் தொடங்கிவிடுகிறது. அவர்கள் எவ்வளவு வற்புறுத்தினாலும் அவர்கள் எதிரே அமர மனம் இடம் தருவதில்லை. குகனும் இந்த மனநிலையில் இருப்பதால், அவன் இராமன் எதிரே அமர விரும்பவில்லை.

இனி அடுத்துக் குகன் பேசத் தொடங்குகிறான். இராமன் 'இருத்தி' என்று கட்டளையிட்டும் தான் அமரவில்லை என்றால், அதை இராமன் தவறாக எடுத்துக்கொள்ளக் கூடாதபடி மிகுந்த அன்பைக் காட்டுபவனாய்ப் பேசத் தொடங்குகிறான். 'ஐயனே' உணவுக்கு ஏற்ற முறையில் மீனும் தேனும் பக்குவப்படுத்திக் கொண்டு வந்துள்ளேன். உண்டருள்க!' என்று கூறியிருப்பின், இராமன்பாடு தர்மசங்கடமாகிவிடும். ஆனால், பண்பாடுடைய குகன் வாயில் அத்தகைய சொற்கள் வாரா அல்லவா?

'உண்டருள்க' என்பது சொல்லளவில் மரியாதையைக் காட்டி னாலும் ஒரு வகையில் ஏவலாகவே அமைந்துவிடும். எனவே அவ்வாறு கூறாமல் 'என்கொல் திருவுளம்?' என்கிறான் குகன்.

''இருத்திஈண்டு என்ன லோடும்
இருந்திலன் எல்லை நீத்த
அருத்தியன் 'தேனும் மீனும்
அமுதினுக்கு அமைவ தாகத்
திருத்தினன் கொணர்ந்தேன்; என்கொல்
திருவுளம்?' என்ன, வீரன்
விருத்தமா தவரை நோக்கி
முறுவலன் விளம்பல் உற்றான்.''

(கங்கைப்படலம், 42)

குகனுடைய பேச்சில் அவனுடைய அன்பின் ஆழமும், வஞ்சக மற்ற மனப்பாங்கும் நன்கு வெளிப்படுகின்றன. 'என்கொல் திருவுளம்?' என்ற அடக்கமான வினாவில் அவனுடைய நயத்தகு நாகரிகமும் வியத்தகு பண்பாடும் வெளிப்படுகின்றன. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதமாக அமைவது போல, குகனுடைய மனப்பாங்கை விளக்கச் சிலவாகிய இச்சொற்களே போதுமானவையாய் அமைந்து விட்டன. இப்பண்பாட்டைக் கண்ட இராமன் எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டு விட்டான். அயோத்தியில் அவன் இத்தகைய ஆடம்பரமற்ற அன்பைச் சிலரிடம் கண்டதுண்டு. அரசனுக்கு மூத்த மகனாகப் பிறந்துவிட்ட காரணத்தால் அவனிடம் தூய்மையான அன்பு பாராட்டுபவர் களுங்கூட ஆடம்பரத்துடனேயே இதனைத் தெரிவித்தனர். அவன் எங்குச் சென்றாலும் அவனுக்காக அவனிடம் அன்பு பாராட்டு பவர் மிகவும் குறைவு. சக்கரவர்த்தியின் முதல் மகன் என்பதற்காக அல்லாமல் அவனுக்காகவே அவனிடம் அன்பு பாராட்டுபவர் குறைந்துள்ள இந்த உலகில் இத்தகைய கள்ளங்கபடமற்றதும், தூய்மையானதுமான அன்பு இராமனை முற்றிலும் கவர்ந்து விட்டதில் யாதும் வியப்பில்லை. இவ்வாறு அவன் கவரப்பட்டான் என்பதை அடுத்த பாடல் நன்கு விளக்குகிறது. குகன் கொணர்ந்த உணவை இராமன் ஏற்றுக்கொள்ளும் நிலையில் இல்லை. தவ வேடம் பூண்டு புலால் உண்ணாத 'கம்பராமன்' இப்பொழுது காய்கனிகளை மட்டுமே உண்பதாக உறுதி பூண்டு புறப்பட் டுள்ளான். அவன் குகன் கொணர்ந்த உணவை உண்பது இயலாது. எனினும், அவ்வுணவுடன் கலந்துள்ள தூய்மையான

அன்பை நோக்க அதனைப்புறக்கணிக்கவும் இயலாது. எனவே, குகனை நோக்கிக் கூறுகிறான். 'ஐயனே, உன் மனத்தில் உள்ள அன்பு முற்றிப் பத்தியாக மாறிவிட்டதை அறிவிப்பது போல நீ கொணர்ந்த உணவை மிகவும் கிடைத்தற்கரிய அமிழ்தமாகவே ஏற்றுக் கொள்ளுகிறோம். பரிவுடன் (Sympathy) கலந்திருத்தலின் அவ்வுணவைத் தூய்மையானது என்றே எம்போல்வார் ஏற்றுக் கொள்வர். நாம் அதனை உண்டதாகவே கருதுகிறோம்!'

"அரியதாம் உவப்ப உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்றால் அமிழ்தினும் சீர்த்த அன்றோ?
பரிவினில் தழீஇய என்னில் பவித்திரம் எம்மனோர்க்கும்
உரியன இனிதின் நாமும் உண்டனம் அன்றோ?' என்றான்."
(கங்கை. 43)

செய்கின்ற செயலைப் பெரிதென மதியாமல் அச் செயலின் அடிப்படையில் உள்ள மனநிலையை மட்டும் பெரிதாகப் போற்றும் பெருமை இத்தமிழ்நாட்டில் உண்டு. பல சமயங்களில் கடுமையான செயலைச் செய்தவர் அதன் பயனாக இன்பத்தைப் பெறுவதும், இனிய செயலைச் செய்தவர் அதன் பயனாகத் துன்பத்தைப் பெறுதலும் காண்கிறோம். சிவபெருமான் மேல் மன்மதன் கரும்புவில்லை வளைத்து மலர் வாளிகளைச் சொரிந்தான். மலர்களை ஒருவன்மேல் எறிதலைக்காட்டிலும் சிறந்த செயல் ஒன்றும் இருத்தற்கில்லை. எனினும், அதன் பயனாக மன்மதன் எரித்துச் சாம்பராக்கப்பட்டான். ஆனால், அச்சிவ பெருமான்மீதே சாக்கிய நாயனார் கற்களை எறிந்தார். அதன் பயனாக அவர் வீடுபேற்றையே பெற்றுவிட்டார். ஒருவன் மழுவினால் தன் தந்தையின் காலை வெட்டுதல் சிறந்தசெயல் என்று யாரும் கூறமாட்டார். எனினும், சந்தருப்பம், மனநிலை என்பவற்றை நோக்க இவை இரண்டும் சிறந்த செயல்களாகவே கருதப் பட்டதும் உண்டு. சேய்ஞலூரிற் பிறந்த சண்டேசுர நாயனார் தம் தந்தையார் காலைத் தடிந்தார். அதனால் வீட்டின்பத்தையே பெற்றார். நல்ல அனுபவம் மிக்க தமிழ்த் தாத்தாவாகிய திருநாவுக்கரசப் பெருந்தகையார் இதனை நன்கு உணர்ந்துதான், 'கரும்பு பிடித்தவர் (மன்மதன்) காயப்பட்டார்; ஆங்கு ஓர் கோடரியால் இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார்' (4 : 102 : 5) என்று கூறுகிறார். விதி மார்க்கத்தில் வாழ்ந்தவராகிய சிவகோசரியார் மிகக் கொடிது என்றும், 'அருநரகில்கொண்டு செலுத்தும்' என்றும் கருதி வெறுத்து ஒதுக்கிய புலாலையே

இறைவனுக்குப் படைத்து அச்சிவகோசரியாருக்கு முன்பே வீடு பேற்றை அடைந்த கண்ணப்பர் செயலைப்பற்றிக் கவலை கொள்ளாமல், இறைவன் அவருடைய மன நிலை ஒன்றையே கண்டான் என்பதும் இந்நாட்டார் அறிந்ததொன்றாகும். இத்தகைய அடிப்படையை அறிந்தமையாலேதான் கம்பநாடன் குகன் மீனை இராமபிரானுக்குக் காணிக்கையாகக் கொணர்ந்தான் என்று பாடினான். வால்மீகியார், 'அப்பம். அன்னம், பாயசம் முதலியவற்றைக் குகன் கொணர்ந்தான்,' என்று கூறி இருப்பவும், கம்பநாடன் முதனூல் கருத்துக்கு முரணாக இங்ஙனம் பாடியதற்குக் காரணம், அவன் தமிழ்ப் பண்பாட்டை நன்கு அறிந்திருந்ததே ஆகும். காட்டில் வாழும் வேடனாகிய குகன் பணியாரமும், பாயசமும் கொண்டு வந்தான் என்பதைக்காட்டி மீனும் தேனும் கொண்டு வந்தான் என்பது சாலவும் பொருத்த முடையதே. இனிக் குகனும் இராமனும் பழகும் விதத்தைக் காண்போம்.

குகன் கொணர்ந்த உணவை இராமன் உண்ணா விட்டாலும், அதனைத் தான் முழுமனத்துடன் ஏற்றுக் கொண்டதாகவே கூறி விட்டான். அவன் கூறிய முறையாலும் காட்டிய பரிவாலும் குகனும் இராமன் அவ்வுணவை உண்ணவில்லை என்பதை மறந்து, இராமனிடம் தங்கி நின்றான். எனவே இராமன் அவனை நோக்கி, 'ஐய, நாளை நாங்கள் இக்கங்கையாற்றைக் கடந்து செல்ல இருக்கிறோம். ஆதலின், இன்று உன் சுற்றத்தாரோடும் உன்னுடைய ஊருக்குச் சென்று, நாளைக் காலை இவண் நாவாயுடன் வந்து சேர்க,' என்று கூறினான் தான் எவ்விதமான வசதியும் இல்லாத இடத்தில் தங்கியிருத்தலின் இராமன் இவ்வாறு கூறினான். தன்னைக் காணவந்தவன் அவனாக விடை பெற்றுக் கொண்டு போகக் கூச்சப்பட்டாலும் படலாம் என்று நினைத்துப் போலும் இராமன் தானே அவனுக்கு விடை தருகிற முறையிலும் அவனுடைய நட்பையும் உதவியையும் வேண்டி நிற்கும் முறையிலும் இவ்வாறு பேசி முடித்தான்!

இராமனுடைய இச்சொற்கள் இதுவரை அடைபட்டு நின்ற குகனுடைய உணர்ச்சி வெள்ளத்தை மடை உடைத்துவிட்டன இராமனின் எதிரே நின்று கொண்டிருக்கும் குகனுடைய மனக்கண்

முன்னர் இராமன் இருக்க வேண்டிய நிலைமையும், இப்போது இருக்கின்ற நிலைமையும் மாறி மாறித் தோன்றுகின்றன. பீதாம்பரம் முடி முதலியன அணிந்து அரசக் கோலத்தோடு விளங்க வேண்டியவனாகிய இராமன், இத்தவக்கோலத்துடன் விளங்குவது குகனுடைய கண்களில் நீரைப் பெருக்குகிறது. இக் கொடுங்காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் தன்மேலேயே குகன் கோபம் கொள்கிறான். எனவே, இராமனை நோக்கி, 'இவ்வுலக முழுதுக்கும் உரிமை உடையவனே, உன்னை இக் கோலத்திற்கண்ட யான் என் கண்களைப் பிடுங்கி எறிந்துவிடாமல் இருப்பதால் என் நட்பையே பொய்யானது என்று கருதுகிறேன். இனி இதற்குக் கழுவாயாக நின்னிடமே தங்கி ஏவல் செய்குவன்,' என்கின்றான்.

"கார்குலாம் நிறத்தான் கூறக் காதலன் உணர்த்து வான்,'இப்
பார்குலாம் செல்வ! நின்னை இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யான் இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன் ஆனது ஐய! செய்குவன் அடிமை,' என்றான்."

(கங்கை. 45)

சாவிற்சாதல், நோவில் நோதல், ஒண்பொருள் கொடுத்தல், பிரிவுநனி வருந்தல் முதலாயினவற்றை நண்பர்கட்கு இலக்கண மாகக் கூறுவர் நல்லோர். எனவே, நல்ல நண்பனாகிய குகன், தன் தலைவனாகிய இராமன் இங்ஙனம் அவதியுறும் நிலையில் தான் மட்டும் தன்னூரில் சென்று மகிழ்ந்திருப்பதை விரும்பவில்லை. தான் உண்மையான நண்பனாய் இருந்தால், இராமனுடைய துன்பத்தைக் கண்டு அதனைப் போக்க முற்பட்டிருக்க வேண்டும் என்று குகன் கருதுகிறான். அவ்வாறு அவனுடைய துன்பத்தைப் போக்க முடியவில்லையாயின், தான் அத்துன்பத்தைப் பார்த்துக் கொண்டிருத்தல் கூடாது. இந்நிலையில் செய்யத் தகுவது யாது? 'பார்ப்பதற்குக் காரணமாய் இருந்த கண்ணை ஏன் பிடுங்கிவிடக் கூடாது?' என்று கருதுகிறான் குகன். இக்கூற்றிலிருந்து அவனுடைய அன்பின் ஆழமும் அகலமும் வெளிப்படுகின்றன. இதனை இராமன் நன்கு அறிந்துகொள்கிறான். உடனே தன் மனைவியை ஒரு முறையும்,இளவலை ஒரு முறையும் நோக்கினான்; உடனே தன் கண்களின் மூலம் குகனுடைய அன்பை உணர்ந்து கொண்ட குறிப்பைக் காட்டினானாம் அக்கமலக்கண்ணன்.

''கோதைவில் குரிசில் அன்னான் கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி திருமுகம் நோக்கித் 'தீராக்
காதலன் ஆகும்,' என்று கருணையின் மலர்ந்த கண்ணன்,
'யாதினும் இனிய நண்ப! இருத்திஈண்டு எம்மொடு,'
என்றான்.'' (கங்கை. 46)

'வாயால் வெளியிடாத அன்பே மிக உயர்ந்தது'[1] என்ற பழமொழிப்படி போலும், இராமன் தன் கருணையை வாய் விட்டுக் கூறாமல், கண்களில் தெரியக் காட்டி அமைந்து விட்டான்! எனினும், அவனுடைய விளி, இதற்கு ஈடுசெய்வதாய் அமைந்து விட்டது. 'யாதினும் இனிய நண்ப', என்ற விளியிலேதான் எவ்வளவு அன்பைச் சொரிந்து விடுகிறான் இராமன்!

இராமனுடைய இந்த அன்புரைகளால் மிகுதியும் இன்பம் அடைந்த குகன், தன் சுற்றத்தாரை இராமன் தங்கிய பள்ளியைச் சுற்றிக் காவலுக்கு நிறுத்திவிட்டான்; தானும் நாண் ஏற்றிய வில்லுடனும் அம்புடனும் காவல் செய்யத் தொடங்கிவிட்டான். இராமனும் சீதையும் வெறுந்தரையில் படுத்திருக்கும் பான்மையையும் அவர்கள் இருக்க வேண்டிய இருப்பையும் மனத்தில் நினைந்த இலக்குவனுக்குக் கண்ணீர் ஆறாகப் பெருகுகிறது. இந்நிலையில் குகன் நாடு விட்டுக் காடு வந்த வரலாற்றை வினவுகிறான்.

இவ்வினாவை இராம இலக்குவர் என்ற இருவர் மாட்டும் குகன் பொதுவாக வினவினாலும், இலக்குவனே விடை கூறத் துணிந்தான். காடு வருவதற்கான காரணத்தை இலக்குவன் கூறியதைக் கேட்ட குகன், மிக்க துன்பம் அடைந்து, கண்ணீர் பெருக்கினான். ஆனால், யார் மீதும் குற்றம் கூற அவனுடைய பண்பாடு இடம் தரவில்லை. கைகேயியையோ, பரதனையோ கொடுமை செய்தவர் என்று கூற அவன் துணியவில்லை. எனவே, தனது வருத்தம் முழுவதையும் வெளிப்படுத்தும் முறையில் ' பெரு நிலக் கிழத்தி நோற்றும், பெற்றிலள் போலும்!'' என்று கூறினான். நிலமகள் இராமன்இவன் வந்து பிறக்கக் கொடுத்து வைத்துங்கூட அவனால் ஆளப்படக் கொடுத்துவையாமல் போனது வருந்தத்தக்கது என்பான் போல இவ்வாறு கூறினான்.

இராமன் படுத்திருக்கும் நிலையில் துயில் துறந்த வீரனாகிய இலக்குவன், நயனம் இமைப்பிலனாகக் கங்குல் எல்லை காண்பளவும் நிற்கின்றான். ''தம்பி என்னும்படியன்று; அடியரின்

1. Love unexpressed is sacred.

ஏவல் செய்தி,'' (நகர். 152) என்று அவனுடைய தாய் இட்ட கட்டளையும், அவன் மனத்தில் கொண்டிருக்கும் குறிக்கோளும் ஒன்றாகலின், இலக்குவன் இவ்வாறு காவல் காத்தது முறையே. ஆனால், அப்போதுதான் இராமனுடைய நட்பைப் பெற்ற குகன் ஏன் காவல் புரியவேண்டும்? இராமனிடத்துக் குகன் எத்தகைய அன்பு கொண்டான் என்பதை நன்கு அறிந்தால்தான் இதற்கு விடை கூற முடியும். இக்குகனைக் காணுமுன்னர் இராமனும் இலக்குவனும் ஒன்றாகவே இருந்தனர். அப்பொழுதும் இலக்குவன் இவ்வாறு காவல் பூண்டு நின்றானா என்பதுகூடக் குகனுக்குத் தெரியாது. அவ்வாறாயின், ஏன் இப்பொழுது மட்டும் குகன் காவல் பூண வேண்டும்? 'ஈண்டு இருத்தி', என்றுதான் இராமன் ஏவினானே தவிரக் 'காவல் பூண்டு நிற்க வேண்டும்' என்று குறிப்பாகக்கூட அவன் தெரிவிக்கவில்லையே! எனவே, குகன் இவ்வாறு நின்றதற்குத் தக்கதொரு காரணம் இருந்திருக்க வேண்டும். இக்காரணம் யாதாய் இருக்கலாமென்று வைணவப் பெரியார்கள் நன்கு ஆராய்ந்து பல முடிபுகளைக் கூறியுள்ளார்கள். அவற்றுட்சில இங்கு நோக்கற்குரியன:

''இளைய பெருமாளை ஸ்ரீ குகப்பெருமாள் அதிசங்கை பண்ண, இருவரையும் அதிசங்கை பண்ணி ஸ்ரீ குகப்பெருமாள் பரிகரம் பெருமாளை நோக்கிற்றிரே! ஒரு நாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகுபடுத்தும் பாடாயிற்று இது,'' என்கிற ஸ்ரீ வசன பூஷணம் இங்கு நோக்கற்குரியது. இவ்வாக்கியம், ''இராமனுக்கு இலக்குவனால் யாது தீங்கு நிகழுமோ என்ற ஐயத்தால் குகன் தான் காவல் மேற்கொள்ளவும், இராமனுக்குக் குகன் இலக்குவன் என்ற இருவராலும் எத்தீங்கு நேருமோ என ஐயுற்றுக் குகனுடைய சுற்றத்தார் காவல் புரிந்தனர்,'' என்னும் பொருள் தருகிறது. இவ்வாறு கூற ஒரு காரணமும் கூறப்படுகிறது அதே அடியில். 'இராமனுடைய வடிவழகில் ஈடுபட்டவர் எவ்வாறாயினும் அவனுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்ற அதே நோக்குடன் வாழ்கின்றனர்,' என்ற காரணம் ஆய்தற்குரியது. இதுவரை உடனிருந்த இலக்குவனை ஐயுற்றுக் குகன் தான் காவல் புரிந்தான் என்று கம்பநாடன் கூறவில்லை. கம்பநாடன் பாடல் இவ்வாறு பொருள் கூற இடந் தருகிறதா என்று ஐயப்பட வேண்டியுளது.

''தும்பியின் குழாத்திற் சுற்றும்
சுற்றத்தின் தொடுத்த வில்லன்
வெம்பிவெந்து அழியா நின்ற
நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித்
தலைமகன் தன்மை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீர்
அருவிசோர் குன்றின் நின்றான்.'' (கங்கை. 54)

இப்பாடலில் 'தம்பிநின்றானை நோக்கித் தலைமகன் தன்மை நோக்கி,' என வரும் அடியால் இவ்வாறு பொருள் கொண்டனர் போலும்! 'அரசச் செல்வத்தில் பிறந்து வளர்ந்த இவர்கள் இப்பொழுது படுகிற பாட்டைப் பார்த்த குகன், மாறி மாறி இருவரையும் பார்த்தான்,' என்று கூறுவதே போதுமானது. 'அரண்மனையில் இனிய இன்பத்தில் கவலையின்றி உறங்க வேண்டிய இளையவன், கவலையே உருவெடுத்ததுபோல இப்பொழுது விடியுமட்டும் உறங்காமல் இருக்கிறானே!' என்ற எண்ணத்தால் குகன் இலக்குவனைப் பார்த்திருக்கலாம். 'முடி சூடும் தலைக்குள்ளேதான் கவலைகள் அனைத்தும் குடி புகும்,'[1] என்று கூறுவர். ஆனால், இளையவன் கவலையற்று உறங்க வேண்டிய நேரத்தில் இவ்வாறு காவல் புரிய நேர்ந்ததே! அதுவும், 'இற்றதோர் நெஞ்சினனாக இருகணீர் அருவி சோர, உற்ற ஓவியமாக ஒரு சிலை அதனில் நிற்கும்' நிலையைக் கண்ட குகன், எல்லை அற்ற துயர்க் கடலில் மூழ்கிவிட்டான். தன்பால் தோன்றும் உணர்ச்சிகளை மறைத்துக்கொண்டு வாழும் நாகரிகத் தில் பழகியவன் அல்லன் குகன். இளம்பிள்ளையாகிய இலக்குவன், மன மகிழ்ச்சியோடு உறங்க வேண்டியவன், இவ்வாறு நிற்றலும் காவல் செய்தலும் அவனுக்கு வருத்தத்தை உண்டாக்கியதோடு அவனுடைய 'தாய்மை உணர்ச்சியையும்' தூண்டிவிட்டன. எனவே, அவனை நோக்கினான். உடனே இலக்குவன் இவ்வாறு காவல் புரிவதற்குக் காரணமாய் அமைந்த இராமனை ஒரு முறை நோக்கினான். இவ்விருவரும் அண்ணன் தம்பியர். அரசை இழந்து அவதியுறுபவன் அண்ணன். ஆனால், அந்தக் கவலையோ வேறு கவலையோ ஒரு சிறிதுமின்றி அமைதயே வடிவாக உறங்கு கிறான் இராமன். இவ்வளவும் நடந்த பிறகு அரசையும் இழந்து, காட்டிற்கு வரவேண்டிய நிலைமை ஏற்பட்டும், மன அமைதியை

1. 'Uneasy lies the head that wears a crown.' Shakes, Henry IV, Part 2 Act III Sc. I

இழவாமல் இராமன் உறங்கும் அடிப்படை மனநிலை குகனுக்கு விளங்கவில்லை. இராமனுக்கு நேர்ந்த இன்னலைக் கண்டு இலக்குவன் விடியுமட்டும் அழுது தீர்க்கிறான். அவ்விராமன் இன்னலைக் காணாவிடினும் காதால் கேட்ட பாவத்திற்கு இதோ குகனும் அழுகிறான். இவை இரண்டும் சரி. ஆனால், இவை இரண்டிற்கும் காரணம் இராமனுடைய இன்னல்கள்தாமே? அந்த இன்னல்களையும் பொருட்படுத்தாமல் இராமன் மனவமைதியுடன் உறங்கும் நிலையை எவ்வாறு பெற்றான்? இந்நிலை குகனுடைய கற்பனைக்கும் அடங்காமல் விரிவதொன்று. எனவே, இருவரையும் மாறி மாறிப் பார்க்கிறான் குகன். இருவர் நிலைக்கும் கண்ணீர் விடுவது தவிர அவன் செய்யத்தக்கது வேறொன்றும் இருப்பதாகத் தெரியவில்லை.

அவ்வாறாயின், அவன் காவல் பூண முடிவு செய்தது ஏன்? வைணவப் பெரியார்கள் கூறும் முறையில் ஓர் அழகு இருக்கிறது. ஆனால், கம்ப நாடன் கற்பித்த குகனுக்கு அது பொருந்துமாறு இல்லை. எனவே, வேறு கருத்து இருக்கிறதா என்று ஆய்வதே நலம். அவ்வாறு ஆய்ந்தால், மற்றொரு விடையும் கிடைக்கிறது. இலக்குவன் விடியுமட்டும் நிற்பது என்ற கொள்கையுடன் நிற்கிறான். அவன் இளமைக்கு ஏற்ற செயல் அன்று இச்செய்கை. அவ்வாறாயின், குகன் அவனை இச்செயல் செய்யாதிருக்க வேண்டலாம். அவ்வாறு வேண்டினால் மட்டும் இலக்குவன் தன் கடமை என்று நினைந்து செய்கிற ஒன்றை விட்டுவிடுவானா? உறுதியாக விடப்போவதில்லை. குகன் அன்றிக் கடவுளே வந்து இலக்குவனை உறங்குமாறு வேண்டினாலும் அவன் உறங்கப் போவதில்லை. ஆனால், மற்றொன்று செய்து பார்க்கலாம் அல்லவா? தன்னைப் போன்ற வீரன் ஒருவனும் அவனுடைய வீரர் பலரும் காவல் புரிகின்றனர் என்று அறிந்தால், ஒரு வேளை இலக்குவன் சற்றுக் கண் அயரலாம் அன்றோ? இலக்குவனை நேரடியாகப் பார்த்து 'நீ உறங்கச் செல். நானே காவல் புரிகின்றேன்,' என்று கூறக் குகனுக்கு மனத்திடம் வரவில்லை, ஒரு வேளை இலக்குவன் காவல் புரிவதில் முழு விருப்பம் காட்டாமல் கடமை என்பதற்காக மேற்கொண்டிருப்பின், குகனுக்கு இத்தகைய மனப்பான்மை தோன்றியிருக்கலாம். அப்பொழுது இலக்குவனை உறங்கப் போகுமாறுகூடக் கூறியிருப்பான். ஆனால், இலக்குவனுடைய அன்பின் ஆழத்தையும் அவனுடைய தமையனுடைய இப்போதைய நிலைக்கு வருந்துவதையும் கண்ட குகனுக்கு எவ்வாறு இலக்குவனைப் 'போ' என்று கூற மனம்வரும்?

எனவே, அவன் வாயாற் கூறாமலே தானும் அத்தொழிலை மேற்கொண்டுள்ளான். இவ்வாறு அவன் செய்த செயலுக்குக் காரணம் கூறாமல், பழையவர்கள் கூறுமுறையில் கூறினால், அதனால் குகனுடைய பெருமை வெளிப்படாமை கண்கூடு. இராமனுடைய கடவுட்டன்மையில் ஈடுபட்ட அவர்கள் இவ்வாறு கூறலாம். ஆனால், இவ்வாறு கூறுவதில் குகனுடைய பெருமை குறைவது கண்கூடு. குகன் பேசிய இரண்டே சொற்களால் அவனுடைய மனப்பண்பை அறிந்துகொண்டு இலக்குவன், 'தாயினும் நல்லவன்' என்று அப்பொழுது தான் கூறியுள்ளான். அதற்குள்ளாக, 'அந்த இலக்குவன்மேல் சந்தேகம் கொண்டான் குகன், அவன் பங்காளி என்பதற்காக,' என்று கூறுவதன் பொருத்தமின்மை நன்கு விளங்கும்.

பொழுது விடிந்தது. உறக்கம் நீங்கி எழுந்த இராமபிரான் குகனை நோக்கி உடனே நாவாய் கொணருமாறு ஏவினான். இந்த நிலையில் குகனுடைய மனம் மாறிவிடுகிறது. இராமனையும் சீதையையும் ஒரு முறை நோக்கிய அப்பெருமகன்; அவ்விருவரும் காட்டில் சென்று வாழ்வதை மனத்தாலும் கருத முடியாமல் வருந்துகிறான். தேவியின் மெல்லிய பாதங்கள் பரற்கற்களில் பட்டுத் துடிப்பதை அவன் மனக்கண்ணால் காண்கிறான். ஆனால், உடன் அழைத்து வருதலால் யாதும் தீங்கில்லை என நினைத்தே இராமன் மனைவியையும் உடன் அழைத்து வந்திருக்க வேண்டும். அவ்வாறு இருக்க, இடைவழியில் அதன் அருமையைக் கூறிக் காடு செல்லவேண்டா என்று தடுப்பது மரியாதைக்குரிய செயல் அன்று. எனவே, குகன் வேறு வழியைக் கையாள்கிறான்.

இராமன் வனம் செல்ல வேண்டுமென்பதுதானே குறிக்கோள்? தன் ஊராகிய சிருங்கிபேரமும் காட்டிலேதானே அமைந்திருக் கிறது? எனவே, தன் ஊரில் இராமன் தங்கிவிட்டாலும் காட்டில் தங்கியது போலத்தானே ஆகும்? இவ்வாறு சிந்திக்கிறது குகனுடைய அன்பு மனம். வனத்தில் வாழ்பவர் ஏவலரை வைத்துக் கொள்ளக்கூடாதா? இராமனை நோக்கி இவை அனைத்தையும் கூறுகிறான் குகன். தேனும் தினையுமே இராமன் உண்ண வேண்டும் எனில், அவை இங்கேயே கிடைக்கும். பொழுதைக் கழிப்பதற்கு ஆயிரக்கணக்கான வேடர் துணை உண்டு. 'காட்டில் வாழ்கிறோம்', என்ற நினைவுண்டாகாமல் இருக்க என்னென்ன செய்ய வேண்டுமோ, அவை அனைத்தையும் செய்ய அவன் காத்து நிற்கிறான். ஒலிக்கின்ற ஆகாயத்தில் உள்ள

பொருள் வேண்டுமென்று விரும்பினாலும் கொண்டுவரக் கூடிய வீரர் பலர் காத்து நிற்கின்றனர். இன்னோரன்ன பல காரணங் கூறியும் இராமனைத் தன்பால் நின்றுவிட வேண்டுகிறான் குகன்.

இவை அனைத்தையும் கேட்ட இராமன் புன்முறுவலுடன் மீண்டு வரும்போது குகனிடம் வருவதாகக் கூறவே, குகனுக்கு மேலும் பேச வாய்ப்பு இல்லையாகி விட்டது. இராமனை விட்டுப் பிரிய மனமில்லாத குகன் அவனை ஏற்றிக் கொண்ட நாவாயைத் தானே செலுத்திச் செல்கிறான்.

ஓடத்தை விட்டு மறுகரையிலிறங்கிய இராமன், "'சித்திரகூட மலைக்குச் செல்லும் வழி யாது?' என்று குகனை வினவினான்; இக்கேள்வி குகனைத் திகைக்க வைத்துவிட்டது.

"பத்தியின் உயிர்ஈயும் பரிவினன் (குகன்) அடிதாழா,
'உத்தம அடிநாயேன் ஓதுவது உளது', என்றான்". (68)

இத்துணை முன்னேற்பாட்டுடன் குகன் கூறத் தொடங்கிய செய்தி இராமனை வியப்பில் ஆழ்த்தி விட்டது. "ஐயனே, உன்னுடன் வரும் பேற்றை எனக்கு நல்குவையாயின், இப்பக்கத்து வழிகளை நன்கறிந்த யான் செல்லுதற்கு அரியவான வழிகளையும் நன்கு செல்லக்கூடியனவாக்கிவிடும் வன்மை உடையேன்; உங்கள் பசி நேரத்திற்கு வேண்டுங் கனி கிழங்குகளைத் தேடித் தருவேன்; நீங்கள் தங்குவதற்குரிய பர்ணசாலை முதலியன அமைப்பேன்; ஒரு விநாடியும் உங்களைப் பிரிந்திரேன்," என்னும் கருத்தில்,

"நெறியிடு நெறிவல்லேன்; நேடினென் வழுவாமல்
நறியன கனிகாயும் நறவுஇவை தரவல்லேன்;
உறைவிடம் அமைவிப்பேன்; ஒருநொடி வரைஉம்மைப்
பிறிகிலென் உடன்ஏகப் பெறுகுவன் எனின்நாயேன்."
(சங்கை. 69)

என்று கூறுகிறான்.

இவ்வாறு கூறியதுடன் குகன் அமையவில்லை; தன்னை உடன் அழைத்துச் செல்வதால் ஏற்படும் நலன்கள் அனைத்தையும் வரிசைப்படுத்திக் கூறுகிறான். 'தீயவற்றை அழிப்பேன்; காடுகளில் வசிப்பதற்கேற்ற இடங்களைத் தேடித்தர வல்லேன்; கவலைக் கிழங்கு முதலியவற்றை மலையினிடத்தும் தோண்டித் தர வல்லேன். எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் சென்று குடிநீர் கொண்டு வர வல்லேன்; எதற்கும் அஞ்சேன்; அனேக விற்களை உடையேன், உன் திருவடி ஒரு போதும் பிரியாதிருக்க நீ அருள் செய்வையாயின்,' என்ற பொருள்பட மேலும் கூறுகிறான்.

"கல்லுவென் மலைமேலும் கவலையின் முதல்யாவும்;
செல்லுவென் நெறி தூரம் செறிபுனல் தரவல்லேன்;
வில்இனம் உளென்;ஒன்றும் வெருவலென் ஒருபோதும்
மல்லினும் உயர்தோளாய்! மலரடி பிரியேனால்"

(கங்கை. 71)

இவ்வாறு குகன் அடுக்கிக் கொண்டே சென்றதைக் கேட்ட இராமன் மலைத்துப் போய்விட்டான். இத்தகைய அன்புடையரை இராமன் இதுவரை கண்டதில்லை. குகனுக்கு இவ்வளவு வன்மையும் உண்டு என்பதை, இராமன் அறியாமல் இல்லை. பின்னர் ஏன் குகன் இவ்வாறு வரிசைப்படுத்துகிறான்? அதுவே அவனிடம் உள்ள சிறப்பு. நகர மக்கள் இழந்துவிட்ட நாகரிகம் இது. வஞ்சகம் என்பதையும் போலித் தன்னடக்கம் என்பதையும் கனவிலும் கருதாத குகன், இச்செயல்களில் இவ்வரச குமாரர்களை விடத் தனக்குப் பழக்கம் மிகுதி என்று நினைக்கிறான். யாரும் அதனை மறுக்க இயலாதன்றோ? அரண்மனையிற் பிறந்து வளர்ந்தவர்களால் கவலைக்கிழங்கை வெட்டி எடுக்க முடியுமா? ஆள் நடமாட்டம் அற்ற காட்டில் நீர் நிலை எங்குளதென்று அறியத்தான் முடியுமா? முதன்முறையாக வனம் புகுந்துள்ளனர். அதிலும் பெண் ஒருத்தியை உடன் கொண்டு புகுந்தனரே! என்ன அறியாமை! தனி மனிதனே வாழ்க்கை வசதி செய்து கொள்ள முடியாத காட்டில், அவ்வாழ்க்கை அனுபவம் ஒரு சிறிதும் இல்லாதவளும், அதற்கு மறுதலையான வாழ்க்கையே வாழ்ந்து பழகியவளும் ஆகிய ஒரு பெண்ணை அழைத்து வரலாமா? அவ்வாறு வந்து விட்ட அவர்கட்குக் காட்டு வழிகளில் அனுபவம் உடையான் ஒருவன் உதவி தேவைப்படாதா? அவர்கள் ஒப்புயர் வற்ற வீரர்களாய் இருக்கலாம். ஆனால், நீர் வேட்கையால் வாடும் போது அவர்கள் வீரம் எவ்வாறு பயன்படும்? நீர் எங்குக் கிடைக்கும் என்ற அனுபவம் தேவைப்படுமே தவிர, வில் வீரம் இங்குப் பயன்படாதன்றோ?

'எடுத்த காரியத்தை எவ்வாறாயினும் முடித்து விடவேண்டும் என்ற கருத்தால் முன்பின் ஆராயாமல் பெண் ஒருத்தியையும் உடனழைத்துக் கொண்டு வனம் புகுந்து விட்டனர் இச்சோதரர்,' என்றுகூடக் குகன் நினைந்து விட்டான். சித்திரகூட மலைக்கு வழி தெரியாமல் கேட்கின்ற இவர்கள் காட்டு வாழ்க்கையின் நுணுக்கங்களை எவ்வாறு அறிய முடியும்? பார்ப்பதற்கு ஒன்று போலக் காணப்படினும் சில பகுதிகளில் தங்கலாம்; சிலவற்றில்

நெருங்கக்கூடக் கூடாதே! இவற்றை இவர்கள் எங்ஙனம் அறிய முடியும்? குகன் இதைப்பற்றி நினைக்குந்தோறும், நினைக்குந் தோறும், 'இவர்களைத் தனியே விடுதல் தகாது,' என்ற முடிவிற்கு வந்துவிட்டான்.

இராமனுடைய வன்மையை ஓரளவு அறிந்தும் நன்கு கேட்டும் தெரிந்திருந்தவனாகிய தசரதனே இராமன் காட்டில் நன்கு வாழ முடியாது என்று நினைத்து விட்டானே! ஏன்? அவனுடைய அன்பு என்ற கண்ணாடி வழியாகக் காணும்போது இராமன் சிவனுடைய வில்லை ஒடித்தவனாகக் காட்சி நல்கவில்லை; பச்சைக் குழந்தை யாகக் கூனி கூன்மேல் வில் உருண்டை அடித்தவனாகவே காட்சி நல்குகிறான். கற்றறிவுடையவனாகிய தசரதனே அவ்வாறு இராமனைப் பற்றி அன்பு காரணமாக நினைப்பானாகில், குகன் அதே அன்பால் தூண்டப்பட்ட நிலையில் எவ்வாறு நினைப்பான்? 'இராமனால் இப்பரந்த காட்டில் நன்கு வாழ முடியாது,' என்று குகன் கருதுவதில் தவறு யாது? 'அன்பு செய்யப்பட்டவர்களுடைய வன்மையை அன்புடையார் அறிய முடியாது', என்பது அனைவரும் அறிந்ததே. அதனாலேயே போலும் ஒவ்வொரு பாட்டின் இறுதி யிலும் 'மலரடி பிரியேன்' என்று குகன் கூறுகிறான்!

இராமனுடைய வன்மையைக் குகன் குறைத்து மறைத்து விட்டாலும், அதன் பின்னர் இருக்கின்ற அன்பை இராமன் நன்கு அறிந்து கொண்டான். எனவே, குகன் மனம் அமைதியடையும்படி விடையிறுக்க வேண்டுவது அவனுடைய பொறுப்பாகி விட்டது. மேலும், குகனுடைய அன்புக்குக் கைம்மாறு செய்யும் வகையில் இராமனுடைய விடை அமைந்து கிடக்கிறது. தன்னுடைய இரகு குலத்தின் பெருமையை அப்படியே மறந்து விட்டான் இராமன். குகன் வேடுவர் குலத்தில் தோன்றிய நாவாய் வேட்டுவன் என்பதையும் இராமனை மறக்கச் செய்துவிட்டது குகனுடைய தூய அன்பு. வேறுபாடுகள் அனைத்தையும் மீறித்தோன்றுகிற இந்த அன்பு வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்ட இராமன், குகனுடைய அன்புக்கு நன்றி பாராட்ட வேண்டியவனாகிறான். இரகு குலத்தில் தசரதன் பிள்ளையாய்த் தோன்றிய தன்னைக் குகனுடைய தமயனாக்கி, இளவல் இலக்குவனைக் குகனுடைய தம்பியாக்கி விடுகிறான். இவ்வளவிலும் இராமனுடைய அன்பு நின்றபாடில்லை. ஜனகன் மகளும், தசரதன் மருமகளும், தன் மனைவியும் ஆகிய சீதையை வேட்டுவக் குகனுடைய தோழி

யாக்கி விடுகிறான். மேலும், இவ்வுலகம் குகனுக்கே சொந்தமென்றும், அவனுடைய ஏவற்படியே தான் ஆள்வதாகவும் கூறி விடுகிறான்.

''அன்னவன் உரைகேளா அமலனும் உரைசெய்வான்:
'என்னுயிர் அனையாய்நீ; இளவலுன் இளையான்:இந்
நன்னுத லவள்நின்கேள்; நளிர்கடல் உலகெல்லாம்
உன்னுடையது; நானுன் தொழில்உரி மையினுள்ளேன்.''
(கங்கை. 73)

குகனுடைய அன்பிற்கு முற்றிலும் ஏற்ற பாராட்டு இது என்று நம்மையும் அறியாமல் நம் மனம் மகிழ்கிறது! இங்குள்ளவரை மட்டும் தொடர்பு படுத்தியதுடன் நில்லாமல் ஊரில் வாழ்பவரையும் இவ்வுறவு முறைக்கு ஆளாக்குகிறான்.

''துன்புளது எனின்அன்றோ சுகம்உளது? அதுவன்றிப்
பின்புளது இடைமன்னும் பிரிவுளது எனஉன்னேல்;
முன்புளம் ஒருநால்வேம்; முடிவுளது எனஉன்னா
அன்புள; இனிநாம்ஓர் ஐவர்கள் உளரானேம்.'' (கங். 74)

இவ்வளவு கூறினாலும் குகனுடைய ஐயத்திற்கு இன்னும் விடை கிடைக்கவில்லையன்றோ? இராமன் மனைவியுடன் காட்டில் தனியே தங்குதல் தகாது என்ற குகனுடைய ஐயம் நீக்கப்படல் வேண்டும் அன்றோ? அதற்கெனவே அடுத்த பாடலில் இராமன், ''நீ அஞ்சவேண்டா. உன் தம்பியாகிய இலக்குவன் என்னுடன் இருக்கிறான்,'' என்ற கருத்தில் ''படர்உற உளன் உம்பி கானுறை பகல் எல்லாம்'' (75) என்று கூறுவது போற்றற்குரியது.

இவ்வளவு கூறியும் அக்குகனது மனம் அமைதி அடைந்தாகத் தெரியவில்லை. எனவே, இராமன் அன்பே வடிவான குகனுக்கு அன்பால் கட்டளையிடுகிறான். ''அயோத்தியில் தங்க விரும்பா விடினும் உன் தம்பி பரதன் என் கட்டளைக்குக் கட்டுப்பட்டு அவண் தங்கிவிட்டான். ஆளும் குலத்தில் பிறந்த நாம், எவ்வளவு அதனை விரும்பாவிடினும், கடமையைச் செய்ய வேண்டும் அல்லவா? எனவே, நீ புறப்பட்டுவிட்டால் இங்குள்ள நம் கிளைஞரைக் காப்பாற்றுவார் யார்? உன் சுற்றத்தார் என்னுடையவர் அல்லரோ?'' என்ற கருத்தில் அன்பால் கட்டளை இடுகிறான்.

''அங்குள கிளைகாவற்கு அமைதியின் உளன்உம்பி;
இங்குள கிளைகாவற்கு யாருளர்? இசையாய்நீ;
உன்கிளை எனதுஅன்றோ? உறுதுயர் உறலாமோ?
என்கிளை இதுகாஎன் ஏவலின் இனிெ' தன்றான்'' (கங்.76)

இத்தகைய அன்புக் கட்டளை தவிர வேறு எந்த வழியில் இராமன் பேசியிருப்பினும், ஒன்று குகனை நிறுத்தியிருக்க முடியாது; அன்றேல், அவன் மனம் நோகுமாறு செய்திருக்க வேண்டும். இராமன் தனக்கே உரிய தனி முறையில் தன் கருத்தையும் நிறைவேற்றிக் குகனையும் அமைதிபெறச்செய்தான். அன்புக் கட்டளையை மீற முடியாத குகன், பிரியாவிடை தந்து நின்றுவிட்டான்.

இராமனும் குகனும் பழகிய முறையை இது காறுங் கண்டோம். தூய்மையானதும் பயன் கருதாததும் ஆழமானதும் ஆன அன்பிற்கு இதுவே இலக்கியம். இராமனுடைய உயர்ந்த பண்பாட்டை ஒரளவு குகன் அறிந்திருந்தானே தவிர அப்பெருமகன் திருமகள் கேள்வன் என்பதைச் சற்றும் அறியவில்லை, இராமனைத் தன்னைப் போன்ற மனிதனாகவே மதித்து எவ்விதப் பயனையும் எதிர்பாராமல் அவனிடம் அன்பு பாராட்டியதே குகனிடம் நாம் காணும் சிறப்பு. இன்னுங் கூறப்போனால், அம்மூவரையும் மிகவும் இளையவர்களாகவே அவன் மதித்துவிட்டமையின், ஒரு தாய் பிடிவாதம் செய்கின்ற குழந்தையிடத்துக் காட்டும் பரிவையே குகனும் அவர்களிடத்துக் காட்டுகிறான். அன்பை வெளிக் காட்டுவதில் எவ்வித நாணமும் அடையவில்லை குகன்;

'அன்புஇலார் எல்லாம் தமக்குஉரியர், அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.' (குறள். 72)

ஆகலின், உடல், பொருள், ஆவி அனைத்தையும் தன்னால் அன்பு செய்யப்பட்ட இராமனிடம் ஒப்படைக்கத் தயாராய் இருக்கிறான். அறிவின் துணைகொண்டு ஆய்ந்து இன்னாருக்கு இத்தகைய உதவி தேவை என்று கருதாமல் உதவுவதே வள்ளன்மை எனப்படும். பாரி வள்ளல் முல்லைக் கொடிக்குத் தேர் ஈந்த செயல் இத்தகைய அன்பால் தூண்டப்பட்டது அன்றோ! அதேபோலக் குகனுடைய அன்பும், அறிவு, ஆராய்ச்சி என்பவற்றால் காணவியலாத உயர்ந்த நிலையில் உள்ளதொன்றாகும். இராமகாதையில் வரும் பாத்திரங்கள் அனைத்தினும் குகனுடைய அன்பு ஒப்புயர்வு அற்றதாய் விளங்கக் காண்கிறோம்.

## 7.2 'குகன் எனப் பெயரிய கூற்றின் ஆற்றலான்'

'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்', என்பது பெரியோர் அனுபவ வாயிலாகக் கண்ட உண்மை. பண்பாட்டினால் மேம்பட்ட ஒருவனை அதே பண்பாடு நிறைந்துள்ள மற்றொருவன் அறிந்துகொள்வது எளிதாகும். ஏனையோர் அறிவதன் முன் தன் இனத்தவனை ஒருவன் காண்டல் கூடும். பல சந்தருப்பங்களில் மிக நெருங்கிப் பழகியும் உறவு கொண்டாடியுங்கூட அறிய முடியாத பண்புகளை ஒரு வினாடியில் ஒருவர் அறிந்து விடுகிறார். சூழ்நிலை எவ்வளவு மாறுபட்டதாய் இருப்பினும், கவலை இல்லை; பண்புடையாளர் மற்றொரு பண்புடையாளரை எளிதில் அறிவர். இதற்கு எடுத்துக்காட்டாய் விளங்குகிறவர்களே பரதனும் குகனும்.

எண்ணுதற்கு எட்டாத நற்பண்புகளை உடையபரதன், அயோத்தி மீண்டதும், இராமனுக்கு நிகழ்ந்தவற்றை அறிந்து பெரிதும் வருந்தினான். உடனே. 'வள்ளலைக் கொணர்வான் வேண்டி அனைவரும் காடு நோக்கிப் புறப்படுக!' என்று ஆணையிட்டுத் தானும் புறப்பட்டு வருகிறான்.

> ''தூண்டிய தேர்களும், துரக வெள்ளமும்,
> காண்டகு கரிகளும் தொடரக் காலினே''
>
> (ஆற்றுப்படலம், 59)

நடந்து வருகிறான். வழியில் கங்கை தடுத்துவிட்டது அவனது முன்னேற்றத்தை. படைஞரும் பரதனும் கங்கையின் வடகரையில் தங்கிவிட்டனர். இந்தச் சந்தருப்பத்தில் எதிர்க்கரையிலிருந்த குகனைச் சிறிது காண வேண்டும். முன்னர் இராமனுடன் காணப்பட்ட குகன் அல்லன் இவன். சிருங்கிபேரத்தின் அரசனும், தன்

உயிர்த்துணைவனாய் இராமனைக்காக்கும் பொறுப்பை வலிய மேற்கொண்டவனும் ஆகிய குகனை இப்பொழுது காண்கிறோம். கை கட்டி வாய் பொத்திக் கண்ணீர் ஆறாய்ப் பெருக நிற்கும் குகன் அல்லன் இப்பொழுது கங்கைக் கரையில் நிற்பவன். இப் பொழுது அவன் நிற்கும் நிலை முன்னரே அவன் அன்புள்ளத்தை அறிந்த நமக்குக்கூட அச்சத்தை உண்டாக்குகிறது.

''நகைமிகக் கண்கள்தீ நாற நாசியில்
புகைஉறக் குனிப்புறும் புருவக் கோளினான்.

''மையுற உயிரெலாம் இறுதி வாங்குவான்
கையுறு கவர்அயில் காலன் என்னும்பேர்
ஐயுறு மாறுதான் உருவம் ஆயினான்
மெய்யுறு தானையான் வில்லின் கல்வியான்.

''கட்டிய சுரிகையன்; கடித்த வாயினன்;
வெட்டிய மொழியினன்; விழிக்கண் தீயினன்;
கொட்டிய துடியினன்; குறிக்கும் கொம்பினன்;
'கிட்டியது அமர்!' எனக்கிளரும் தோளினான்.''
(கங்கை. 7,8,9)

(சில பிரதிகளில் 'கங்கை காண் படலம்' என்பது 'குகப் படலம்' எனக் குறித்திருக்கும்.)

குகன் நமக்குப் புதியவனல்லன்; ஆனால், இத்துணைக்கோபம் அவனுக்கும் வர முடியுமா என்று தான் வியப்புத்தோன்றுகிறது. இத்துணைச் சினத்திற்கும் காரணம் கூறுவது போன்று கவிஞன் 'கிட்டியது அமர்எனக் கிளரும் தோளினான்' என்று கூறுகிறான். அப்பொழுதும் ஓர் ஐயம் தோன்றத்தான் செய்கிறது. உண்மை வீரனாகிய குகனுக்குப் போர் என்று கூறியவுடன் மகிழ்ச்சிதோன்ற வேண்டுமே தவிரச் சினம் தோன்றக் காரணம் யாது?''போரெனில் புகலும் புனைகழல் மறவர்'' (31) என்பது புறப்பாடல். அத்தகைய பரம்பரையில் உள்ள குகனுக்குத் தோள்கள் கிளர்ந்து எழல் முறை. ஆனால், சினம் ஏன்? காரணம் எதிர்க்கரையிலிருக்கிறது. பரத னுடைய ''தொகை முரண் சேனையை'' (7) அச்சேனை எழுப்பும் துகள் காரணமாகவே கண்டுகொண்டு பரதனே வருகிறான் என்பதையும் அறிந்துகொண்டான் குகன். ஆனால், அவன்மேல் சீற்றங் கொள்ளக் காரணம் யாது? காரணம் இருக்கிறது. குகனுடைய நிலைமையில் யார் இருப்பினும், பரதன் மேல் சினம் வரத்தான் செய்யும். அதில் தவறு ஒன்றும் இல்லை. இதன் காரணத்தைப் பின்னர்க் காண்போம். (பக்கம், 39)

எல்லையற்ற சினத்துடன் எதிர்க்கரையைக் கண்ட குகன், தன் பரிவாரங்களை நோக்கிக் கூறத் தொடங்கிவிட்டான். ''பெருஞ் சூழ்ச்சியுடன் எதிர்ப்புறத்தில் வந்துள்ள பரதனையும் அவனுடைய படைகளையும் மேல் உலகம் அனுப்ப முடிவு செய்துவிட்டேன்! போருக்கு உடனே நீங்கள் புறப்பட வேண்டும்! நீர்த்துறைதோறும் காவல் நிறுவுங்கள். ஒரு படகைக்கூட ஓட்டாதீர்கள்!'' (13) வேடர் குலத் தலைவனாகிய குகன் தன் படைகட்கு இட்ட நாள் ஆணையாகும்[1] இது.

உலகில் வாழும் புலிகள் அனைத்தும் ஒரு வழி வந்து கூடியது போல, வீரர் அனைவரும் வந்து கூடிவிட்டனர். தலைவனாகிய குகன், 'அமைதிர் போர்க்கு'' (கங்கை. 12) என்று ஆணை இட்டுவிட்டான். வீரர் தத்தம் கடமையை அறிந்தவராதலின், தத்தம் தொழிலைச் செய்ய ஒரு பகுதியினர் சென்று விட்டனர். எஞ்சியவர் அனைவரும் குகனைச் சுற்றி நிற்கின்றனர். இவ்வளவும் கூற இத்தனை நேரம் ஆயிற்று எனினும், குகன் எவ்வளவு வேகமாக இவ்வளவு ஆணைகளையும் இட்டான் என்பதைக் கவிஞன் நன்கு கூறுகிறான். குகன் ஆணையிட்ட வேகத்தைப் பாடலில் காணப்படும் சொற்களால் கம்பன் கூறவில்லை. அவ்வாறு கூறியிருப்பின், அவன் சிறந்த கவிஞனும் ஆகான். பின்னர் எவ்வாறு கூறுகிறான்? கவிதைகளை அமைக்கும் ஓசை முறையால் இதனைக் கூறி விட்டான். நான்கு சீர்களைக் கொண்ட விருத்தப் பாடல்களில் நூற்றுக்கும் மேலான ஓசை முறைகளை அமைத்த பெருமை கம்ப நாடனையே சாரும் அவற்றுள் இங்குக் காட்டப்பெற்ற பாடல்கள் ஒரு வகை.

''எலியெலாம் இப்படை; அரவம் யான்!' என
ஒலியுலாம் சேனையை உவந்து கூவினான்.''
(கங்கை. 10)

என்ற இப்பாடலுடன் முன்னர்க் கூறிய (பக். 34) மூன்று பாடல்களையும் வாய்விட்டு உரத்துப் படித்துப் பார்த்தால், உண்மை விளங்கும். அவற்றில் உள்ள சொல் தொடர்களும் குறுகியவை; பயன்படுத்தப் பெற்ற சொற்களும் அவ்வாறே. இவை அனைத்தும் சேர்ந்து அவனுடைய ஆணைகள் மிக விரைவாகவும், மிக அழுத்தமாகவும் வெளிவந்தன என்பதைப் படிப்பார்க்கு உணர்த்தி நிற்கின்றன.

---

1. Order for the day.

இதனையடுத்துக் குகன் தனக்குத் தானே பேசிக் கொள்வது போலவும், உடன் நிற்பவர்கட்குக் கூறுவது போலவும் சில சொற்கள் பேசுகிறான். அச்சொற்களில் அவனுடைய நன்றியுணர்ச்சி, நட்பின் ஆழம் முதலியவை அனைத்தும் வெளியாகின்றன. எதிர்க் கரையில் நிற்கும் பரதனை அவன் இன்னும் காணவில்லை; எனவே, வந்தவன் பரதன் என்று அறிந்த மாத்திரத்தில் பேசத் தொடங்கி விட்டான்.

''அஞ்சன வண்ணன்என் ஆருயிர் நாயகன் ஆளாமே
வஞ்சனை யால்அரசு எய்திய மன்னரும் வந்தாரே!
செஞ்சரம் என்பன தீஉமிழ் கின்றன செல்லாவோ?
உஞ்சுஇவர் போயிடின் நாய்க்குகன் என்றுஎனை
ஓதாரோ?'' (கங்கை. 14)

இப்பாடலின் முதல் இரண்டு அடிகளையும் கவனித்தல் வேண்டும். 'வஞ்சனையால் அரசு எய்திய மன்னர்' என்று குறிப்பிக்கப்படுகிறவன் பரதனாவான். இதனுடன் குகன் நிறுத்தவில்லை.

''முன்னவன் என்று நினைந்திலன்; மொய்புலி அன்னான்ஓர்
பின்னவன் நின்றனன் என்றிலன்; அன்னவை பேசானேல்,
என்இவன் என்னை இகழ்ந்ததுஇவ் வெல்லை கடந்தன்றோ?
மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ்சரம் வாயாவோ?
(கங்கை. 16)

இதனை அடுத்து வரும் பாடலில் குகனுடைய கற்பனையில் காட்சியளிக்கும் பரதன் இன்னும் ஒரு படி மேலே சென்றுவிடுகிறான்.

''பாவமும் நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ?''
(கங்கை. 17)

இம்மூன்று பாடல்களிலும் கூறியவற்றை நன்கு கவனித்தல் வேண்டும். இப்பாடற்பகுதிகளில் ஒரு வகையான பரதன் காட்சியளிக்கிறான். பரதனைப் பற்றி இதற்கு முன்னர் அறிந்திருப்பவர்கட்குக் குகனுடைய இச்சொற்கள் வியப்பையும் ஓரளவு சினத்தையும் தருதல் கூடும். இதன் முற்பகுதியிலேதான் பரதனும் கோசலையும் பேசிக்கொண்டிருந்ததைக் கண்டோம். கோசலையால் 'நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்' (நகர்.5) என்று புகழப் பட்டவன் பரதன். மேலும், கேகயத்திலிருந்து திரும்பிய பரதன் கைகேயி மூலந்தான் தந்தை உயிர் இழந்த செய்தியையும்

தமையன் காடு சென்ற செய்தியையும் அறிந்தான்; தாயின்மேல் ஏற்பட்ட சினத்தையும் வெறுப்பையும் மாற்றிக்கொள்வதற்காகக் கோசலை கோயில் புகுந்தான். கோசலையோ, பரதன்மீதும் ஓரளவு ஐயம் கொண்டிருந்தாள். ஆனால், அவன் பேசிய பேச்சுக்களால் மனம் முற்றிலும் மாறிவிட்டாள் கோசலை. பரதனை நோக்கி மனம் குளிர்ந்து,

> '' 'முன்னை நின்குல முதலி னோர்கள்தாம்
> நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்?
> மன்னர் மன்னவ! என்று வாழ்த்தினாள்.'' (பள்ளி. 119)

இவ்வாறு கோசலையால் பாராட்டப்பெற்ற பரதனை ஏன் குகன் இவ்வளவு இழிவாக நினைக்கிறான்? பரதனை இதற்கு முன்னர்க் குகன் கண்டதும் இல்லையே! காணாதிருப்பவும், பரதன் மேல் இத்துணைக் கோபம் வரக் காரணம் யாதாய் இருக்கலாம்? மேலும், பரதன் எந்த நோக்கத்துடன் வருகிறான் என்பதையும் குகன் அறியவில்லை; அறிய முற்படவும் இல்லை. இராமன்மேல் போர் தொடுக்கும் விருப்பம் இல்லாமலும் படையுடன் பரதன் வரக்கூடும் என்பதை ஏனோ குகன் நினைந்து பார்க்கவில்லை? 'ஏன் படையுடன் வரவேண்டும்!' என்ற ஐயங்கூட அவன் மனத்தில் தோன்றியதாகத் தெரியவில்லை. அதற்கு மறுதலையாக, பரதனைப்பற்றியும் அவனுடைய வருகை பற்றியும் முற்றிலும் அறிந்தவன் போலக் குகன் பேசுவது சற்று வியப்பையே தருகிறது. ''வஞ்சனையால் அரசு எய்திய மன்னர்'', முன்னவன் என்று நினைந்திலன்'', ''புவி ஆள்பவன்'' என்பன பரதனைப்பற்றிக் குகல் கொண்ட முடிவுகள். ''தோழமை தந்தானாகிய இராமன் மேல் சேனைபோவது என் உயிர்போன பிறகல்லவா?''(17)என்பது பரதனுடைய படை வருகைக்குக் குகன் கற்பித்த காரணம். இராமன்மேல் படை எடுப்பதல்லாமல், அவனை அன்புடன் மீட்டும் அழைத்துச் செல்லும் நோக்குடனும் பரதன் வரக்கூடும் என்பது குகனுடைய மனத்தில் படவேயில்லை!

முன்பின் அறியாத பரதனைப்பற்றி இத்தகைய முடிவுகள் குகன் மனத்தில் தோன்றக் காரணம் யாது? காரணம் ஒன்றாகத் தான் இருத்தல் கூடும். பரதனைப்பற்றிய மிகத் தவறானவையும், மெய்ம்மைக்கு மாறுபட்டவையுமான கருத்துக்களைக் குகன் முன்னமே பெற்றிருந்தான். இக்கருத்துக்களைக் குகன் யாண்டுப் பெற்றான்? இராமனுடைய வரலாற்றை அவன் எப்பொழுது

அறிந்தானோ அப்பொழுதுதானே பரதனைப்பற்றியும் அறிந்திருத்தல் கூடும்? ஆம்; குகனுக்கு இராமன் காடு வந்த வரலாற்றை யார் கூறினர்? இளையவனாகிய இலக்குவனே கூறினான். எனவே, பரதனைப்பற்றியும் இலக்குவனே கூறியிருத்தல் வேண்டும். பரதனைப்பற்றி இலக்குவன் எப்பொழுதுமே தவறான எண்ணம் கொண்டிருந்தான். எனவே, அவன் தான்கொண்ட தவறான கருத்தைத்தானே குகனுக்கும் கூறியிருத்தல் வேண்டும்? பரதனுடைய வருகைபற்றி அவனை முன் பின் தெரியாத குகன் கூறியன ஒரு புறமிருக்கட்டும். இளமையிலிருந்தே அவனுடன் பிறந்து வளர்ந்த இலக்குவன்கூட அன்றோ அறியமுடியவில்லை! பரதன் படை எடுத்து வருகிறான் என்றே இலக்குவனும் முடிவு செய்து போருக்குத் தயாராகிறான்.

எனவே, பரதன்மேல் இத்துணைத் தவறான கருத்துடைய இலக்குவன் பரதனைப்பற்றிக் குகனிடம் கூறினான். குகன் அதை நம்பாமல் யாது செய்வது? அவன் கண் எதிரே இலக்குவன் நிற்கிறான். எவ்வாறு? ''வில்லைஊன் றியகை யோடும் வெய் துயிர்ப் போடும் கங்குல் எல்லைகாண் பளவும் நயனம் இமைப்பிலனாக'' நிற்கிறான். இக்காட்சி மூலம் இராமன் மேல் இலக்குவன் கொண்டுள்ள அன்பின் ஆழத்தைக் குகன் நேரே காண்கிறான். இந்த நிலையில் இலக்குவன் சொற்களை நம்பாமல் இருக்க முடியுமா? மேலும், இராமன் காடு செல்வதால் உடனடியாகப் பயன் அடைபவன் பரதன் அல்லனோ? எனவே, பரதன் தீயவன் என்று இலக்குவன் கூறினால், குகன் அதனை ஏற்றுக்கொள்வதில் தடை யாது? தான் ஆளும் நாட்டின் எல்லையிற்கூட இராமன் இருக்கக்கூடாது என்ற காரணத்தாலேதான் அவனைக் காட்டிற்கு அனுப்பி விட்டான் பரதன் என்றுதானே குகன் நினைப்பான்? அதற்கு ஏற்றாற்போல இப்பொழுது பரதன் படையுடன் வந்தான் என்றால், அண்ணனை அழிக்கத்தான் புறப்பட்டு விட்டான் என்றே குகன் நினைக்கிறான். வேறு காரணம் பற்றியும் பரதன் வருதல் கூடும் என்ற நினைவே அவ்வேடர் தலைவனுக்குத் தோன்றக் காரணம் இல்லை.

அடுத்து அவன் பேசிய சொற்கள் படிப்படியாகப் பரதனைத் தாழ்த்திக்கொண்டே செல்லக் காண்கிறோம். ''வஞ்சனையால் அரசு எய்திய மன்னர்'' என்ற குகன் சொற்களால் இலக்குவன்

நடந்தவற்றை எவ்வளவு திரித்துக் கூறியுள்ளான் என்பதை அறிகிறோம். தாய் வரம் கேட்டதும், தந்தை அதனை ஈந்ததும் முறைப்படி நடந்தன என்பதை இலக்குவன் உணரவில்லை. உணர்ந்திருப்பின், தாய் கொடியவள் என்று கூறுவானே தவிர, வஞ்சனை செய்தாள் என்று கூற முறை இல்லை. ஒருவேளை வஞ்சனை செய்ததாகக் கூறினாலும், தசரதன் மேலேதான் அக்குறையைக் கூறமுடியும். அவன் தான் இராமனை அழைத்து முதல் நாள் முடி கவிப்பதாகக் கூறிவிட்டு, மறுநாள் காடு செல்ல உத்தரவிட்டான். எனவே, இலக்குவன் கூறுவது போல வஞ்சனை நடைபெற்றதாகவே வைத்துக்கொண்டாலும் அதற்கு முற்றிலும் தசரதனே காரணனாவான். கொடிய செயல் என்று அறிந்திருந்தும் மகனுக்கு முடியைப் பெற்றுக் கொண்டு இராமனைக் காடு செல்ல வேண்டுமென்று கட்டளையிட்டது கைகேயியின் செயல்தான். ஆனால், அது கொடுமை உடையது என்று கூறலாமே தவிர, வஞ்சனை ஆமாறு எங்ஙனம்? இது இலக்குவன் அறியாதது அன்று. இருந்தும், குகன் மனத்தில் (பரதன் வஞ்சனை உடையவன் என்னும்) இந்த எண்ணம் தோன்றுமாறு இலக்குவன் பேசினான் என்றால், அது யாருடைய தவறு? இலக்குவன் இராமன் மேல் கொண்ட அன்பால் தன்னையும் அறியாமல் பரதனாகிய உத்தமனுக்குத் தீங்கை இழைத்துவிட்டான். இலக்குவன் செய்த இந்தத் தவறு காரணமாகக் குகனும் பரதனைப்பற்றி "வஞ்சனையால் அரசு எய்திய மன்னர்" என்று முடிபு கட்டிவிட்டான்.

இதனை அடுத்துக் குகன் கூறிய சொற்கள்,

"முன்னவன் என்று நினைந்திலன் மொய்புலி அன்னான்ஓர்
பின்னவன் நின்றனன் என்றிலன்." (கங்கை. 16)

என்பவை. இதனால், பரதனை மிகவும் தாழ்த்தி விடுவதுடன் அறியாமை உடையவனாகவும் செய்து விடுகிறான் குகன். இராமனை முன் பிறந்தான் என்ற கருத்தினாலாவது விட்டு வைத்திருக்க வேண்டும் பரதன். தன்னுடன் பிறந்தவனுக்குச் செய்யவேண்டிய கடமையை மறத்தலினும் தீங்கு யாதுளது? முன்னே பிறந்த தமையனுடைய உரிமையை மதியாமல் காடு செலுத்திய தம்பியாகிய பரதன் எங்கே, தன் உரிமையைத் தம்பியாகிய பரதனுக்கு விட்டுக் கொடுத்துவிட்டுக் காடு சேர்ந்த இராமன் எங்கே! இராமன் பண்பாட்டில் எவ்வளவு ஒப்புயர்வு அற்றவனாகக் குகன் கருத்தில் படுகிறானோ, அவ்வளவு பண்பு

இல்லாதவனாகப் பரதன் படுகிறான். முன்னவன் என்று நினைந்து கூடப் பார்க்கவில்லை என்ற சொற்களில் எவ்வளவு வெறுப்பையும் கொட்டி விடுகிறான் வஞ்சகம் அற்றவனாகிய குகன்! அடுத்த அடியில் பரதனை அறியாமையின் சிகரத்தில் இருப்பவனாகவும் அல்லவா முடிவு செய்து விடுகிறான்! ''மொய்புலி அன்னான் ஓர் பின்னவன் நின்றனன் என்றிலன்'' என்ற அடியைக் கூர்ந்து நோக்க வேண்டும் குகனுடைய கண்களில் மனைவியை உடன் அழைத்துக் கொண்டு காடு வந்துள்ள இராமனைவிட இலக்குவன் வலிமை யுடையவனாகக் காட்சி அளிக்கிறான் போலும்! இலக்குவனுடன் சிறிது நேரமே பழகிய போதிலும் அவனுடைய வீரத்தை ஓரளவு அறிந்து கொண்டுள்ளான் குகன். எனவே, அவனைப் புலிக்கு ஒப்பிடுகிறான். ஆனால், இராமனுடைய அமைதியே வடிவான முகமும் பேச்சும் குகனை ஓரளவு ஏமாற்றிவிட்டன போலும்! 'முன்னவன் என்றாவது இந்தப் பரதன் நினைந்து பார்த்தானா?' என்று அவன் கூறும்பொழுது இராமன்மேல் இரக்கங்கொண்டவ னுடைய மனப்பான்மையை நாம் அறிகிறோம். 'இந்த ஒரு காரணத்திற்காகவேனும் அவனை விட்டுவிடக் கூடாதா?' என்ற ஓசைப் பொருள் அசைச்சொற்களில் ஒலிக்கின்றது. ஆனால், 'இலக்குவன் இருக்கிறான் என்பதைக் கூடவா பரதன் மறந்து விட்டான்!' என்று வியப்படைகிறான் குகன்; 'இலக்குவனுக்குப் பதில் கூற இப்படை முழுவதும் போதாதே!' என்று நினைக்கிறான்.

அண்ணனை வென்றுவிடலாம் என்று பரதன் மனப்பால் குடித்துக்கொண்டு ஒரு வேளை வந்திருக்கலாம். ஆனால் இலக்குவனை அவன் நினைத்துப் பார்க்கவில்லை போலும்! 'பின்னவன் நின்றனன்' என்ற சொற்களில் ஓர் அழகு விளங்கு கிறது. அந்த இலக்குவனும் எந்த நேரத்தில் எந்தத் தீங்கு வரும் என்று எதிர்பார்த்தே எப்பொழுதும் போர்க் கோலத்துடன் நிற்கிறான். அமர்ந்தோ, உறங்கியோ இருந்துவிட்டால், எழுந்து போருக்குத் தயார் செய்து கொள்ளக் காலம் தாழ்க்கும் என்று அஞ்சிப் போலும் எப்பொழுதும் நின்றுகொண்டே இருக்கிறான்! அவனைக் குறைத்து மதித்துவிட்டே இந்தப் பைத்தியக்காரப் பரதன் வந்துள்ளான்!' என்று நினைக்கிறான் குகன். இலக்குவன் வன்மையைக் குறைத்து மதித்துவிட்ட பரதனது அறியாமையை நினைக்கும் பொழுது குகனுக்கு நகைப்புக்கூட வருகிறது. அதனால், அடுத்த கணத்தில் அது சினமாக மாறுகிறது. பரதனுடைய உடன் பிறந்தவர்களே இலக்குவனும் இராமனும்.

இராமனிடம் அன்பில்லாவிட்டாலும் இலக்குவன் வன்மையைக் குறைத்து மதித்துவிட்டாலும் மதித்துவிடட்டும். அதனால் தன்னையும் தன்படை வன்மையையும் குறைத்து மதிக்கப் பரதனுக்கு உரிமை ஏது என்று சீறுகிறான் குகன். தம்பியாகிய பரதன் இராமனையும் இலக்குவனையும் எவ்வாறு வேண்டு மாயினும் மதிக்கட்டும். அது அவனுடைய பொறுப்பு. ஆனால், ''என் இவன் என்னை இகழ்ந்தது? இவ்வெல்லை கடந்து அன்றோ?'' (கங்கை. 16) என்கிறான் குகன் தன்னுடைய இருப்பையும், தான் இராமனுக்கு உற்ற துணைவனாய் இருப்பதை யும் பரதன் அறியவில்லை போலும்! அறிந்திருந்தால், இவ்வாறு துணிந்து புறப்பட்டு வருவானா? பரதன் படையுடன் புறப்பட்டு விட்டமையின் தன்னை இகழ்ந்துவிட்டதாகவே நினைக்கிறான் அவ்வீரனாகிய வேடன். ஒரு வேளை பரதன் அதிக வலிமை பெற்ற மன்னவனாயின், குகன் போன்ற சிற்றரசன் இருப்பதைப் பொருட்படுத்தாமல் புறப்பட்டு வரலாம். ஆனால், எத்துணை வலியுடையராயினும், 'காலம் அறிதல், இடம் அறிதல்' முதலியன அமையாவிடின் பிழைதான் எஞ்சும்.

> **''கால்ஆழ் களரில் நரிஅடும் கண்அஞ்சா**
> **வேல்ஆள் முகத்த களிறு.''** (500)

என்ற குறள் இடம் அறிதலின் சிறப்பைத்தானே கூறுகிறது? பாகனுக்கு அடங்காத யானைகூடக் கால்கள் அமிழ்ந்து போகக் கூடிய சேற்று நிலத்தில் நரியால் வெல்லப்படுமாம். இந்த அடிப்படை உண்மை கூடவா பரதனுக்குத் தெரியவில்லை? அயோத்தியில் யானை போல இருக்கும் பரதன்கூடக் குகனுடைய எல்லையில் பூனையாக அல்லவா மாறி விடுவன்? இதனை வலியுறுத்தவே போலும் குகன், ''என்னை இவன் இகழ்வது இந்த எல்லையைக் கடந்து அன்றோ?' என்று கூறுகிறான்! பரதனாகிய மன்னவனுக்கு அரசியலின் அடிப்படைச் சூழ்ச்சிகள் கூடத் தெரிய வில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டான் குகன்.

பரதனைப்பற்றிக் குகன் கொண்ட இந்த முடிவுகள் பொது வாக அரசர்களைப் பற்றியே சில தவறான எண்ணங்களை அவன் மனத்தில் தோற்றுவித்து விட்டன. அரசராக வருபவர் ஏனைய மனிதரினின்றும் தம்மை வேறு பிரித்துக்கொண்டு தம்மை உயர்ந்தவராக மதித்துக்கொள்கின்றனர். ''மன்னர்க்கு நீதி ஒரு வகை; ஏனைமாந்தர்க்கு நீதி ஒரு வகை,'' (பாஞ். சபதம்) என்று

வியாழ முனிவன் கூறியதை அவர்கள் உண்மையிலேயே நம்பி விட்டார்கள். எனவே, ஏனைய மனிதர்கட்குரிய சட்டதிட்டங் களும் கடமைகளும் தமக்கு இல்லை என்றுகூடக் கருதத்தலைப் பட்டனர். சாதாரண மனிதர்கள் செய்வதற்கு அஞ்சக்கூடிய செயல்களை அரசர்கள் துணிந்து செய்வதன் கருத்து யாதாய் இருக்கும்? புண்ணியம், பாவம் என்ற இரண்டு உண்டு என்பதும், அவை தமக்கும் உண்டு என்பதும் இவ்வரசர்கட்குப் படுவதில்லை போலும்! அதுதான் போகட்டும் என்றால், பிறரால் பழிக்கப்படும் செயல்களைச் செய்யக்கூடாது என்பது கூடவா இவர்கட்குத் தெரியாமற்போய் விட்டது?

''ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.'' (656)

என்ற குறளின் கட்டளை அரசர்கட்கு இல்லையா? ஆம் சாதாரண மனிதராக உள்ளவரையில் ஒருவர் கடைப்பிடித்து ஒழுகும் குறிக்கோளும் பண்பாடும், அதிகாரம் கைக்கு வந்த பொழுது மறந்து விடுதல் உலக இயற்கைதான். அந்த நியதியைத் தானே குறளும் பேசுகிறது?

''எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையால்
வேறுஆகும் மாந்தர் பலர்.'' (514)

என்ற குறளில் எத்துணை நல்லவர்களாயினும், அதிகாரம் கையில் கிடைத்த பின் மனம் மாறிவிடுதல் உலக இயல்பு என்பது கூறப்பட் டுள்ளது. இதனைத் தான் கூனியும் கைகேயிக்கு எடுத்துக் கூறுகிறாள்.

''அறம்நி ரம்பிய அருளுடை அருந்தவர்க் கேனும்
பெறல்அ ருந்திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம்.''
(மந்தரை. 69)

பல பெரியார்களாலும் எடுத்துக் கூறப்பட்ட இந்த உண்மை அவர்கள் அனுபவ ஞானத்தால் கண்ட ஒன்றுதானே! எனவே, பரதனும் முடி தனக்கு உறுதியானவுடன் பழி பாவம் என்ப வற்றைக் காற்றிற் பறக்கவிட்டு விட்டான் என்று கருதுகிறான் குகன். இந்த நினைவில் குகன் தானும் ஓர் அரசன் என்பதைக்கூட மறந்துவிட்டான். ஆம்! வேட்டுவர் குலத்தில் வந்து பிறர் நாகரிகம் என்று கருதுவதை அறியாத அவனுக்குப் பழி பாவம் என்பவை மிகவும் பெரியனவாகக் காட்சி அளிக்கின்றன. ஆனால், 'நாகரிகம்

முதிர்ந்தவர்களிடம் பழி பாவம் என்ற இரண்டின்மாட்டும் கொண்ட அச்சம் இராது போலும்!' என்று குகன் அன்று வருந் தினான்! இன்றும் அது உண்மையாய் இருத்தலைக் காண்கிறோம். நாகரிகத்தில் தம்மை மேம்பட்டவர் என்று கூறிக்கொள்ளும் வெள்ளை இனத்தார்தாமே இன்று இவை இரண்டையும் கண்டு அஞ்சாமல் வாழ்க்கை நடத்துகின்றனர்? இவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்த குகன் இதோ பேசுகிறான்.

''பாவமும் நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ?
ஆவது போகஎன் ஆள்வினைத் தோழமை தந்தான்மேல்
போவது சேனையும் ஆருயி ரும்கொடு போயன்றோ?''

(கங்கை. 17)

இப்பாடல்கள் பலவற்றிலும் வரும் ஒரு கருத்து நோக்குதற்கு உரியது. ''செஞ்சரம் என்பன தீ உமிழ்கின்றன செல்லாவோ? மன்னவர் நெஞ்சினில் வேடர் விடும் சரம் வாயாவோ?'' என்ற சொற்கள் மூலம் குகனுடைய எண்ணம் ஒருவாறு புலனாகிறது. பரதன் தன்னையும் தன் படையையும் வேடர்கள் என்ற ஒரு காரணத்தால் குறைத்து மதித்துவிட்டான் என்ற எண்ணம் குகன் மனத்தில் வேர் ஊன்றிவிட்டது. எனவே, அவன் அடிக்கடி, 'வேடர்கள்கூட அரசர்களைக் கொல்லமுடியும்',என்று கூறுகிறான். அன்றியும், அரசனாகப் பிறந்து அச்செல்வத்திற்கு உரிமை பூண்டிருந்த இராமனே தன்னை மதித்துத் தம்பி என்று உரிமை கொண்டாடுகையில், அரசச் செல்வத்தைப் பறித்துக் கொண்டு அதனால் அரசப் பதவியை அடைந்ததாகத் தன்னால் கருதப் பட்ட பரதன் தன்னை இகழ்ந்து படையுடன் புறப்பட்டதைக் குகனால் பொறுக்க முடியவில்லை. எனவே, மாறி மாறி, 'அவன் அரசனாகவே இருப்பினும், என் அம்புகள் அவனைக் கொல்லும்,' என்று கூறுகிறான் குகன்.

ஆற்றின் எதிர்க்கரையில் நிற்கும் பரதனுடைய சேனையைப் பார்க்கப் பார்க்கக் குகனுடைய கோபம் பன்மடங்காகப் பெருகு கிறது. இராமனையும் பரதனையும் மீட்டும் மீட்டும் தன்மனத்துள் ஒப்பிட்டுப் பார்க்கிறான் அப்புளினர் வேந்தன். ஆட்சி செலுத்தும் நாட்டை விருப்புடன் தந்துவிட்டுக் காடு புகுந்த இராமன் எங்கே! அவ்விராமனை இங்கும் இருக்க ஒட்டாமல் படை கொண்டு துரத்தும் பரதன் எங்கே! தன்னுடைய நாட்டில் இராமன் இருத்

ஏல் கூடாது எனப் பரதன் இராமனைக் காட்டிற்கு அனுப்பியது சரி. ஆனால், காடு யாருடையது? இந்தக் காட்டிலும் இராமன் இருக்கக் கூடாது என்று கூறப் பரதனுக்கு என்ன உரிமை வந்து விட்டது? அவனுடைய அதிகாரத்துக்கு உட்படாதது மட்டுமன்று இக்காடு! வேடர்கள் ஆணைக்கு உள்ளடங்கி இருக்கும் பகுதியாகும் இக்காட்டில் அல்லவா இராமன் வந்து தங்கினான்? இதனை மனத்துள் கொண்ட குகன், ''நாம் ஆளும் காடு'' என்று கூறுகிறான். இதனை அடுத்துக் குகனுக்கும் புதிய ஓர் ஆராய்ச்சி பிறக்கிறது.

இலக்குவன் குகனிடம் பேசினான்; இராமன் காடு வர நேர்ந்த வரலாற்றை விரிவாக எடுத்துக் கூறினான். அதனைக்கேட்ட குகனுக்கு இராமன்மேல் அன்புபிறந்தது; அவனை வஞ்சித்த பரதன் மேல் வெறுப்பும் பிறந்தது. ஆனாலும், ஒரு தந்தையின் மக்களான இராமன் பரதன் இருவருள் நடைபெற்ற உரிமைப்போராட்டத்தில் தலையிட அவன் விரும்பவில்லை. நியாயமும் உரிமையும் இராமன்பால் உள்ளன எனினும், தன்னை இராமன் ஒன்றும் வேண்ட வில்லையன்றோ? அவ்வாறு இருக்கக் குகன் எவ்வாறு தலையிடுவது? மேலும், குகனுடைய ஆட்சி எல்லைக்கு அப்பால் உள்ள நாட்டில் நடைபெற்ற போராட்டமாகும் இது. எனவே, எவ்வளவு தன் கருணை ஒரு புறம் இருப்பினும், குகன் ஒன்றுஞ் செய்ய இயலாமல் இருந்துவிட்டான். ஆனால், இப்பொழுது நிலை மாறிவிட்டது. பரதனால் துரத்தப்பட்ட இராமன் குகனுடைய எல்லையில் இருக்கிறான். எனவே, தன்னுடைய நாட்டில் விருந்தினனாய்ப் புகுந்த அவனைக் காப்பது குகன் கடமை. அதனோடு நில்லாமல் இராமனுக்குத் தீங்கிழைத்த பரதனும் குகனுடைய எல்லைக்குள் வந்து விட்டான், இராமனுக்கு மேலும் தீங்கு செய்யும் நோக்குடன். இந்த நிலையில் குகன் தன் கடமையை நன்கு உணர்கிறான்.

இராமன் தன்பால் வந்ததிலிருந்து அவனுக்கு எவ்வாறாயினும் அயோத்தி அரசை மீட்டுத்தர வேண்டும் என்று குகன் விரும்பினான். சந்தருப்பம் சரியாக இன்மையின், அவன் எண்ணம் ஈடேறவில்லை. ஆனால், பரதன் தனது எல்லையில் இருக்கும் போது அவன் எதிர்பார்த்த சூழ்நிலை ஏற்பட்டு விட்டதாகக் குகன் கருதுகிறான். இந்த நிலையில் பரதனுடன் போர் தொடுத்து அவனை வென்றால் இராமன் கூடக் குகன்பால் தவறு கூற முடியாது. பரதனே வலுச் சண்டைக்கு வந்திருக்கும் பொழுது குகன்

அவனுடன் போர் தொடுப்பதில் தவறு இல்லை அன்றோ? அறமே வடிவான இராமன் நாட்டை இழந்தான்? மறமே வடிவான பரதன் அதற்குக் காரணனாவான். இப்போது அந்தப் பரதன் குகன் ஆளுகைக்குட்பட்ட எல்லையில் வாழும் இராமனைத் துரத்த வந்திருக்கிறான். குகன் எல்லைக்குள் வரப் பரதனுக்கு உரிமை ஏது? எனவே, குகன் இதனையே ஒரு வாய்ப்பாக வைத்துக் கொண்டு இராமனுக்கு அவனது அயோத்தி அரசை மீட்டுத் தர விரும்புகிறான்; அதிலும், 'இராமன் அரசை இழந்தான்; ஆனால், வேடர்கள் அவ்வரசை மீட்டுத் தந்தார்கள்,' என்ற புகழையும் அதன் மூலம் அடைய விரும்புகிறான். இத்தனைக் கருத்துக்களும் கம்பநாடனுடைய ஒரு பாடலைப் படிக்கும் பொழுது தோன்று கின்றன.

''ஆடு கொடிப்படை சாடி அறத்தவ ரேஆள
வேடு கொடுத்தது பார்எனும் இப்புகழ் மேவீரோ!
நாடு கொடுத்தஎன் நாயக னுக்குஇவர் நாம்ஆளும்
காடு கொடுக்கிலர் ஆகி எடுத்தது காணீரோ?''

(கங்கை. 22)

எதிர்க் கரையில் காணப்படும் படை மிகப் பெரிது என்பது அப்படை எழுப்பும் துகள் அல்லது தூசியினாலேயே அறிந்து கொள்ள முடிகிறது. என்றாலும், ஒரு தூய வீரனுக்கு அது கண்டு அச்சம் தோன்றுவதே இல்லை. பகைவனின் படைப்பலத்தைக் குறைத்து மதிப்பது தீமை என்பது அறநூல் கூறிய விதி.

''வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.'' (குறள். 471)

இத்தகைய அடிப்படையான உண்மையைக் குகன் மறந்து விட்டானா? மறந்துவிடவில்லை. பரதனின் படை வலிமையை நன்கு அறிந்துகொண்டுள்ளான். எனினும், இரண்டு காரணங்களால் அவர்களை வெல்ல முடியும் என்று நினைத்து முடிவு செய்கிறான். ஒன்று, பரதன் தன்னுடைய எல்லையத் தாண்டி இப்பொழுது குகனுடைய எல்லையில் இருக்கிறான். எனவே, குகனுக்கு இது ஒரு வாய்ப்பு. இரண்டாவது, இரு படைகட்கும் நடுவே இயற்கை அரணாய் அமைந்துள்ளது கங்கையாறு. எத்துணைப் பெரிய படையைப் பரதன் பெற்றிருந்தாலும், கங்கையாற்றைத் தாண்டாமல் யாது செய்ய இயலும்? கங்கையைத் தாண்ட வேண்டும் எனில், அது குகனுடைய படகுகள் இல்லாமல் இயலாதல்லவா?

இவ்விரண்டு காரணங்களாலும் பரதனுடைய படையை எவ்வாற்றானும் வென்றுவிடலாமென்று குகன் நினைக்கிறான்.

''செஞ்சரம் என்பன தீஉமிழ் கின்றன செல்லாவோ?'' (14)

''என்இவன் என்னை இகழ்ந்ததுஇவ்
வெல்லை கடந்தன்றோ?'' (16)

''மருந்தெனில் அன்றுஉயர் வண்புகழ்
கொண்டது மாயேனோ?'' (18)

''தும்பியும் மாவும் மிடைந்த பெரும்படை சூழ்வாரும்
வம்பியல் தாரிவர் வாள்வலி கங்கை கடந்தன்றோ?'' (19)

''ஆழ நெடுந்திரை ஆறு கடந்துஇவர் போவாரோ?'' (15)

என்ற இவ்வடிகள் பரதனுடைய படை வன்மையைக் குகன் நன்கு அறிந்திருந்தான் என்பதையும், கங்கை குறுக்கே இருத்தலின் இப்படைவலி பயனற்றுப்போவதையும் அறிந்திருந்தான் என்பதையும் அறிவிக்கின்றன.

இவ்விரண்டு காரணங்களுடன் குகனுக்குத் தன்னிடத்தும் தன் படையினிடத்தும் மிகுந்த நம்பிக்கை இருந்ததையும் அறிய முடிகிறது. பரதனுடைய படை எத்துணைப் பெரிதாயிருப்பினும், இராம இலக்குவர்களுடைய வில்லாற்றலின் முன்பு இப்படை ஒரு போதும் எதிர்த்து நிற்க இயலாது எனக் கூறுகிறான். அதனுடன் நிறுத்தாமல், மேலே அவன் பேசுவதிலிருந்து அவனுடைய தன்னம்பிக்கையை நாம் அறிய முடிகிறது. 'அவர்கட்கு இப்படை ஒரு பொருட்டன்று என்பது ஒரு புறம் இருக்கட்டும். தேவர்களே எதிர்த்துவரினும் அவர்களுடைய குடரைச் சூறையாட மாட்டேனோ யான்?' என்று கூறு முறையில்

''போன படைத்தலை வீரர் தமக்குஇறை போதாஇச்
சேனை கிடக்கிடு; தேவர் வரின்சிலை மாமேகம்
சோனை படக்குடர் சூறை படச்சுடர் வாளோடும்
தானை படத்தனி யானை படக்கடை சாயேனோ?'' (கங். 20)

அன்றியும்,

''நின்ற கொடைக்கைஎன் அன்பன் உடுக்க நெடுஞ்சீரை
அன்று கொடுத்தவள் மைந்தர் பலத்தைஎன் அம்பாலே
கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டுஓடித்
துன்று திரைக்கடல் கங்கை மடுத்துஇடை தூராதோ?'' (21)

என்று குகன் கூறும் பொழுது தன் வலிமையின் மேல் அப்பெரு மகன் கொண்டிருந்த பெருநம்பிக்கை வெளியாகிறது. மேலும், அவனுடைய வெற்றி உறுதி என்ற எண்ணத்தின் மற்றொரு பகுதியும் இப்பாடலில் வெளியாகிறது.

எத்துணைப் படை வலிமை உடையவராயினும், அறமுறை பிறழ்ந்தவர்கட்கு வெற்றி இல்லை என்பது தமிழர் கண்ட பேருண்மை. இக்கருத்தை மருதன் இளநாகனார் என்ற புலவர் புறநானூற்றில் ஒரு பாடலில் நனகு விளக்குகிறார்.

''கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகல்மறவரும் என
நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்.'' (புறம். 55)

'கோபத்துடன் கொல்லும் இயல்புடைய யானைப் படையும், வேகமாகச் செல்லும் செருக்கை உடைய குதிரைப் படையும், நெடிய கொடி கட்டிய பெரிய தேர்ப்படையும், நெஞ்சு வலிமையுடைய காலாள் படையும் மிகுதியாகப் பெற்றிருப்பினும், ஓர் அரசருடைய வெற்றி அறத்தையே அடிப்படையாகக் கொண்டது,' என்கிறார் புலவர் இப்பாடலில். இதே காரணத்தைக் குகனும் குறிப்பால் கூறுகிறான். 'என் அன்பன் உடுக்க நெடுஞ்சிரை அன்று கொடுத்தவள் மைந்தர்' என்று அவன் பரதனைக் குறிப்பிடுவது கூர்ந்து நோக்கற்குரியது. என்று இராமனுக்கு மரவுரி கொடுத்து விட்டு அவனுடைய அரசைப் பறித்துத் தன்மகனாகிய பரதனுக்குக் கைகேயி தந்தாளோ, அன்றே அயோத்தி அரசில் அறம் விடை பெற்றுக்கொண்டது என்று குகன் நினைக்கிறான். ''பாவமும் நின்ற பெரும்பழியும் .... ஏவமும் என்பவை மண்ணுலகு ஆள்பவர் எண்ணாரோ?'' (17) என்று முன்வரும் குகன் குறிப்பிட்டது பரதனைக் குறித்தேயன்றோ? எனவே, பரதனுடைய கட்சியில் அறமில்லையாகலின், அவனுக்கு வெற்றி கிட்டமுடியாது என உறுதியாக நம்புகிறான் குகன். இதனாலேயே 'தும்பியும் மாவும் மிடைந்த பெரும்படை' (19) பரதனிடம் இருக்கிறது என்று அறிந்தும், தன்னிடம் யானை குதிரை முதலிய படைகள் இல்லை என்பது தெரிந்திருந்தும், குகன் பரதனை வென்றுவிட முடியும் என்று கருதுகிறான்.

'ஏழுனை உற்றிடில் ஏழு கடற்படை என்றாலும்
ஆழுனை வில்சிறு கூழென இப்பொழுது ஆகாதோ?'' (23)

என்று கூறும் குகனுடைய நெஞ்சு உறுதி போற்றற்குரியது.

பரதனைப்பற்றிக் குகன் இம்முறையில் நினைந்து பேசிக் கொண்டிருக்கும் அதே நேரத்தில் எதிர்க் கரையில் பரதனும் சுமந்திரனும் பேசிக்கொண்டிருக்கின்றனர். புதியவனாய் வந்துள்ள பரதனுக்குக் குகனைப்பற்றி அறிமுகம் செய்து வைக்கிறான் சுமந் திரனாகிய அமைச்சன்.

''கங்கைஇரு கரையுடையான் கணக்கிறந்த நாவாயான்
உங்கள்குலத் தனிநாதற்கு உயிர்த்தோழன் உயர்தோளான்
வெங்கரியின் ஏறுஅனையான் விற்பிடித்த வேலையினான்
கொங்குஅலரும் நறுந்தண்தார்க் குகன்என்னும் குறியுடையான்
''கல்காணும் திண்மையான் கரைகாணாக் காதலான்
அல்காணிற் கண்டுஅனைய அழகுஅமைந்த மேனியான்''
(கங்கை. 25,26)

குகனைப்பற்றிச் சுமந்திரன் தந்த குறிப்புக்களில் மிகச் சிறந்தது 'இராமனுக்குக் குகன் உயிர்த்தோழன்,' என்பதுதான். இந்த ஒரு குறிப்பே பரதனை அவன் பக்கலில் கொண்டு சேர்க்கப் போதுமான தாய் இருந்தது. தன்னுடைய நிலைமைக்குக் குகனைத் தான் சென்று காண்பது முறையா என்றுகூட ஆயாமல், பரதன் 'யானே சென்று அவன் காண்பேன்'(27)என்று புறப்பட்டு, ஆற்றின், கரையோரம் வந்து விட்டான். குகன் தன்னை வந்து காணு முன்னர்த்தானே அவனைச் சென்று காணவேண்டும் என்று பரதன் புறப்பட்டு விட்டான். அருமைத் தம்பி சத்துருக்கினனும் உடன் வந்து விட்டான். ஆனால், கங்கை ஆறு தடை செய்துவிட்டது. அவ்வாற்றைக் கடந்து குகனைக் காணவேண்டும். எனினும், அதுவும் குகனுடைய உதவி இல்லாமல் இயலாததாய் இருந்தது. எனவே, பரதனும் இளவலும் ஆற்றின் எதிர்க்கரையில் நின்று விட்டனர். இக்கரையில் நிற்கும் குகன் எதிர்க்கரையில் நின்ற சோதரர்களை இப்பொழுதுதான் கண்களால் தெரியக் கண்டான்.

''நின்றவனை நோக்கினான் திருமேனி நிலையுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி எயினர்கோன் துண்ணென்றான்.'' (28)

பரதனைப்பற்றி இத்துணை வன்கண்மையுடன் குகன் பேசினது அவனை நேரே காணு முன்பே என்பது இப்பொழுது நன்கு தெரிகிறது. இலக்குவன் சொற்களால் வரையப் பெற்ற பரதவுருவமே இதுவரை குகனுடைய மனத்தின் ஆழத்தில் பதிந் திருந்தது. பரதன் இராமனை விரட்டியதுடன் அமையாது படை

கொண்டும் வருதல் போல எதிர்க்கரையில் ஒரு பெரிய படை வந்தும் தங்கிவிட்டது எனவே, குகன் தன் எண்ணம் சரியானது. என்று நினைத்து இவ்வளவு கடுமையாகப் பேசிவிட்டான். ஆனால், இப்பொழுது எதிர்க்கரையில் நீர் ஓரத்தில் வந்து நிற்கும் பரதனை நேரே கண்டு விட்டான். 'இவன்தான் பரதன்,' என்று அவனிடம் யாரும் கூறத் தேவை இன்று. இராமனுடைய வடிவம் அச்சு வார்த்தது போல நிற்கும் பரதனைக் கண்டுபிடிக்கக் குகனுக்கு நீண்ட நேரம் ஆகவில்லை. பரதன் என்று அறிந்த பிறகு தான் அவனைக் கூர்ந்து நோக்கினான் குகன். என்ன வியப்பு! படை எடுத்து வருகிறவனுடைய தோற்றமாக இல்லை பரதனுடைய கோலம். குகனுடைய கற்பனையில் உறைகின்ற பரதனுக்கும் இப்பொழுது எதிர்க்கரையில் நிற்கும் பரதனுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. தொடர்பு இல்லாதது மட்டுமா! முரணான பண்புகள், பரதனுடைய வடிவமாக இங்குக் காட்சி அளிக்கின்றன. இந்த முதற்காட்சியே குகனை விலவிலத்துப் போமாறு செய்துவிட்டது. இதனைத்தான் கவிஞன் 'எயினர் கோன் துண்ணென்றான்' என்ற சொற்களால் பெற வைக்கிறான்.

குகன் தன்னுடைய கண்களாற்கண்ட பரதனுடைய வடிவும் செயலும் இதோ தரப்படுகின்றன கவிஞனுடைய சொற்களால்.

''வற்கலையின் உடையானை மாசுஅடைந்த மெய்யானை
நற்கலையில் மதிஎன்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின்று இடைவீழ விம்முற்று நின்றுஒழிந்தான்.

'' 'நம்பியும்என் நாயகனை ஒக்கின்றான்; அயல்நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான்: தவவேடம் தலைநின்றான்
துன்பம்ஒரு முடிவு இல்லை; திசைநோக்கித் தொழுகின்றான்;
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பாரோ பிழைப்பு?'
என்றான்.'' (கங்கை. 29, 30)

மரவுரியை ஆடையாய் அணிந்து தூசு படிந்த உடலை உடையவனாய்க் கலையிழந்த மதிபோன்ற முகத்தினனாய்க் கல்லும் உருகும் வண்ணம் துயர் உறுகின்ற பண்பினனாய் உள்ள பரதனைக் கண்ணுற்ற குகனுடைய வில் தானே கீழே வீழ்ந்து விட்டது. அவனையும் அறியாமல் இந்தப் பரதன்மேல் அன்பு பிறந்தது; விம்மத் தொடங்கிவிட்டான். பரதனுடைய வடிவம் இராமனைக் குகனுக்கு நினைவூட்டியது. அணித்தே நிற்கும் சத்துருக்கினனுடைய வடிவம் இலக்குவனை ஒத்தேயிருக்கிறது.

இருவரும் இராமன் சென்ற திசை நோக்கித் தொழுகின்றனர். உடனே குகனுக்குத் தன் செயலில் நாணம் பிறந்து விட்டது. இத்தகைய பண்பாடு உடைய பரதனிடத்து ஐயங்கொண்டு படைகளை நோக்கிப் பேசிய தன்மேல் குகனுக்கே வருத்தம் உண்டாகிறது. இதுவரை பேசிய அனைத்திற்கும் கழுவாய் காண்பான் போலக் குகன், 'எம்பெருமான் பின் பிறந்தார் தவறு செய்வார்களோ?' (30) என்று கூறுகிறான். பரதனைத் தூரத்தே இருந்து கண்ட அளவிற் பேசிய சொற்களாகலின், இவை மன்னித்தற்கு உரியனவே. குகன் பரதன்மேல் கொண்ட ஐயம் இன்னும் முற்றிலும் நீங்கிவிடவில்லை.

பரதன் உயர்ந்த பண்புடையவன் என்பது இன்னும் குகனுடைய சொற்களில் வெளிப்படவில்லை. அவனால் அறியப்பட்ட இராமனைப் பற்றியே அவன் மீட்டும் பேசுகிறான். 'இராமன் பின் பிறந்தார் தவறு செய்வார்களா?' என்று கேட்கையில் பரதனைக் காட்டிலும் இராமன் புகழே பேசப்படுதலை அறியலாம். பரம்பரையாக அரச உரிமை பெற்றிருந்தமையின், ஒரு மனிதனைப்பற்றி விரைவில் முடிவு செய்துவிட விரும்பவில்லை குகன். பரதனைப் பற்றிய தன் எண்ணங்களை அவன் மாற்றிக் கொண்டாலும், முழுவதும் அதை நம்பி நடந்துவிட அவன் விரும்பவில்லை; எனவே, தன் படைகளை நோக்கிப் புதியதொரு கட்டளை இட்டுச் செல்கிறான். இதுவரையில் பகைவன் என்று கருதப்பட்ட பரதனுடைய கண்ணீரை மட்டும் கண்டு தன் முடிவை மாற்றிக்கொள்வது அரசனுக்கு அழகன்று. எனவே, குகன் கூறுகிறான்.

'' 'உண்டுஇடுக்கண் ஒன்றுஉடையான்
    உலையாத அன்புடையான்
கொண்டதவ வேடமே
    கொண்டிருந்தான் குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன்;
    காமின்கள் நெறி', என்னாத்
தண்துறையின் நாவாயின்
    ஒருதனியே தான்வந்தான்.'' (கங்கை. 31)

'யான் பரதனுடைய குறிப்பெல்லாம் கண்டு வருகிறேன். அவ்வாறு வருகிற வரையில் நீங்கள் வழிகளை எல்லாம் காவல் செய்து நில்லுங்கள்,' என்று தன் படைகட்குக் கட்டளை இட்டுவிட்டுத் தான் மட்டும் தனியே வருகிறான்.

இதனை அடுத்துள்ள பாடல் ஆழ்ந்து நோக்கற்கு உரியது. பாடலின் பொருளைப் பலர் பலவாறு திரித்துத் தத்தம் மன நிலைக்கு ஏற்பக் கூறுகின்றனர். இப்பாடலில் பரதன் குகன் என்ற இருவரையும் நம் எதிரே நிறுத்துகிறான் கவிஞன்; இவர்களுடைய அன்பின் ஆழத்தை நமக்குக் காட்டுகிறான். இவ்விருவருள் யார் சிறந்தவன் என்று நாம் கூற முடியாதபடி செய்துவிடுகிறான் கவிஞன். நடுவு நிலைமையோடு பாடலைக் காண்க.

''வந்துஎதிரே தொழுதானை வணங்கினான்; மலர்இருந்த
அந்தணனும் தனைவணங்கும் அவனும்அவன் அடிவீழ்ந்தான்;
தந்தையினும் களிகூரத் தழுவினான் தகவுஉடையோர்
சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்.'' (32)

முதற்பாடலில் 'நாவாயில் ஒரு தனியே தான் வந்தான்' என்று முடியும் அடியைத் தொடர்ந்து இந்த அடி வருதலை நன்கு கவனித்துப் பொருள் கூற வேண்டும். குகன், எதிரே வந்து, இராமன் சென்ற திசையை நோக்கித் தொழுது கொண்டு நிற்கின்ற பரதனை வணங்கினான். மலரின்மேல் வாழ்கின்ற நான் முகனும் தன்னை வணங்கத் தகுந்த அப்பரதனும் அக்குகனுடைய அடியில் வீழ்ந்து வணங்கினான். அவ்வாறு வணங்கிய பரதனை, மேலோர் சிந்தையிலும் சென்னியிலும் தங்கும்படியான மிக்க புகழையுடைய குகன் தந்தையைக் காட்டிலும் களிகூரத் தழுவிக் கொண்டான். இந்தப் பொருளை மனத்தில் நிறுத்திப் பாடலை மீட்டும் படித்துப் பார்த்தால் இப்பொருள் எவ்வளவு நேராகச் செல்கிறதென்பது நன்கு விளங்கும்.

இவ்வளவு நேரான பொருளை மாற்றி, பரதன் காலில் குகனை விழுமாறு செய்து மகிழ்கின்ற பெரியார்களும் உண்டு. அப்பெரியார்கட்கு வேடனாகிய குகன் காலில் திருமாலின் பகுதி யாகிய பரதன் வீழ்ந்து வணங்குவது பிடிக்கவில்லை. பாவம்! தங்களுடைய காதற்பித்தைப் பரதன் குகன் ஆகியவர்களிடங்கூட ஏற்றிக் காணும் அவர்கள் கவிதையை அனுபவிக்கப் பிறந்தவர்கள் அல்லர்; அதற்கு மறுதலையாகத் தம்மைக் கவிதையில் ஏற்றி அங்கும் தம்முடைய விருப்பு வெறுப்புக்களையே அனுபவிக்கப் பழகியவர்கள். ஆனால், மேலே கூறிய நேரிய பொருளைக் கூறியவர்களும் உண்டு என்பதை மறத்தல் ஆகாது.

இங்ஙனம் பரதனைக் குகன்தான் தழுவிக் கொண்டான் என்பதை அடுத்த பாடலின் முதலடியும், 'தழுவின புளினர்

வேந்தன்' என்று வலியுறுத்துகிறது. தழுவிய குகன் மெள்ளத் தன் மனத்தில் உள்ள ஐயத்தை அகற்றிக்கொள்ள விரும்புகிறான்; ஆனால், மிகுந்த பண்பாட்டுடன், 'எய்தியது என்னை?' என்று தான் கேட்கிறான். அதற்குப் பரதன் விடை கூறுவது குகனுடைய மனத்தில் மூலையில் ஒளித்து நிற்கும் ஐயத்தையும் நீக்கிவிடுகிறது.

''முழுதுஉலகு அளித்த தந்தை முந்தையோர் முறையினின்றும்
வழுவினன்; அதனை நீக்க மன்னனைக் கொணர்வான்,'
என்றான்.'' (கங்கை. 33)

இந்த விடையைக் கேட்ட குகன் எல்லையற்ற வியப்படைந்தவனாகி, மண்ணில் வீழ்ந்து வணங்கிப் பரதனுடைய கால்களைத் தழுவிக் கொள்கிறான். தூய்மையான அன்பினாலும் ஆர்வத்தாலும் குகன் இப்பொழுது பேசத் தொடங்குகிறான்.

''ஐயனே, தாயின் வரத்தால் தந்தை உதவிய இந்த உலக அரசைத் தீவினை என்று கருதி ஒதுக்கி விட்டு, அது அண்ணனை அடையாத கவலையை முகத்தில் காட்டிக்கொண்டு இங்கு வந்தனை என்றால், புகழை உடையோய், ஆயிரம் இராமர்கள் கூடினாலும் உனக்கு ஒப்பாவார்களா? ஏழை வேடனாகிய யான் எவ்வாறு உன் புகழைக் கூறப்போகிறேன்! சூரியனுடைய ஒளியானது ஏனைய ஒளிகள் அனைத்தையும் விழுங்கித் திகழ்வது போல, (தசரதன், இராமன் உள்ளிட்ட) இரகு குலவேந்தர்கள் பெருமை அனைத்தையும் உன் புகழாக்கிக் கொண்டாய்!'' என்கிறான்.

''தாய்உரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து புகழினோய்! தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியில் அம்மா!''

''என்புகழ் கின்றது ஏழை எயினனேன்! இரவி என்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை ஒளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் பெருமை எல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய் உயர்குணத்து உரவுத்
தோளாய்!'' (கங்கை, 35, 36)

இப்பரந்த உலகில் பண்புடையாளரை எண்ணத் தொடங்கினால் அவருள் முதலில் வைத்து எண்ணப்பட வேண்டியவன் பரதனாவன். இராமனும் பெற முடியாத பெருமையைக் குகன் பரதனுக்குத் தந்து மகிழ்கிறான். அதிலும், இதுவரையில்

இலக்குவனுடைய சொற்களை நம்பிப் பரதனை வேறு விதமாக எண்ணியிருந்த குகன் முற்றிலும் மாறிவிட்டான்; பரதனுடைய பண்பாட்டை நேரே கண்டுவிட்டான்.

"வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டுஇல்லை;
யாண்டும் அஃதுஒப்பது இல்." (குறள். 363)

என்ற அறநூல் இலக்கணத்திற்கு இலக்கியமாக அன்றோ அமைந்துவிட்டான் பரதன்! தந்தை சொன்ன காரணத்தால் அரசை ஏற்றுக்கொள்ள முடிவு செய்துவிட்ட இராமன் எங்கே, அதனை வேண்டா என மறுத்த பரதன் எங்கே! தனக்கு அதற்கு உரிமை உண்டா என்பதை ஆராய்ந்து பாராமல்அன்றோ இராமன் முடி சூட ஏற்றுக் கொண்டான்? அவன் அதை விரும்பவில்லை என்பது மெய்ம்மைதான். என்றாலும், தந்தை கேட்டவுடன் மறுத்துப் பேசாதது ஓரளவு குறைவுதானே!

பரதனுக்கு அயோத்தி அரசுக்கு உரிமை உண்டு. அந்த உரிமையை நினைவூட்டினாள் தாய். அதனை உணர்ந்த தந்தை கொடுக்க முடிவு செய்துவிட்டான். விரும்பி ஈந்தானா விரும்பாமல் தந்தானா என்பது வினாவன்று. உரிமை என்று அறிந்திருந்தும், அதனை ஒதுக்கி விட்ட பரதன், அதனை ஏற்றுக் கொண்ட இராமனிலும் மேம்பட்டவன் அல்லனோ? இராமனுக்குத் தர வேண்டுவது கடமை என்று விட்டிருந்தால், அதில் சிறப்பு இல்லை. ஆனால், தனக்கு உரிமை இல்லை என்று நினைத்தது மட்டும் அன்றி, அதனால் பெரிதும் கவலையுற்று, அக்கவலையால் முகம் மாறியிருக்கும் பரதனைக் காணக்காணக் குகன் பெருமை கொள்ளுகிறான். பரதனுடைய புகழ் இராமனுடைய புகழையும் விழுங்கி நிற்றலைக் காண்கிறான் அவ்வேடர் கோமான்.

இதனை அடுத்துக் குகன் பரதனுக்கு இராமன் படுத்த இடம் முதலியவற்றைக் காட்டினான்; இறுதியாகப் பரதனுடைய படை முழுவதையும் அக்கரைக்கு ஏற்றிக்கொண்டு போய் விட்டான்; அனைவரும் சென்ற பிறகு நடுப்படகில் தசரதன் தேவியர் மூவரையும் பரதனுடன் ஏற்றிக்கொண்டு போய்வ்ட்டான். அனைவரும் சென்ற பிறகு நடுப்படகில் தசரதன் தேவிமார் மூவரையும் பரதனுடன் ஏற்றிக்கொண்டு செல்லும் பொழுது கோசலையை யார் என்று பரதனைப்பார்த்துக் குகன் கேட்கிறான். அவள் இன்னாள் என்பதை அறிந்த குகன் அவள் திருவடிகளில் விழ்ந்து கதறுகையிலேதான் அவனைப்பற்றி அப்பெருமாட்டி வினவுகின்றாள். உடனே பரதன் அவளுக்கு விடை கூறுகிறான்

இனிக் கைகேயியைப் பரதன் மிகக் கடுமையான முறையில் அறிமுகம் செய்து வைத்துங்கூடக் குகன் அவளையும் தாய் என நினைத்து வணங்கினானாம்.

கைகேயியை இன்னாள் என்று அறிந்தும் அவளையும் கையால் வணங்கினான் என்பதன் நோக்குகையில் குகன் பரதனுடைய பண்பாட்டினும் ஒரு படி மேற்சென்றுவிடுகிறான். இராமனையே முதலிற்கண்டு, அவனிடமே அன்பு செலுத்திப் பழகியவன் குகன். இராமனுடைய சுற்றத்தாரை இன்று அவன் தன்னுடைய சுற்றத் தாராக மதிக்கிறான் எனில், அதற்கும் இராமனே காரணம். இராமனுடைய தாய் என்பதற்காகவும், அவனுடைய சோதரர் என்பதற்காகவுமே பிறரிடம் அவன் அன்பு பாராட்டுகிறான். இராமனுக்கு வேண்டாதவர் அனைவரும் குகனுக்கும் வேண்டாதவர்களே. அவனுக்குத் தீங்கிழைத்தவர் அனைவரும் குகனுக்கும் தீமை புரிந்தவரேயாவர். பரதனைப் பொறுத்தவரை அவ்வாறன்று. எவ்வளவுதான் இராமனுக்குத் தீமை புரியினும் கைகேயியிடம் பரதன் காட்டும் வணக்கத்தைக் காட்டிலும் மிகுதியாகக் குகன் காட்டுகிறான் எனில், அது குகனுடைய மதிப்பையே மிகுதிப்படுத்திக் காட்டுகிறது. இக்கருத்தையே மனத்துட்கொண்டு போலும் கவிஞன்,

''என்னக் கேட்டுஅவ் விரக்கம் இலாளையும்
தன்னற் கையின் வணங்கினன் தாய்என'' (குகப். 71)

என்று கூறுகிறான்!

பரதன், குகன் என்ற இருவருமே இராமனுடைய தம்பியர். ஒருவன் பிறப்பாலேயே தம்பியாய்ப் பிறந்தான். மற்றவன் பிறவாமலும் தம்பி ஆயினான். இராமனைப் பொறுத்த மட்டில் அவனால் தம்பியாக ஏற்றுக்கொள்ளப்படுவதற்குப் பிறப்பு ஒரு பெருங்காரணமாகவே கருதப்படவில்லை. குகனைத் தம்பி என்று கூறுகிறானே தவிர, 'உடன்பிறவாவிடினும் நீ தம்பிதான்,' என்று கூறவில்லை. இவ்வாறு கூறாதது குகனுடைய பிறப்பைப் பற்றி இராமன் கவலை கொள்ளவில்லை என்பதையே அறிவுறுத்துகிறது. ஒருவன் உடன் பிறந்த தம்பி; மற்றவன் உடன் பிறவாத் தம்பி. எனவே, தம்பியர் என்ற முறையில் இருவரும் ஒன்றுதான்.

இருவரும் இராமனிடத்துப் பேரன்பு பூண்டவர். இருவருடைய அன்பும் மிகவும் ஆழமானது. ஆழ்ந்தும் பரந்தும்

செல்லும் ஆற்று வெள்ளத்தின் இயல்பே இவர்களுடைய அன்பின் இயல்புமாகும். ஆரவாரத்திற்கோ, படபடப்பிற்கோ இங்கு இட மில்லை. ஆற்றுள் இறங்கி மூழ்கிப் பார்த்தால் ஒழிய ஆற்றின் ஆழம் தெரியாதவாறுபோல, இவர்களுடைய அன்பை அனுபவித்துப் பார்த்தால் ஒழிய அதன் சிறப்பை உணர முடியாது. இவர்களுடைய அன்பில் தன்னலமோ, அகங்காரமோ எதுவும் இல்லை. இலக்குவனும் இராமனிடம் அன்பு கொண்டுள்ளான் எனினும், அதில் ஆணவத்தின் நிழலைச் சில சந்தருப்பங் களிலேனும் காணலாம். ஆனால், குகன், பரதன் என்ற இருவருடைய அன்பில் ஆணவத்திற்குச் சிறிதும் இடம் இல்லை. எவ்விதக் கலப்பும் இல்லாத தூய அன்பைக் காண வேண்டுமாயின், இவர்கள் இராமன் மாட்டுக் கொண்ட அன்பைத்தான் காண வேண்டும்.

நாம் காணும் முதல் சந்திப்பிலேயே குகன் பண்பாட்டின் முடியாகக் காட்சி நல்குகிறான். பரதன் இளமைதொட்டுப் பெறும் வளர்ச்சியை அடுத்துக் காண்போம்.

# 8. பரதன்

## 8.1 'பரதன் எனும் பெயரான்'

'இராமாயணக் காப்பியத்தின் தலைவன் இராமன் தான் என்றால், இதில் என்ன புதுமை இருக்கிறது?' என்று பலர் நினைக்கக் கூடும். அக்காப்பியத்தில் வரும் வேறு எந்தப் பாத்திரமும் இராமனளவு நம் மனத்தைக் கவரவில்லை என்பதும் உண்மையே. நம்மைப்போல மனிதனாய்ப் பிறந்த ஒருவன் பண்பாட்டால் உயர்ந்து உயர்ந்து கடவுள் தன்மையை எய்திவிடுகிறான். கம்ப நாடனுடைய சித்திரம் ஏறத்தாழ இந்த நிலையிலேதான் இருக்கிறது. எனவே, இராமனை ஒத்த மற்றொரு பாத்திரத்தை அப்பெருநூலில் காண்டல் அரிது.

என்றாலும், இராமனுடன் பெரும்போட்டி இட்டு அவன் பெறும் இடத்தையும் பெற்றுவிட்டான் என்று கூறக்கூடிய மற்றொரு பாத்திரத்தையும் கம்ப நாடன் படைத்துள்ளான். இன்னுங் கூறப் போனால், இராமனிலும் மேம்பட்டவன் என்று பலராலும் பாராட்டப்பட்ட பெருமையை உடையவன் இராமாயண முழுவதிலும் ஒருவனே உளன். இராமனுடைய செயல்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாக எடுத்து அலசிப் பார்த்தால், அச்செயல் ஒவ்வொன்றிலும் அவனுடைய பண்பாடும் கருணையும் வெளிப்படக் காணலாம். ஆனால், அவனுடைய சில செயல்களின் உட்கருத்தை நம் போன்றார் அறிய முடியவில்லை. மானாய் வந்தது உண்மையில் பொன்மான் அன்று என்பதை அறிந்திருந்தும், சீதையின் வேண்டுகோட்காக இராமன் அதன் பின்னே சென்ற செயலையும், சூர்ப்பநகை இராவணனுடைய தங்கை என்பதை அறிந்திருந்தும் அவளை ஓட்டிவிடாமல் அவளுடன் விளையாட்டாகப் பேசி அவளுடைய நம்பிக்கையை வளர்த்த செயலையும், வாலியை மறைந்து நின்று கொன்ற

செயலையும் நம் போன்றார் எளிதில் அறியக்கூடவில்லை. பெரியோர்கள் இவற்றிற்கெல்லாம் தக்க முறையில் சமாதானம் கூற முயன்றும், பலர் சமாதானம் அடைய மறுக்கின்றனர். இவை மனிதச் செயலுக்கு அப்பாற்பட்டவை என்று கூறினால் ஒழிய, இவற்றிற்குத் தக்க விடை கூற முடியும் எனத் தோன்றவில்லை.

இத்தகைய ஐயத்திற்கிடமான செயல் ஒன்றையுஞ் செய்யாத ஒரு பாத்திரத்தைப் படைக்க முயன்று படைத்தும் விட்டான் கவிஞன். அப்பழுக்கு அற்றவனும், மனிதப் பண்பாட்டின் முடியாய் விளங்குபவனும், பகைவனும் குறைகூற முடியாத பண்பாடுடையவனும் ஆகிய ஒரு பாத்திரத்தைப் படைத்துவிட்டான் கவிஞன். கவிதை உலகின் ஒப்பற்ற படைப்பாவான் பரதன். 'ஆற்றல்சால் கோசலை' என்று புகழப்படும் முதல் தேவி கோசலையும் புகழ்கிறாள் பரதனை! காப்பியத் தலைவனாகிய இராமனே வாயாரப் புகழ்கிறான் அச்செம்மலை! கல்வி வாசனையற்ற குகனும் புகழ்கிறான் அத்தோன்றலை! கல்விக் கடலின் கரைகண்ட சொல்லின் செல்வனாம் அனுமனும் புகழ்கிறான் அவ்வள்ளலை! அவையோர் புகழ்கின்றனர்! இம்மட்டோ! பரதனை ஆதிமுதல் தவறாகவே உணர்ந்திருந்த இலக்குவனும் இறுதியில் தன் பிழைக்கு இரங்கிப் புகழ்கிறான் அவ்வருமைத் தம்பியை!

இவ்வாறு அனைவராலும் ஒருசேரப் புகழ்மாலை சூட்டப் பெறும் பேறு அப்பெருங்காப்பியத்தில் வேறு ஒருவருக்குமே இல்லை என்று துணிந்து கூறலாம். கோபத்தால் கட்டுண்ட தசரதனும் இலக்குவனும் பரதனைக்கூட ஓரளவு இழித்துப் பேசுகின்றனர் என்பது மெய்ம்மைதான். ஆனால், அவர்களுடைய கோபம் கைகேயிமேல் சென்றது உண்மை. கைகேயி பெற்ற மகன் என்ற காரணத்தால், பரதன் மேலும் அச்சினம் தொடர்ந்தது. பரதன் எவ்வாற்றானும் குற்றமற்றவன் என்பதை பிறகு நன்கு அறிந்து கொண்டான் இலக்குவன். ஆனால், தசரதன் அந்த வாய்ப்பைப் பெறாமலே உயிர் துறந்துவிட்டான். இன்னுங் கூறப் போனால், ஆதி முதலே பரதனை நன்கு புரிந்துகொள்ளும் ஆற்றல் இல்லை தசரதனுக்கு. இராமனுடைய முடிக்குப் பங்காளியாய்ப் பிறந்துவிட்டான் என்ற வெறுப்பாற் போலும் தசரதன் பரதனை நன்கு புரிந்துகொள்ளவே இல்லை; புரிந்துகொள்ளவும் மறுக்கிறான். பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்பாமலே தசரதன் இராமனுக்கு முடிசூட்ட முனைந்

திருப்பின், இராமாயணக் கதை வேறு விதமாக முடிந் திருக்கலாம். ஆனால், அம்மன்னர் பிரான் செய்த முதல் தவறே இராமகாதைக்கு அடி கோலிவிட்டது.

இத்துணைப் பெருமைக்கும் உறைவிடமான அப்பரதன் என்னும் படைப்பைக் கவிஞன் ஆக்கி உள்ளமையைச் சற்று விரிவாகக் காண்டல் வேண்டும்.

முனிவன் கண்ட பரதன்

கோசலை இராமனைப் பெற்ற பிறகே கைகேயி பரதனைப் பெற்றாள். அப்பெருமகன் தோன்றினான் என்று கூறவந்த கவிஞன், 'மற்றை ஒளியைப் பரதன் எனப் பெயர் பன்னினன் அன்றே,' (திருவவ. 120) என்று கூறுகின்றான். இராமன் பிறந்த பிறகு தோன்றிய சோதி மயமான இக்குழந்தையை வசிட்ட முனிவன் பரதன் என்று பெயரிட்டானாம். உலகில் உண்டான இருளையெல்லாம் போக்கும் ஒளி, தான் பற்றி நிற்கும் திரியைக் கருமையுடையதாகவே வைத்துளதன்றோ? அதே போல, உலகின் புற இருளையும் அஞ்ஞானமாகிய அகவிருளையும் ஒருசேர ஓட்டிய பரதன் என்னும் பேரொளி தோன்றிற்று என்றான் கவிஞன். எத்துணைப் பொருத்தம்! திரி கருமை உடையதுதான்! ஆனால், திரியைப் பற்றி நிற்கும் ஒளி இருள் போக்குகிறது. பரதனும் கருமை நிறம் உடையவன்தான்; ஆனால், அவனைப் பற்றி நின்ற பண்பாடு, சால்பு என்பவை உலகிருளை ஒருசேர ஓட்டிவிட்டன. இதனை மனத்துட்கொண்டுதான் போலும் 'மற்றைய ஒளி' என்கிறான் கவிஞன்!

ஆதியிலிருந்தே இராமனுடன் இலக்குவனும் பரதனுடன் சத்துருக்கினனும் இணை பிரியாதிருந்து விட்டனர். அரச குமாரர் அனைவரும் ஒரே ஆசிரியனிடத்துக் கற்றனராகலின், பிற்காலத்தில் இவர்களின் வாழ்க்கையில் காணப்பெறும் தனிப் பண்பாடுகள் இயற்கையாய் அமைந்தவைகளே என்று கருதுவதில் தவறு இல்லை.

விருப்பு வெறுப்புக்களால் கட்டுண்ணாத விசுவாமித்திர முனிவன் சனகனிடம் பேசுகிறான். இராமனும் இலக்குவனும் உடன் இருக்கின்றனர். இராமனுடைய பெருமையைக் கூறிய முனிவன், எதிரே இல்லாமல் அயோத்தியில் வாழும் பரதனைப் பற்றிப் பேசு கிறான் சனகனிடத்தில். இராமனை ஒத்த நிறமுடைய ஒரு தம்பி

யும் உண்டு ஊரில் என்று கூறிப் போயிருக்கலாம் அம்முனிவன். ஆனால், பரதனைப் பற்றி நினைத்தவுடனே விசுவாமித்திரன் மனம் குளிர்ந்துவிடுகிறது. ஆம்! பரதன் என்ற சொல்லும் 'அறம்' என்ற சொல்லும் ஒரே பொருளுடையன என்கிறான் தவத்தால் மேம்பட்ட அம்முனிவன்! 'அறிந்தவர்களும் விளக்க முடியாத சிறந்த நீதிகள் என்னும் ஆறுகள் வந்து மண்டும் கடல்போன்றவனும், பரதன் என்னும் பெயருடையவனும், இவ்விராமனை நிறத்தால் ஒத்தவனுமாகிய ஒருவனைக் கைகேயி பெற்றெடுத்தாள்,' என்று சனகனுக்கு அறிமுகம் செய்து வைக்கிறான்.

"தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளம்எனும் தகையானைப் பரதன்எனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலும் நிறத்தாலும் இவ்விருந்த
வள்ளலையே அனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்"
(குலமுறை. 21)

பரதனைப் பற்றி நினைந்தவுடன் அம்முனிவனுக்கு நீதியாறுகள் வந்து புகும் கடலேதான் உவமையாக எதிரே நிற்கின்றது. பரதனை அவன் 'அறக்கடல்' என்றுதான் கூறுகிறான். விருப்பு வெறுப்பற்ற முனிவனாலும் இவ்வாறு புகழப்படும் வாய்ப்பு வேறு யாருக்குத்தான் கிடைக்கும்!

**தசரதன் கண்ட பரதன்**

இத்துணைச் சிறப்பு வாய்ந்த பரதனைப்பற்றி இராமகாதையில் பிறபாத்திரங்கள் என்ன கூறுகின்றன என்று காண்பது பயனுடைய செயலாகும். முதலாவது பேச உரிமையுள்ளவன் தசரதனேயாவான். அவன் ஒருதலைப் பக்கமான விருப்பமுடையவனாகலின், அவனுடைய சொற்களைக் கொண்டு பரதனைப் பற்றிய முடிவு கொள்ளல் ஆகாது என்பதை மனத்தில் இருத்திக் கொண்டு, அவன் சொற்களைக் காண்டல் வேண்டும். கைகேயியிடம் பேசும் மன்னவன் முதலில் மகிழ்ச்சியோடும் பின்னர்த் துயரத்தோடும் பேசுகிறான். எனவே, முதலில் இராமனை 'உன் மைந்தன்' (கை. சூழ். 7) என்று குறிப்பிடுகிறான்; அடுத்துக் கோபம் வந்த நிலையில் அவனை 'என் மகன்' (கை. சூழ். 32) என்றும் பேசுகிறான். இவ்வாறு பேசும் அம்மன்னன் மறந்தும் பரதனை 'என் மகன்' என்றோ, 'நம் மகன்' என்றோ கூறாதது வியப்பே! கைகேயி விருப்பப்படியே தான் அரசை அளித்தாலும் பரதன் ஏற்றுக் கொள்ள மாட்டான் என்று மட்டும் கூற அவனுக்கு எவ்வாறு

எண்ணம் வந்ததோ, தெரியவில்லை! ''கொள்ளான் நின்சேய் இவ் வரசு'' (கை. சூழ். 26) என்று கூறும் பொழுது பரதனைப் பற்றி இயல்பாகவே ஒருநல்ல எண்ணம் அவன் மனத்தில் இருந்ததை அறிய முடிகிறது. என்றாலும், பரதனைக் குறிப்பிடும் இடத்தில் 'நின்சேய்' என்றது அவன் பரதன்மேற்கொண்ட அன்பு எத்தகையது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு!

கைகேயி அவன் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்க மறுத்துவிட்டுத் தான் வேண்டிய வரங்களைக் கொடுத்தே தீரவேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறாள். தப்ப வேறு வழியே இல்லை என்பதைக் கண்ட மன்னன், மிகவும் ஆத்திரத்துடன், வரங்களில் ஒன்றைத் தருவதாகக் கூறுகிறான்; ஒரே பாடலில் பரதனையும் இராமனையும் குறிக்கிறான். ஆனால், எவ்வளவு வேற்றுமை!

''நின்மகன் ஆள்வான் நீஇனிது ஆள்வாய் நிலம்எல்லாம்
உன்வயம் ஆமே ஆளுதி தந்தேன் உரைகுன்றேன்
என்மகன் என்கண் என்உயிர் எல்லா உயிர்கட்கும்
நன்மகன் இந்த நாடுஇற வாமை நய!' என்றான்.''
(கை. சூழ். 32)

பரதனைக் குறிக்கும் பொழுது 'நின்மகன்' என்றும், இராமனைக் குறிக்கும் பொழுது 'என் மகன்' என்றும் கூறுகிற தந்தையிடம் பரதனைப் பற்றிய செம்மையான கருத்துக்களை எவ்வாறு எதிர் பார்க்க முடியும்? இதனையடுத்து அவன் பரதனைத் தன் மகன் அல்லன் என்றும் தனக்கு இறுதிக்கடனை அவன் செய்யக்கூடாது என்றும் கூறிவிடுகிறான்.

''மன்னே ஆவான் வரும்அப் பரதன் தனையும் மகன்என்று
உன்னேன் முனிவா!'' (நகர். 50)

எனப் பரதன்மேல் இவ்வளவு சினங்கொள்ளத் தசரதனுக்கு நியாயமே இல்லைஎன்பதை நாம் அறிவோம். ஆகலின், இது பற்றிக் கவலை இல்லை. என்றாலும், இத்துணைச் சினத்திலும் பரதனைத் தீயவன் என்று தசரதன் கூறத் துணியவில்லை என்பதை மட்டும் அறிதல் வேண்டும்.

### இலக்குவன் கண்ட பரதன்

இராமனும் இலக்குவனும் பருந்தும் நிழலும் போல இணை பிரியாது இருப்பவர்கள். எனவே, பரதனைப் பற்றி அறிந்து கொள்ள இராமனுக்கு எத்துணை வாய்ப்பு இருந்திருக்குமோ, அத்துணை வாய்ப்பு இலக்குவனுக்கும் இருந்திருக்கும் அல்லவா?

என்றாலும், பரதனைப் பற்றி இராமன் அறிந்திருந்த அளவு இலக்குவன் அறியவில்லை என்பது மட்டுமன்றி, அவன் தவறாகவும் அறிந்திருந்தான். ஆழ்ந்து நோக்கின், இதன் காரணமும் விளங்காமற் போகாது. இராமனிடத்து ஈடுபட்ட இலக்குவன், தன்னைப் பற்றியும் தன்னுடைய இராமபத்தி பற்றியும் மிகுதியாகவே நினைத்துக்கொண்டான்; அதன் பயனாக ஒரு முடிபுக்கும் வந்துவிட்டான்; உண்மையில் இராமனிடம் ஈடுபட்டவர் எவராயினும் தன்னைப் போல இராமனைப் பிரியாமல் இருத்தல் வேண்டும் என்ற முடிபுக்கு வந்து விட்டான்; அவ்வாறு இல்லாத பரதனுடைய இராமபத்தி மட்டமானது என்று கருதினான் போலும்! இந்த எண்ணம் உறுதிப்படத்தக்க முறையில் விளைவுகளும் விளைந்துவிட்டன. இராமனுக்குரிய பட்டத்தைப் பரதனுக்குப் பெற்றுக்கொண்டாள் கைகேயி என்று இலக்குவன் கேள்விப்படுகிறான். இதில் குற்றவாளி யார் என்று அவன் நடுவு நிலையுடன் ஆய்ந்திருத்தல் வேண்டும். அவ்வாறு பொறுமையுடன் ஆயாததற்குக் காரணம், அவன் இராமன் மாட்டுக் கொண்ட அன்பேயாகும். அவனால் வழிபடப்படும் இராமனுக்குரிய முடி இன்று அபகரிக்கப்பட்டுவிட்டது. 'யார் அபகரித்தார்? ஏன் அபகரித்தார்?' என்பவைபற்றி அவனுக்குக் கவலை இல்லை. 'அபகரித்தலாகிய நிகழ்ச்சி நடைபெற யார் யார் காரணர்? 'கைகேயி, தசரதன், பரதன் என்ற மூவருமே' என அவன் நினைக்கிறான். அவனுடைய ஆத்திரத்தில் பரதன் அயோத்தியில் இல்லை என்பதும், அவன் இந்த நிகழ்ச்சியில் பங்கு கொண்டிருக்க இயலாது என்பதும் அறிவில் படவில்லை. போர் முழக்கம் செய்துகொண்டு புறப்பட்டுவிட்டான். ஏன் தெரியுமா? இராமன் இழந்த முடியை அவனுக்கு மீட்டுத் தரவாம். சினங்கொண்ட இலக்குவன் என்ன என்ன பேசுகிறான், நாவில் நரம்பின்றி ஏசுகிறான் அனைவரையும்!

இராமனுக்குரிய அரசைப் பரதனுக்குத் தருவது சிங்கக் குட்டிக்கு என்று வைத்திருக்கும் இனிய சுவையுடைய ஊனை நாய்க்குட்டிக்கு இடுவது போன்றதாம். இக் கருத்துப்பட இலக்குவன் இதோ பேசுகிறான்.

> "சிங்கக் குருளைக்குஇடும் தீஞ்சுவை ஊனை நாயின்.
> வெங்கண் சிறுகுட்டனை ஊட்ட விரும்பி னாளா!"
>
> (நகர்.117)

இப்பாடலில் பரதனை 'நாய்க்குட்டி' என்று, இலக்குவன் எள்ளிப் பேசுவதைக் காணலாம். இலக்குவனைப் பொறுத்தவரை

இராமன், பரதன் ஆகிய இருவருமே மூத்தவர்தாம், என்றாலும் இராமனுக்குரிய அரசைக் கைகேயி பரதனுக்குப் பெற்று விட்டாள் என்று அறிந்தவுடன் இலக்குவன் சீற்றத்தால் இவ்வாறு பேசிவிட்டான். இராமனுடைய முடியைக் கவர்தற்குச் செய்யப் பட்ட சூழ்ச்சியில் பரதன் நேரடியாகப் பங்கு கொண்டுள்ளானா என்பதை அறியாதிருக்கையிற்கூட இலக்குவன் பரதனை 'நாய்க் குட்டி' என்று ஏசிவிட்டான்! ஆனால், இதே நேரத்தில் முடியை இழந்து நிற்கும் இராமன் பரதனைப் பற்றி இதோ பேசுகிறான். இலக்குவன் சீற்றத்தை அடக்கும் முறையில் இராமன்; 'ஐயனே, மயக்கம் இல்லாத சன்மார்க்கத்தில் வாழும் தம்பியாகிய பரதனைப் போரில் தொலைத்தா உன் சீற்றம் அடங்க வேண்டும்?' என்ற கருத்தில் கூறுகிறான்.

"ஆன்றான் பகர்வான் பினும்,'ஐய! இவ்வையம் மையல்
தோன்றா நெறிவாழ் துணைத்தம் பியைப்போர்
தொலைத்தோ?'' (நகர். 139)

குற்றமற்ற வழியில் (சன்மார்க்கத்தில்) வாழும் பரதன் என்று மட்டும் கூறாமல் இராகவன் 'துணைத்தம்பி' என்றும் கூறியது அறிந்து மகிழற்குரியது. இவ்வொரு சொல்லால் இலக்குவன் கொண்டுள்ள அகந்தைக்கு இராமன் நல்ல சாட்டையடி தருகிறான். இராமனிடத்து அன்பு செய்பவர்கள் தன்னைப் போலவே செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாதவர் அனைவரும் இராமனுக்குப் பகைவர்கள் என்பதே இலக்குவன் கருத்துப் போலும்.

ஒருவனிடம் காட்டும் அன்பு பலவகையில் காட்டப்படலாம். பெரிதும் படாடோபத்துடனும் ஆரவாரத்துடனும் தம்முடைய அன்பை வெளியிடுபவர் சிலர்; சிலர் வாய் பேசாமலே தம்முடைய முழு அன்பையும் செலுத்துவர். இவ்விரு வகையினரும் ஒருவரை ஒருவர் அன்பிலார் என்று குறை கூறுவது எவ்வளவு தவறானது! இலக்குவன் இராமனிடம் கொண்ட அன்பு முதல் வகையைச் சார்ந்தது. ஆடம்பரத்துடன் ஓரளவு தன்மதிப்பும் கொண்ட அன்பாகும் அது. என்வே, பரதனது ஆழ்ந்த அன்பை இலக்குவன் அறிந்து கொள்ளக் கூடவில்லை. பரதன் இராமனிடம் கொண்ட அன்பு பெரிய ஆற்றில் ஓடும் நீர் போன்றது. அதில் ஆரவாரமோ, சந்தடியோ இல்லை. ஆற்றின் ஆழத்தை இறங்கிப் பார்த்தால் ஒழியக் காண முடியாதது போலப் பரதனுடைய அன்பின் ஆழத்தை அறிந்து கொள்வதும் கடினம். இராமனுடனேயே

நிழல் போலப் பரதன் இல்லாவிடினும், அவனும் அன்பு செலுத்தினான்; இலக்குவனைவிட அதிகமாகக்கூட அன்பு செலுத்தினான்; 'மில்டன்' என்ற கவிஞர் பெருமான் தன் கண் ஒளியை இழந்து பாடிய கவிதை ஒன்றில் கூறும் அடிகள் நினைவிற்கு வருகின்றன.

'ஆயிரம் ஆயிரம் பேர்கள் கூடி
அவனுடை ஆணை சிரமேற் கொண்டு
கடல்நிலம் காடுகள் கடந்தும் கதுமென
அவனுடை ஆணை வழிநின்று ஒழுகுவர்;
இருந்த இடத்தில் நின்றும் கிடந்தும்
சலியாது இருப்பவர் தாமும் அவனுடைக்
குற்றே வல்தனைக் கொள்பவர் அலரோ?'[1]

[அவன்-இறைவன், சலியாது-அசையாமல்]

பரதனுடைய இராமபத்தி இலக்குவன் பத்தியைவிடக் குறைந்ததன்று என்பதை இலக்குவன் அறியாவிடினும், இராமன் நன்கு அறிந்திருந்தானாகலின், சமயம் வந்த பொழுது இலக்குவன் மனம் நோவாதபடி அதனை எடுத்துக் காட்டிவிட்டான். 'துணைத்தம்பி' என்ற அந்தச் சொற்றொடரிலேதான் எவ்வளவு பொருளாழம் அமையுமாறு கூறிவிட்டான் அப்பெருமகன்!

இவ்வாறு இராமன் கூறியும் இலக்குவன் மனந்திரும்பியதாகத் தெரியவில்லை. இராமன் தடுத்து நிறுத்தியதால் அவன் கைகேயிமேல் போர் தொடுக்காமல் அடங்கி விட்டானேதவிரப் பரதன்மேற்கொண்ட தவறான எண்ணத்தை மாற்றிக்கொள்ளவில்லை.

சித்திரகூட மலையை அடுத்த ஓர் இடத்தில் இலக்குவன் கையால் அமைத்த பன்னசாலையில் இராமனும் சீதையும் இலக்குவனும் தங்கி வாழ்கின்றனர். கேகய நாட்டிலிருந்து அயோத்தி மீண்ட பரதன், 'மன்னனைக் (இராமனை) கொணர்வான்' தன் பெரும்படையுடனும் அருமைத் தாயருடனும், குகனுடனும் வருகிறான். பெரும்படை உடன் வருதலால் கடல் எழுந்து வருவது போல உள்ள அக்காட்சியை எப்பொழுதும் காவல் புரிபவனாகிய சுமித்திரை சிங்கம் கண்டுவிட்டான்.

---

1. Is Kingly: thousands at His bidding speed
And post o'er land and ocean without rest.
They also serve who only stand and wait.
—Sonnet 'On His Blindness' by J. Milton

அறிவிலும் வீரத்திலும் ஒப்புயர்வற்றவனாகிய இலக்குவன், மீட்டும் ஒருமுறை தவறு செய்கிறான்; 'பரதன் தான் நிலத்தைத் தனக்கே ஆக்கிக்கொள்ளும் எண்ணத்தால் இப்பெரும்படையுடன் இராகவனை எதிர்க்க வந்துள்ளான். இது உறுதி,' என்று கூறிக் கொள்கிறான். 'பரதன் இப்படைகொடு பார் கொண்டு ஆள்மறங், கருதி ........ வந்தான், இது சரதம்' (திருவடி. 27) என்று அவன் ஒரு முடிபுக்கு வந்து விட்டான்; ஐயப்படக்கூட இல்லை; ஒரே ஓட்டமாக ஓடி இராமனிடம் 'மதித்திலன் பரதன் நின்மேல் வந்தான்,' (ஷை.28) என்று கூறிவிட்டுப் போருக்குத் தயாராகி விட்டான்; 'நான் எவ்வாறாயினும் பரதனையும் அவன் படை களையும் வென்றுவிடப்போகிறேன்,' என்கின்றான். இராமன் பாடு மிகவும் தருமசங்கடமாகி விடுகிறது. எனவே, அவன் இலக்குவனை உயர்த்திப் பேசத் தொடங்குகிறான்.

"இலக்குவ! உலகம்ஓர் ஏழும் ஏழும்நீ
'கலக்குவன்' என்பது கருதி னால்அது
விலக்குவது அரிது;அது விளம்பல் வேண்டுமோ?
புலக்குஉரித்து ஒருபொருள் புகலக் கேட்டியால்."
(திருவடி. 42)

[புலக்கு உரித்து ஒரு பொருள்—அறிவுக்கு ஏற்றதொரு செய்தியை]

"நம்குலத்து உதித்தவர் நவையுள் நீங்கினார்
எங்குஉலப்பு உறுவர்கள் எண்ணின் யாவரே
தம்குலத்து ஒருவுஅரு தருமம் நீங்கினார்?" (ஷை. 43)

இவ்வாறு மிக அழகான முறையில் இராமனுடைய வாதம் தொடங்குகிறது. 'இலக்குவ, நம் குலத்து உதித்த மன்னருள் யாரேனும் அறம் பிறழ்ந்ததுண்டா?' என்ற முகவுரை ஆய்தற் குரியது. பிறழ்ந்தார்கள் என்று இலக்குவன் விடை கூறினால் அவனும் அதில் அகப்பட்டுக்கொள்வான். ஒருவரும் பிறழ்ந்த தில்லை என்று கூறினால், 'பரதன் மட்டும் எவ்வாறு பிறழமுடியும்?' என்ற வினாத் தோன்றும். எனவே, இலக்குவன் விடை ஒன்றும் கூறாமல் நிற்கிறான்.

இப்பொழுது கோசல நாடுடை வள்ளல் ஆணித்தரமாகப் பரதனைப் பற்றிய தன் கருத்தைக் கூறுகிறான். 'வேதங்களும் நல் லொழுக்கத்திற்கு மேற்கோள் காட்டவேண்டுமாயின்' பரதனுடைய செய்கையையே எடுத்துக்காட்டும். நீ நினைக்கும் அவ்வளவு

அற்பத்தனமான செயலைப் பரதன் நினைக்கவும் மாட்டான். ஆனால், என்மேற்கொண்ட அன்பு காரணமாக அதனை நீ அறிய முடியவில்லை,' என்னுங் கருத்துப்படப் பேசுகிறான்.

''எனைத்துஉள மறைஅவை இயம்பற் பாலன
பனைத்திரள் கரகரிப் பரதன் செய்கையே
அனைத்திறம் அல்லன வல்ல வன்அது
நினைத்திலை என்வயின் நேய நெஞ்சினால்.''

(திருவடி. 44)

'உலகம் முழுவதற்கும் நீதி புகட்ட வந்த வேதங்களும் நல்லொழுக் கத்திற்கு மேற்கோள் காட்டப் பரதனுடைய செயல்களையே காட்டும் எனில், பரதனுடைய பண்பாட்டிற்கு இதனினும் சான்று வேண்டுமா?'

பரதன் வருவதன் கருத்தை இலக்குவன் இன்னும் புரிந்து கொள்ளாவிடினும் இராமன் நன்கு அறிந்துகொண்டான். தம்பிக் கும் இதோ எடுத்துக் கூறுகிறான்.

''பெருமகன் என்வயின் பிறந்த காதலின்
வரும்என நினைகையும் மண்ணை என்வயின்
தரும்என நினைகையும் தவிரத் தானையால்
பொரும்என நினைகையும் புலமைப் பாலதோ?''

(ஷெ- 45)

'பரதன் இவண் வருகிறான் என்றால், என்பாற் கொண்ட காதலாலும், அரசை மீட்டும் எனக்குத் தரவேண்டும் என்ற நினைவாலும் ஆகுமே தவிர, வேறு காரணம் இருத்தல் கூடும் என்று நினைப்பதும் அறிவுடைமை ஆகுமோ?'

இவ்வாறு பரதனைப் பற்றியும் அவன் எதற்காக வருகிறான் என்பது பற்றியும் நினைக்க நினைக்க இராமனுக்குக் கருணை ஊற்றெடுக்கின்றது பரதன் மேல். உடனே அவன் பண்பாட்டைத் தொகுத்தும், தான் அவனைப் பற்றி என்ன நினைந்துள்ளான் என்பதையும் இதோ கூறுகிறான்: 'மிகச் சிறந்த அறக் கடவுளின் வடிவு கொண்டவனாய பரதனை—நேர்மை என்னும் தேருக்குக் கடையாணி போன்றவனை—அவ்வாறு நினைக்கலாமா? அவன் செய்கையை நீயே காணப் போகிறாய்!' என்ற பொருளில் கூறுகிறான்.

''சேண்உயர் தருமத்தின் தேஸவச் செம்மையின்
ஆணியை அன்னது நினைக்க லாகுமோ?
பூண்இயல் மொய்ம்பினாய்! போந்தது ஈண்டுஎனைக்
காணிய, நீஇது பின்னும் காண்டியால்.'' (திருவடி. 47)

பரதனை 'அறவடிவினன்' என்று கூறுகிறான் அறத்தின் நிலைய மான இராமன் எனில், அதனை மறுப்பார் யாருளர்? அம்மட்டோடு நிற்கவில்லை இராமன் சூட்டும் புகழ் மாலை. நேர்மையின் உரையாணியாம் பரதன். பொன்னின் மாற்று எத்தனை என்பதை அறிய வேண்டுமாயின், மக்கள் யாது செய் கின்றார்கள்? உரைகல்லில் உரைத்துப் பார்க்கின்றார்கள் அல்லவா? அதே போல, எது நேர்மையானது என்று யாருக்காவது ஐயம் வந்துவிட்டால், என் செய்வது? பல சந்தருப்பங்களில் இரண்டு வழிகள் காணப்படுவதுண்டு. உலக வாழ்க்கையில் இது சாதாரண அனுபவம். இரண்டில் எது நியாயமானது என்று ஆராயத் தோன்றுகிறது. 'நேர்மை வழி எது?' என்று ஐயுறத் தோன்றுகிறது. அத்தகைய சந்தருப்பங்களில் 'நேர்மை வழி எது?' என்பதை அறிய முடிவதில்லை. இம்மாதிரி நிலைகளிலேதான் நாம் பெரியவர்கள் கூறிய வழிகளைப் பின்பற்றுகிறோம்; அதுவே நேர்மையானது என்று கூறுகிறோம். எனவே, நல்லவர்கட்கு எது நேர்மை என்ற ஐயுறவு தோன்றுமாயின், பரதன் இம்மாதிரி நிலையில் எவ்வாறு நடந்துகொள்வான் என்பதை ஆய்தல் போது மானது. அதுவே, நேர்மை எனப்படும். 'நேர்மை சரியானது தானா?' என்று அறியத்தக்க உரையாணி போன்றவன் பரதன். இதனைக் குறிக்கவே இராமன் 'செம்மையின் ஆணியை' என்று கூறுகிறான். (ஆணி-உரை ஆணி.)

இவ்வாறு இராமன் இலக்குவனிடம் இளவலாம் பரதனின் இயல்பை இயம்பிக்கொண்டிருக்கையில் பரதன் சேனையை நிறுத்தி விட்டுத் தம்பியுடன் வருகிறான். அவன் வரும் கோலத்தை இராமன் தாமரைக் கண்களால் காண்கிறான். பரதனைப் பார்த்த மாத்திரத்தில் 'துன்பத்தின் வடிவம் இதுதான்!' என்று கூறத்தக்க நிலையில் உள்ளானாம் அப்பெருமகன்.

''தொழுதுஉயர் கையினன் துவண்ட மேனியன்
அழுதுஅழி கண்ணினன் அவலம் ஈதுஎன
எழுதிய படிவம்ஒத்து எய்து வான்தனை
முழுதுணர் சிந்தையான் முடிய நோக்கினான்.''
(திருவடி. 49)

மூத்தவன் என்ற முறையிலும், பரதனுடைய அன்பின் ஆரவார மற்ற அன்பின் ஆழத்தை நன்கு அறிந்தவன் என்ற முறையிலும் இராமன் பரதன் வரும் கோலத்தைக்கண்டான் — கண்ணொடு மனம் பொருந்தக் கண்டான். அவனையும் அறியாமல் இராமன் மனம், இலக்குவன் பரதன் இருவருடைய அன்பையும் ஒப்பிட்டுப் பார்க்கிறது. ஒன்று, காட்டாற்று வெள்ளம் போன்றது, ஏனையது, ஏரி நிறைந்துள்ள நீர் போன்றது. ஒன்று, அடித்துவரும் வேகத்தில் நல்லவை தீயவை என்ற இரண்டையும் அடித்து வருவது; மற்றொன்று, கரை உடைத்துக்கொண்டு வரும் பொழுதும் ஆரவாரம் இல்லாமல் வெளி வருவது. கமலக் கண்ணனுடைய கண்கள் பரதன் வடிவைக் கண்டன. அவன் மனம் பரதன் அகமனத்தைக் கண்டு களிப்புற்றிருக்கிறது. 'செம்மையின் ஆணி யாகிய இந்தப் பரதனைக்கூட இலக்குவன் ஐயுற்றுவிட்டானே!' என்ற எண்ணம் இராமன் மனத்தில் தோன்றியிருத்தல் வேண்டும். தன்னைப் போலவே இலக்குவனும் பரதனை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டான் இராகவன். உடனே தக்க சமயத்தில் இலக்குவனுக்கு அறிவு புகட்ட வேண்டும் என்ற நினைவு வந்தது. இலக்குவனை நோக்கினான்; 'ஆரவாரத் தோடு கூடிய வில்லை ஏந்திய இளையோய்!' என்று விளித்தான் அவனை! 'தேர்ப் படையை மிகுதியும் உடைய பரதன் மிகவும் கோபத்துடன் நம்மேல் படையெடுத்து வரும் முறையை அமைதி யாகவும் நன்றாகவும் பார்,' என்கிறான்.

"கார்ப்பொரு மேனிஅக் கண்ணன் காட்டினான்,
'ஆர்ப்புறு வரிசிலை இளைய ஐய!நீ
தேர்ப்பெருந் தானைஅப் பரதன் சீறிய
போர்ப்பெருங் கோலத்தைப் பொருந்த நோக்கு,' எனா"
(திருவடி. 50)

இராமனுடைய இந்தச் சொல் அம்பு, அஞ்சாத இலக்குவனையும் ஒரு கலக்குக் கலக்கிவிட்டது. வீரரில் வீரனாய அவ்விலக்குவன் அழுதே விட்டான் (51).

இனி மற்றொரு சந்தருப்பத்திலும் பரதனுடைய பெருமையை இலக்குவற்கு அறிவு கொளுத்தும் முறையில் எடுத்துக்காட்டு கிறான் இராமன். அண்ணனுக்கு எதிராகத் துணை தேடும் சுக்கிரீவனைக் கண்டு வெறுக்கிறான் அண்ணனிடம் உயிரையே வைத்திருக்கும் இலக்குவன். தன் வெறுப்பை வாய்விட்டு இராமனிடம் கூறியும் விட்டான். இந்நிலையில் இராமன் கூறு

கிறான். 'ஐய, விலங்கினமாகிய இவர்களுள் இந்த உறவு முறை நியாயத்தை எதிர் பார்க்க வேண்டா பகுத்தறிவுடைய மனிதரிடங் கூட இவ்வொற்றுமை காணவில்லையே!' என்பானாகிப் பரதனைப் பற்றிப் பேசுகிறான்.

''எத்தா யர்வயிற் றினும்பின் பிறந் தார்கள் எல்லாம்
ஒத்தாற் பரதன் பெரிதுஉத்தமன் ஆவது உண்டோ?''
(வாலி.34)

எனவே, பரதன் மேல் இராமன் கொண்ட அன்பு இணையற்றது.

கூப்பிய கையொடு மட்டும் வரவில்லை பரதன். 'அறத்தை மறந்தாய்! மனிதருக்கு மிகவும் தேவையான கருணையையும் மறந்துவிட்டாய்! அரசனுக்கு மிகுதியும் வேண்டப்படுவதாய நீதியையும் நீத்துவிட்டாய்!' என்று இராமனைப் பார்த்துக் கூறிக் கொண்டே வந்தான் அப்பரத வள்ளல். வந்தவன் அவன் திருவடி களில் வீழ்ந்துவிட்டான். 'உண்டுகொல் உயிர்என ஒடுங்கி' (54) இருக்கும் அவனைப் புனல் சொரி கண்களால் கண்டான் புண்டரிகக்கண் புரவலனாம் இராமபிரான். தன்னைப் பிரிந்த பரதன் எவ்வாறு வருந்துவான் என்பதை நன்கு அறிந்துதான் இருந்தான் இராமன். ஆனால், அவ்வளவு அறிந்திருந்த இராமனையும் மருட்டிவிட்ட ஒன்று பரதனிடம் இருந்தது. அதுவே அவனுடைய தவக்கோலம். தன்னை அழைப்பதற்காகவே பரதன் வந்துள்ளான் என்பதை இராமன் அறிவான். ஆனால், இவ்வாறு தவக்கோலம் கொள்ளக் காரணம் யாது? இராமனுக்கும் புரியாத புதிராய் இருந்தது பரதனுடைய இக்கோலம். இவ் வேடத்தைப் பன்முறையும் பார்க்கிறான் இராமன். 'புல்லினன் நின்று அவன் புனைந்த வேடத்தைப் பன்முறை நோக்கினன்' (56) என்றதால், பரதன் கொண்ட இக்கோலம் இராமனும் எதிர் பாராத ஒன்று என்பதை அறிய முடிகிறது. இருவரும் பேசிக் கொள்ளும் பொழுதுதான் தசரதன் இறந்த செய்தியை இராமன் அறிய முடிகிறது. இதன் பின்னரே பன்னசாலையிலிருந்த சீதையைப் பரதன் சென்று காண்கிறான். பல சேடியரும் பணி புரிய அரண்மனை இன்பத்தில் ஆழ்ந்திருக்க வேண்டிய அப் பெருமாட்டி, நடுக்காட்டில் மண் குடிசையில் கற்பே காவலாய் இருக்கும் நிலையைக் கண்ட பரதன் அக்கொடுமையைக் காணச் சகியாதவனாய், ''கைகளின் கண்மலர் புடைத்து'' (83) அவள் திருவடிகளில் வீழ்ந்தழுகிறான். இதன் பின்னர் இராமனை மீட்க வேண்டிப் பரதன் கூறியவைகளைப் பின்னர்க் காண்போம்.

காட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் இதுகாறும் பரதனுடைய உண்மை நிலையைப்பற்றிச் சரியாக அறிந்துகொள்ளாமல் இருந்த இலக்குவன் கண்களை நன்கு, திறந்துவிட்டன. பரதனுடைய இராம பத்தியை வேண்டும் அளவு அறிந்து விட்டான் இளையோன்; தக்க சமயத்தில் இதைப் பயன்படுத்தவும் செய்கிறான்.

## திருந்திய இலக்குவன்

மாயா சீதை ஒருத்தியை உண்டாக்கி அவளை அனுமன் எதிரே வெட்டி வீழ்த்திவிட்டு, 'இதோ அயோத்தி சென்று பரதனையும் ஒழித்துவிடுகிறேன்!' என்று கூறிப் போய்விட்டான் மாயம்வல்ல இந்திரசித்தன். கல்விக் கடலின் கரை கண்டு உணர்ந்த அனுமனும் இவற்றை மெய்யென்று நம்பி இராமனிடம் வந்து அழுது அரற்றி நடந்தவற்றையும் கண்டவற்றையும் கூறினான். சீதையைப் பற்றித் தான் கொண்ட பெருவருத்தம் தணியுமுன்பே பரதன் தவஞ்செய்யும் அயோத்தியை நோக்கி இந்திரசித்தன் சென்றான் என்ற சொற்கள் இராமனை மருட்டி விட்டன. பரதன் மாட்டு இராமன் கொண்ட காதல் மிகப் பெரிய தாகலின், இந்நேரத்தில் பரதனுடைய வன்மையைக்கூட மறந்து விட்டான் இராகவன்; உடனே அயோத்தி நோக்கி விரைவாகச் செல்ல ஏதேனும் வழியுண்டா என்ற ஆராய்ச்சியில் புகுந்து விட்டான். அந்நேரத்திலேதான் இலக்குவனது அறிவு தொழிற் படத் தொடங்குகிறது. பரதன் மாட்டு இலக்குவனும் பேரன்பு கொண்டிருந்தானாயினும், இதனால் பரதனுடைய வன்மையை அவன் மறந்துவிடவில்லை. மேலும், இராமனுக்கு இளையவன் பரதனாகலின், அவனை இன்னும் குழந்தையாகவே கருதுகிறான் இராமன். மேலும், அரசாட்சியை விட்டு நந்திக்கிராமத்தில் தவம் புரியும் பரதன் எவ்வாறு மாயம் வல்ல இந்திரசித்தனை எதிர்த்து நிற்க முடியும்? இராமனுடைய கண் முன்னர்ப் பரதன் குழந்தையாகவே இருக்கிறான்; எனவே, அயோத்திக்கு விரைந்து செல்ல வழி தேடுகிறான். ஒரு காலத்தில் பரதனை வெறுத்துப் பேசிய இலக்குவன், இதோ இப்பொழுது பேசுகிறான். 'ஐயனே, பரதனைப் போரில் வென்று பிணிக்க இவ்விந்திரசித்தனால் இயலாது! பரதன் போர்க்களம் செல்வானாயின், மூவுலகும் தீய்ந்து விடாவோ?' என்ற கருத்தில் பேசுகிறான்.

''அவ்விடத்து இளவல், 'ஐய! பரதனை அமரின் ஆர்க்க
எவ்விடற்கு உரியான் போன இந்திர சித்தே அன்று
தெவ்விடத்து அமையின் மும்மை உலகமும் தீய்ந்து
அறாவோ?'' (மாயா சிதை. 83)

இம்மட்டோடு நிற்கவில்லை இலக்குவன். இந்திரசித்த னுடைய பிரமாத்திரம் என்னும் பாசத்தால் கட்டுண்ட தன்னைப் பரதனுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கூறுகிறான்; 'யான் கட்டுண்டு வீழ்ந்துவிட்டது போலப் பரதனும் வீழ்வானா? ஒருநாளும் அது நடைபெறாது!' எனக் கூறுகிறான்.

''' தீக்கொண்ட வஞ்சன் விசத் திசைமுகன் பாசந் தீண்ட
வீக்கொண்டு வீழ யானோ பரதனும்? வெய்ய கூற்றைக்
கூக்கொண்டு குத்துண்டு அன்னான் குலத்தொடு நிலத்தன்
ஆதல்'' (மாயா. 84)

சென்று காண்பாய்' என்கிறான். பரதன் எப்பொழுது யாருடன் போரிட்டதை இலக்குவன் கண்டான்? பரதன் யாருடனும் போரிட்டதை யாருமே கண்டதில்லை. அவ்வாறு இருக்கப் 'பரதன் பிரமாத்திரத்தாலும் கட்டுண்ணமாட்டான்,' என்று இலக்குவன் கூற ஆதாரம் யாது? தூய வீரனாகிய இலக்குவன், பரதன் போர் புரியாவிட்டாலும் ஆற்றல் மிக்கவன் என்பதை நன்கு அறிந்திருந்தான்; தானும், ஆற்றல் மிக்கவனாய் இருந்தும் தவ வலிமை இன்மையாலும், படபடப்பு உடைமையாலும் பிரமாத்திரத்தின் எதிரே நிற்கமுடியவில்லை என்பதை இப் பொழுது உணர்ந்துவிட்டான். பரதனுக்கும் தன்னையொத்த வலிமையுண்டு. இதனினும் மேலாக, அவனிடம் தவ வலிமையும் சேர்ந்துவிட்டதன்றோ? எனவே, பரதனுடைய வலிமையைக் கணக்கிட்டே அவனை வெல்ல இந்திரசித்தனால் முடியாது எனக் கூறுகிறான் இளையவன்.

இதனையடுத்து இவ்விருவரையும் மீட்சிப் படலத்தில் சந்திக் கிறோம். இராமன் வருதற்கு முன்னர்ப் பரதன் செய்த செயல்கள் பின்னர் ஆயப்படும். அவை அனைத்தும் தீர்ந்து இராமன் வந்தவுடன் பரதன் அவனை வணங்குகிறான்.

''பூவடி பணிந்து வீழ்ந்த பரதனைப் பொருமி விம்மி
நாவிடை உரைப்பது ஒன்றும் உணர்ந்திலன் நின்ற நம்பி
ஆவியும் உடலும் ஒன்றத் தழுவினன் அழுதுசோர்வான்''
(மீட்சி. 345)

இராமன் பரதனது அன்பென்னும் சுழியிலகப்பட்டுப் பேச்சற்றுவிட்டான். உணர்ச்சியின் உச்ச நிலையில் சோதரர் இருவரும் ஆறத் தழுவி நிற்கும் பொழுது பேச்சுக்கு இடமேது? இராமன்—தன் உணர்ச்சிகளை நன்கு அடக்கப் பழகியிருந்த இராமன்—இப்பொழுது தம்பியைத் தழுவி நின்று விட்டான். அவன் கண்ணீர் மட்டும் ஆறாய்ப் பாய்கிறது. ஆம்! இளமையுடைய பரதன் உருவத்திற்கு ஏலாத தவக்கோலம் கொண்டு சடைமுடியைச் சேர்த்துக்கட்டி இருக்கிறானல்லவா! எத்தனை ஆண்டுகளாய் வளர்த்த முடி அது! அது நீரால் நனைத்துத் தூய்மைப்படுத்தப்படாமல் புழுதி படிந்தல்லவா இருக்கிறது! அப்புழுதியை இப்பொழுது இராமன் தன் கண்ணீரால் தூய்மைப் படுத்துகிறான். எத்தனைப் புண்ணிய நதிகளில் ஆடினாலும் தூய்மை அடையாத சடைமுடியை அன்புக் கண்ணீர் தூய்மைப் படுத்துகிறது. இறைவனும் விரும்புவது இந்த அன்புக் கண்ணீரை அன்றோ?

''என்பாவும் ஆறுகடல் ஏழுஇருந்தும் என்அன்னை
அன்பாளர் கண்அருவி ஆடுவது திருவுள்ளம்.''
(பாசவதைப் பரணி. 184)

என்னும் இக்கூற்றை மெய்ப்பிப்பான் போல இராமபிரான் பரதனது சடையைக் கண்ணீரால் தூயதாக்கினானாம்.

''மாசுண்ட சடையின் மாலை கழுவினன்.'' (மீட்சி. 346)

இதுகாறுங் கூறியவற்றால் இராமனும் இலக்குவனும் பரதனைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தையும் அன்பையும் ஒருவாறு கண்டோம்.

**குகன் கண்ட பரதன்**

இனி அடுத்துக் காண வேண்டுவது, 'உடன் பிறவாத சோதரனாகிய குகன், பரதனைப்பற்றி என்ன நினைந்தான்?' என்பதாகும். இப்பகுதி குகனைப்பற்றிப் பேசும் முதற்கட்டுரையில் விரிவாக ஆயப்பட்டிருக்கிறது. என்றாலும், பரதன் குகனிடம் உரையாடிய சில பகுதிகளை ஆழ்ந்து காண்டல் வேண்டும்.

பரதனை நேரே காணுமுன்னர்க் குகன் பரதனைப் பற்றிய மீக இழிவான எண்ணம் கொண்டிருந்தான் என்பது முன்னரே பேசப் பட்டது. ஆனால், தூரத்தே கண்டபொழுதே தன் எண்ணம் எவ்வளவு தவறானது என்பதைக் கண்டுகொண்டான். உடனே அவனது மனம் இராமனது குடிப் பெருமையை நினைக்கிறது.

''எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்றான்.''
(குகப். 30)

இக்கருத்துடன் பரதனிடம் அவன் வரவும் பரதன் அவனை வீழ்ந்து வணங்கவும் குகனும் வீழ்ந்து வணங்கினான். உடனே அவனையும் மீறிப் பரதன் (படையுடன்) வந்திருக்கும் காரணத்தை அறிய விரும்புகிறான். 'ஏன் இவ்வாறு புறப் பட்டாய்?' என்ற குகனது வினாவிற்குப் பரதன் கூறும் விடை ஆய்தற்குரியது.

'''முழுதுஉலகு அளித்த தந்தை முந்தையோர் முறையினின்றும்
வழுவினன்; அதனை நீக்கி மன்னனைக் கொணர்வான்'
என்றான்.'' (ஷி. 33)

பரதனைக் காணு முன்னர் அரசர்களைப் பற்றியே ஒரு கருத்தைக் குகன் வெளியிட்டான் அல்லனோ?

''பாவமும் நின்ற பெரும்பழி யும்பகை நண்போடும்
ஏவமும் என்பவை மண்உலகு ஆள்பவர் எண்ணாரோ?''
(ஷி. 17)

என்று குகன் நினைத்ததற்கும், தன் சுற்றத்தாரை நோக்கிக் கூறியதற்கும் விடை கூறுபவன் போலப் பரதன் பேசியது அறிதற் குரியது. 'தந்தை, முன்னோர்கள் வழியினின்றும் தவறினான்,' என்று அவன் கூறுவதில் எவ்வளவு பொருளாழம் அடங்கியிருக் கிறது! 'முழுது உலகு அளித்த மன்னன்' என்று கூறாமல் 'தந்தை' என்று குறிப்பிட்டது நினைத்து இன்புறற்குரியது. மன்னன் தவறிழைத்தால் அதனை யார் திருத்த முடியும்? மைந்தனாய் இருப்பினும் மன்னன் தவறிழைத்தான் என்று கருதிவிட்டால், திருத்த உரிமையும் வாய்ப்பும் இல்லையாய்விடும். எனவே பரதன் மிகவும் கவனத்துடன் 'தந்தை' என்ற சொல்லையே பயன் படுத்துகிறான். 'வழுவினன்' என்ற சொல்லும் வேண்டுமென்றே பயன்படுத்தப்பெற்றது. 'வழுக்கல்' என்ற சொல்லை நாம் அறிவோம். நடந்து செல்பவன் கவனக் குறைவாக இருக்கையில் கால் வழுக்கி நிலை குலைவதையே 'வழுக்கி விழுந்தான்' என்று கூறுகிறோம். அந்தப் பொருளின் மணம் 'வழுவினன்' என்ற சொல்லிலும் இலங்கக் காண்கிறோம். தந்தை கவனக் குறைவால் அவனையும் மீறி நிகழ்ந்த பிழை என்பான் போல 'வழுவினன்' என்றான் பரதன். இதனைக் கேட்ட குகன் கூறியனவாய் அமைந்த பாடல்கள் பலரும் அறிந்தவைகளே.

''தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து புகழினோய்! தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா!

''என்புகழ் கின்றது ஏழை எயினனேன்! இரவி என்பான்
தன்கதிர்க் கற்றை மற்றை ஒளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபுளோர் பெருமை எல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய் உயர்குணத்து உரவுத்
தோளாய்!'' (குகப். 35, 36)

செம்மையின் ஆணி என்றும் தருமத்தின் வடிவமென்றும் மூத்தவனாய இராமனாற் புகழப்பட்ட பரதன், இராமனின் அடுத்த இளையவனாய குகனால் 'ஆயிரம் இராமர்களும் உனக்கு ஒப்பாவதில்லை,' என்றும்; 'மரபுளோர் பெருமை அனைத்தையும் உனதாக்கிக்கொண்டாய்,' என்றும் புகழப்படுவதில் வியப் பொன்றும் இல்லை அல்லவா?

இதனையடுத்துப் பரதன், இராமன் சென்ற திசையை நோக்கித் தொழுதுகொண்டு, ''எவ்வழி, உறைந்தான் நம்முன்?', (ஷெ. 38) என்று உளப் பாட்டுத் தன்மைப் பன்மையில் கேட்பது அவ்வளவு குறுகிய நேரத்துள் குகனுடைய அன்பின் ஆழத்தைக் கண்டுகொண்டு இராமனைப் போலவே அவனுடன் சோதர உரிமை கொண்டு பேசுகிறான் என்பதை விளக்கி நிற்கிறது. குகன் இராமன் படுத்த இடத்தைக் காட்டியவுடன் பரதவள்ளல், பார் மிசைப் பதைத்து வீழ்ந்து, அம்மண்ணைக் கண்ணீரால் நீராட்டினான். அரண்மனையில் அனைவரும் ஏவல் கேட்ப அரச இன்பத்தில் இருக்கவேண்டிய இராமன், புழுதி படிந்த உடலுடன் காட்டில் வாழ்வதை நேரே கண்டுவிட்டால், அஃது ஆறாத் துயரைத் தரும் காட்சிதான். ஆனால், அவனை நேரே காணாமலும் அவன் இருந்ததாகக் கூறப்பெற்ற இடத்தைப் பிறனொருவன் காட்டக் கண்ட மாத்திரையில் இத்துணை அன்பு பெருக வேண்டுமாயின், இது தலையாய தாயன்பாகவே இருத்தல் வேண்டும். தாயன்பு ஒன்றற்குத்தான் பொருள் இல்லாவிடத்தும் நினைவு தோன்றிய வழி அன்பு பெருகுதல் கூடும். எனவே, குகன் காட்டிய இடத்தைக் கண்ட மாத்திரத்தே பரதனுக்கு இத்துணைத் துயரம் ஊற்றெடுக்க வேண்டுமாயின், அவனுடைய பண்பட்ட மனம், தாயன்பைப்பெறும் அளவிற்குப்பண்பட்டு விட்டது என்றே கொள்ளல் வேண்டும். அவ்வன்பில் ஏற்பட்ட துடிப்பினால்

சொற்கள் வெளி வருகின்றன. 'என்னால் உனக்கு இவ்விடர் வந்ததன்றோ? 'கிழங்கையும் காயையும் அமிழ்துபோல உண்டனை! வலிய புல்லில் துயின்றனை!'' என்றறிந்த போதும் என் உயிர் பிரியவில்லையே! மகுடஞ்சூடும் செல்வத்தை அன்றோ யான் பெற்றுள்ளேன்!' என்னுங் கருத்தில்,

''இயன்றதுஎன் பொருட்டி னால்இவ் விடர்உனக்கு என்ற போழ்தும்'
அயின்றனை கிழங்கும் காயும் அமிழ்துஎன! வலிய புல்லில்
துயின்றனை!' எனவும் ஆவி துறந்திலேன்; சுடரும் காசு
குயின்றுயர் மகுடம் சூடும் செல்வமும் கொள்வன் யானே!''
(குகப். 40)

'என்றே அரற்றுகிறது அவனுடைய தாயன்பு.

இதனையடுத்து இலக்குவன் இருந்த நிலையையும், செய்த தொண்டையும் வினாவி அறிந்தவுடன், 'இராமனுடன் பிறந்தவர்களுள் முடிவிலாத துன்பத்துக்கு ஏதுவானேன் நான்; அவன் அதைப் போக்கின பெருமையுடையான்,' (43) என்று அரற்றுகிறான் பரதன். இலக்குவன் இராமன்மாட்டுக் கொண்ட அன்பையும் தான் கொண்டுள்ள அன்பையும் ஒப்பிட்டுப் பார்க்கிறான், ஆயிரம் இராமர்கட்கு நிகரான பரதன். அவ்வொப்புமையில் தன் அன்பு எங்கோ சென்று மறைந்துவிடுவதாகத் தெரிகிறது அவனுக்கு. தாயர் மூவரையும் படகில் ஏற்றிச் செல்கின்ற குகன் கோசலையை யார் என்று வினவினவுடன் பரதன் பதில் கூறுகிறான்.

'' 'கோக்கள் வைகும்
முற்றத்தான் முதல்தேவி; மூன்றுலகும்
ஈன்றானை முன்ஈன் றானைப்
பெற்றத்தால் பெறும்செல்வம் யான்பிறத்த
லால்துறந்த பெரியாள்,'என் றான்.'' (குகப். 65)

இப்பாடலினால் பரதன் தான் பிறந்ததற்கு எத்துணை வருந்துகிறான் என்பது புலனாகிறது. தான் ஒருவன் பிறந்ததாலல்லவா கைகேயி இவ்வரங்களைக் கேட்டுப் பெருந்தீங்கு நிகழுமாறு செய்துவிட்டாள்? தான் இல்லாத பொழுது நடந்ததாகலின், இப்பெரும்பிழைக்குத் தான் பொறுப்பாளியல்லன் என்று எளிமையாகத் தன் குற்றத்தைப் போக்கிக் கொள்ளலாமேனும், பரதன் அதனைச் செய்யத்துணிய இல்லை. இதுவே அவனிடம் நாம் காணும் பெரியதொரு பண்பாடாம். இனிக் கோசலைக்குக் குகனை அறிமுகம் செய்து வைத்தலிலும் அவன் அன்புள்ளம் வெளியாகிறது.

"இன்துணைவன் இராகவனுக்கு; இலக்குவற்கும்
இளையவற்கும் எனக்கும் மூத்தாள்.'' (குகப். 66

என்று கூறுகிறான். நான்கு பேர்களைக் குறிப்பிட்டுக் கூறவேண்டியிருந்தால், மூவரை முதலிற் கூறிவிட்டு இறுதியில் யானும் என்று கூறும் முறையை ஆங்கிலேயர் நமக்குக் கற்றுக்கொடுத்ததாகப் பலரும் நினைக்கின்றனர். ஆனால், தன் இளையவர்களை முதலிற் குறிப்பிட்டுவிட்டுப் பிறகே தன்னை 'எனக்கும்' என்று குறிப்பிடும் பரதன், பண்பாட்டின் சிகரமாய் விளங்குகிறவன் அல்லனோ?

இத்துணை நற்குணம் உடைய பரதன்கூடக் கைகேயியைக் குகனுக்கு அறிமுகம் செய்து வைக்கையில் கடுஞ்சொற்கள் பேசுகிறான். அவளை இழித்துப் பேசும் பொழுதுகூட அவன் தன்னைத்தான் மிகுதியும் இழித்துக்கொள்கிறான். 'படர்எலாம் படைத்தாளைப் பழிவளர்க்கும் செவிலியை' (70) என்ற அடைமொழிகளே பரதன் கைகேயிக்குத் தந்தவை. திறக்கக்கூடாது என்று கட்டளை இடப்பட்டும் பெட்டியைத் திறந்து துன்பங்களை எல்லாம் உலாவ விட்ட 'பண்டோரா'[1]வைப் போல உலகில் துன்பங்களை எல்லாம் படைத்துவிட்டாளாம் கைகேயி; மாந்தர் அனைவரும் வெறுத்து ஒதுக்க வேண்டிய 'பழியை'ச் செவிலித் தாயாய் இருந்து போற்றி வளர்த்தாளாம். இவை இரண்டு குற்றச்சாட்டுக்களும் முற்றிலும் பொருத்தமானவை கைகேயியைப் பொறுத்தமட்டில் என உணர்கிறோம். இதனை அடுத்த அடிகளில் பரதன் தன்னைத்தானே குறைவாகப் பேசிக்கொண்டு, அத்தகைய தன்னை உலகில் பிறப்பித்தவள் என்கிறான்.

### பரத்துவாசன் கண்ட பரதன்

இராமனை அழைத்து வரக் காடு சென்ற பரதனைப் பரத்துவாச முனிவன் எதிர்கொள்கிறான். முனிவன் என்ற முறையில் அவனுக்குச் செலுத்த வேண்டிய வணக்கத்தைச் செலுத்துகிறான் பரதன். அவனை வாழ்த்திவிட்டு முனிவன், 'இத்தவக்கோலத்துடன் நீ காட்டை அடையக் காரணம் யாது?' (திருவடி.1) என்கிறான். இவ்வினாவைக் கேட்டவுடன் பரதன் சீற்றம் கொள்கிறான். மிக்க கோபத்தையும் மனக்கொதிப்பையும் கொண்ட பரதன், 'ஐயனே, நான் ;இவ்வாறு வந்தது ஏன் என்று நீ வினவியது உன் தவ வடிவத்திற்குப் பொருத்தமில்லாத வினாவாகும்,' (திருவடி. 3) என்கிறான்.

1. Pandora opening the forbidden box and letting out all the evils into the world.

இதே வினாவைத்தான் சற்று முன்னர்க் குகனும் கேட்டான். ஆனால், அதற்குச் சிற்றமில்லாமல் விடை இறுத்த பரதன், பரத்துவாச முனிவனிடம் மட்டும் சிற்றங் கொள்ளக் காரணம் யாது? பரதனுடைய அறிவு நுட்பத்தையே காட்டுகின்றன இச்செயல்கள். குகனுடைய அன்பின் பெருக்கை அறியத்தான் பரதனுக்கு வாய்ப்பு இருந்தது; ஆனால், அவனுடைய அறிவின் திறம் எத்தகையதோ என மருண்டான். மேலும், வேடனாகிய குகன் அறிவாற்றல் படைத்திருக்க முடியாது என்றுங் கருதி யிருத்தல் கூடும். எனவே, குகன் கேள்வியில் பரதன் தவறு காணவில்லை. அன்றியும், இராமன் மாட்டுக்கொண்ட பேரன்பில் இருவரும் (பரதனும் குகனும்) ஒன்றாகவே திளைப்பவராகலின் குகனது வினாவைப் பரதன் வேறுவிதமாகக் கருதவில்லை. இம் மட்டோடும் அன்றி, குகன் கேட்ட வினாவையும் பரத்துவாசன் வினாவையும் ஒப்பு நோக்குகையில் ஒரு வேறுபாடும் காணப் படுகிறது. 'எய்தியது என்னை?' (குகப். 33) என்று மட்டுந்தான் குகன் வினவுகிறான். ஆனால், முனிவனோ, 'எடுத்த மாமுடி சூடிநின் பால்இயைந்து, அடுத்த பேரரசு ஆண்டிலை ஐய நீ?' (திருவடி.2) என்று வினவியதுதான் பரதனுடைய சினத்திற்குக் காரணமாகி விட்டது. தான் அரசாட்சியை மறுத்துவிட்ட காரணத்தைக் குகனும் புரிந்துகொள்ளவும், இம்முனிவன் இவ்வாறு கேட்பது பரதனுக்குப் பெருந்துயரத்தை விளைத்து விட்டது. 'பரதன் எதனைச் செய்வான், எதனைச் செய்ய மாட்டான்?' என்பதை இம்முனிவன் அறியவில்லையே! எனவே, பரதன் முனிவனிடம் விவரமாகத் தான் வந்த கருத்தை அறிவிக் கிறான். 'இராமபிரானை மீட்டும் அழைக்க வந்துளேன். அவன் வாராவிடில் யானும் அவனுடனே தவம் இயற்றுவேன்,' (திருவடி. 4) என்கிறான். இது நிற்க.

### கோசலை கண்ட பரதன்

தானே பெறாவிடினும் பரதனை முழுவதும் வளர்த்த கோசலை கண்ட பரதனைக் காணவேண்டும். நீல மேனியை உடைய ஒரு பெருமகனைப் பெற்றெடுத்த அப்பிராட்டி அவனை வளர்க்க முடியவில்லை; இராமன் கைகேயி மாட்டு வளர்ந்தான். என்றாலும், கோசலைக்கும் நீலமேனியையுடைய ஒரு மைந்தன் கிடைத்து விட்டான் வளர்ப்பதற்கு. பரதனை வளர்க்கும் காலத்தில் அவனுடைய ஒப்பற்ற குணநலங்களில் ஈடுபட்ட கோசலை, பலகாலும் இராமனையும் பரதனையும் ஒப்பிட்டுப் பார்த்திருப்பாள் என்றே நினைக்க வேண்டியுளது. முடிசூடி மகன்

வருவான் என்று இராமன் வரவை எதிர்பார்த்து நின்ற கோசலை முன்னர், 'குழைக்கின்ற கவரி இன்றிக் கொற்ற வெண் குடையும் இன்றி, ஒரு தமியனாய்ச் சென்றான்' (நகர்.2) இராம பிரான். கண்ட தாய் மனம் திடுக்குற்றது. 'நினைந்தது ஏன்? இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?' (நகர்.3) என்ற வினாவை எழுப்பிற்று அத்தாய் மனம். தாய் எழுப்பிய இந்த வினாவிற்கு மைந்தன் விடை கூறுகிறான், 'நின் காதல் திருமகன், பங்கமில் குணத்து எம்பி பரதனே, துங்கமா முடி சூடுகின்றான்,' (நகர்.4) என்று. இவ்விடையைக் கேட்ட தாய் மனம் என்ன பாடு பட்டிருக்குமோ, நாம் அறியோம்! ஆனால், கோசலை மனம் உடனே அமைதியடைந்துவிட்டது. இதோ அவள் பேசுகிறாள்.

''முறைமை அன்றுஎன்பது ஒன்றுஉண்டு; அதல்லது
நிறைகு ணத்தவன் நின்னினும் நல்லனால்
குறைவி லன்,' எனக் கூறினள் ....'' (நகர்.5)

மகன் முடி கவிக்கவில்லை என்பதை அறிந்து அதிர்ச்சி அடைந் திருக்கும் தாயுள்ளங்கூடப் பரதனை நினைக்கும் பொழுது 'நின்னினும் நல்லன்' என்று கூறிற்று என்றால், இதனைவிடப் பரதனுடைய பண்பாட்டிற்குச் சான்று யாது வேண்டும்? பரதனால் தன் மகனுடைய வாழ்வு கெட்டது என்று தெரிந்த அந்த நேரத்திலேயே, 'நிறை குணத்தவன்' என்றும், 'குறைவிலன்' என்றும் கோசலை குறிக்கிறாள் பரதனை என்றால், பரதனைப் பற்றி வேறு புகழுரைகள் வேண்டுமா? ஆனால் கோசலை இவ்வாறு பேசும் நேரத்தில் பரதன் அயோத்தியில் இல்லை; கேகய நாட்டில் பாட்டன் வீட்டில் இருக்கிறான்.

இவ்வளவு சிறப்பாகப் பரதனைப் பற்றிப் பேசிய கோசலையின் மனத்திற்கும்-இராமனைப் பிரிந்து வருந்தும் பெற்ற மனத்திற்கும்-ஒரு போராட்டம் நிகழ்ந்திருத்தல் வேண்டும். பரதன் தவறில்லாதவன் என்று கோசலை மனம் அரற்ற, அவன் தவறுடையவன் என்று இராமனைப் பெற்ற மனம் அரற்றி யிருத்தல் வேண்டும். இராமன் காடு செல்லும் வரையில் பரதனைப் புகழ்ந்த கோசலை, அவன் சென்று விட்ட பிறகு ஓரளவு மனம் மாறிவிட்டாள். அதிலும், இராமன் காடு செல்ல வேண்டும் என்ற கைகேயியின் கட்டளையை அறிந்த பிறகு அவள் பரதன் மேலும் ஐயுறவு கொண்டுவிட்டாள். பரதனைப் பெற்ற தாயாயும் தசரதனிடத்தில் அதிக செல்வாக்குள்ளவளாயும் இருந்த கைகேயி, அரசனை ஏமாற்றிப் பட்டத்தைத் தன்

மகனுக்காகப் பறித்திருக்கலாம். இவ்வாறு அவள் செய்தது பரதனுக்குக்கூடத் தெரியாமல் இருக்கலாம் என்று நினைத்தாள் கோசலை, ஆனால், இராமனை ஏன் காட்டிற்கு அனுப்பவேண்டும்? நல்ல அரசியல் அறிவு பெற்றவரே இதனைச் செய்வர்! உரிமையுடையவனிடமிருந்து அரசாட்சியைப் பறித்துக்கொள்வது ஒரு செயல். ஆனால், அவ்வுரிமையாளன் நாட்டு மக்கள் கண்ணெதிரே உலவி வருவானாகில், முடிபறித்து ஆள்பவனுக்கு ஆபத்துத்தான் எஞ்சும். முடி இழந்தவன்மேல் மக்கள் கருணை சிறிது சிறிதாகச் சேர்ந்து, இறுதியில் ஆள்பவனுக்கே உலை வைத்துவிடும். எனவே, அறிவுடைய ஒருவன் உரிமையுடையவனை நீக்கிவிட்டு, அவன் முடியைப் பெற்றால், உடனே உரிமையாளனை மக்கள் முன்னிலையிலிருந்து அகற்றிவிடவேண்டும். ''எதிரே இல்லாதவன் நினைவை உடன் மறப்பதே பொது மக்கள் பண்பாடு.''[1] இதனால், அரசியல் சூழ்ச்சியை நன்கு அறிந்த ஒருவனே இராமனைக் காட்டுக்கு அனுப்ப ஏற்பாடு செய்திருத்தல் வேண்டும். அவன் யார்? இவ்வாறு நினைந்து பார்க்கிறாள் கோசலை. கைகேயி இவ்வளவு ஆழ்ந்து அரசியல் நுணுக்கங்களை ஆய்பவள் அல்லள்! எனவே, அவளே செய்ததன்று இச்செயல்! யாரோ அவளைத் தூண்டியிருத்தல் வேண்டும்! அது யாராய் இருக்கலாம்? ஒரு வேளை தசரதனாகவே இருக்கலாமா! அவ்வாறு தான் அப்பெற்ற மனம் முதலில் ஐயுற்றது. தசரதனும் கைகேயியும் சேர்ந்து கொண்டு இவ்வாறு செய்து விட்டனர் என்றே கோசலை நினைத்துவிட்டாள். ஆனால், பிறகு அரசன் இருப்பிடம் சென்று அவன் படும்பாட்டைக் கண்டபின் தசரதனுக்கு இச்சூழச்சியில் எவ்விதப் பங்கும் இல்லை என்பதையும், அவனே இச்சூழ்ச்சியால் முதலில் அடிபட்டவன் என்பதையும் கண்டு கொண்டாள் கோசலை.

மறுபடியும், 'சூழ்ச்சியின் அடிப்படை யார்?' என்ற வினா கோசலையை வாட்டத்தொடங்கி விட்டது. எவ்வளவு முயன்று பார்த்தும், கைகேயி மட்டுமே இதனைச் செய்தாள் என்று கோசலையால் நினைக்க முடியவில்லை. அவளை யாரோ தூண்டி விட்டு, நன்றாக முறுக்கியும் விட்டுவிட்டனர் என்பதையும் கோசலை உணர்கிறாள். யார் தூண்டியவர்? கூனியைப் பற்றிக் கோசலை நினைக்கவும் இல்லை. 'அரசரில் பிறந்து, அரசரில் வளர்ந்து, அரசரில் புகுந்து பேரரசியான' கோசலை கேவலம் பணிப்பெண்ணாகிய மந்தரையால் இந்த அந்தரம் வந்தது

1. Public memory is short lived

என்பதைக் கருதிப் பார்க்கவும் நியாயமில்லை. பிறர் கூறினாலும், அவளுடைய அரசியுள்ளம் நம்ப மறுத்திருக்கும். அவ்வாறாயின், அடிப்படை யார்? மீட்டும் அதே வினாத்தான் எழுகிறது. பல முறையும் ஆராய்ந்து, வேறு வழியே இல்லாமல், கோசலை பரதனைப் பற்றி ஐயுறவு கொள்ளலானாள். சூழ்ச்சி நடைபெறும் காலத்தில் பரதன் அயோத்தியில் இல்லை என்பது உண்மைதான். எனவே, பரதன் தூண்டியிருத்தல் இயலாது என்று முதலில் நினைத்தாள். ஆனால், பிறர் ஒருவர்மேலும் ஐயங்கொள்ள வியலாத நிலையில் பரதன் மேற்கொண்ட சிறு ஐயம் பெரிய உறுதிப்பாடாய் அவள் மனத்தில் நிலைத்துவிட்டது. அவன் ஒரு வேளை கேகய நாட்டிற்குச் செல்வதற்கு முன்னரே இவ்வாறு ஒரு கருத்தைத் தாயிடம் கூறிப் போயிருந்தாலோ! நல்லறிவும், ஆழ்ந்த கல்வியறிவும் உடையவனாகிய பரதனுக்கே இந்த அரசியல் சூழ்ச்சி தெரிந்திருக்க நியாயம் உண்டு. எனவே, அவனே இதனைச் செய்தான் என்ற முடிபுக்கே வந்துவிட்டாள் கோசலை. பரதனை நன்கறிந்த அவள் மனம் இதை நம்ப மறுத்தாலும், அறிவின் துணை கொண்டு ஆய்ந்து இத்தவறான முடிவிற்கே வந்து விட்டாள் முதல்தேவியாகிய கோசலை. பாவம்! மந்தரை என்ற சூழ்ச்சியின் பிண்டம் பெண் வடிவத்தில் உட்பகையாக அரண்மனையின் உள்ளேயே இருப்பதைப் பண்பாடுடைய கோசலை அறியவில்லை. 'சந்தர்ப்பச்சான்றுகள்'[1] அனைத்தும் பரதனுக்கு எதிராகவே அமைந்து இருத்தலின், அவற்றின் எதிரே கோசலை தன் உள்ளத்துக்கும் அன்புக்கும் எதிராக இம்முடிவுக்கு உறுதியாக வந்துவிட்டாள்.

பரதனைப்பற்றி இத்தவறான முடிபுக்குக் கோசலை உந்தப் பட்டாலும், அவள் தவறியும் இதை ஒருவரிடமும் கூறவில்லை. அவள் மனத்துள்ளேயே வைத்துச் சாம்பினாள். இறுதியாகப் பாட்டன் வீட்டிலிருந்து மீண்ட பரதன், அவளைச் சென்று வணங்கினான்; அழுதான்; கதறினான்; அவளைக் குற்றமும் சாட்டினான். 'அன்னையீர், இராமன் திருவடியை யான் காண வில்லை. அரசனாகிய இராமன் இவ்வயோத்தியை விட்டு நீங்கலாமா? அவனைப் பிடித்துத் தடுத்து நீர் நிறுத்தவில்லை! அவனைத் தடுக்காமையால் பெரும்பிழை செய்துவிட்டீர்!' என்னுங் கருத்தில் பேசினான்.

---

1. Circumstancial evidences

''அடித்தலம் கண்டிலேன் யான்என் ஐயனைப்
படித்தலம் காவலன் பெயரற் பாலனோ?
பிடித்திலிர் போலும்நீர்! பிழைத்தி ரால்!' எனும்;
பொடித்தலம் தோளுறப் புரண்டு சோர்கின்றான்.''

(பள்ளியடை. 91)

பரதன் தரையில் விழுந்து அழுது புரண்டு வருந்துவதையும், அவன் கூறுவதையும் கண்டு கேட்ட கோசலையின் உறுதி ஆட்டம் கண்டுவிட்டது. அவள், தான் பரதனைப் பற்றிக் கொண்டிருந்த முடிபு எத்துணைத் தவறானது என்பதை உணரத் தலைப்பட்டு விட்டாள். 'தானும் சேர்ந்து சூழ்ச்சி செய்தவன் இவ்வாறு அழுது புலம்பல் கூடுமா? ஒரு வேளை பிறர் மெச்சச் செய்வதாயினும், இவன் அழுகையும் சொற்களும் அடிவயிற்றிலிருந்தல்லவா வெளி வருகின்றன? இவ்வளவு உணர்ச்சியுடன் பேசி அழும் ஒருவன் எவ்வாறு தவறு இழைத்திருத்தல் கூடும்? ஒரு வேளை இவனுக்கு ஒன்றும் தெரியாமலே கைகேயி இவ்வஞ்சகத்தைச் செய்திருந் தால்......!' என்று நினைத்தாள் அதுவரை அவள் நினைவு சரியானதே!

கோசலை பெண் என்ற காரணத்தால் இன்னும் ஒருபடி மேலே சென்று விடுகிறாள். அந்த ஒருபடி அவள் மேலே செல்வ தால், நம்முடைய மதிப்பில் ஒருபடி கீழிறங்கிவிடுகிறாள். தன் ஐயம் முற்றிலும் தவறானது என்பதை இப்பொழுது நன்கு அறிந்து விட்டாளே! இதுவரை யாரிடமும் வாய்விட்டுக் கூறாமல் இருந்த இந்த ஐயத்தை இது தவறானது என்பது நன்கு தெரிந்து விட்ட இப்பொழுது உடனே மறந்திருக்கலாம். அவ்வாறு செய் திருப்பின், பரதனுடைய வருத்தத்தை மிகுதிப்படுத்தாமல் இருந் திருக்கலாம். அவள் தன் ஐயத்தைக் கூறாமலே இருந்திருப்பினும், பரதன் தான் நினைத்தவற்றைச் செய்யத்தான் போகிறான். அவ்வாறு இருந்தும், கோசலை தன் ஐயத்தை அவனிடமே கூறியது சற்று நல்லதல்லாத இயல்பைக் காட்டுகிறது. பரதன் படுந்துயரத்தைச் கண்ட கோசலை மெள்ள நினைக்கத் தொடங்கி' இறுதியில் அவனிடமே கேட்டும்விட்டாள். 'இவனுடைய மனத்தில் குற்றம் ஒன்றும் இருத்தற்கில்லை. இவன் தூய்மையானவனே,' என்று துணிந்தும், 'கைகேயி செய்த வஞ்சத்தை நீ அறியாயா? என்றாள்.

"'மையறு மனத்துஒரு மாசு உளான்அலன்
செய்யனே,' என்பது தேரும் சிந்தையாள்,
'கைகயர் கோன்மகள் இழைத்த கைதவம்
ஐய!நீ அறிந்திலை போலு மால்' என்றாள்."

(பள்ளியடை. 96)

கோசலையின் இந்தச் சொற்கள் பரதனை அடியோடு உலுக்கி விட்டன. அவன் கனவினுங் காணாத ஒரு குற்றத்தை அவன்மேல் சுமத்தாமல் சுமத்தி விட்டாள் அவனை வளர்த்தெடுத்த தாயாம் கோசலை. நெருப்பை மிதித்தவன் போலத் துள்ளினான் அப்பெரு மகன். கோசலையா இவ்வாறு கேட்டுவிட்டாள்? ஏன்? தன் மேலும் கோசலை ஐயங்கொள்ளும் ஒரு காலம் வந்துற்றதே என்று வருந்தினான்; அதிற் பிறந்த கோபத்துடனும் எல்லையற்ற துயரத்துடனும் தாயின் எதிரே கடுமையான வஞ்சினம் ஒன்றைக் கூறுகிறான். இருபது பாடல்களில் அவனுடைய வஞ்சினம் தொடர்கிறது. 'யான் இதில் பங்கு கொண்டிருப்பேனாகில் இன்னார் இன்னார் செல்கின்ற நரகங்கட்குச் செல்வேனாக!' என்று கூறி முடித்தான். இக்கொடிய வஞ்சினத்தைக் கேட்டுக் கோசலை மருண்டுவிட்டாள்.

வஞ்சினம் கூறிய பரதனை அழுத கண்ணீருடன் அப்படியே மார்புறப் புல்லிக்கொண்டாள் அத்தாய். ஆம்! சேயையும் தாயையும் பிரித்து நின்ற ஒன்று சேயின் வஞ்சினத்தால் அறுந்து வீழ்ந்து விட்டது. விம்மலுடனும் விக்கலுடனும் மகனைத் தழுவிய தாய் இதோ பேசுகிறாள்.

"'முன்னை நின்குல முதலு ளோர்கள்தாம்
நின்னை யாவரே நிகர்க்கு நீர்மையார்?
மன்னர் மன்னவா!' என்று வாழ்த்தினாள்
உன்ன உன்னநைந்து உருகி விம்முவாள்.

"உன்ன உன்னநைந்து உருகும் அன்புகூர்
அன்னை தாளின்வீழ்ந்து இளைய அண்ணலும்
சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினான்."

(பள்ளியடை. 120, 121)

['ஐயனே. உன் குலத்து முன்னர்த் தோன்றிய மன்னர்களை எல்லாம் எடுத்து நோக்கினும் உன்னை ஒத்த ஒருவனைக் காண்டல் இயலாது. 'மன்னர் மன்னவா', என்று மனங்கனிந்து வாழ்த்தினாள்.]

இப்பொழுது இராமன் மீண்டிருந்தாலும் அவனை நீக்கிப் பரதனுக்கே முடியைத் தரும் மனநிலையில் உள்ளாள் கோசலை. எனவே, 'மன்னர் மன்னவா', என்று அவள் விளித்தது உபசாரத் திற்கன்று. உண்மையில் அவள் மனத்தில் தோன்றிய ஓர் எண்ண மாகும் அது. 'நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்', என்று பரதனைப் பற்றி இராமனிடம் அவள் கூறிய சொற்களைப் பரதன் இதோ மெய்ப்பித்து விட்டான். எனவே, அத்தாய் உளங்குளிர்ந்து அவனையே 'மன்னவா' என்று விளிக்கிறாள். கைகேயி வரம் பெற்றுவிட்டதால் முறைப்படி அவனே அரசன் என்று அவள் இவ்வாறு கூறவில்லை; உண்மையிலேயே தனக்குண்டான மகிழ்ச்சி காரணமாகவே இவ்வாறு கூறினாள்.

ஆனால், அவள் எந்தக் கருத்தால் 'மன்னர் மன்னவா', என்று விளித்திருப்பினும், பரதன் செவியில் அச்சொற்கள் நாராசம் போல வீழ்ந்தன. எந்த அரசப் பதவி அவனை இந்த நிலைக்குக் கொண்டு வந்ததோ, அந்த அரசப்பதவியின் பெயரையே அவனுக்குச் சூட்டினால் அவன் வருந்தாமல் இருத்தல் கூடுமா? கைகேயி இழைத்த தவறு காரணமாகப் பரதன் விளையாட்டாக வேனும் தன்னை யாராவது 'அரச' என்று விளித்தால் அழுது விடும் நிலையில் உள்ளான். இந்தச் சூழ்நிலையில் கோசலையே தன்னை 'மன்னர் மன்னவா,' என்று அழைத்த சொற்கள் காதில் விழுந்தால் அவன் என்ன பாடுபடுவான்! எனவே, அவள் கால் களில் வீழ்ந்து மீண்டும் அரற்றுகிறான். 'சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினான்,' என்ற தொடருக்கு மன்னர் மன்னவா,' என்று கோசலை கூறிய சொற்களின் இயல்பை அறிந்து வருந்தினான் என்று பொருள் கொள்வதே மிகுதியும் பொருத்தம் போலத் தெரிகிறது. 'சொன்ன நீர்மையால்' என்பதற்கு வணங்க வேண்டிய முறைப்படி என்று பொருள் கூறிக் கம்பன் பாடலைச் சுவையற்றதாகுமாறு செய்தலினும் இவ்வாறு பொருள் கொள்வது நலமே என நினைக்க வேண்டியுளது.

இதனையடுத்துக் கோசலை பரதனிடம் பேசவேண்டிய நிலை மீட்சிப் படலத்தில் வருகிறது. முன்னர் நடைபெற்ற செய்திகள் நடந்து பதினான்கு ஆண்டுகள் சென்று மறைந்தன. அன்று இராமன் வரவேண்டிய நாள். மாலை வரையும் வழிமேல் விழி வைத்துக் காத்துநின்றான் அறத்தின் வடிவினனாய பரதன். இராமன் வரவில்லை. அது அவனுடைய மனத்தில் பெருந் துயரத்தை மூட்டிவிட்டது. இத்தகைய ஒரு நிலை வருமாயின்

யாது செய்யவேண்டும் என்று அவன் முன்னரே முடிவு செய்து வைத்துள்ளான் அல்லனோ? எனவே, தம்பியாகிய சத்துருக்கினனை அழைத்தான்; அரசியலை அவன் விரும்பா விடினும் அவனிடமே ஒப்படைத்தான்; பெருந்தீ மூட்டிவிட்டான்; அதில் வீழ்ந்து தன் வாக்குறுதியை முடிக்க முற்பட்டுவிட்டான். 'செம்மையின் ஆணி' யான பரதன் புறப்பட்டுவிட்டால்; யார் அவனைத் தடுக்கும் உரமுடையார்? யாவரும் அஞ்சி அரற்றி நிற்கின்றனர். பெற்ற தாயாகிய கைகேயி, பரதன் எதிரே வரவும் அஞ்சி, எங்கோ இருக்கின்றாள். என்றாலும் என்ன? எந்தத் தாயைப் பரதன் உண்மையில் தாய் என்று மதித்தானோ, அந்தத் தாய்—கோசலை—ஓடோடியும் வந்தாள் செய்தி அறிந்து. கடமைக்காகவே உயிர் வாழ்ந்த அக்கண்ணியன் தாயைக் கண்டும் வாளாவிருப்பானா? உடனே அவள் அடி வீழ்ந்து வணங்கினான்.

வீழ்ந்து வணங்கிய பரதனை அப்படியே தன்கைகளால் வாரி எடுத்துப் பற்றிக்கொண்டாள் கோசலை. 'ஐயனே, இது வரை, தசரதர் இறந்ததையும் இராமன் வனம் சென்றதையும் விதியின் செயல் என்றிருந்தேன். இராமன் குறித்த நாளில் வராமற் போனதும் அவ்விதியின் விளைவேயன்றோ? இந்நிலை உணராமல் நீ யாது செய்யத் துணிந்துவிட்டாய் என் மகனே!'' என்கிறாள்.

'''மன்னி ழைத்ததும் மைந்தன் இழைத்ததும்
முன்இ ழைத்த விதியின் முயற்சியால்
பின்இ ழைத்ததும் எண்ணில்அப் பெற்றியால்
என்இ ழைத்தனை? என்மக னே!'என்றாள்.'' (மீட்சி. 229)

மேலும் கூறுவாளாய் 'மகனே, நீ தீப்புகுந்தால் உன்னுடன் அனல் புகும் தாயராகிய எம்முடன் இது நிற்பதன்றே! உலகு அனைத்தும் தீப்புக நீ காரண மாதல் முறையா? (230) உன் செயல்களை இது வரைக்கண்டு வந்திருக்கிற எங்கட்கு அவை அனைத்தும் அறத்தின் சாரமாகவே உள்ளன. உன் பெருமையை நீயே அறியாய்! கோடிக் கணக்கான இராமர்கள் கூடினாலும், உன்னுடைய அருளுக்கு எதிராவரோ? ஐய, புண்ணியத்தின் வடிவான நின்னுயிர் போனால், மூவுலகங்களும் அவற்றில் வாழும் உயிர்களும் அழிந்து விடுமே!' என்ற முறையில் பேசுகிறாள்.

'''தரும நீதியின் தற்பயன் ஆவதுஉன்
கரும மேயன்றிக் கண்டிலம் கண்களால்;
அருமை ஒன்றும் அறிந்திலை; ஐய!நின்
பெருமை ஊழி திரியினும் பேருமோ?

'''எண்ணரில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்அரு ளுக்குஅரு காவரோ?
புண்ணி யம்எனும் நின்உயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?'

(மீட்சி. 231, 232)

இராமனைத் தேடி அன்பின் மிகுதியால் காட்டுக்கு வந்த பரதனைக் கண்ட குகன், 'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியில்?' என்றான். அன்பையும் கடந்து கடமை என்பதற்காகவும் கூறிய சொற்களைக் காப்பான் வேண்டியும் தீயில் விழப்போகும் பரதனை 'எண்ணில்லாத கோடிக்கணக்கான இராமர்கள் ஒன்று கூடினாலும் உனக்கு இணையாகார்!'' என்கிறாள் வளர்த்த தாய்!

தந்தை சொல்லைக் காக்கக் காடு சென்று பதினான்கு ஆண்டுகள் வாழ்ந்த இராமனைக்காட்டிலும், தான் சொல்லிய சொல்லையே காக்கத் தீயில் வீழ்ந்து உயிரை விடத் துணிந்த பரதன் பன்மடங்கு உயர்ந்தவனாதல் கண்கூடு. தந்தை கட்டளையை மேற் கொண்டு நடந்த இராமன் கடமையைச் செய்தான். ஒருவரும் ஏவாதிருக்கவும் தன் சொல்லைக் காப்பவன் 'அருள்' உடையவனா கிறான். தந்தையின் கட்டளை தனது கடமை என்பவற்றை மேற்கொண்ட இராமனது அன்பைக்காட்டிலும், தன் சொல்லைக் காப்பான் உறுதி பூண்ட பரதனது அருள் உயர்ந்ததாதலை நன்கு அறியலாம். இதனைத்தான் கற்றறிவுடையவளாய கோசலை, 'அண்ணல் நின் அருளுக்கு அருகாவரோ?' என்று புகழ்கிறாள்.

கோசலை கூறும் இந்தப் புகழ் உரைகளும், 'இராமன் இன்றல்லாவிடினும் நாளை வருவான்' என்றுரைத்த மொழிகளும் பரத வள்ளலின் செவியில் நுழையவே இல்லை. இதனையடுத்துப் பல நீதிகளையும் அப்பெருமாட்டி கூறுகிறாள். எனினும், பரதன் தன் குறிக்கோளை விடவில்லை. இரண்டே வாதத்தில் தாயை மடக்கிவிடுகிறான் அம்மகன். 'வாய்மை தவறாத தசரதன் மகனும், சொற்படி நடந்த இராமன் தம்பியும் அல்லனோ யான்? அவ்விருவரும் நன்று செய்தனர் என்று கூறினால், என்னை மட்டும் இழுக்குக் கூறுவது யாங்ஙனம்?' (மீட்சி. 237) என்கிறான். இதைவிட ஒருபடி மேற்சென்று இராமனிடம் குற்றங்காண்கிறான் பரதன். 'தாயே, தாய் சொல் கேட்டும், தந்தை சொல் கேட்டும் வனம் சென்று, அன்புடையார்களிடத்து அன்பை முழுவதும் மறத்தல் என்பது இராமனுக்கே கடன். நான் அவ்வாறு செய்ய உடன்படேன்,' என்கிறான்.

"தாய்சொல் கேட்டலும் தந்தைசொல் கேட்டலும்
பாசத்து அன்பினைப் பற்றுஅற நீக்கலும்
ஈசற் கேகடன்; யான்அஃது இழைக்கிலேன்."

(மீட்சி. 238)

என்பது அவன் கூற்று. தான் வனஞ்சென்று எவ்வளவு வேண்டியும் வாக்குறுதியை மீறக்கூடாது என்று எடுத்துக்காட்டி வரமறுத்த இராமன், இப்பொழுது 'வருவேன்' என்ற வாக்கை மீறினான் என்ற வருத்தம் பரதனுக்கு.

இதுகாறுங் கூறியவற்றால் கோசலை கண்ட பரதன் எத்தகையவன் என்பதை ஒருவாறு கண்டோம்.

இராமன் காடு செல்லுமுன்னர்ப் பரதன் அயோத்தியில் எவ்வாறு வாழ்ந்தான் என்பதை நாம் அறிதல் இயலாது. ஆனால் இராமனிடம் சென்று அவன் பாதுகைகளைப் பெற்று வந்த பின்னர் அவன் வாழ்வு எவ்வாறு நடைபெற்ற தென்பதை அறியப் பரத்துவாச முனிவன் கூற்றாய் அமைந்துள்ள இரண்டு பாடல்கள் போதுமானவை. 'வேர்க்கின்ற உடலினை உடையனாய், விழியிற் பொழியும் மழையை உடையனாய், ஊழ்வினையை வெறுத்த சிந்தையை உடையனாய், தென்திசை தவிரப் பிறிது திசை நோக்காதவனாய், துன்பமே ஒரு வடிவாகக் கொண்டவனாய், ஐந்து பொறி புலன்களையும் அவற்றின் வழிச்செல்லாமல் தடுத்த வனாய், காய் கனிகளையே நுகர்ந்து புற்படுக்கையில் உறங்கு பவனாய், நந்திக் கிராமத்திலேயே அல்லும் பகலும் இருப்பவனாய், ஓயாது இராம நாமத்தையே கூறிக்கொண்டிருப்பவனாய் ஒருவன் உளன் எனில், அவனே பரதன்,' என்னுங் கருத்துப்பட,

"வெயர்த்த மேனியன் விழிபொழி மழையன்மூ வினையைச்
செயிர்த்த சிந்தையன் தெருமரல் உழந்துஉழந்து அழிவான்
அயிர்த்து நோக்கினும் தென்திசை அன்றிவேறு அறியான்
பயிர்த்த துன்பமே உருவுகொண்டு என்னலாம் படியான்.

"இந்தி யங்களைந்து இருங்கனி காய்நுகர்ந்து இவுளிப்
பந்தி வந்தபுல் பாயலான் பழம்பதி புகாது
நந்தி யம்பதி இருந்தனன் பரதன்நின் நாமம்
அந்தி யும்பகல் அதனினும் மறப்பிலன் ஆகி."

(மீட்சி. 194, 195)

என அமைந்துள்ளன அச்செய்யுட்கள்.

பரதனுடன் பழகும் வாய்ப்புப் பெற்றவர் பலரும் அவனைப் பற்றி என்ன நினைக்கின்றனர் என்பதை இதுகாறுங்கண்டோம் இராமன், இலக்குவன், தசரதன், குகன், விசுவாமித்திரன், கோசலை ஆகியவர்கள் பலதிறப்பட்ட பண்பாடுடையவர்கள். கலை ஞானங்கட்கெல்லாம் உறைவிடமான இராமனும் விசுவாமித்திரனும் மட்டுமா பரதனைப்போற்றுகின்றனர்? கற்றறிவில்லாத குகனும் போற்றுகிறான். பரதன் பிறந்ததால் நேரடியாகத் துன்பத்தை அடைந்த கோசலையும் அவனைப் போற்றுகிறாள். இதிலும் ஒரு சிறப்பு இருக்கிறது. பரதனிடத்து முதலில் வெறுப்புக் கொண்டிருந்த இலக்குவன். குகன், கோசலை என்ற மூவரும் இறுதியில் அவனிடம் அளவற்ற பரிவு காட்டுகின்றனர். உலகிடைப் பிறந்து வாழும் ஒருவன் அனைவரிடமும் நற்பெயர் பெறுதல் இயலாது. ஆனால், பரதனை மேலே கூறிய அனைவரும் புகழ்கின்றனர். அதனால், அவன் உலகியலுக்கே மாறுபட்டவனாகக் காட்சியளிக்கிறான். எவ்வகை மனநிலையுடையாரும் அவன் செயலில் சிறப்பையே காண்கின்றனர். இல்லறத்தாரும் துறவறத்தாரும், ஆணும் பெண்ணும், கற்றவரும் கல்லாதவரும் 'உண்ணும் நீரினும் அவனையே (பரதனையே) உகப்பார்' எனில், இத்தகைய ஒரு பாத்திரத்தை இலக்கிய உலகிற்கூடக் காண்டல் அரிதென்றே கூறல் வேண்டும். இதுவரைப் பரதனைப்பற்றிப் பிறர் பேசியவற்றையும், அவனிடம் பிறர் நடந்துகொண்டதையுங் கண்டோம். இனி அவன் பிறரிடம் பேசுவதையும், பிறரிடம் நடந்து கொள்வதையுங் காண்போம்.

பெற்ற தாயாகிய கைகேயியிடம் பரதன் பேசுவதைக் காண்டல் வேண்டும். ஆனால், இந்த உரையாடலில் முழுப் பகுதியையும் அவனே பெற்றுவிடுகிறானாகலின், அதனை வேறு கோணத்திலிருந்தே காண்டல் வேண்டும்.

## 8. 2 'நேர்மையின் ஆணி'

**இராமனும் பரதனும்**

இராமனும் அவனுடைய தம்பியர் மூவரும் ஒரே நாளில் சற்று முன்னும் பின்னும் பிறந்தவரேயாவர். எனவே, அவர்களுள் பெரியவன் சிறியவன் என்ற வேறு பாடு பெரிதாகக் கூறுவதற்கு ஒன்றுமில்லை. இவ்வாறு இருந்தும், சில நாழிகை முன்பின்னாய்ப் பிறந்த காரணத் தினாலேயே அண்ணன் தம்பி என்ற முறை பாராட்டினர் அச்சோதரர். இதில் ஒரு வியப்பு என்னையெனில், ஏனைய மூவரும் இராமனை அண்ணனாகமட்டும் அல்லாமல், தந்தையாகவும், குருவாகவும்,- ஏன்?- வணக்கத்துக்குரிய வழிபடு தெய்வமாகவுமே மதித்தனர். அனைவருக்கும் ஒருசேரத் தண்ணளி செய்யும் தெய்வம் போல அப்பெரு மகனும் மூவரிடமும் ஒத்த அன்பு காட்டினான்.

இலக்குவன், தன்னைப் பொறுத்தவரை, அண்ணனை மிகுதியும் அண்ணனாவே போற்றினான். பரதனோ, இராமனைத் தந்தையாகவே மதித்து வழிபட்டான். இதில்வேடிக்கை யாதெனில், இலக்குவன் பரதனிலும் இளையவன். இக்கருத்தை நன்கு அறிந்த கம்பநாடன், பரதனை இராமன் தழுவியதாக வரும் இடங்களில் எல்லாம் 'தந்தை போலத் தழுவினான்' என்றே கூறு கிறான். தசரதன் பரதனிடம் காட்ட வேண்டிய அன்பைக் காட்ட வில்லை என்பது தசரதனைப் பற்றிய கட்டுரையில்[1] விரிவாகக் கூறப் பெற்றுளது. இராமன் இதனை நன்குணர்ந்து பரதனைக் காணுந்தோறும் அதிக அன்பு காட்டினான் என்று நினைய வேண்டியுளது. திருமணத்தைக் காணத் தசரதனுடன் பரதனும் மிதிலைக்கு வந்து இராமனை வணங்குகிறான். அப்பொழுது,

---

1. கம்பன் கலை—நாடும் மன்னனும். பக். 96, 97.

''பன்னுதா ரைகள்தரத் தொழுதுஎழும்பரதனைப்
பொன்னின்மார்பு உறவணைத்து உயிர்உறப் புல்லினான்
தன்னையத் தாதைமுன் தழுவினான் என்னவே.''
(எதிர்கொள். 26)

இவவாறு இராமன் தழுவினான் என்று கவிஞன் கூறுவதால், நமது ஊகம் பொருத்தமாகலாம். திருமணம் முடிந்து அயோத்தி வந்தவுடனே தசரதன் பரதனைக் கேகய நாட்டிற்கு அனுப்புகிறான். அதன் காரணம் முதலியன பிறிதோர் இடத்தில் விரிவாக ஆயப் படுகின்றன.[1]

தசரதன் அவ்வாறு 'கேகய நாடு சென்று வருக,' என்று பணித்தவுடன் இராமனை விட்டுப் பிரியவே பரதன் மிகவும் வருந்துகிறான்.

''ஏவலும் இறைஞ்சிப்போய் இராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினான்
ஆவியங்கு அவன்அலது இல்லை ஆதலால்
ஒவலில் உயிர்பிரிந்து உடல்சென்று என்னவே.''
(பரசுராம. 58)

இங்கு இராமனை உயிராகவும் பரதனை உடலாகவும் கவிஞன் உவமித்தது பின்னரும் வலியுறுத்தப் பெறுகிறது.கேகயத்திலிருந்து மீண்டு தாயைக் கண்டு தந்தையின் இறப்பை அறிந்த பரதன், உடனே இராமனைப் பற்றித்தான் பேசுகிறான்.

''எந்தையும் யாயும்எம் பிரானும் எம்முனும்
அந்தம்இல் பெருங்குணத்து இராமன் ஆதலால்,
வந்தனை அவன்கழல் வைத்த போதுஅலால்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாது!'' என்றான்.''
(பள்ளியடை. 58)

இராமன் பரதன்மாட்டுக் கொண்ட பேரன்பை முன்னர்க் கண்டோம். இப்பொழுது பரதன் இராமன் மேல் வைத்த அன்பைக் காண்கிறோம். இவை இரண்டில் எது பெரியது என்று ஆராய முடியாதபடி ஒன்றை ஒன்று விஞ்சி இருத்தல் கண்கூடு. கடிமணம் முடிந்து இராமன் மீளும்பொழுது இராமனுடைய தேரைப் பரதன் ஓட்டிவரக் காண்கிறோம். மணம் முடித்துவரும் அரசகுமாரனைத் தேரில் அமர்த்தி அதனைச் செலுத்தி வருகிறான் எனில், பரதனது தேர் ஓட்டும் திறமே அதற்குக் காரணமாதல் வேண்டும். (கடிமண. 73)

1. கம்பன் கலை—நாடும் மன்னனும் பக். 86.

இன்னுஞ்சில சந்தருப்பங்களில் பரதனுடைய செயலிலிருந்து ஒன்றை ஊகிக்கவும் முடிகிறது. தசரதனிடத்துப் பரதன் கொண்டிருந்த அன்பையும் மதிப்பையுங்காட்டிலும் அதிகமாக இராமன் மேல் அன்பும் மதிப்பும் கொண்டிருந்தான் என்றும் நினைய வேண்டியுளது. தசரதன் இறந்த பின்னர்த் தூதுவர் பரதனை அழைத்து வரக் கேகய நாடு சென்றனர்; பரதனையும் கண்டனர். ஆனால், முனிவன் ஆணைப்படி தசரதன் சாவைப் பற்றி அத்தூதுவர் பரதனிடம் ஒன்றும் கூறவில்லை; எனவே அவன் வினாக்கட்கு மெய்ம்மையல்லாத மறுமொழிகளைக் கூறுகின்றனர். பரதனது முதல் வினா, 'தீது இலன்கொல் திருமுடியான்!' (பள்ளி.2) என்பதாகும். அதற்கு அவர்கள், வலியன் என்று விடை இறுத்தார்கள். அதனையடுத்த வினா, அருமைத் தம்பியும் எம்பிரானும் நலமோ? ' என்பதாகும். 'ஆம்,' என அவர்கள் கூறினவுடன் பரதன் அவர்கள் இருக்கும் திசை நோக்கி வணங்கினானாம்.

> ''வலியன் என்றுஅவர் கூற மகிழ்ந்தனன்,
> 'இலைகொள் பூண்இளங் கோளம் பிரானொடும்
> உலைவில் செல்வத்த னோ?' என, 'உண்டு,' எனத்
> தலையின் ஏந்தினன் தாழ்தடக் கைகளே!' (பள்ளி.3)

இராமன் பெயரைக் கூறினவுடன் பரதனுடைய கைகள் தலைமேல் அஞ்சலி செய்கின்றனவெனில், அவனுடைய அன்பு பெரியதா, அன்றிப் பத்தி பெரியதா என்று கூறமுடியாத நிலையில் உள்ளது. இதனையடுத்துத் தூதுவர் தாம் கொணர்ந்த ஓலையைத் தருதலும், அதனை வாங்கிப் படித்து விட்டு, உடன் புறப்படத் தயாராகிவிட்டான் பரதன். ஏன் தெரியுமா?

> ''பூண வான்உயர் காதலிற் பொங்கினான்
> தாணி லாமலர் தூவினன் தம்முனைக்
> காண லாம்எனும் ஆசை கடாவவே.'' (ஷ.7)

இராமனைக் காணலாம் எனும் ஆசையால் தூண்டப்பெற்றவனாய் அவர்கள் கொணர்ந்த ஓலையின்மீது மலர்களைத் தூவினானாம். அவனுடைய ஆசை எவ்வளவு அதிகம் என்பதற்குக் கவிஞன் அடுத்த பாடலில் ஓர் அளவு குறிக்கிறான். ''பொழுதும் நாளும் குறித்திலன் போயினான்,'' (௪) என்ற தொடரால், முதல் முதல் பாட்டன் வீடு வந்து திரும்பும் அரசகுமாரனாகிய பரதன் நல்ல நேரங்கூடப் பாராமல் புறப்பட்டுவிட்டான் என்றால் இராமனைக் காண அவன் மனம் துடித்த துடிப்பை யாரே அளவிட்டு அறிதல் கூடும்!

இராமனை அழைத்து வருவான் வேண்டித் தன் படையுடன் புறப்பட்டுக் காட்டிற்கு வந்து விட்டான் அப்பெருமகன். பரதனை நீண்ட நாட்பிரிவின் பின்னர்க் கண்ட இராமன்,

''நியாயம்அத் தனைக்கும்ஓர் நிலையம் ஆயினான்
தயாமுதல் அறத்தினைத் தழுவி என்னவே'' (பள்ளி.55)

அவனைக் கட்டித் தழுவினான். 'தயாமுதல்' என்றதால், அருளை யுடைய முதல்வனாகிய இராமன் என்பதும், 'அறத்தினை' என்ற தால், பரதன் என்பதும் பெறப்படும். இராமனும் பரதனும் சேர்ந்தது அருளும் அறமும் சேர்ந்ததுபோல இருந்தது என்கிறான் கவிஞன். இதன் பின்னர்ப் பலவும் பேசி, இறுதியில் பரதன் தான் வந்த கருத்தைக் கூறுகிறான்.

பரதன் கொண்ட தவ வேடத்தைக் காணுந்தோறும் இராமனுடை ய மனம் துணுக்கம் எய்துகிறது. இராமன் மனத்தில் பரதன் இன்னம் குழந்தையாகவே காட்சியளிக்கிறான். எனவே, அவன் கொண்ட விரதக் கோலம் மேலும் வருத்தத்தை விளைக் கிறது. எனவே, அவன் பரதனை நோக்கி,

''வரதன் துஞ்சினான்; வையம் ஆணையால்
சரதம் நின்னதே; மகுடம் தாங்கலாய்
விரத வேடம்நீ என்கொல் வேண்டுவான்?
பரத! கூறு,' எனாப் பரிந்து கூறினான்.'' (திருவடி. 96)

இதைக்கேட்ட பரதன் மிகவும் மனம் துடித்தவனாய், 'ஆம்! பெரியோர் மனத்திற்குப் பொருந்தாத வரங்களால் உனக்குத் தகாத தவக்கோலத்தை உனக்கும் தந்து அரசனையும் கொன்றவள் என்னைப் பெற்றெடுத்த பாவியாகலின், யான் தவம் செய்யவும் தகுதி உள்ளவனோ?' என்கிறான் அப்பரதன்.

''மனக்குஒன் றாதன வரத்தின் நின்னையும்
நினக்குஒன் றாநிலை நிறுவி நேமியான்
தனைக்கொன் றாள்தரும் தனயன் ஆதலால்
எனக்குஒன் றாதவம் மடுப்பது எண்ணினால்!''
(திருவடி 98)

இவ்வாறு கூறித் தன்னைப் பற்றித் தான் கொண்டுள்ள கருத்தைப் பிறர் அறியக் கூறிய பரதன், இனி இராமனது முதற் கேள்விக்கு விடை கூற முற்படுகிறான். 'ஏன் முடிசூடவில்லை?' என்பது தானே முதற்கேள்வி? 'முதல் மகனாய்ப் பிறந்த காரணத் தால் உனக்கே உரிமையான அரசை நீயே விட்டுத் துறவு பூண்டால்

அதற்காக யான், அறத்தை வாளிவால்கொன்று தின்றதை ஒப்ப, அவ்வரசை ஆளத் தொடங்குவேனோ! (டி. 101) என்றான். இவ்வாறு பேசி வரும்பொழுதே அவன் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றுகிறது. 'பகைவன்தானே சமயம் அறிந்து இவ்வாறு அரசை வெளவக் காத்திருப்பான்? யான் என்ன அத்தகைய பகைவனா?' என்னுங் கருத்தால்,

''வகையில் வஞ்சனாய் அரசு வவ்வயான்
பகைவ னேகொலாம் இறவு பார்க்கின்றேன்!'' (டி. 102)

என்று கூறுகிறான். இதிலிருந்து பரதனுடைய அடக்கமும்' அன்பும், ஆழ்ந்த அறிவும் புலனாகாமற் போகா. இதனையடுத்து, 'தந்தை தீமையும், தாய் செய்த தீமையும் நீங்க நீ வந்து அரசு புரிக,' (103) என வேண்டினான். அவன் சொற்களையும் அச்சொற்களின் அடியில் உள்ள துயரத்தையும் கண்ட இராமன், துணுக்கம் எய்தினான்.

''சொற்ற வாசகத் துணிவு உணர்ந்தபின்,
'இற்ற தோஇவன் மனம்!' என்று எண்ணுவான்.''

(திருவடி. 104)

என்று இராமன் மனத்தில் தோன்றிய அச்சத்தைக் கவிஞன் வெளியிடுகிறான். அவனது உள்ளம் இற்றுவிட்டதோ என்று ஐயுற வேண்டுமாயின், பரதன் துயரம் எவ்வளவு ஆழமுடையதா யிருந்திருக்கும்?

இவ்வகை மனநிலையில் உள்ள பரதனைத் தேற்றுதற்கு இராமனே அரும்பாடு படுகிறான்; தந்தை சொல்லைக் காக்க வேண்டுவது தனயன் பொறுப்பு என்பதையும் எடுத்துக் காட்டினான். இறுதியாக அயோத்தி அரசின்மேல் தனக்கு உரிமை இல்லை என்றும், கைகேயி மகனாய்ப் பிறந்த காரணத்தால் பரதனுக்கே அது உரிமையாய்விட்டதென்றும் எடுத்துக் காட்டுகிறான்.

''வரனில் உந்தைசொல் மரபி னால்உடைத்
தரணி நின்னதென்று இயைந்த தன்மையாம்
உரனில் நீபிறந்து உரிமை ஆதலால்
அரசு நின்னதே ஆள்க!' என்னவே'' (டி.111)

என்னும் இப்பாடலுக்கு உரை வகுத்தவர்கள் நேர்மையாகப் பொருள் கொள்ளாமையின், நல்ல முறையில் இராமன் வாதத்தை

அறிய முடியவில்லை. முதலிரண்டு அடிகளின் பொருள்: 'வரந்தந்த உந்தை முன்னர்க் கொடுத்தவாக்குப்படி இத்தரணி உனதாகும்படி பொருந்திவிட்டது. (இது கைகேயியை மணஞ்செய்து கொள்ளும் பொழுது தசரதன் தன் அரசை அவளுக்குச் சீதனமாகத் தந்து விட்டான் என்ற வான்மீகக் கதையை உட்கொண்டது.)' என்பது. பின் இரண்டடிகளின் பொருள்: 'வலிமை பொருந்திய நீ பிறந்து விட்டமையின், உன் தாய்க்குரிய இவ்வரசு உனக்கு உரிமை வழி வந்தது ஆகலின், இவ்வரசு நின்னதேயாகும்,' என்னும் இவ்வாதத்தை இராமன் கூறினவுடன் பரதன் பேச்சு முறை மாறிவிடுதலைக் காணலாம். இதுவரை இராமனுக்குரிய அரசைத் தந்தை தனக்குத் தந்து பெருந்தவறு இழைத்துவிட்டான் என்றும், தாய் வரமாக அதனைப் பெற்று அவளும் தவறு இழைத்து விட்டாள் என்றும் (திருவவ. 103) கூறிய பரதன், இராமன் கூறியதைக் கேட்டவுடன் தன் வாதத்தை மாற்றிவிடுகிறான். இராமன் கூறியதில் உள்ள இப்புதிய கருத்தை அறிந்துகொண்ட பரதன், வேறு விதமாகக் கூறி இராமனை வற்புறுத்துகிறான்.

இராமன் கூறியதைப் பரதன் ஒப்புக்கொள்கிறான். அவ்வாறாயின், இப்பூமி முறைப்படி பரதனைச் சேர்ந்தது என்பது உறுதிதான். ஆனால், உரிமையுடையவனாய பரதன் தன் உரிமை அரசை யாருக்கு வேண்டுமாயினும் அளிக்கலாமல்லவா? இதோ கூறுகிறான்!

''முன்னர் வந்துஉதித்து உலகம் முன்றினும்
நின்னை ஒப்பிலா நீபி றந்தபார்
என்ன தாகில், யான் இன்று தந்தனன்;
மன்ன! போந்துநீ மகுடம் சூடு,' எனா''

(திருவடி. 112)

'இப்பார் என்னுடையது என்று நீயும் கூறினாய்; யானும் ஒப்புகிறேன். இப்பொழுது எனக்குரிமையான இப்பூமியை யானே உனக்குத் தருகிறேன்; வந்து ஆட்சி புரிக,' என்கிறான் வள்ளல் பரதன்.

பரதனுடைய இந்த வாதத்தின் முன்னர் இராமன் அசந்து விட்டான். பரதனுடைய பிடிவாதத்திற்கு மருந்தாக அமையும் என்று கருதித்தான் கூறிய வாதம் தனக்கே இடையூறாய் வந்து சேரும் என்று இராமன் கருதவில்லை. பரதன் வலுவாக இப்புதிய வாதத்தைப் பிடித்துக்கொண்டான் என்பதைக் கண்ட இராமன், இப்பொழுது வேறுவழியில் பேச முற்படுகிறான். இனிப்

பரதனிடம் வாதஞ்செய்து பயனில்லை. எனவே, அன்பினால் அவனுக்கு ஆணை இட்டுவிட்டாலோ! இராமன் இட்ட ஆணையை மறுக்கப் பரதன் அஞ்சுவான். எனவே, பரதனுடைய இவ்வச்சத்தையே துணையாகக் கொண்டு இராமன் தன் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முனைந்துவிட்டான். இதற்கு முன்னரும் குகனுடைய அன்பில் தோன்றிய வற்புறுத்தலுக்கு அஞ்சிய இராமன் குகனிடத்திலிருந்து விடைபெற முயலும் பொழுது அன்பினால் இடும் ஆணைவழியையே மேற்கொண்டான். இவ்வொரு வழியாலன்றிக் குகனைத் தன்னிடமிருந்து பிரிக்க வியலாது என்பதையறிந்த இராமன் 'அன்புக்கட்டளை' வழியை மேற்கொண்டானல்லனோ?

> ''எந்தை ஏவஆண்டு ஏழொடு ஏழெனா
> வந்த காலம்நான் வனத்துள் வைக,நீ
> தந்த பாரகம் தன்னை மெய்ம்மையால்
> அந்த நாள்எலாம் ஆள்என் ஆணையால்.'' (திருவடி. 116)

பரதன் வாதத்தை நம்பிக்கொண்டே இராமன் பேசுகிறான் இப்பொழுது. இரண்டு நிகழ்ச்சிகள் உள்ளன இங்கு. இராமன் தந்தை சொல்லை மீறாமல் இருக்க வேண்டுமாயின், பதினான்கு ஆண்டுகள் காட்டில் இருத்தல் வேண்டும். பரதன் வேண்டித் தருவதை மறுக்காமல் இருக்க வேண்டுமாயின் உடன் நாடு திரும்ப வேண்டும். இவை இரண்டும் தம்முள் மாறுபட்டவை. எனவே, அறிவுக் கடலாகிய இராமன் ஒரு புது வழி காண்கிறான்; பாடலின் முதலிரண்டு அடிகளால், 'யான் தந்தை சொல்லைக் காப்பாற்றுகிறேன்,' என்று கூறிவிட்டான்; அடுத்த இரண்டு அடிகளில் பரதனுக்கு அமைதி கூறுகிறான். 'நீ தந்த அரசை யான் ஏற்றுக் கொண்டேன் என்றே வைத்துக்கொள். இப்பொழுது யான் அரசனாகி விட்டேன். ஆனால் எனக்கு இருக்கும் வேறு அலுவல் (காட்டில் 14 ஆண்டுகள் வாழவேண்டுவது) காரணமாக உன்னை அரசனாக நான் நியமிக்கிறேன். என் ஆணையை ஏற்று நீ பதினான்கு ஆண்டுகள் ஆட்சி புரிவாயாக,' என்கிறான் இராமன். 'நீ தந்த பாரகந்தன்னை அந்த நாள் எலாம் (யான் இல்லாத நாள் எல்லாம்) என் ஆணையால் நீ ஆள்க,' என்கிறான். இவ்வாறு இந்த அரிய பாடலுக்குப் பொருள் கூறாமல், பிறர் இடர்ப்படுவர். பரதன் வாதத்தைத் தப்ப முடியாதிருந்த இராமன் அறிவுத் திறத்தால் பரதனும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு முடிபைக் கூறி விட்டான். மேலும், தசரதன் கட்டளை இட்ட பொழுதுதான்

அவனுடைய ஏவலுக்கு அஞ்சி முடிசூட உடன்பட்டதை இப்பொழுது நினைவுறுத்துகிறான் இராமன்; 'அதுபோல நீயும் என் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பாயாக,' என்கிறான்.

'''அன்னது நினைந்து நீஎன் ஆணையை மறுக்க லாமோ?
சொன்னது செய்தி ஐயா! துயருழந்து அயரல்,' என்றான்.''
(திருவடி. 117)

இராமன் கூறிய இந்தச் சொற்களுக்குக் கட்டுப்பட்ட பரதன் அஞ்சத்தக்க ஒரு வஞ்சினம் கூறுகிறான். 'நீ கூறும் பதினான்கு ஆண்டுகள் கழித்து நீ வரவில்லையானால், யான் நெருப்பில் வீழ்ந்து இறந்துபடுவேன்! உன்மேல் ஆணை!' என்கிறான்.

"ஆம்எனில் ஏழிரண்டு ஆண்டில் ஐய!நீ
நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம்
கோமுறை புரிகிலை என்னில் கூர்எரி
சாம்இது சரதம்;நின் ஆணை சாற்றினேன்!''
(திருவடி. 133)

இந்த வஞ்சினத்தைக் கேட்டு அஞ்சிய இராமன், வேறு வழி இன்றி ஒப்புக்கொள்கிறான்; எனினும், சீதையை மீட்டுவரும் வழியில் பரத்துவாசன் இடத்தில் தங்க நேரிடுகையில் பதினான்கு ஆண்டுகள் அன்றுடன் முடிதலின், அனுமனை அனுப்புகிறான். அனுப்பும் பொழுது ''சென்று தீதின்மை செப்பி அத்தீ அவித்து வா,'' (மீஞ்சி. 202) என்று கூறி அனுப்புதலால், பரதன் வாக்குப்படி செய்துவிடுவான் என்பதில் இராமன் கொண்டிருந்த நம்பிக்கை புலனாகிறது.

இராமனை எவ்வாற்றானும் மீட்டுச் செல்லல் இயலாது எனக் கண்ட பரதன், இராமன் ஆணைப்படியே நடக்க முடிபு செய்து விட்டான். 'நான் வரும் வரை என் பிரதிநிதி போல இருந்து ஆள்க,' என்றானல்லனோ இராமன்? அதனால், பரதன் அவனுடைய பிரதிநிதியாகவே இருக்க முடிபு செய்துவிட்டான். மன்னனுடைய குடை, வாள், கிரீடம் என்பவற்றுள் ஒன்றை அவனுடைய அடையாளமாக வைத்துப் பிரதிநிதி ஆள்வது முறையன்றோ? எனவே, இராமனுடைய அடையாளமாக அவனுடைய திருவடிகளைப் பெற்றுச் செல்கிறான் பரதன்.

இவ்விரண்டு சோதரர்களும் அளவிலாப் பரிவினால் செய்து கொண்ட வாதத்திலிருந்து இராமனிடம் பரதன் கொண்ட பெருங்காதலும், அவனுடைய அடக்கமும் பணிவும் கற்றறிவுடைமையும் புலனாகின்றன.

**பரதனும் தசரதனும்**

எல்லை மீறிய அடக்கம் உடையவனாய் இருந்து விட்டமையின் பரதனைப்பற்றி நாம் அறிவதும் சற்றுக் கடினமாகவே உளது. பேச வேண்டிய இடங்களில் அவன் இரண்டொரு சொற்களே பேசுவதால் அவன் மனநிலையை விரிவாகக் காண இயலவில்லை, தந்தையாகிய தசரதன் பரதனைப்பற்றிப் பேசிய சில சொற்களைக்கொண்டு ஒரு முடிபுக்கு வந்தோம். அதாவது, தசரதனுக்குப் பரதனிடம் ஆதியிலிருந்தே அன்பில்லை என்பது தான் அம்முடிபு. அவ்வாறாயின், பரதனாவது தசரதன்மேல் அன்பு பாராட்டினானா என்பதை அறிதல் வேண்டும். உண்மையில் அன்பற்ற, சில சந்தருப்பங்களில் வெறுப்பையுங்காட்டிய தந்தையிடம் பரதன் அன்பு பாராட்டாது இருந்திருப்பின், அதில் வியப்பு ஒன்றும் இல்லை. அவ்வாறு இருந்தும் தந்தையன்பு மிகுதியும் இருந்திருக்கிறது பரதனுக்கு. தந்தை உயிருடன் இருந்த காலத்தில் பரதன் தனது அன்பை வெளிக்காட்ட வாய்ப்பில்லாமல் இருந்தது. ஆனால் கேகயத்திலிருந்து மீண்டு வந்த பிறகே அவன் தந்தை இறந்துவிட்ட செய்தியை அறிகிறான். உள்ளே அடைந்து கிடக்கும் அன்பு வெள்ளம் கரை புரண்டு வெளிப்படுகிறது பரதனுக்கு.

தசரதனுடைய ஒவ்வொரு நற்பண்பையும் நினைந்து நினைந்து அரற்றுகிறான் பரதன். அவனுடைய வீரம், கொடை, பெருந்தன்மை ஆகிய ஒவ்வொன்றும் பரதன் கண்முன்னர் வந்து வந்து செல்கிறது. அவன் இப்பொழுது அரற்றும் திறத்தை வைத்துத் தசரதன் உயிருடன் இருந்த பொழுது எவ்வளவு அன்பு செலுத்தியிருத்தல் கூடும் என்பதை அறிய முடிகிறது. ஆறாத் துயரத்தால் அரற்றும் பொழுதுகூடப் பரதனுடைய அடக்கமும் தன்னலமற்ற தன்மையும் வெளிப்படக் காண்கிறோம். பெரும்பாலும் இறந்த ஒருவரைப் பற்றி அழுபவர் ஒரு முறையைக் கையாள்வர். இறந்தவர் தமக்குச் செய்த உபகாரம், அவர் இல்லாமல் தம்மால் வாழ முடியாத நிலை என்பவை பற்றியே கூறியழக் காண்கிறோம். இறந்தவர்களிடம் சென்ற அன்பைக் காட்டிலும், அவர்களை இழந்து வருந்தும் தங்கள்மேலேயே இவர்களுடைய பரிவு மிகுதியும் இருக்கக் காண்கிறோம். பரதனுடைய புலம்பலில் அவன் தன்னைப்பற்றி ஒரு சொல்லும் கூறாமல் இருக்கிற பண்பாட்டைப் பார்க்கிறோம். 'உன்னை இழந்த நாங்கள் இனி என்ன செய்வோம்!' என்று தன்மைப் பன்மையிற்கூட அவன் பேசவில்லை. இது ஒரு தனிச் சிறப்பாகும்.

''நீதியை, மறந்தனை உனக்குஇதின் மாசு மேலுண்டோ?''
(பள்ளியடை. 48)

என்று கூறத் தொடங்கினான். பிறகு, 'பலருக்கு உபகாரியாய் வாழ்ந்த நீ இன்று உனக்கு மட்டும் வீடுபேற்றைப் பெற்றுச் செல்வது முறையோ?' (49) என்றான். அடுத்து அவனுடைய நினைவு இராமன் மாட்டுச் சென்றது. ஆம்! இராமனைப் பிரிந்து சென்று எவ்வாறு வாழ்கிறான் தசரதன்? 'இராமனைக் கணப் பொழுதும் பிரிந்து வாழ விரும்பாத நீ, இப்பொழுது எவ்வாறு பிரிந்து போயினாய்?' என்கிறான்.

''கண்ணுடை
நுதலவன் மலைவிலின் நோன்மை நூறிய
புதல்வனை எங்ஙனம் பிரிந்து போயினாய்?'' (பள்ளி. 50)

இவ்வாறு அரற்றுகிற நேரத்தில் இராமன் வனஞ் சென்ற செயலைப் பரதன் அறியவில்லை. எனவே, இராமன் அரண் மனையில் இருப்பதாகவே, நினைந்துதான் இவ்வாறு கூறுகிறான்.

அடுத்துத் தந்தையின் கொடைச் சிறப்பு நினைவிற்கு வருகிறது. இவ்வுலகத்தில் வாழ்பவர் யாவரேயாயினும், தசரதனால் கொடை பெற்றவராகவே இருத்தல் கூடும். தன்னால் கொடை பெறப் பட்டாருடன் சமமாக நட்பும் பாராட்டி வாழுதல் இயலாததொன்று. எனவே, 'நட்பாளர் வேண்டும் என்பதற்காக மேலுலகத்தில் அவர்களை நாடிச் சென்றனையோ?' என்கிறான்.

''நண்பினார், அவ்வழி உலகினில் உளர்கொ லோஐயா!''
(ஷை. 51)

அடுத்துத் தசரதனது வீரம் நினைவிற்கு வருகிறது. 'முன்னொரு காலத்தில் சம்பராசுரனைத் தொலைக்க மேலுலகம் சென்றானே! இப்பொழுதும் போயிருப்பதால் அங்கே சம்பரன் போன்றார் வேறு யாரேனும் உளரோ?' என்று கேட்கிறான்.

''சம்பரன் அனையஅத் தானைத் தானவர்
அம்பரத்து இன்னமும் உளர்கொ லோஐயா?''
(ஷை. 53)

இவ்வாறு தந்தையின் பண்பாட்டை ஓயாது நினைத்து உருகும் பரதனுக்கு மீட்டும் இராமன் மாட்டுத் தசரதன் கொண்ட கழிபேரன்புதான் நினைவிற்கு வருகிறது. மிகுதியும் வருந்துகிறான். 'நின்னால் மிகுதியும் அன்பு செய்யப் பெற்ற

இராமன் வளர்ந்து பெரியவனாகியுங்கூட ஆணை ஆழியை அவன் கைகள் ஏந்தாமல் வீணாய் இருக்கின்றன என்பதற்காக ஆழியை அவனிடம் தரவேண்டி நீ இறந்தனையோ?' என்கிறான்.

''ஏழுயர் மதகளிற்று இறைவ! ஏகினை
வாழிய கரியவன் வறியன் கைஎனப்
பாழியம் புயத்துநின் பணியின் நீங்கலா
ஆழியை இனிஅவற்கு அளிக்க எண்ணியோ?''

(பள்ளியடை. 55)

தசரதன் இராமனுக்கு முடி சூட்ட நினைந்து மந்திர ஆலோசனை நடத்தி நாளும் குறிப்பிட்டு, இறுதியில் அது நடைபெறாமல் போன செய்தியும், இராமன் காடு சென்ற செய்தியும், அத்துயரம் தாளாமல் தசரதன் இறந்த செய்தியும் அறியாத பரதன் இப் பொழுது இவ்வாறு பேசுவது நம் வருத்தத்தை மேலும் அதிகப் படுத்துகிறது. பரதன் இவ்வாறு பேசும் பொழுது அதற்கு முன்னர் நடைபெற்றவைகளை நாம் அறிவோமாகலான், இதில் உள்ள ஆனால், பொருத்தமில்லை அறிந்து மேலும் வருந்துகிறோம். இவ்வாறு பேசும் பரதன் நடந்தவற்றுள் ஒன்றையும் அறியாதவனாய்ப் பேசுகிறான் என்பதையும் மனத்துட்கொள்ள வேண்டும். தசரதன் இவ்வாறு சென்றுவிட்டதை நினைக்க நினைக்க அவன்மேல் பரிவு உண்டாகிறது. 'ஐயோ பாவம் இராமனை அவ்வளவு காதலித்த தசரதன். அவ்விராமனுக்கு முடி சூட்டு விழாவை நடத்தித் தன் கண்களால் பார்க்கத் தவம் பண்ணவில்லை போல இருக்கிறது!' என்று அழுகிறான்.

''பற்றுஇலை தவத்தினில்; பயந்த மைந்தற்கு
முற்றுஉலகு அளித்துஅது முறையின் எய்திய
கொற்றநல் முடிமணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும்நின் பெரிய கண்களால்!''

(பள்ளியடை. 56)

முடிசூட்டு விழாவைப் பாராது உயிரை விடத்தசரதன் விரும் பாமல் போராடியதும், விதி அவனை வெற்றி கொண்டதையும் நாம் அறிவோம்; பரதன் அறியான். அறியாமலே இவ்வாறு நடந்த வற்றை நடவாதது போலப் பேசுவதை 'நாடகக் குறிப்பு'[1] என்று கூறுவர் திறனாய்வாளர்.

---

1. Dramatic Irony.
திறனாய்வாளர் கூறும் 'நாடகக் குறிப்பு' என்பதற்கு இது முற்றிலும் இலக்கியமாகாவிடினும், ஓர் அளவு அப்பெயருக்குப் பொருத்தமுடைய நிகழ்ச்சியேயாகும்.

இவ்வாற்றல் மொழிகளிலிருந்து அடக்கமே வடிவாய் இருந்தும் பரதன் தந்தைமாட்டு எவ்வளவு அன்பு வைத்திருந்தான் என்பது தெற்றெனப் புலனாகும். தந்தை என்பதற்காக அவனிடம் அன்பு பாராட்டியதைக்காட்டினும், இராமனைப் பெற்றவன் என்பதற்காகவும், தன்னால் மிகுதியும் போற்றப்பட்ட இராமனை அவனும் மிகுதியும் விரும்பினான் என்பதற்காகவுமே தசரதன்மேல் பரதனுக்கு அன்பு ஏற்பட்டதோ என்றுகூட நினைய வேண்டியுளது.

பரதனும் பெற்ற தாயும்

அறத்தின் வடிவை, செம்மையின் ஆணியை, நீதியாறு புக மண்டும் கடலைப் பெற்றெடுத்த பெரும்பேறு உடையவள் கைகேயி. எவ்வளவு அவள் தீயவளாக மாறிவிட்டாலும், இதனை நாம் மறத்தற்கில்லை. இத்தகைய பரதன் தீய பண்புடைய ஒருத்தி வயிற்றில் தோன்றல் இயலாது. இயற்கையில் நற்பண் புடையவளாய அம்மாதரசி பெற்றதால் இந்நற்பண்புகள் அவனு டன் பிறந்தன. சேர்க்கை காரணமாகப் பின்னர்க் கைகேயி மனம் திரிந்தது உண்மைதான்.

''மனத்து உளதுபோலக் காட்டி மாந்தர்க்கு
இனத்துஉள தாகும் அறிவு.'' (குறள்.54)

என்று பொதுமறை வகுத்த சட்டத்திற்குக் கைகேயி எளிதில் இலக்கியமாகிவிட்டாள். ஆனால், கோசலை இவ்வாறு இல்லை. எனவே, நற்பண்புகளுடன் பிறந்த கைகேயி மைந்தனாகிய பரதன் அப்பெருமாட்டியால் வளர்க்கப் பெற்றமையின், அவன் பண்புகள் மேலும் வளர்ச்சியடைந்தன. கைகேயி இடம் வளர்ந்த காரணத்தாற்போலும் இராமன் இரண்டொரு சிறு பிழைகளை யாவது செய்யப் பரதன் பிழை என்று கூறக்கூடியது ஒன்றையும் கனவினும் கருதாதவனாய் வளர்ந்துவிட்டான்! கோசலை இராமனை நோக்கி, 'பரதன் நிறைகுணத்தவன்; நின்னினும் நல்லன்,' என்று கூறத்தக்க நிலையையும் அடைந்துவிட்டான்.

பிறந்தது தவிரப் பரதன் வளர்ந்தது முழுதும் கோசலை இடத்தில் ஆகலான், கைகேயியிடம் தாயிடம் மகன் செலுத்த வேண்டிய அன்பைப் பரதன் செலுத்தனானா என்று ஆய்வதற்கு இல்லை. தாய் என்று அவன் உரிமை பாராட்டுவ வதெல்லாம் கோசலையிடத்திலாகும். கைகேயியைப் பரதன் சந்தித்துப் பேசும் முதலிடமே அவ்வளவு சரியாய் இல்லை என்று

கூறலாம். கேகய நாட்டிலிருந்து 'இராமனைப் பார்க்க வேண்டும், என்னும் ஆவல் தூண்ட, 'நாளும் பொழுதும் குறிக்காமலே' புறப் பட்டு வந்துவிட்டான் பரதன். அயோத்தியினுள் நுழைந்ததும் களை இழந்து வெறிச்சென்று இருக்கும் நகரத்தைப் பார்த்ததும் அவன் மனம் துணுக்கம் அடைகிறது. உடன் வரும் சத்துருக் கினைப் பார்த்து, 'இளையோய், மன்னன் வைகும் தலைநகர் போல இல்லையே இது! இதென்ன நிலை?' என்கிறான்.

''மன்னன் வைகும் வளநகர் போலும்ஈது
என்ன தன்மை? இளையவ னே!'என் றான்.''

(பள்ளியடை. 36)

இதுகேட்ட இளையவன் மறுபடியும் ஒரு 'நாடகக் குறிப்புத்' தோன்றுமாறு ''திருநகர்த் திருத் தீர்ந்தனளாம்,'' என்றான் (38). சீதை அயோத்தியை விட்டுச் சென்றதைச் சோதரர் இருவரும் இன்னும் அறியவில்லை. அரண்மனையுட் சென்ற பரதன் தந்தை இருக்கக் கூடிய இடங்கள் அனைத்திலும் தேடும் பொழுது கைகேயி அழைப்பதாக ஒருத்தி வந்து கூறவும் தாயிடம் ஓடுகிறான் தந்தையைப் பற்றித் தகவல் அறிந்து கொள்ள!

இவ்வளவு அவசரத்தில் ஓடினாலும் தாயைக் கண்டவுடன் பண்பாட்டை மறந்து தந்தை எங்கே என்று அவன் கேட்கவில்லை. அவனுடைய அடக்கத்திற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு. தாயைக் கண்டவுடன் தன் அவசரத்தையும் படபடப்பையும் உள்ளடக்கிக் கொண்டு அவளை வீழ்ந்து வணங்குகிறான் அப்பெருமகன். தவறு நேர்ந்திருப்பின் அவளே அதனை அவனுக்கு எடுத்துரைத்திருப் பாள் அல்லவா? அவ்வாறு செய்யாமல் அவள் தன்னுடைய தந்தை, தமையன்மார் சுற்றத்தார் முதலிய யாவரும் நலமா என்ற வினாக்களை வரிசையாக அடுக்கிறாள். பரதனுக்கு இது பெருவியப்பாய் இருக்கிறது. தீங்கிருப்பின் அதனை முதலில் கூறாமல் சாவதானமாக ஒவ்வொருவருடைய நலத்தையும் கேட்கும் தாயை என்னென்பது! அவன் மனம் தத்தளிக்கிறது. அவற்றையெல்லாம் உள்ளடக்கிக் கொண்டு அவள் வினவிய அனைத்து வினாக்களுக்கும் ஒரே சொல்லில் விடை கூறிவிட்டான்.

''தீதிலர், எந்தை என்ஐயர் ஏன்னயர்,' என்றனள்;
அந்த மில்குணத் தானும்;' 'அது ஆம்,' என்றான்.''

(பள்ளியடை. 42)

இந்த வினா முறையில் பரதனும் ஓரளவு பொறுமை இழந்து விட்டான்; எனினும், அதனைக் காட்டிக் கொள்ளாமல் உள்ளம்

விம்முவானாய்க் " 'கோமகன் யாண்டையான்? பணித்திர்,' என்று இருகை கூப்பினான்." (43) இனி மேலும் தன் கேள்விக்கு விடை இறுக்காமல் அவள் கேள்விகள் கேட்க வேண்டா என்பதற்காகப் போலும் இரு கை கூப்பினான். அவன் உள்ளத்தில் தோன்றிய விம்மலை அத்தாய் அறியாமலா இருந்திருப்பாள்? அவ்வாறு அறிந்திருந்தும், தன் அருமை மகனுடைய துயரத்தில் பங்கு கொள்ளாததன் காரணம் யாது? இறந்து போன தசரதன்மேல் அன்பு வற்றியிருப்பினும் அருமை மகனைக் கண்டவுடனாவது அவள் அழுகை பீரிட்டு வெளி வந்திராதா? கைகேயி பரதனுடைய நிலையை கண்டும் மனங்கலங்கவில்லை. அவள் மனம் கல்லாகி விட்டது. மகனுடைய வினாவிற்கு இதோ விடை இறுக்கிறாள் தாய்.

"ஆனவன் உரைசெய அழிவில் சிந்தையாள்,
'தானவர் வலிகெட நிமிர்ந்த தானைஅத்
தேன்அமர் தெரியலாள் தேவர் கைதொழ
வானகம் எய்தினான்: வருந்தல் நீ,' என்றான்."

(ஷை. 4)

தசரதன் இறந்ததைக் குறித்து அவனுடைய காதல் மனைவி பேசும் சொற்களா இவை! வழியில் போகிறவர்களைப் பரதன் கேட்டிருந்தாற்கூட அவர்கள் மிகவும் பரிவுடன் விடை கூறியிருப் பார்களே! ஏனோ கைகேயி இவ்வளவு பொறுப்பற்ற முறையில் விடை கூறிவிட்டாள்! தன்னுடைய கணவன் இறந்ததைப் பற்றி அவள் கூறுவதாக இப்பாடலை முதல் முறை படிப்பவர் யாரும் பொருள் கொள்ள முடியாதே! பரதனுடைய துடிப்பைக் கண்டாவது அவள் சற்றுப் பிரிவு காட்டியிருத்தல் ஆகாதா? இவ் விடையைக் கேட்ட நமக்கே மனம் துடித்து அவள்மேல் கோபமும் வருகிறதே! இதனைக் கேட்ட பரதனுக்கு எத்துணைச் சினம் தோன்றியிருக்கும்! அவள் செய்த சூழ்ச்சியாலேதான் தசரதன் இறந்தான் என்று அவன் அறிந்திருப்பின் பெருஞ்சினம் கொண்டிருப்பான். ஆனால், அதை அவன் இன்னும் அறியவில்லை யாகலின், தன் தாய் ஏன் இவ்வளவு பொறுப்பற்ற முறையில் கணவன் சாவைப் பற்றிக் குறிப்பிட்டாள் என்பதை அறிய முடி மாயல் தவிக்கிறான் பரதன்.

அவள் சொற்களைக் கேட்ட பரதன், "நெறிந்து அலர் குஞ்சி யானாய், நெடிது வீழ்ந்து, அறிந்திலன், உயிர்த்திலன்." (45) சிறிது தெளிந்து எழுந்தான். "முகஒளி மழுங்கத் தள் அலர்ந்த

தாமரை ஆய் அலர் நயனங்கள் அருவி சோர்தர'' (46) இதோ பேசுகிறான். எல்லை கடந்த கோபத்திலும். எல்லை கடந்த மகிழ்ச்சியிலும், துயரத்திலும் ஒருவன் பேசும் சொற்களைக் கொண்டே அவனுடைய பண்பாட்டை நன்கு அறியலாம்.

''ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.'' (குறள்.139)

என்ற பொதுமறை ஆழ்ந்த அனுபவத்தின்மேல் தோன்றிய தன்றோ? மனிதன் சாதாரண நேரங்களில் தான் பேசும் சொற்களை ஆய்ந்து அளந்து பேசுகிறான். ஆனால் அளவு மீறிய உணர்ச்சியில் ஆய்ந்து அளந்து பேசுதல் இயலாத காரியம் அத்தகைய நேரங்களில் அவனிடமிருந்து எவ்வகையான சொற்கள் வெளி வருகின்றனவோ, அவை அவனுடைய அகமனத்திலிருந்து வருபவை அல்லவா? இத்ததகய ஒரு கோப நிலையில் இதோ பண் பட்ட பரதன் பேசுகிறான்.

''தீஎரி செவியில்வைத்து அனைய தீயசொல்
நீஅலது உரைசெய நினைப்ப ரோ!'' என்றான்
(பள்ளியடை. 46)

'நெருப்பைக் காதில் வைத்தது போன்ற இக்ககாடிய சொற்களை இவ்வாறு கவலை சிறிதும் இல்லாமல் கூறுவதற்கு உன்னைத்தவிர வேறு யாராவது நினைப்பார்க்களா அம்மா!' என்கிறான். பண் பாட்டின் உச்ச நிலையில் நிற்கும் பரதனுடைய இச்சொற்கள் அவனுடைய அகமனத்திலிருந்து எழுந்தவையாகலின, அவனைப் பற்றி நாம் நன்கு அறிய உதவுகின்றன.

மற்றோர் இலக்கியத்தில் வரும் இத்தகையதோர் இடத்தைக் காணல் நலம் பயக்கும். அப்பூதியடிகள் என்ற அந்தணர் திருநாவுக்கரசர் சமணர்கள் செய்த தீமைகளை எல்லாம் இறைவன் அருளால் வென்று உயிருடன் மீண்டதைக் கேள்விப் பட்டார்; அவரிடத்து மீளாக் காதல் கொண்டார். தம் வீட்டில் உள்ள அனைவருக்கும் அனைத்திற்கும் நாவுக்கரசு என்ற பெயரையே இட்டார். பெரியதொரு தண்ணீர்பந்தலை வைத்து அதற்கு 'நாவுக்கரசு தண்ணீர்ப்பந்தல்' என்றும் பெயரிட்டார். இவ்வளவிற்கும் அவர் நாவுக்கரசரை ஒரு முறை கூடக் கண்ட தில்லை. இவ்வாறு அவர் வாழும் நாளில் ஒருமுறை திருநாவுக் கரசரே அவரைக்காண வந்தார். அவர் தாம் நாவுக்கரசரென்பது அப்பூதியடிகளுக்குத் தெரியாது. வந்தவரை அவர் உபசரிக்கும்

பொழுது வந்த பெரியவர் அப்பூதியடிகளைப் பார்த்து 'ஐயா' நீர் வைத்த தண்ணீர்ப்பந்தலில் நும் பேர் எழுதாதே வேறு ஒரு பேர் எழுத வேண்டிய காரணம் யாது?' என்று வினாவினார், தம்மால் போற்றி வழிபடப்படும் ஒருவருடைய பெயரை இவ்வளவு பொறுப்பற்ற முறையில் 'வேறு ஒரு பேர்' என்று கூறி விட்டார் அல்லவா பெரியவர்? அப்பூதியடிகளுக்கு அளவு மீறிய சினம் பொங்கிவிட்டது. தம்மை மறந்த நிலையிலும் பண் பாட்டை'மறவாமல் அப்பூதியடிகள் பேசுகிறார்.

''நின்றமறை யவர் கேளா நிலைஅழிந்த சிந்தையராய்
'நன்றுஅருளிச் செய்திலீர்! .... எனவெகுள்வார்''
(அப்பூதி. புராணம்13)

நிலை அழிந்த சிந்தையிலும் அப்பூதியடிகள் வாயிலிருந்து வெளி வந்த சொற்கள் எவை தெரியுமா? 'ஐயா, நீர் நல்ல வார்த்தை சொல்லவில்லை' என்பதுதான்.

இதேபோலப் பரதனும் தன்னை மறந்த நிலையிலும் பண்பாடு குறையாமல் தாயிடம் பேசுகிறான். எத்தகைய சூழ் நிலையிலும் தன் பண்பாட்டை மறவாத இம்மனநிலைதான் பரதனை ஆயிரம் இராமர் கட்குச் சமானமானவனாகச் செய்தது என்பதை நினைவில் இருத்தல் வேண்டும்.

தாயின்மேல் உண்டான சினத்தைக்காட்டிலும் தந்தையை இழந்த துயரம் மிகுதியாகிவிட்டதால், பரதன் உடனே தந்தையை நினைந்து புலம்பத் தொடங்கிவிட்டான். இந்த நிலையில் தந்தையின் சாவுக்குத் தாயே காரணம் என்பதைப் பரதன் கன விலும் கருதினவனல்லன். 'சாவு' என்பது பிறந்தவர் அனைவர்க்கும் இயற்கையாக வந்து தீரவேண்டிய ஒன்றுதானே? எனவே, ஒருவர் இறந்ததற்காக மற்றவர்மேல் சினம்கொள்வது அறியாமையின்பாற்படாதோ? ஆதலால், பரதன் தாயின்மேல் சினங்கொள்ளவில்லை. அவள்மேல் குறை கூறுவதாயிருப்பின், பொறுப்பற்ற முறையில் இதனை அறிவித்தாளே என்பது தவிர, வேறு குறை காண்டல் இயலாது. எனவே, தந்தை இயல்பாகவே இறந்தான் என்று கருதிய பரதன் புலம்புகிறான்.

திடீரென்று இச்செய்தியைக் கேட்டதால் உண்டான பெருந் துயரம் ஓரளவு குறைந்தது. உடனே பரதனுக்கு இராமனின்

நினைவு வந்துவிட்டது. சிறிதும் பரிவு காட்டாத தாயிடம் பேசுவ தால் துயரம் குறையாது. ஆகலின், தன் வந்தனைக்கும் அன்புக்கும் உரியவனான இராமனிடம் சென்றாலாவது தன் துயரம் ஆறாதா என்று கருதிய பரதன்,

" 'அந்தம்இல் பெருங்குணத்து இராமன் ஆதலால்
வந்தனை அவன்கழல் வைத்த போதுஅலால்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாது!'என்றான்."
(பள்ளியடை. 58)

இவ்வார்த்தைகள் கைகேயியை நோக்கிக் கூறப்பெற்றவை அல்ல; பரதன் தனக்குத்தானே பேசிக்கொண்ட சொற்கள். என்றாலும், இவ்வாறு கூறும் அவன் இராமனைத் தேடிச் சென்று பிறர் மூலம் கேள்விப்படுதலைக்காட்டிலும் தானே கூறிவிடுவது நலம் என்று நினைத்தாள்போலும் கைகேயி; உடனே கூறத் தொடங்கி விட்டாள்.

" 'தெவ்வடு சிலையினோய்! தேவி தம்பிஎன்று
இவ்விரு வோரொடும் கானத் தான்'என்றாள்."
(பள்ளியடை. 59)

கைகேயி தானே ஏற்படுத்திய சிக்கலில் சிக்கி அறிவை இழந்து விட்டாள் என்பதற்கு இதைவிடச் சான்று வேறு வேண்டுமோ? முன்னரே சினம் கொண்டு துடிக்கும் பரதனுக்கு இச்சொற்கள் மேலும் எவ்வளவு சினமூட்டும் என்பதை அவள் அறியாளா? இதைக் கூறினவுடன், 'ஏன் காடு சென்றான்?' என்ற வினாத் தோன்றாதா? அப்பொழுது அதற்கும் தான் விடை கூற வேண்டி யிருக்குமே! ஏன் இதுபற்றிக் கவலைகொள்ளாமல் கைகேயி இவ்வாறு 'நுணலும் தன் வாயாற் கெடுவது போலப்' பேசுகிறாள்? இதுதான் அறிவு கலங்கியவர் செயல் என்று கூறப்படும். தானே இதனைப் பரதனிடம் கூறாமல் பிறரிடம் அவன் கேட்டுத் தெரிந்து கொள்ளுமாறு விட்டுவிட்டால் அவன் சினம் முழுவதும் அங்கேயே ஓங்கி அடங்கிவிடாதா? எதிரே கூறினால், பரதன் சினமிகுதியால் தவறுதலாக ஏதேனும் செய்துவிட்டால் என்ன ஆவது என்று அவள் நினைந்து பார்க்கவில்லையே! ஆம்! வரன்முறையாக நினைந்து பார்த்து என்ன செய்யலாம் என்று சிந்திக்கும் அறிவைக் கைகேயி இழந்து விட்டாள்.[1]

கைகேயி கூறிய இச்சொற்கள் பரதன் காதில் பட்டன. ஆனால், ஒரு கணம் இவை எவ்வித உணர்ச்சியையும் அவனிடம்

1. 'அரசியர் மூவர்', கம்பன் கலை—பக்கம் 55.

உண்டாக்கவில்லை, ஏன் தெரியுமா? சற்றும் பொருத்தமற்ற சொற்கள் நமக்கு எவ்வித உணர்ச்சியையும் உண்டாக்காமலிருப் பதில் வியப்பென்னை? 'தந்தை கிழவன்; அவன் இறந்தான்,' என்றால், அது நம்பக்கூடிய ஒன்று. ஆனால், தசரதன் இறந்த வுடன்—ஏன்?— இருக்கும் பொழுதேகூட, முடி சூடுதற்குரிய மூத்த மகன், தசரதனின் உயிரனையவன், காட்டில் இருக்கிறான் என்றால், எவ்வாறு இதனை நம்புவது? அதுவும் மனைவியை அழைத்துக்கொண்டு சென்றுள்ளான் எனில், எவ்வாறு அச்சொற் களை நம்புவது? நம்ப முடியாத சொற்களைக் கேட்டால் யார் தான் உணர்ச்சி வசப்படுவர்? எனவே, கைகேயி கூறிய இச்சொற்களை நம்ப முடியாதவனாகிவிட்டான் பரதன். ஆனால், கூறிய ஆளைக் கவனித்தான். விளையாட்டுக்கு இதனைக் கூறக் கூடியவள் அல்லள் கைகேயி. அதுவும் அவளுடைய காதல் திருமகனைப் பற்றியா இவ்வாறு கூறுவாள்? எனவே, அவள் கூறியதால் ஒருகணம் நினைத்துப் பார்த்தும் வேறு வழி இன்மையின் நம்ப நேர்ந்தது. நம்பினவுடன் அச்சொற்கள் அவன் மனத்துள் பதிந்தன; பதிந்தவுடன் உணர்ச்சி யைத் தூண்டின. என்ன உணர்ச்சி என்று நினைக்கிறீர்கள்? தந்தை இறந்தான் என்ற சொல் தோற்றுவித்த துயர உணர்ச்சி அன்று இது; தாய் பொறுப்பற்ற முறையில் கூறியதுபற்றித் தோன்றிய சின உணர்ச்சியும் அன்று. தன்னால் பொறுக்கமுடியாத நிலையில் இதனைக் கேட்கவும் நேரிட்டதே என்று தன்மேலேயே தோன்றிய வெறுப்புணர்ச்சிதான் இப்பொழுது தோன்றிற்று. இவ் வெறுப்புணர்ச்சியால் தூண்டப்பட்ட பரதன் தாயை நோக்கி, "அம்மா, இன்னும் கேட்கவேண்டியவை என்னென்ன உண்டோ, கூறிவிடுங்கள்," என்கிறான்.

" 'வனத்தினன்' என்றுஅவள் இசைத்த மாற்றத்தை
நினைத்தனன் இருந்தனன் நெருப்புஉண் டான்என,
'வினைத்திறம் யாதுஇனி விளைப்பது? இன்னமும்
எனைத்துள கேட்பன துன்பம் யான்?' என்றான்."

(பள்ளியடை. 60)

நினைத்தனன் இருந்தனன்' என்ற சொற்களுக்கு 'இருந்து நினைத்துப் பார்த்துப் பிறகு உணர்ந்தான்' என்பதே பொருள்.

இவ்வாறு பரதன் கூறவும் கைகேயி யாதொன்றும் கூறாமல் இருந்துவிட்டாள். அவள் வாய் மூடி இருப்பதைக்கண்ட பரத னுடைய ஐயம் பல படியாய் விரிந்துவிட்டது. அந்தக் காலத்தில்

ஒருவன் வனத்தை நண்ணினான் என்றால், அது தக்க காரணம் பற்றியதாகவே இருக்கும். வேட்டை கருதியும், தவம் செய்வான் வேண்டியும் மக்கள் வனம் செல்வதுண்டு. ஆனால், இராமன் தான் மட்டுஞ் செல்லாமல் தையலாளையும் உடன்கொண்டு சென்றான் என்று கூறப்பெறுவதால், இவை இரண்டும் காரணமாய் இருத்தற்கில்லை. ஒரு வேளை 'வானப் பிரஸ்த' நிலையில் மனைவியுடன் வனஞ்சார்ந்தான் என்று கூறவும் இராமனுடைய வயது இடந்தரவில்லை. பின்னர் ஏன் வனஞ்சென்றான் இராமன்? சமுதாயத்திற்குத் தீங்கு இழைத்தவர்களையே காட்டுக்கு ஓட்டுதல் மரபு. சூரிய குலத்தில் தோன்றிய 'அசமஞ்சன்' என்பான், மக்களுக்குத் தீங்கு புரிந்தமையின், காட்டிற்கு ஓட்டப்பட்டான். அவ்வாறு ஒரு வேளை இருக்குமோ என்று கருதிய பரதன், 'தீங்கு இழைத்ததாலா'? என்று தனக்குத்தானே கேட்டுக் கொள்வது போலக் கைகேயியைக் கேட்கிறான். நல்ல நிலையிலிருப்பாரும் தெய்வக் குற்றம் செய்தமையின் அறிவு கலங்கிப் பித்துற்றுக் காடு செல்வதும் உண்டு. அவ்வாறிருக்குமோ என்று ஐயுறுகிறான் பரதன். நல்ல நிலையில் இருந்த நளன், தருமன் போன்றார் அகங்காரம் காரணமாகச் சூதாடி நாட்டை இழந்து விதியினால் காட்டிற்குச் செலுத்தப் பட்டனர். அவ்வாறு இருக்குமோ என்றும் ஐயுற்றான்; பரதன் ஒவ்வொரு வினாடி இவ்வாறு நினைத்தாலும், உடனே மனம் மாறிவிட்டான்; அடுத்த கணம், 'யாரைப்பற்றி இவ்வாறு நினைத்துவிட்டோம் தவறாக!' என்று நினைத்து அவ்வாறு தான் நினைத்த செயலுக்கே வருந்துகிறான். 'இத்தகைய தீமைகளை இராமனா செய்வான்? கனவிலுங் கருதமுடியாததொன்று! ஒரு வேளை இராமன் இவ்வாறு செய்திருப்பின் அது உலகத்தார் விரும்பி ஏற்றுக் கொள்ளவேண்டிய செயலாகவல்லவா இருக்கும்? இராமன் ஒன்றைச் செய்தான் எனில், அது பிறருக்கு நன்மை பயப்பதாய் இருக்குமே தவிர, வேறு யாதாய் இருத்தல் கூடும்?' இவ்வாறு நினைந்தவுடன் திடீரென்று பரதனுக்கு ஓர் ஐயம் பிறந்தது. இராமன் காடு சென்றது தன் தந்தை இருக்கும் பொழுதா அன்றி இறந்த பிறகா என்று கேட்கிறான் தாயை.

''ஏங்கினன் விம்மலோடு இருந்த ஏந்தல்அப்
'பூங்கழற் காவலன் வனத்துப் போயது
தீங்குஇழைத் ததனினோ? தெய்வம் சீறியோ?
ஓங்கிய விதியினோ? யாதி னோ?' எனா.

''தீயன இராமனே செய்யு மேல்அவை
தாய்செயல் அல்லவோ தலத்துஉ ளோர்க்கெலாம்?
போயது தாதைவிண் புக்க பின்னரோ,
ஆயதன் முன்னரோ? அ நளு வீர்,'என்றான்,''

(பள்ளியடை. 61, 62)

இவ்விரண்டாவது பாடலில் பரதனது மனப்பண்பை மிக நன்றாக அறிய முடிகிறது நம்மால். இராமன் மாட்டு அவன் கொண்டிருந்த அன்பும் நம்பிக்கையும் எத்தகையன? 'இராமனா தீமை செய்வான்?' என்று ஒரு வினாவை எழுப்பினான். அதற்கு 'ஆம்' என்றோ, 'அல்ல' என்றோ யாரும் விடை கூறவில்லை. ஒரு வேளை தீமையே செய்தான் என்று யாரேனும் கூறுவாராகில்' அதற்கும் விடை காண்கிறது அவனுடைய பண்பட்ட உள்ளம். இராமன் செய்தவற்றில் நன்மை தீமை ஆராய்ச்சி செய்ய யாருக்கும் உரிமை இல்லை. இது முறையா? ஏன் செய்யக்கூடாது என்கிறீர்களா? இதோ விடை கூறுகிறான் பரதன். ஒரு குழந்தையை வளர்க்கும் தாய் நிலைமைக்கு எற்பக் குழந்தைக்கு ஆகாரத்தையும் மருந்தையும் தருகிறாள். சில சந்தருப்பங்களில் குழந்தை உணவை விரும்பிக் கேட்கும் பொழுது தாய் மறுத்துவிடுகிறாள்! அது விரும்பாத மருந்தைத் தருகிறாள். மருந்திலும் சில நேரம் இனிப்புடைய மருந்தையும் இன்னஞ் சில நேரம் கைப்புடைய மருந்தையும் அல்லவா தருகிறாள்? உணவை மறுத்துவிட்டுத் தாய் கைப்பு மருந்தைக் கொடுக்கும் பொழுது அத்தாயைக் காண்பார் யாராவது, 'இது கொடிய செயல்' என்று கூறுவதுண்டா? ஆனால், தாயே கொடுப்பினும், கைப்பு மருந்து இனிப்புடையதாக மாறி விடுமா? கைப்புக் கைப்புத்தான், தாயே அன்புடன் கொடுத்தாலும். ஆனால், அதனைத் தந்த காரணத்தால் தாயைக் கருணை அற்றவள் என்றும் யாரும் கூறுவதில்லையே! அதே போன்று, இராமன் ஒரு கொடுமை செய்துவிட்டான் என்றால், அதனைக் கொடுமை என்று கூறுவதைக் காட்டிலும் கொடுமை வேறு இல்லை. தாய் தந்த மருந்தைக் கொடுமை என்று கூறும் பொழுதுதான் இராமன் செயலையும் கொடுமை என்று கூற வேண்டும். அதனாலேதான் 'தீயன இராமனே செய்யும்?' என்று கேட்டான் பரதன். இவ்வினாவினாலேயே இராமன் தீமை செய்யவே மாட்டான் என்ற விடை கிடைத்து விடுகிறது. ஒரு வேளை அவன் நன்மை என்றுகருதிச் செய்ததைப் பிறர் கொடுமை என்று கருதினால் என் செய்வது? அதற்கும் விடை கூறுகிறான் பரதன் இரண்டாம் அடியில். 'செய்யுமேல் அவை தலத்

துளோர்க்குத் தாய் செயல் அல்லவோ?'' என்கிறான். இராமன் செயல்கள் அனைத்தையும் தாயின் செயலாகக் காணும் பரதனது பண்பாட்டை யாரே அளவிட்டு அறிய முடியும்? ஆம்! அவ் விராமனே தன் வாயால் அறத்தின் வடிவென்றும், செம்மையின் ஆணி என்றும் பரதனைப் புகழ்கிறான்.

மேலே கூறிய அனைத்துக் காரணங்களையும் தவறு என்று கூறிவிட்டுக் கைகேயி அவனுடைய இறுதி வினாவிற்கு மட்டும் விடை கூறுகிறான்.

''அருக்கனே அனையஅவ் வரசர் கோமகன்
இருக்கவே வனத்துஅயன் ஏகி னான்,'என்றாள்.''
(பள்ளியடை. 63)

இவ்வாறு கைகேயி கூறினவுடன் பரதன் தன்னுடைய இயல்பை மறந்து சினங்கொள்கிறான். இக்காரணங்கள் அனைத்தும் இல்லை என்றால், பிறகு இராமன் ஏன் காடு சென்றான்? தசரதன் ஏன் இறந்தான்? இவ்வினாக்களைக் கேட்கும் பொழுதே பரதன் மிக்க சினம் அடைகிறான். அவன் கூறிய காரணங்களுள் எதனாலும் இராமன் வனம் புகவில்லை என்று கைகேயி கூறினவுடன் அறிவுடைப் பரதனுக்கு ஒரு திகைப்பும் ஓர் ஐயமும் பிறக்கின்றன. 'இவை அனைத்தும் இல்லை என்றால், வேறு யாது காரணமாய் இருக்கலாம்!' என்பது திகைப்பு. ஒருவேளை, ஆம் ஒரு வேளை தான், உறுதியாக அன்று, சிறிதும் கலக்கமே இல்லாமல் காட்சி அளிக்கின்ற இத்தாயே இராமன் காடு செல்லக் காரணமாய் இருந்திருப்பாளோ! இந்த ஐயம் தோன்றினவுடன் அவனையும் அறியாமல் பரதனுடைய சினம் கொஞ்சங் கொஞ்சமாகப் பொங்க ஆரம்பிக்கிறது. காரணத்தை உறுதியாக அறிந்து கொள்ளாமல் அவள்மேல் சினங்கொள்ள அவன் விரும்பவில்லை. எனவே, அவனுடைய சினம் அவனுடைய வினாவில் குறிப்பாக வெளிப் படுகிறது.

"'குற்றம்ஒன்று இல்லையேல், கொதித்து வேறுளோர்
செற்றதும் இல்லையேல், தெய்வத் தால்அன்றேல்,
பெற்றவன் இருக்கவே பிள்ளை கான்புக
உற்றதுஎன்? பின்அவன் உலந்தது என்?'என்றான்.''
(பள்ளியடை.64)

முன்னர் அவன் கேட்ட வினாக்களுக்கும் இப்பொழுது வினாவும் வினாக்களுக்கும் உள்ள வேறுபாட்டை அறியாமல்

இருக்க முடியாது. உள்ளே பொங்கிவரும் சினத்தை அடக்கிப் பேசும் முயற்சி இக்கேள்விகளில் புலப்படவில்லையா? அதிலும் 'பெற்றவன் இருக்கவே பிள்ளை கான்புக உற்றது என்?' என்ற வினாவிலேதான் எத்துணைச் சினமும் வெறுப்பும் அடங்கி யிருக்கின்றன! இக்கேள்வியைக்கூட முறையானது என்று கூறி விடலாம். ஆனால், இரண்டாம் வினாவிற்குக் காரணம் யாது? ஒருவனை, 'எவ்வாறு இறந்தான்?' என்று கேட்பது முறை. 'ஏன் இறந்தான்?' என்பது முறையற்றவினா. 'ஏன் இறந்தான்?' என்று கேட்கும் பொழுதே கேட்கப் படுபவர் மற்றவனுடைய சாவுக்குக் காரணமோ என்று ஐயப்படும் மனம் வெளிப்படவில்லையா? 'பின் அவன் (தசரதன்) உலந்தது (இறந்தது) ஏன்?' என்ற வினாவைத் தாயைப் பார்த்து மகன் கேட்பதானால், அது மிக மிக வருந்தற்குரிய ஒரு செயல் அல்லவா? பண்பாடுடைய பரதன் தாயைப்பார்த்து இவ்வாறு கேட்கலாமா? இது அறமா? அறமன்றுதான், மற்றொரு தாயிடம் மற்றொரு மகன் கேட்டிருப்பின். ஆனால், கைகேயியிடம் பரதன் கேட்டால், இது முறைதான். அவன் அவளுடைய நடையுடைபாவனை களைக்கொண்டு அவளே காரணமாகலாமோ என்று ஐயுற்றான். நமக்கு அது எவ்வளவு மெய்ம்மை என்பது தெரியும். ஆனால், அவனுக்கு முன்னர் நடைபெற்றவற்றுள் ஒன்றும் தெரியாதாக லான், அவள் மனநிலையைக் குறிப்பால் உணர்ந்து கொண்டே இவ்வாறு ஐயப்பட்டான் என்று நினைக்கும் பொழுது பரதனது அறிவுத்திறத்தை வியவாமல் இருத்தற்கு இயலவில்லை. இதோ அவனுடைய ஐயத்திற்கு விடை கிடைத்துவிடுகிறது. அவனுடைய வினாக்கள் அனைத்திற்கும் ஒரே பாடலில் கைகேயி விடை கூறிவிடுகிறாள்.

''வாக்கினால் வரம்தரக் கொண்டு, மைந்தனைப்
போக்கினேன் வனத்திடை; போக்கிப் பார்உனக்கு
ஆக்கினேன்; அவன்அது பொறுக்க லாமையால்
நீக்கினான் தன்உயிர் நேமி வேந்து,' என்றாள்.''

(பள்ளியடை. 65)

முதல் முறையாகக் கைகேயி இராமனை 'மைந்தன்' என்று இப்பாடலிலேதான் குறிக்கிறாள். ஏன் தெரியுமா? பரதனிடம் பேசும் பொழுது இதுவரை அவள் இராமனிடம் பாராட்டிய உரிமையை விட்டு விட்டதுபோலப் பேசினால், அவன் சினம் இன்னும் மிகுதிப்படுமன்றோ? எனவே, 'மைந்தனை' என்று

குறித்தாள். மேலும், தசரதனுடைய சாவிற்குத்தான் நேரான காரணம் அல்லள் என்பதை அவள் குறிப்பால் பெற வைக்கிறாள். வரங்கொண்டு இராமனைக் காட்டிற்கு அனுப்பியவளும், அரசைப் பரதனுக்கு ஆக்கியவளும் தானே என்பதை முன் இரண்டு அடிகளிலும் குறித்துவிட்டாள். பின் இரண்டு அடிகளில், 'அச்செயல், பொறுக்காமல் தசரதன் தானே உயிரை விட்டான்,' என்று கூறுகிறாள். பொறுக்கமுடியாமல் உயிர் நீங்கினான் என்று கூறுவதற்குப் பதிலாகத் 'தன் உயிர் நீக்கினான்,' என்று அவள் கூறுவது கவனித்தற்குரியது. ஏறத்தாழத் தசரதன் தற்கொலை செய்துகொண்டான் என்றே குறிப்பிடுகிறாள் கைகேயி. அவள் கூறிய இந்த நுணுக்கம் பரதன் செவிகளிற் புகவே இல்லை. அவன் தன்னை மறந்த நிலைக்குச் சென்றுவிட்டான் முன் அடிகளிற் கூறியதைக் கேட்ட மாத்திரத்திலேயே. தன் உயிர் என்றும் வழிபடு தெய்வம் என்றும் தான் கருதும் இராமனைத் தன்னைப் பெற்ற தாயே காட்டிற்கு அனுப்பினாள் என்பது செவியில் விழுந்தவுடன் அவன் தன்னை மறந்துவிட்டான். தந்தையின் மறைவு குறித்து வருந்தும் பரதன் இப்பொழுது இல்லை. இப்பொழுது கைகேயியின் மகன் அல்லன் எதிரில் நிற்பவன்; தசரதன் மகனும் அல்லன். இராமனுடைய பத்தன் நிற்கிறான். அவன் தெய்வத்தை ஒருவர் வெருட்டிவிட்டார். அது யாராயிருப்பினும் சரி! அவ்வாறு வெருட்டியவர் அவனுடைய பகைவரே. இராமனைப்பற்றி அவன் என்ன நினைந்திருந்தான்?

> ''எந்தையும் யாயும்எம் பிரானும் எம்முனும்
> அந்தம்இல் பெருங்குணத்து இராமன்.'' (பள்ளியடை. 58)

என்றே நினைந்திருந்தான். ஆதலால், அத்தகைய இராமனுக்குத் தீமை புரிந்தவர் யாவராயினும் அவர் அவனுடைய பகைவராவதில் வியப்பு ஒன்றும் இல்லையன்றோ? இதோ அவன் சினங் கொள்கிறான்!

பரதன் சினம்

> ''கூடின புருவங்கள்! குனித்துக் கூத்துநின்று
> ஆடின! உயிர்ப்பிடை அனல்கொ ழுந்துகள்
> ஓடின! உமிழ்ந்தன உதிரம் கண்களே!
>
> ''துடித்தன கபோலங்கள்! சுற்றும் தீச்சுடர்
> பொடித்தன! மயிர்த்தொளை புகையும் போர்த்தது!
> மடித்தது வாய்!நெடு மழைக்கை மண்பக
> அடித்தன ஒன்றொடுஒன்று அசனி அஞ்சவே!''
>
> (பள்ளியடை. 66, 67)

பரதனுடைய இத்தாங்கருஞ்சினத்தைக் கண்டு,

''அஞ்சினர் வானவர்! அவுணர் அச்சத்தால்
துஞ்சினர்! எனைப்பல சொரிம தத்தொளை
எஞ்சின திசைக்கரி! இரவி மீண்டனன்!
வெஞ்சினக் கூற்றும்தன் விழிபு தைத்ததே!''

(பள்ளியடை. 69)

சினம் கொளல் முறையா?

'ஆ! ஈதென்ன வியப்பு! பரதனா இவ்வாறு சினங்கொண்டான்? பண்பாட்டின் வடிவமென்றும் நேர்மையின் ஆணி என்றும், அறத்தின் திருவுரு என்றும், நீதியாறு புகமண்டும் கடல் என்றும், கூறப்பெற்ற பரதனா இவ்வாறு சினங்கொண்டான்? இது முறையா?' என்று நினைக்கத்தோன்றுகிறதா? முறை அன்றுதான். எப்பொழுது முறையன்று? பரதன் கடவுளாய் இருப்பின் முறையன்றுதான். ஆனால், பரதனைக் கடவுள் என்று யார் கூறினர்? அவன் மனிதனே. மனிதனாகவே கம்பநாடன் அவனைப் படைத்து உலவவிடுகிறான். பரதன் மனிதனாகலின், அவனுக்கு இந்நேரத்தில் சினம் வாராமலிருந்தால், அதுவே தவறாகும். மனிதன் உயிரைக்காட்டிலும் சிறப்பாக மதிக்கும் பொருள்கள் சில உண்டு. அப்பொருள்களுக்கு யாரேனும் தீமை செய்வராயின், அப்பொழுது அவன் சினம் கொள்வதில் தவறு இல்லை. பெரியவர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குறிக்கோள் இருக்கும். அக்குறிக்கோளை அவர்கள் உயிரினும் மேலாகப் போற்றுவார்கள்; அக்குறிக்கோளுக்காகவே உயிர் வாழ்வார்கள்; எப்பொழுதேனும் அக்குறிக்கோளுக்குத் தீங்கு நேருமாயின், உயிரை விட்டேனும் குறிக்கோளை நிலைநிறுத்துவார்கள். இவ்வாறு செய்வதாலேதான் அவர்களைப் பெரியோர் என உலகம் மதிக்கிறது; மதித்துப் புகழவும் புகழ்கிறது. உலகில் தோன்றிய பெரியோர் அனைவரும், பெரியபுராணத்தில் கூறப்பெற்ற அடியார் அனைவரும் உட்பட, இவ்வகுப்பைச் சேர்ந்தவரேயாவர். இவர் அனைவருக்கும் தாம் கொண்ட குறிக்கோளே மிகவும் சிறந்தது. இன்னார் தம் உயிரை விட்டேனும் தம் கொள்கையை நிலைநாட்டுவர். இவர்தம் கொள்கைக்கு இடையூறு விளைப்பவர் யாவராயினும் சரி; அவரைக் கொன்றேனும் கொள்கையை நிறைவேற்றுவர். தந்தையின் காலைத் தடிந்த 'சண்டேசுரரும்'[1] இறைவனைப் பழிப்பவர் நாவை அறுத்த 'சத்தியாரும்![2]' அரசன் மனைவி என்றும்

1. பெரியபுராணம். சண்டேசுர நாயனார், 51.
2. பெ. பு. சத்தி நாயனார், 3.

பாராமல் இறைவனுக்குரிய பூவை மோந்து பார்த்தமையின் அவள் மூக்கை அரிந்த 'செருத்துணையாரு'ம்[1] இவ்வினத்தைச் சேர்ந்தவரே!

பரதன் என்ற தசரதன் மைந்தன், இராமன் என்ற தசரதன் மைந்தன் காடு சென்றமைக்காக வருந்தவில்லை; கைகேயி மைந்தன் கோசலை மைந்தனுக்காகவும் வருந்தவில்லை; அயோத்தி நாட்டின் குடிமகன் ஒருவன் அந்நாட்டின் வருங்கால அரசன் காடு சென்று விட்டானே நாட்டை ஆளாமல் என்று அதற்காகவும் வருந்தவில்லை. பின்னர் யார் இப்பொழுது அரற்றுகிறவன்? பரதன் என்ற மனிதன், பண்பாட்டில் நிறைந்த ஒரு மனிதன், அரற்றுகிறான். ஏன்? தன் அண்ணனும், தாயும் தந்தையும், உயிரும் என்று மதித்த ஒருவனை இழந்ததால் துடிக்கிறான் உயிரினும் மேம்பட்ட கொள்கையாக, கொள்கையினும் மேம்பட்ட குறிக்கோளாக அன்றோ இராமனை அவன் கருதி வாழ்ந்தான்! அன்பைச் சொரிதற்குரிய தெய்வமாகக் கொண்ட ஒரு பொருளை இழந்தால் யார்தான் வருந்தாமல் இருக்கமுடியும்? எனவே, வருந்தினான். பின்னர் ஏன் சினம்? ஆம்! பொருளை இயற்கையாக இழந்திருந்தால் வருத்தம் மட்டும் ஏற்பட்டிருக்கும். ஆனால், அவ்வாறு அல்லாமல் செயற்கையாக, மற்றொருவர் சூழ்ச்சி காரணமாக இழந்திருந்தால் அச்சூழ்ச்சியாளர்மேல் சினந்தோன்றாமல் வேறு என்ன தோன்றும்? தான் இல்லாத சந்தருப்பத்தை எதிர் பார்த்து, அப்பொருள் மிகுதியும் தன்னால் போற்றப்படுவது என்பதை நன்கு அறிந்த ஒருவரே அதனைப் போக்கிவிட்டால் போக்கினவர் மேல் சினம் தோன்றாதா? அதிலும், அவ்வாறு போக்கினவர் தன்னுடைய நம்பிக்கைக்கு மிகவும் பாத்திரமானவர் என்றால், அத்துயரம் எத்துணைப் பெரிதாகப் படரும்? ஐயோ! பரதன் கைகேயியை எவ்வளவு நம்பியிருந்தான்! அவளுக்கு இராமன்மேல் அன்பு இல்லாமலிருப்பினும், பெற்றெடுத்த பரதன்மேல் கூடவா அன்பு இல்லை? உண்மையான அன்பு இருந்திருப்பின், அவ்வன்பு அப்பரதனுக்கு விருப்பம் இல்லாத ஒன்றைச் செய்ய அவளைத் தூண்டுமா? பரதன் வெறுப்பான் என்பதை நன்கு அறிந்திருந்தும் அதனைச் செய்யத் தூண்டுமா? பரதன்மேல் அன்பு கொண்டவர் அவன் உடலைப் பேணி வைத்துக்கொண்டு அவனுடைய உயிரைப் பறித்து எறிய முன் வருவரோ? உண்மையில் கைகேயி செய்தது

1. பெ. பு. செருத்துணை நாயனார். 5.

அத்தகைய செய்கைதானே! பரதன் உடலாகவும் இராமன் உயிராகவும் இருந்தார்கள் என்பதை ஒருவனைப் பெற்று மற்றொருவனை வளர்த்த அத்தாய் அறியமாட்டாளா? அறிந்துமா செய்தாள்? ஆம் அறிந்தேதான் செய்தாள். அவ்வா றாயின், அவள் தாய் அல்லள்! இது உறுதி. பரதன் இராமன் என்ற இருவருக்குமே அவள் தாயல்லள்.

கைகேயி என்ற பெண் ஒருத்திதான் இப்பொழுது எதிரே நிற்கிறாள். அதிலும், பரதன் என்னும் அரச குமாரனுடைய உயிரைப் பிரித்துக் காட்டுக்கு அனுப்பிய பெருங்குற்றத்தைப் புரிந்த ஒருத்தியே நிற்கிறாள்; மேலும், அவள் அறியாமையால் இதனைச் செய்யவில்லை; அறிந்தே செய்துள்ளாள். அறிந்து ஒரு கொலையைச் செய்த அவள்மேல் சினங்கொள்வது தவறா? ஆம்! கொலை என்றாற்கூடக் கொலை செய்யப்பட்டவருடைய துயரம் உடன் ஒழிந்துவிடும். கைகேயி செய்தது அதனைக் காட்டிலும் மிக மோசமான ஒரு செயல். பரதனைக் கொன்றிருந்தால் மிக்க மகிழ்ச்சியுடன் அவன் இறந்திருப்பான். ஆனால், அவன் வாழ் நாள் முழுவதும் இருந்து நினைந்து நினைந்து நையக்கூடிய ஒரு செயலை அன்றோ செய்துவிட்டாள்! கொலையினும் கேடான இத் தொழிலைத் செய்த அவளை என்னதான் செய்யக்கூடாது? அதிலும் அவனுக்காகவே இவ்விழிந்த செயலைச் செய்ததாக அவளே கூறினால், அது எவ்வளவு தவறானது? பரதன் நாடாள் வதற்காக இராமனைக் காட்டிற்கு அனுப்பினாளாம். உடம்பை வீட்டில் வைத்துவிட்டு உயிரைப் பிரித்துக் காட்டிற்கு அனுப்பின தோடல்லாமல், அவ்வாறு செய்ததை 'உடலின் நன்மைக்கே செய் தேன்,' என்று ஒருவர் கூறினால், அதனை மன்னிக்கக் கூடுமா? இவ்வாறு பெருந்தவற்றைச் செய்தமைக்காகவே பரதன் அவள் மேல் சினங்கொள்கிறான்.

அவனுடைய சினத்தில் அவளைக் கொன்றுவிட முடிவு செய்துவிட்டான். 'ஆ! பரதன் தாயைக் கொல்லக்கூட முடிவு செய்துவிட்டானா!' என்று வியப்புத் தோன்றுகிறதா? தோன்றும்; நம்மைப் போன்றவர்கட்கே அவ்வாறு தோன்றும். வாழ்க்கையில் உண்டு உடுத்து இன்பமாக வாழ்வதையே குறிக்கோளாகக் கொண்ட நமக்குத் தாய், தந்தை, பிள்ளைகள், மனைவி என்றவர் களிடம் உரிமையும் கடமையும் உண்டு. அவர்களை நலத்துடன் பேணுவதே கடமை. தாய்க்கொலை என்பது நினைக்கவும் கூடாத பெருந்தவறுதான். ஆனால், வாழ்வில் கொண்ட ஒரு குறிக்

கோளுக்கு எதனையும், தாம் உட்படத் தியாகம் செய்யத் துடித்து நிற்பவர்க்கு இக்கடமைகள் பெரியனவல்ல. அவர்களுடைய குறிக்கோள்தான் பெரிதே தவிர, இடை நிற்போர் யாவராயினும் தாயேயாயினும், கவலை இல்லை. அவ்வாறானால், அனைவரும் இந்தச் சமாதானத்தை ஏற்றுக்கொள்ளலாமா? தவறு செய்பவர் அனைவரும் இவ்வாறு கூறித் தப்பித்துக்கொள்ளலாமே என்று தானே நினைக்கிறீர்கள்? அதுதான் முடியாது. ஏன்? ஒவ்வொரு வரும் இத்தகைய சமாதானம் கூறிக்கொண்டு தாய்க்கொலை போன்ற தவறான செயலில் இறங்கும்பொழுது நாம் அவர்களுடைய செயலின் உண்மை பொய்ம்மைகளை எவ்வாறு அறிவது? அவர் கூற்றைத்தான் நம்பவேண்டுமே தவிர, அவர் உண்மையில் இதனைக் குறிக்கோளாகக் கொண்டவர்தாமா என்பதை எவ்வாறு ஆய்வது என்றுதானே ஐயந்தோன்றுகிறது? கவலை வேண்டா. வெகு எளிதாக இதன் உண்மையைக் கண்டு விடலாம். ஒருவர்தம் குறிக்கோளைப் பற்றியும் அதனைக் காக்க வேண்டுவதன் இன்றியமையாமை பற்றியும் எவ்வளவு வேண்டு மானாலும் பேசலாம்; எழுதலாம். அக்குறிக்கோளை நிறை வேற்றுகையில் இடைநிற்போர் யாவராயினும் உதறி எறியத் தயாராகலாம். 'அது முறையா?' என்ற வினாத் தோன்றுகிறது. இவ்வாறு எறியத் தயாராய் இருப்பவர் முதலில் தம்மைப் பற்றி என்ன நினைக்கிறார் என்பதுதான் வினா; குறிக்கோளைக் கொண்டு செலுத்துவதில் தம்முடைய உயிருக்கே தீங்கு நேரு மாயின், அப்பொழுதும் அவர் விடாப்பிடியாகக் கொண்டு செலுத்துபவர்தாமா என்பதுதான் வினா. தம் உயிரைப்பற்றியும் அதனைப் பலி இடுவது பற்றியும் கவலையுறாமல் குறிக்கோளைக் கொண்டு செலுத்துபவர் யாவராயினும் அவர்கட்கே பிறரையும் பலியிடும் உரிமை உண்டு. தம் உயிரைப்பற்றிக் கவலைப்படாமல் குறிக்கோளின் எதிரே பலியிடுபவர் பிறருடைய உயிரையும் பலி யிடுவதில் தவறு இல்லை.

பரதனும் இத்தகைய இனத்தைச் சேர்ந்தவனே. தாயைக் கொல்லக்கூட அவன் சித்தமாகிவிட்டான். ஏன்? இராமனுக்குத் தீங்கு இழைத்தமைக்காகவே. 'அவ்வாறாயின், இராமன் பொருட்டு பரதன் உயிர் தேவைப்பட்டால் தருவானா?' என்பதே வினா. உறுதியாகவும், மகிழ்ச்சியுடனும் அவன் உயிரை இராமன் பொருட்டுத் தருவான். அத்தகைய ஒரு வாய்ப்பை விரும்பி எதிர் பார்த்து அதற்கு மகிழ்ந்து தரக்கூடியவன் பரதன் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பரதனுடைய வாழ்வின் ஒரே குறிக்கோள்,

இராமன் பொருட்டுத் தன்னை அர்ப்பணிக்க வேண்டும் என்பது தான். எனவே, அத்தகைய இராமனுக்குத் தீங்கு இழைத்தமைக் காகப் பரதன் கைகேயிமேல் சினங்கொண்டு அவளைக் கொல்ல முற்படுவானாயின், அவன்மீது யார் தவறு கூற முடியும்?

மேலும், பரதனைக் கைகேயி பெற்றிருக்கலாம். ஆனால், அவன் அவளைத் தாய் எனவே ஏற்றுக்கொள்ளவில்லை. அவள் ஒரு பெண், தசரதன் மனைவி என்ற அளவிலேதான் அவன் ஒப்புகிறான். அந்தப் பெண் இப்பொழுது பெருந்தீங்கை இழைத்து விட்டாள்; அதுவும் அவனுடைய கண்கண்ட தெய்வமாகிய இராமனுக்கு. ஆகலின், இதோ பேசுகிறான். 'எந்தை இறந்தான்; என் தமையன் தவம் பூண்டான். இவை இரண்டும் உனது சூழ்ச்சி யால் நிகழ்ந்தவை. இக்கொடுஞ்செய்தியை நீயே உன் வாயாற் கூறியும், அதனைக் கேட்டு நான் உன் வாயைப் பிளந்துவிடாமல் நின்றேன்! உன்னைச் சும்மா விட்டு நிற்பதே யான் இவ்வரசை ஏற்றுக்கொண்டது போலாகுமன்றோ? நீ இன்னம் இருக்கிறாய். யானும் நிற்கிறேன். 'ஏ!' என்று கூறும் நேரத்துள் உன்னைக் கொன்று வீழ்த்திலேன்! தாய் என்ற காரணத்தாலன்று; இவ்வாறு செய்தால் இராமன் என்மேல் சினங்கொள்வான் ஆகலின், விட்டேன்!' என்ற கருத்துப்பட,

"மாண்டனன் எந்தை, என் தம்முன் மாதவம்
பூண்டனன் நின்கொடும் புணர்ப்பி னால்என்றால்,
கீண்டிலன் வாய்; அது கேட்டு நின்றயான்
ஆண்டன னேஅன்றோ அரசை ஆசையால்?

"நீஇனம் இருந்தனை; யானும் நின்றனன்;
ஏஎனும் மாத்திரத்து எற்று கிற்றிலென்;
ஆயவன் முனியும்என்று அஞ்சி னேன்அலால்,
தாய்எனும் பெயர்எனைத் தடுக்கற் பாலதோ?"

(பள்ளியடை. 71, 72.)

'தாய் எனும் பெயர்' என்று பரதன் கூறுவது அறிதற்பாலது. "உண்மையில் நீ என் தாய் அல்லை. தாயாய் இருப்பின், என் மனக் கருத்தை அறிய முற்பட்டிருக்க மாட்டாயா? இது வரை என் கருத்தும் வாழ்வின் குறிக்கோளும் யாவை என்பதை நீ அறிய மாட்டாயா? அறிந்தால், இவ்வாறு செய்யத் துணிவாயா? அறியாது செய்தாய் என்றால், உன்னைத் தாய் என்று கூறுவதன்

பொருள் என்ன?'' என்ற கருத்துக்கள் உள்ளடங்கத் 'தாய் என்ற பெயர் பூண்டிருப்பதால் அது என்னைத் தடை செய்துவிடுமா?' என்று கூறுகிறான்.

அறத்தின் வடிவான பரதன் இராமன் என்ற தமையன் காட்டில் சென்று வருந்துவானே என்பதற்காக மட்டும் வருந்த வில்லை. பரதன் என்ற மனிதன், 'இராமன் என்ற மனிதன் இவ்வாறு காட்டில் துன்புற நேர்ந்ததே!' என்று வருந்துவது உண்மை. ஒரு மனிதன் மற்றொரு மனிதனிடம் காட்டவேண்டிய அன்பு காரணமாகத் தோன்றும் வருத்தமாகும் அது. அரசச் செல்வத்தில் பிறந்து வளர்ந்த இராமன் எவ்வித நலங்களும் இல்லாததும் துயரம் தருவதுமான காட்டில் சென்று வாட நேர்ந்தது என்று நினைக்கையில் பரதன் மனம் மெழுகாய் உருகு கிறது. 'இராமன் கனியும் கிழங்கும் உண்ண, யான் மட்டும் அரிசிச்சோறு உண்பேனா!' என்கிறான்.

''கையார் கல்லைப் புல்அடகு உண்ணக் கலமேந்தி
ஐயோ! நான்இன் சாலியின் வெண்சோறு அமுதுஎன்ன
நெய்யோடு உண்ண நின்றது நின்றார் நினையாரோ!''
(பள்ளியடை. 81)

இவ்வகை வருத்தம் பரதனைப் பீடித்தது ஒரு புறம் இருக்க 'இராமன் காடு சென்றதால் அறம் பிழைத்துவிட்டதே!' என்று வருந்துகிறான் அறத்தின் மூர்த்தி.

''மாளவும் உளன்ஒரு மன்னன்; வன்சொலால்
மீளவும் உளன்ஒரு வீரன்; மேயபார்
ஆளவும் உளன்ஒரு பரதன் ஆயினால்,
கோள்அலது அறநெறி குறைஉண் டாகுமோ?''
(பள்ளியடை. 73)

மேலே கூறிய அனைத்தும் நடைபெற்றுவிட்டதால் அறம் பிழைத்து விட்டதே என்று வருந்துகிறான். 'அறத்தின் நாயகன் இராமன்,' என்று பரதன் கருதியதே பரதனுடைய அன்பிற்குப் பெருங்காரண மாய் இருந்தது. இராமனுக்குச் செய்த தீமை அறத்திற்குச் செய்த தீமை என்றே பரதன் கருதுகிறான். அறத்திற்குத் தீங்கிழைப்பதும், அவ்விழைத்தலுக்குத் துணையாக இருப்பதும், ஒருவர் இழைக்கப் பார்த்துக் கொண்டிருப்பதும் தவறான செயல் என்பது கூற வேண்டுவதின்று.

உலகில் மனிதனாய்ப் பிறந்த ஒருவன் எச்செயலைச் செய்வ தாயினும், அதனுடைய அப்போதைய பிற்பட்ட-பயனை மட்டும்

பாராமல், 'இதனைச் செய்தால் பிறர் எவ்வாறு நினைப்பர்?' என்று ஆய்ந்தும் செய்யவேண்டும் என்பது தமிழர் கண்ட முடிபாகும். சங்ககாலச் சான்றோர்கள் பாடிய பாடல்களில் இக் கருத்தைப் பரக்கக் காணலாம்.

''புகழ்எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்.'' (புறம். 182)

''குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக.'' (புறம். 72)

''பழிதீர் ஆற்றல்'' (புறம். 227)

''கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்'' (அகம். 112)

''செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை.'' (குறள். 656)

''பிறர்பழியும் தம்பழிபோல் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு'' (குறள், 1015)

என்பன அச்சான்றோர் கூற்று. ஒருவனுடைய வாழ்வு அறவாழ் வாய் இருக்குமானால், அதில் பழிபுகுதக் காரணம் இல்லை. ஊரில் உள்ளவர் ஒருவருமே தவறு கூறமுடியாதபடி ஒருவர் வாழ முடியுமா என்று கேட்கப்படலாம். அது இயலாதுதான் ஆதலாலே தான் பழிக்கு அடைமொழி தருகிறார் குறளாசிரியர். 'சான்றோர் பழிக்கும் வினைசெய்யற்க,' என்பதால், 'அற்பர்கள் புறங்கூறு வோர் முதலாயினோர் பழி பேசினால் அதற்குக் கவலைப்பட வேண்டா,' என்பதே கருத்து. எனவே, இவற்றிலிருந்து அறியப் படுவதென்னையெனில், எக்காரணத்தானும் தமிழர் பழி பெறு வதை விரும்பவில்லை. பழியுடன் இன்பம் வருவதாயினும் அதனை விரும்பமாட்டார்கள் எனின், பழிக்கு எத்துணை அஞ்சி வாழ்ந்தார்கள் தமிழர்கள் என்பது புலனாம்.

தமிழ்க் கம்பன் இக்கருத்தில் ஊறித் திளைப்பவன். அவனுடைய உடலில் ஓடும் குருதி முழுவதும் தமிழ்ப் பண் பாட்டை அறிந்து அதனைப் பறைசாற்றுவதாகலின், சமயம் நேர்ந்த பொழுது தமிழர்களுடைய தலையாய இக்கருத்தைப் பெய்துவைத்துவிட விரும்புகிறான். இப்பொழுது தக்கதொரு சந்தருப்பம் வந்துளது. அவனுடைய படைப்பாகிய பரதன் அரற்றுகிறான்; தமையனுக்குத் தாய் செய்த கொடுமை கண்டு அரற்றுகிறான். அம்மட்டோ? அக்கொடுமையால் நேர்ந்த பழியையும் நினைந்து அரற்றுகிறான். மேலே காட்டிய பாடல்கள் அனைத்திலும் 'சான்றோர்கள் பழியை வெறுப்பார்கள்,' என்பது

தானே பெறப்பட்டது? சான்றோர்களுள் ஒரு சான்றோனாகப் படைக்கப்பட்டுள்ளான் பரதன். எனவே, அவனும் பழிக்கு நாணுகிறான்; வந்த பழியை நினைந்து நினைந்து அழுகிறான். அவன் அழுவதாக அமைந்த பதினைந்து பாடல்களில் பத்து இடங்களில் தனக்கு ஏற்பட்ட பழியை நினைந்து வருந்துகிறான். இன்பத்துடன் வரும் பழியைக்கூடப் பெரியோர்கள் விரும்பமாட்டார்கள் எனில், இன்பமும் தாராமல் பெருந்துன்பத்தையே விளைக்கும் பழியை யார்தாம் விரும்புவர்? அதிலும் சான்றோர் அதனைத் திரும்பியும் பார்ப்பரோ? இதே பரதன் தனக்குற்ற பழியை நினைந்து கவல்கிறான்.

''சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால்
வழியுடைத் தாய்வரு மரபை மாய்த்துஒரு
பழியுடைத்து ஆக்கினன் பரதன் ..... ...''
(பள்ளியடை. (74)

''மாயிர் மாயா வன்பழி தந்தீர்'' (76)

''உயிரோடும், தின்றும் தீரா வன்பழி கொண்டு'' (77)

''பிறந்தான் ஆண்டான் என்னும் இதனால் பெறலாமே''(78)

''வசை கொண்டான்.'' (79)

''மாயேன் வன்பழி கொண்டேன்.'' (82)

''யான்உயிர் பேணிப் பழிபூணேன்.'' (83)

''தீராது ஒன்றானும் பழி.'' (83)

''என்றேனுந்தான் என்பழி மாயும் இடம்உண்டோ?'' (84)

''வானாப் பழி பூண்டேன்!'' (85)

என்பன பரதன் பரிவுரை.

ஏறத்தாழ அவனுடைய பேச்சிற் பெரும்பகுதி பழி பற்றியதாகவே உளது. பழிக்கு இத்துணைத் தூரம் நாண வேண்டுமாயின், அவனுடைய பண்பாட்டை நினைக்க நினைக்க வியப்பே மேலிடுகிறது. இதில் மேலும் வியப்பு என்னை எனில், உண்மையில் பழிக்கு உரிய செயல் ஒன்றையும் பரதன் செய்யவில்லை. பழிச் செயலைச் செய்தவள் கைகேயி. பரதனுக்கு அதில் பங்கு சிறிதும் இல்லை என்பதை அனைவரும் அறிவர். தசரதன், இராமன், கைகேயி என்ற மூவரும் நன்கு அறிந்ததொன்றே இச்செய்தி. கோசலையும், இலக்குவனும் 'பரதனுக்கும் இதில் பங்கு உண்டோ!' என்று ஐயுற்றதுண்டு. ஆனால், இறுதியில் அவ்விருவரும் 'கழிவிரக்கம்' காட்டும் அளவிற்கு உண்மை உணர்ந்துவிட்டனர்.

எனவே, ஒருவரும் நினையாமல் இருக்கவும் தனக்குப் பெரும் பழி வந்துவிட்டதாகப் பரதன் ஏன் இவ்வளவு தூரம் கலங்க வேண்டும்? அவனது மனச்சான்றே அவன் குற்றமற்றவன் என்பதை நன்கு வெளியிடுமே! அவ்வாறு இருக்க, ஏன் கவலை? உலகத்தார் தன் மேல் குறை இன்மையை எடுத்துக் கூறுவர் என்பதை அவன் அறியானா? நன்றாக அறிவான். தான்செய்யாத செயலுக்குத் தன்மேல் யாரும் பழி கூறமாட்டார் என்னும் மெய்ம்மையை அறிந்ததாலேதான் உயிரை வைத்திருப்பதாக அவனே கூறுகிறான். ஒருவர் நஞ்சைக் கண்ட மாத்திரையோ, அன்றித் தொட்ட மாத்திரையோ அவரை அந்நஞ்சு கொன்றுவிடுவதில்லை. அதே போல ஒருவர் தவறு செய்தவர் பிள்ளையாய்த் தோன்றின மாத்திரையில் அவரையும் தவறு செய்தவர் என்று உலகம் கூறிவிடுவதில்லை. அதனாலேதான் தான் இறவாமல் உயிரை வைத்திருப்பதாகப் பரதனே கூறுகிறான்.

''உண்ணா நஞ்சம் கொல்கிலது என்னும் உரைஉண்டுஎன்று
எண்ணா நின்றேன் அன்றி இரேன்என் உயிரோடே.''
(பள்ளியடை. 85)

இவ்வாறு தன்மேல் பழி வாராது என்று உறுதியாக நம்புகிற பரதன், ஏன் பத்து இடங்களில் பழியைப் பற்றி அரற்ற வேண்டும்? அதிலும் ஓர் உண்மை உளது. அவன் சான்றோன் என்பதற்கு அதுவே ஆதாரம். எவன் ஒருவன் தான் பழிக்குரிய செயலைச் செய்யாவிடினும் பிறர் ஒருவர் செய்த பழியைத் தான் செய்தது போல நினைந்து நாணம் அடைகிறானோ, அவனைச் சான்றோருட் சான்றோனாகக் கூறுவர் பெரியோர். பரதன் அத்தகையன்; ஆகவேதான் பிறர் செய்த பழிக்குத் தான் நாணுகிறான்.

''பிறர்பழியும் தம்பழிபோல் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு'' (குறள். 1015)

என்ற குறளுக்கு இலக்கியமாகிறான் பரதன். கைகேயியைத் தாய் என்று நினையாவிடினும் அவளைப் பகை என்றே அவன் கருதிக் கூறி உணர்ந்தாலும், அவள் செய்த பழிக்கு அவன் நாணுகிறான். நாணுடைமை என்ற பண்பாட்டிற்கு உறைபதியாய் விளங்கும் சால்புடையவனாகலின், இவ்வாறு அவள் செய்த பழியைத் தான் செய்ததாகவே கருதிக் கருதி நைந்து வருந்துகிறான்.

பரதனும் அமைச்சரும்

பரதனைத் தேற்றிய வசிட்டன் அவனை அரசை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டுகிறான். வசிட்டனுடைய இவ் வேண்டு கோளைக் கேட்ட பரதன், 'நஞ்சினை நுகர் என நடுங்குவாரினும் அஞ்சினன் அயர்த்தனன் அருவிக் கண்ணின'னாய் (ஆறுசெல். 12) அவையோரை நோக்கிப் பேசுகிறான். 'மூவுலகுக்கும் முதல்வ னானவன் மூத்தவனாய் இருக்க யான் மகுடம் சூடுதல் அறமா?' (14) என்கிறான்; இதனையடுத்து அவையோருக்கும் ஓர் இக் கட்டான நிலையை உண்டாக்குகிறான்.

''அடைவரும் கொடுமைஎன் அன்னை செய்கையை
நடைவரும் தன்மைநீர் நன்றுஇது என்றலின்
இடைவரும் காலம்ஈண்டு இரண்டு நீத்துஇது
கடைவரும் தீநெறிக் கலியின் ஆட்சியோ?''

(ஆற்று. 15)

'கொடுமை செய்து வரம் பெற்ற என்னுடைய அன்னையின் செயலை நேர்மையானது என்று நம்பினால்தான் அதன் அடுத்த படியான பட்டத்தையும் எனக்குத் தர முடியும். நீவீர் என் அன்னை செய்தது, சரி என்று ஒப்புகிறீரா? அவ்வாறு ஒப்பினால் இது கலிகாலத்தின் கொடுமையே தவிர, வேறு ஒன்றும் அன்று,' என் கிறான். மேலும், 'அரசவையில் பலகாலம் இருந்து அனுபவம் பெற்ற நீவிர் யாரேனும் பண்டுதொட்டு இன்றுவரை மூத்தவன் இருக்க இளையவன் அரசு புரிந்த வரலாறு கேட்டதுண்டா? உண்டாயின் கூறுக,' (16) என்கிறான். இவை இரண்டு வினாக் கட்கும் அவையோர் எவ்விதமான விடையைத் தருதல் கூடும்? தாய் செய்தது முறை அன்று என்று கூறுவரேல், பரதனைப் பார்த்துப் பட்டத்தை ஏற்றுக்கொள் என்று கூறவும் இயலாது. எனவே, அவர்கள் யாது விடை கூறலாம் என்று ஆராய்கின்ற நேரத்தில் பரதனே தன் கருத்தைப் பேசிவிடுகிறான்.

''அன்னவன் தனைக்கொணர்ந்து அலங்கல் மாமுடி
தொன்னெறி முறைமையில் சூட்டல் காண்டிரால்''

(ஆற்று. 17)

'இராமன் எவ்வாறு நினைப்பான் என்பது தெரியாமல் பரதன் இவ்வாறு சபையோரை நோக்கிக் கூறலாமா?' என்று சிலர் நினைக் கலாம். தான் நினைந்தபடி இராமன் வர மறுக்கவும் கூடும் என்பதை அவ்விராமனின் தம்பியாகிய பரதனா அறியாமல் இருப்பான்? எனவே, ஒரு வேளை இராமன் வர மறுத்துவிட்டால்

யாது நடைபெறும் என்பது பற்றியும் அவனே விடை கூறிவிடு கிறான். 'அவ்வாறு இராமன் வர மறுத்துவிட்டாலும், யான் அது பற்றிக் கவலவில்லை. அவ்விராமனுடன் தங்கி அரிய காட்டில் நல்ல தவத்தை ஆற்றுவேன். இராமன் என் கொள்கையைக் கட்டுப்படுத்த முயன்றால், என் உயிரை மாய்த்துக் கொள்வேன்!' என்னும் கருத்தில்,

''அன்றுஎனில் அவனொடும் அரிய கானிடை
நின்றுஇனிது அருந்தவம் நெறியின் ஆற்றுவன்;
ஒன்றுஇனி உரைப்பின்என் உயிரை நீக்குவென்!''

என்று வஞ்சினம் போலக் கூறுகிறான். இத்தகைய உறுதி படைத்தவனை யார்தாம் என்ன செய்ய முடியும்? எனவே, அவையோர் இதோ அவனைப் புகழ்கின்றனர்.

''வான்தொடர் திருவினை மறுத்தி; மன்இளந்
தோன்றல்கள் யாருளர் நின்னின் தோன்றினார்?

''ஆழியை உருட்டியும் அறங்கள் போற்றியும்
வேள்வியை இயற்றியும் வளர்க்க வேண்டுமோ?
ஏழினொடு ஏழ்எனும் உலகம் எஞ்சினும்
வாழிய நின்புகழ்!' என்று வாழ்த்தினார்.''

(ஷ். 19, 20

தசரதனிடத்தும் இராமனிடத்தும் பெருமதிப்பும் அன்பும் கொண்டிருந்த இவர்கள் பரதனைப் போற்றினார்கள் எனில், அதுவும், 'பதினான்கு உலகங்களும் அழியினும், நின்புகழ்? எஞ்சுமோ?' என வாழ்த்தினர் எனில், பரதனுடைய உயர்குணத் திற்கு வேறு சான்றும் தேவையோ?

### கம்பன் காட்டும் பரதன்

இது காறும் பரதனைப் பிறர் கண்ட முறையையும், நாம் கண்ட முறையையும் கண்டோம். இவற்றிலிருந்து பரதனைப் பற்றிய ஒரு முழுத்தன்மையை அறிய முயல வேண்டும். இராமன், பரதன் என்ற இருவருமே கம்பனுடைய படைப்புக்களே. ஆனால், இருவரையும் இரு வேறு அச்சுக்களில் வார்க்கிறான் கம்பன் என்னும் கலைஞன். தொடக்கத்திலிருந்தே இராமனைக் கடவு ளாகவே காண்கிறான் கம்பன். வான்மீகியார் இராமனை மனிதருள் சிறந்தவனாக்கிக் களித்தார். ஏனைய புத்த இராமா யணம், சைன இராமாயணம் போன்றவற்றிலும் இராமனை

மனிதருள் சிறந்தவனாகவே காணலாம். ஆனால், கம்பநாடன் செய்த பல்வேறு புரட்சிகளுள் இதுவும் ஒன்று. இராமனைக் கடவுளாகவே கொண்டுவிட்டான். விராதன், சரபங்கன், வாலி முதலானவர்கள் கூற்றிலும் இக்கருத்தையே காண்கிறோம். இவை அனைத்தும் ஒரு புறம் நிற்க. இராவணனுங்கூட இராமனுடைய கடவுள் இயல்பை ஒரு கணம் அறிகிறான்.

''இவனோ தான்அவ் வேதமுதற்கா ரணன்என்பான்?''
(இரா். வதை .235)

'இவை அனைத்தும் பாத்திரங்களின் கூற்றுக்களாகையால் நூலாசிரியரின் கருத்தும் இது எனக் கூறல் பொருந்தாது,' எனில், ஆசிரியன் தானாகக் கூறும் இடங்களும் உண்டு. ஒன்றைக் காண லாம்.

'வாலி தன் மார்பிற்பாய்ந்த அம்பை உருவி அதில் எழுதியுள்ள பெயரைக் காண்கிறான்,' என்ற இடத்துக் கவிஞன் கூற்றாக வரும் சொற்கள் நூலாசிரியனும் இராமனைக் கடவுளாகவே கொண்டான் என்பதை அறிவுறுத்துகின்றன.

''மும்மைசால் உலகுக்கு எல்லாம் மூலமந் திரத்தை முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தைத் தானே
இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்
செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களில் தெரியக் கண்டான்''
(வாலி வதை71.)

எனவே, இதிலிருந்து இராமனைப் பொறுத்தமட்டில் கம்பநாடன் எத்தகைய கருத்தைக் கொண்டிருந்தான் என்பதில் ஐயம் இன்று. ஆனால், அவன் பரதனை எவ்வாறு கருதிப் படைத்தான்? ஒரு பாத்திரத்தைக் கடவுளாகவே படைத்து, அப்பாத்திரத்திடம் உயர்ந்த பண்புகளை ஏற்றுதலில் வியப்பு ஒன்றும் இல்லை. ஆனால், மனிதனாகவே ஒரு பாத்திரத்தைப் படைத்து அதனிடம் உயர்பண்புகளை ஏற்றிக் காட்டுவதிலேதான் முழுச் சிறப்பும் இருக்கிறது. இராமன் நீங்கலாக உள்ள பாத்திரங்கள் அனைவரும் மனிதப் பண்புடன் விளங்குகிறார்கள். எனவே, மனிதர்கட்குரிய குறைவு நிறைவுகளையும் அவர்களிடம் காணலாம். சிலரிடம் குறைவு மிகுதியாகவும், சிலரிடம் நிறைவு மிகுதியாகவும் காணப் படலாம்.

பாத்திரங்களின் பண்பாடுகளை ஆயும்பொழுது மறவாமல் மனத்துள் இருத்தற்குரிய சட்டம் ஒன்று உண்டு. முழுவதும் நிறைவேயுடையாரும் முழுவதும் குறைவேயுடையாரும் யாண்டும் இவ்வுலகில் இல்லை. எனவே, குண ஆராய்ச்சி செய்யும் பொழுதும் இதனை மனத்துட்கொண்டு ஒரு பாத்திரத்தின் குறைவு நிறைவுகளைக் காண்டல் வேண்டும். வள்ளுவப் பெருந்தகை கூறிய,

‘‘குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்’’ (குறள். 504)

என்ற குறளைக் கனவிலும் மறத்தலாகாது. இக் குறளுக்குச் சரியான பொருள் காண்டலும் சற்றுக் கடினமானதே. ஏன் எனில், ‘மிகை’ என்ற சொல் அவரவர் விருப்பம் போலப் பொருள்படக் கூடிய ஒப்புநோக்குச் சொல்லாகும். மிகை என்றால் என்ன? அளவால் மிகையையும், பண்பால் மிகையையும் ‘மிகை’ என்றே கூறுகிறோம். ஒருவரிடம் எண்ணிக்கையால் பலவான நல்லியல்பு களும் இருத்தல் கூடும். ஆனால், அவை அனைத்தையும் போக்கி விடக் கூடிய ஒரு தீய பண்பு இருக்கலாம். இந்நிலையில் குறளுக்கு ‘(அளவால்) மிகை நாடி’ என்று பொருள் கோடல் தவறாக முடிந்து விடும். பல சிறு சிறு தீய குணங்கள் இருந்தும் அவை அனைத்தையும் போக்கக் கூடிய ஒரு பெரிய நற்குணம் இருத்தலும் கூடுமன்றோ? இவை அனைத்தையும் ஆய்ந்து குறளுக்கு உரை காண்டல் வேண்டும். இக்கருத்தை மனத்துட் கொண்டு பார்த்தால் தசரதன் கைகேயி என்பவர்களிடம் சிறு சிறு தவறுகளாகப் பல இருத்தலைக் காணலாம். ஆனால், இராவணனிடம் ‘பிறர் மனை நய’க்கின்ற ஒரே ஒரு தவறுதான் காண்டல் கூடும். என்றாலும் என்ன? பல சிறு தவறுகள் இருந்தும் தசரதனை நல்லவன் என்றும் ஒரே தவறு இருந்தும் இராவணனை மிகவும் தீயவன் என்றும் கூறுகிறோம். எனவே, தவறும் இருவகைப்படும்; ஒன்று, அளவால் கணக்கிடப் படுவது; ஏனையது, தன்மையால் கணக்கிடப்படுவது.

பரதனுடைய பண்பாட்டை ஆயும் பொழுது இவற்றை மனத்துட்கொண்டுதான் ஆய வேண்டும். பரதன் என்ற ஒரு மனிதன் தோன்றுகிறான். அதுவும் நீண்டநாள் மகப்பேறில்லாத மன்னன் ஒருவனுக்கு இரண்டாம் மைந்தனாய்ப் பிறக்கிறான்; கல்வி கேள்விகளில் நல்ல பயிற்சி பெறுகிறான்; பெற்ற தாயிடம் அல்லாமல் மாற்றாந்தாயிடம் வளர்கிறான். தன் மூத்தவனாகிய

இராமனுடைய பண்பாட்டில் ஈடுபட்டு அவனைத் தன் வழிபடு கடவுளாகவே மதித்துப் போற்றுகிறான். இவ் வழிபாடு அவனை மேலும் மேலும் உயரத் தூண்டுகிறது. உலகிடை மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் ஒரு குறிக்கோள் தேவைப்படுகிறது. குறிக்கோள் இல்லாதவன் புற உடல் அமைப்பில் மனிதனாகவே காணப்படினும் ஆன்றோரால் மனிதனாக மதிக்கப்பட மாட்டான். 'குறிக்கோள் இலாது கெட்டேன்' (நாவு. தேவாரம். 4: 67: 9) என்று நாவுக்கரசு நாயனாரும் 'தமக்கு என முயலா நோன்தாள் பிறர்க்கு என முயலுநர் உண்மையானே' (புறம். 182) என்று சங்கப் புலவரும் முழங்குகின்றனர். ஒருவருடைய குறிக்கோள் எத்தகையதாக இருத்தல் வேண்டும் என்று கூற யாருக்கும் உரிமை இல்லை. ஆனால், மேற்கொண்ட குறிக்கோளுக்கு எத்தகைய இடையூறு நேர்ந்தாலும் உயிரைவிட்டேனும் குறிக்கோளைக் காக்கவேண்டிய கடமை குறிக்கோளை மேற்கொண்டவர்கட்கு உண்டு.

பரதனும் ஒரு குறிக்கோளை மேற்கொண்டிருந்தான். அது யாது? தன் மூத்தோனாய இராமனைப் போற்றி வழிபட்டு அவன் வழி நிற்றலாம். அவனுடைய ஒவ்வொரு பேச்சும் இராமனைப் பற்றிய புகழுரையாகவும், அவனுடைய ஒவ்வொரு செயலும் இராமனுக்கு உகந்ததாகவும் இருப்பதே அவனுடைய வாழ்க்கையின் குறிக்கோள். மிகச் சில சொற்களே பேசும் இயல்புடையவன் பரதன். மிக இன்றியமையாத சந்தருப்பம் நேர்ந்தால் ஒழியப் பேசமாட்டான்; பேச வேண்டிய வாய்ப்பு நேர்ந்த பொழுதே பேசுகிறான். அவன் எப்பொழுது வாய் திறந்தாலும் பயனற்ற சொல் ஒன்றுகூட அவன் வாயிலிருந்து வெளியாவதில்லை. மிகுதியும் தன் அடக்கம் உடையவர்கட்கே இவ்வாறு வாய் மூடி அதிகம் பேசாதிருக்கும் இயல்பு அமையக் கூடும். எனவே, பரதன் மிகுதியும் அடக்கம் உடையவன் என்பது இதனானாலும் பெறப்படுகிறது.

பரதன் தன்னுடைய உணர்ச்சி எதுவாயினும் அதனை மிகுதியும் வெளிக்காட்டக் கூடியவன் அல்லன் என்பதும் அறிய முடிகிறது. பரதன் திருமணம் முடிந்து அயோத்தி வந்தவுடன் தசரதன், அவனைக் 'கேகயநாடு செல்க' என்று பணித்து விட்டான். அந்த ஆணையை உடன் சிரமேற்கொண்டு பரதன் கேகய நாடு சென்றுவிட்டான். இவ்வளவு விரைவாகத் தந்தை ஏன் தன்னை அனுப்ப வேண்டும் என்பது பற்றி அவன் நினைக்க

வில்லை. ஒரு வேளை நினைத்திருந்தாலும் அதனை எப்பொழுதும் வெளியிடவில்லை. மேலும், கேகய நாட்டில் உறையும் பொழுதும் அவனுடைய எண்ணம் முழுவதும் அயோத்தியிலேதான் இருந்தது என்றும் கருத இடமுண்டு. அயோத்தியிலிருந்து வந்த தூதர்களைக் கண்டவுடன், தமையனுடைய நலத்தைப் பற்றிக் கேட்பதும், அயோத்தி மீளலாம் என்று கூறினவுடன் நாளும் நேரமும் கூடக் குறிக்காமல் புறப்பட்டுச் சென்றதும் இராமனிடம் அவனுக்கு இருந்த அளவு மிஞ்சிய காதலையே அறிவுறுத்துகின்றன. இத்துணைக் காதல் இருந்தும் இராமனிடம் செல்ல வேண்டுமென்று அவன் வாய் விட்டு வெளியிற் கூறவே இல்லை. அயோத்தி வந்த பொழுதும் தந்தையைக் காண வேண்டும் என்ற விருப்பம் அளவு மிஞ்சி இருப்பினும் ஒருவரையும் அதுபற்றிக் கேட்டு அவன் ஒரு விதமான குழப்பமும் நடத்தாமல் இருந்துவிட்டதும் அவனுடைய அடக்கத்தையே அறிவுறுத்தும். கணவன் இறந்ததைப் பற்றிக் கூற வந்த தாய் யாரோ மூன்றாம் மனிதன் இறந்ததைப் போகிற போக்கில் கூறுவதுபோலக் குறிப்பிடவே, பரதன் அவள்மேல் கடுங்கோபம் கொள்கிறான். என்றாலும், ‘உன்னை அல்லாமல் வேறு யார் இத்தகைய சொற்கள் கூறக்கூடும்?’ என்றுமட்டுந்தான் கூறுகிறானே தவிர, வேறு ஒரு சொல்லுங் கூறவில்லை. இவ்வாறு கூறும்பொழுது அவனுடைய துயரமும் சினமும் மீதூர்ந்து இருப்பினும், உணர்ச்சிகளை அடக்கிப் பழகியவன் ஆகலின், வேறு ஒரு சொல்லுங் கூறவில்லை. கோசலை தன்மீது ஐயங்கொண்டாள் என்பதை அறிந்த பிறகும் அவனுக்குச் சினம் வரவில்லை என்பது வியப்பே. தான் கேகயத்தில் இருந்ததை அறிந்த கோசலை, தன்னை இதுவரை வளர்த்தவளாய கோசலை, தான் இத்தகைய செயலில் ஈடுபடுவானா என்பதை அறிந்திருந்தும் இவ்வாறு கேட்டாளே என்றுகூட அவன் சினம் கொள்ளவில்லை என்றால் அது வியப்பே அல்லவா? இவ்வளவு தூரம் கோசலை ஐயப்படுகிறாள் என்பதை அறிந்தும் சிறிதும் சினங் கொள்ளாதது மட்டும் அன்றி, அவளிடம் வஞ்சினம் கூறும் அளவிற்கு அவன் மனம் பண்பட்டிருந்திருக்கிறது. தான் தூய்மையானவன் என்பதை அவளுடைய தாயுள்ளம் அறிய வேண்டும் என்பதற்காக அவன் எவ்வளவு பாடு படுகிறான்! தன் உணர்ச்சி கொந்தளிக்கும் நிலையிலும் அதனை வெளிக்காட்டாமல் அவள் மன அமைதி அடைய இத்துணைத் தூரம் பேசுவானாகில், அவன் பண்பாட்டை என் என்று கூறுவது?

குறிக்கோளுடன் வாழும் ஒவ்வொரு மனிதனும் தன்னை அக் குறிக்கோளுக்குத் தியாகம் செய்ய வேண்டும். எவ்வளவுக்கு எவ்வளவு 'தான்' என்ற ஆணவம் குறிக்கோளில் அமிழ்த்தப் படுகிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு ஒருவன் பெரியோனாய்த் திகழமுடியும். மனிதத் தன்மையில் ஒரு பெரிய இடத்தைப் பெற்றுள்ள இந்த ஆணவம், மனிதன் தெய்வத் தன்மையடைய முயன்று அப்பாதையில் முன்னேறும் பொழுது அவனைவிட்டுக் கொஞ்சங் கொஞ்சமாகக் கழன்றுவிடுகிறது. அது கழலக் கழல அம் மனிதனிடம் தெய்விகத் தன்மை மெள்ள முகிழ்க்கிறது. வேறு வகையாகக் கூறுமிடத்து ஆணவம் அற்றவிடத்தேதான் முழுத் தன்மை கிட்டுகிறது. இதனை,

''யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்'' (குறள். 346)

என்று வள்ளுவப்பெருந்தகையார் குறிக்கிறார். அவ்வாறாயின், ஆணவம் அற்றால்தான் முழுத்தன்மை கிட்ட அதன் பயனாகிய வீடு பேறும் கிட்டும் என்பதும் பெறப்படும். ஆணவம் அற்ற விடத்து அவ்வாணவத்தின் வாலாகிய 'எனது' எனப்படும் 'மமகாரமும்' அற்றுவிடும். மமகாரம் அறுதலையே 'பற்று அறுதல்' என்றுங் கூறுவர். இதனையே ஆழ்வாரும் ''அற்றது பற்று எனில் உற்றது வீடு'' (திருவாய்மொழி, 12;5) என்கிறார். மனிதனாய்ப் பிறந்தவன் கட்டுக்களில் இருந்து விடுதலை பெற வேண்டுவது மிகவும் இன்றியமையாதது என்பதை அனைவரும் ஒப்புவர். அவ்வாறு விடுதலை பெற ஆணவம் நீங்க வேண்டும். ஆணவம் நீங்க வேண்டுமாயின் வாழ்வில் ஒரு குறிக்கோளைக் கொண்டு வாழ வேண்டும். பெரியோர் அனைவரும் இவ்வழியைத் தான் மேற்கொண்டு ஒழுகினர். அவர்கள் பெரியோராய் இருந்த மையின் இவ்வழியை மேற்கொண்டனர் போலும் என்று நினைத்து விடவேண்டா. இவ்வழியை மேற்கொண்டு ஒழுகினமையால்தான் பெரியோர் ஆயினர். பரதன், இலக்குவன், சீதை போன்றவர்கள் இக்குறிக்கோள் ஒன்றை வைத்து வாழ்வு நடத்தினமையின் பெரியோர் ஆயினர். இராவணன் போன்றார் தவம் கல்வி முதலிய வேறு துறைகளில் பெருமை பெற்றுப் பெரியோராய் விளங்கி னாலும் 'குறிக்கோள்' இன்மையால் பெரியோர் தன்மையை இழந்துவிட்டனர். ஆணவம் அவர்களை மெல்ல மெல்ல அழித்து விட்டது.

இதற்கு மாறாக ஆணவத்திலிருந்து முற்றிலும் விடுதலை பெற்ற ஒரு மனிதனுடைய வரலாற்றையே பரதனுடைய வாழ்வில் காண்கிறோம். கவிஞன் ஒரு மனிதனைப் படைத்து அவனைப் பெரியவன் ஆக்குகிறான். மனிதனாய்ப் பிறந்த ஒருவன் எந்த அளவிற்கு உயர முடியும் என்பதைக் காட்டவே கவிஞன் பரதனைப் படைக்கிறான். வாழ்வில் உயர வேண்டுமாயின் சில வாய்ப்புக்கள் இருந்தால்தான் அது இயலும் என்று இன்று நம்மில் பலரும் நினைக்கிறோம். உயர் குடிப்பிறபபு, அன்புடைய தாய் தந்தையர், தட்டாத செல்வம், நல்லறிவு முதலியன இருந்தாலன்றி வாழ்வில் உயர முடியாது என்று பலர் கருதவும் கூறவும் கேட்கிறோம். இவை இருப்பின் நலமே. ஆனால், இல்லாவிடினும் கவலை இல்லை. வாழ்க்கையில் குறிக்கோள் என்ற ஒன்று இருந்துவிடு மாயின், அதுவே போதுமானது. அந்தக் குறிக்கோளுக்கு எத்தனை இடையூறுகள், சோதனைகள் வந்தாலும் கொண்டு செலுத்தக்கூடிய 'உறுதி'—தளராத 'மனஉறுதி'—ஒன்று மட்டும் இருப்பின், அதுவே போதுமானது.

பரதன் என்ற மனிதன் உயர்குடியில் அரசன் திருமகனாய்ப் பிறந்தது உண்மைதான். ஆனால் அரசச் செல்வம் காரணமாக அவன் பண்பாட்டை அடையவில்லை. இன்னங் கூறப்போனால், அந்த அரசச் செல்வம் அவன் முன்னேற்றத்தைத் தடைப்படுத்தும் இடையூறாகவே அமைந்துவிட்டது. ஒருவனுடைய ஆன்ம முன்னேற்றத்திற்கு 'வறுமை' இரும்பு விலங்காகும்; அதே போல 'எல்லையற்ற செல்வமும்' பொன் விலங்காகும். இரும்பு விலங்கி லிருந்து தப்பித்துக்கொள்பவருங் கூடப் பொன் விலங்கிலிருந்து விடுதலையடைதல் கடினம். இது கருதியே போலும் மணிவாசகப் பெருந்தகை ''செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்'' (திரு வாசகம். போற்றித் திரு அகவல். 39) என்று கூறிப்போனார்! பரதன் இந்தப் பொன் விலங்கிலிருந்தும் எளிதாக விடுதலை அடைந்துவிட்டான். அவ்வளவு எளிதாக அவன் விடுதலை அடைய உதவியது யாது? அவன் மேற்கொண்ட குறிக்கோளே யன்றோ? இராமனை அண்ணனாகவும், தந்தையாகவும், தாயாகவும், வழிபடு தெய்வமாகவும் அவன் நினைத்துக் கருதிப் போற்றினான். இவ்வெண்ணத்தில் உறைப்பு ஏற ஏற அவனுடைய வாழ்வு உயரத் தொடங்கியது. 'இராமன் எத்தகையவன், அவன் செய்கின்ற செயல்கள் யாவை?' என்ற வினாக்களை எழுப்பிக் கொண்டு அவன் காலத்தை வீணாக்கவில்லை. அவனுக்குத்

தேவையான பொருள் இராமன் என்ற 'இலட்சிய புருடன்' தான். அந்தக் குறிக்கோள் மனத்தை விட்டு மங்காமல் இருக்கும் வரை அவன் வாழ்வு முன்னேறிக்கொண்டே செல்கிறது.

தான் கொண்ட குறிக்கோளில் எவ்வளவுக்கு எவ்வளவு பரதன் உறைத்து நிற்கின்றானோ அவ்வளவுக்கு அவ்வளவு மனிதத் தன்மை நீங்கித் தெய்வத் தன்மை அடைகிறான். பரதனுடைய வாழ்வில் எத்துணை முறைகள் குறிக்கோளுக்காகத் தன்னையும், தன் எண்ணங்களையும்—ஏன்?—முடிபுகளையுங் கூடத் தியாகம் செய்கிறான்? இராமன் அரசை ஏற்றுக் கொள்ளா விடின் தானும் காட்டில் தங்கித் தவம் மேற்கொள்ளப் போவதாகவே பரதன் பன்முறை கூறினான். தாயிடம் பேசும் பொழுதும் அமைச்சர்களுடன் பேசும் பொழுதும், பரத்துவாச முனிவனிடம் பேசும் பொழுதும் தான் வனத்தில் தங்கிவிடப் போவதாகவும் தவம் மேற்கொள்ளப் போவதாகவுமே கூறுகிறான் பரதன். இத்துணை இடங்களில் தன் கருத்தை வெளியிட்டுக் கூறிய பரதன், காட்டில் தங்கிவிடாமல் நாடு திரும்பியது ஏன்? நாட்டிற்கு வந்தாலும் அரசாட்சியை ஏற்கவில்லை என்பது ஒரு புறம் இருக்கட்டும். 'காட்டிலே தான் வாழப்போகிறேன்,' என்று இத்துணைப் பேர்களிடம் தன் உறுதியைத் தெரிவித்த பரதன், இப்பொழுது நாடு மீளக் காரணம் யாது? தான் சொன்ன சொற்களைக் காவாமல் விடுவது முறையா? முறைதான். எப்பொழுது? தான் சொன்ன சொல் வேறாகவும், தன்னுடைய 'குறிக்கோள்' இடும் கட்டளை வேறாகவும் இருந்துவிட்டால் என் செய்வது? நம்மைப் போன்ற சாதாரண மக்கள் நாம் கூறிய கூற்றே பெரிதென்று மதித்து அதனைக் காப்பாற்றியே தீருவோம் என்று நாம் முனையும் பொழுது நம் சொல்லின்மேல் கொண்ட அன்பால் அதனைச் செய்யவில்லை! பின்னர் ஏன்? 'நான்' என்ற ஆணவத்தின் மேல் கொண்ட காதலால் அந்த 'நானைக்' கீழே விட்டுவிடக் கூடாது என்ற காரணத்தால்தான் சொன்ன சொல்லைக் காத்தல் வேண்டும் என்று முனைகிறோம். எனவே, இச்செயலும் ஆழ்ந்து நோக்கினால் நம்முடைய ஆணவத்திற்கு இரைபோடும் செயலாகவே முடியக் காணலாம்.

இத்தகைய சூழ்நிலையில் பரதன் தான் தன்னைப் பற்றிக் கூறிய சொற்களைக் காக்க முற்படவில்லை. ஏன்? தான் கூறிய சொற்களைக்காட்டிலும் தன் குறிக்கோளாகிய இராமன் கூறிய சொற்களைக் கடைபிடித்தல் மிகவும் இன்றியமையாதது. குறிக்

கோள் ஒன்றைக்கொண்டு அதனிடம் 'நான்' என்ற பொருளைச் சரண்செய்துவிட்டபிறகு 'நானு'க்குத் தனியான சொல்லும் செயலும் ஏது? பரதன் என்ற மனிதன், 'இராமபத்தி' என்ற குறிக் கோளில் ஒன்றிவிட்டான். இராமன் எதிரே இல்லாதவரை பரதனுக்கு என்று தனியான சொல்லும் செயலும் உண்டு. ஆனால், இராமன் பேசத் தொடங்கிவிட்டால், அவன் எதிரே பரதனும் இருந்துவிட்டால், பிறகு பரதனுக்கு என்று ஒன்றும் இல்லை. இராமன் இல்லாத நேரத்தில் பரதன் என்ற மனிதன் பேசினான். தன் கருத்தாக, முடிபாக ஒன்றை வெளியிட்டான். காட்டில் வாழும் மன்னனைக் கொணர்ந்து நாட்டில் முடிகவித்து விட வேண்டும்; இன்றேல் தானும் காட்டில் தவக்கோலம் பூண வேண்டும் என்று முடிபு செய்தான்; அதை வெளியிட்டும் கூறினான். அவன் எந்த முடிபைக் கூறினாலும் அது இராம னுடைய ஆணைக்கு உட்பட்டதே ஆகும். இக்காலத்தில் வரவு செலவுக் கணக்கைக் கூறுபவர் "தணிக்கையாளர் சோதனைக்கு உள்ளிட்டே இது வெளியிடப் படுகிறது"[1] என எழுதுகிறார் களல்லவா? எனவே, தணிக்கையாளர் இக்கணக்கை ஒப்பவில்லை யாயின், வெளியிட்ட கணக்கை மறுத்துவிடவும் உரிமை உண்டு என்பதை அனைவரும் அறிவர். அதே போலப் பரதன் என்ற மனிதன் இராமன் இல்லாத பொழுது பேசும் பேச்சுக்களும் கூறும் முடிபுகளும் இராமனுடைய தணிக்கைக்கு உட்பட்டேயாகும். பெரும்பான்மையான சந்தருப்பங்களில் பரதனுடைய சொல்லும் செயலும் இராமனால் ஒப்பப்படுகின்றன. ஆனால் சிற்சில நேரங்களில் அது மாறுபடுமாயின், இறுதியாக எஞ்சுவது இராம னுடைய கட்டளையே தவிரப் பரதனுடைய முடிபன்று.

இதனைக் கண்டு யாரும் வியப்படைய வேண்டா. இந் நாட்டுப் பெரியார்கள் கண்ட 'சரணாகதித்தத்து'வத்தின் உட் பொருள் இதுதான். ஏதாவது ஒரு குறிக்கோளைப் பற்றிக் கொண்ட இவர்கள் அதில் தம்மை, தாம் என்ற ஆணவத்தை' அமிழ்த்திவிடுகின்றனர். அதன்பிறகு இவர்களுக்குத் தனி வாழ்வு என்று ஒன்றும் இல்லை. தம் குறிக்கோள் பொருட்டாகவே வாழ் வார்களே தவிரத் தம்முடைய நலந் தீங்குபற்றிக் கவலையுறுவ தில்லை. இக்கருத்தை மணிவாசகப் பெருமான் இதோ பாடுகிறார்.

---

1. Subject to audit

"அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னைஆட்
கொண்ட போதே கொண்டிலையோ?
இன்றுஓர் இடையூறு எனக்குஉண்டோ
எண்தோள் முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே
[திருவாசகம், குழைத்த பத்து. 7]

தமக்கு எனத் தனிவாழ்வு வேண்டாதவர்களாகலின் இவர்களுடைய உடைமைகள் அனைத்தும் இவர்களால் குறிக்கோளாகப் போற்றப்படும் பொருளுக்கேயாம். இக்கருத்தை இதோ பெரியாழ்வார் பாடுகிறார்.

"தோட்டம், இல்லவள், ஆத்தொழு, ஓடை,
துடவையும் கிணறும் இவையெல்லாம்
வாட்டம் இன்றிஉன் பொன்அடிக் கீழே
வளைப்பகம் வகுத்துக் கொண்டேன்"
(நாலாயிரப் பிரபந்தம், 437)

ஒவ்வொன்றாக அடுக்கிக் கூறுவதால் யாது பயன்? சுருங்கக் கூறினால், இவர்கள் தம்மைக்காட்டிலும் தாம் கொண்ட குறிக்கோளிடத்துப் பற்றுக் கொண்டவர்கள். உலகத்தில் வாழும் மக்களுள் ஒவ்வொருவருக்கும் சிறந்தது எது என்று கேட்கப் பட்டால் அவரவர்களே அவரவர்கட்குச் சிறந்தவர் என்ற விடை தான் வரும். இதோ நாவரசர் பாடுகிறார்.

"என்னில் யாரும் எனக்குஇனி யார்இலை
என்னி லும்இனி யான்ஒரு வன்உளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே."
(தேவாரம். 5: 21:1)

தம்மைக்காட்டிலும் தமக்கு இனியவன் இறைவன் என்று பாடுகிறார் நாவரசர். அதே போலப் பரதனுக்குப் பரதனைக் காட்டிலும் இனியனாவான் இராமன். அந்த இராமனுடைய கட்டளை வேறுவிதமாக இருந்திடின் பரதன் அக்கட்டளையை நிறைவேற்றுவானே தவிரத் தான் கொண்ட முடிபை நிறைவேற்ற ஒருப்படமாட்டான். மனிதனாய் இருந்த பரதன் தேவனாக மாற இவ்வழியைத்தான் மேற்கொண்டான். தான் கொண்ட குறிக்கோளை மட்டும் காப்பாற்ற வேண்டும் என்று நினைப்பவன்

தன்னைக்காட்டிலும் குறிக்கோளினிடத்து மதிப்பு வைத்திருப்பவன் என்பது தெரியவில்லையா? அவ்வாறன்றித் தான் கூறிய சொற்களை மட்டும் எவ்வாறாயினும் காக்க வேண்டும் என்று நினைப்பவன், தன்மேலேயே முழு மதிப்பையும் வைத்திருக்கிறான் என்று கூறத் தேவை இன்று. நம்மைப் போன்ற சாதாரண மனிதர்கள், தாம் சொல்லிய சொல்லைக்கூடக் காக்க முடியாமல் காற்றில் விட்டுவிடுவார்கள். இத்தகைய மனிதர்கள் கூட்டத்தில் தன் சொல்லை மறவாது காப்பவன் பெரிய மனிதன்தான். நம்மை நோக்க அவன் பெரிய மனிதனாகக் காட்சியளிக்கிறான். அவ்வளவுதான். நம்மிடத்திலேயே நமக்கு மதிப்பு இல்லை. ஆனால், தன் சொல்லைக் காப்பவன் தன்னிடத்தே மதிப்புக் கொண்டவனாகலின், நம்மை விட உயர்ந்தவனாதல் சரி. ஆனால் தன்னிடம் கொண்ட மதிப்பைக்காட்டிலும் தன் கொள்கை அல்லது குறிக்கோள்மேல் மதிப்பு வைத்திருப்பவன் மிக மிகப் பெரியவனே. முன் கூறப்பெற்ற இரு கூட்டத்தாராலும் மதிக்கப்பட வேண்டியவனாகிறான் கொள்கைமேல் மதிப்பு வைத்திருப்பவன். இத்தகைய உண்மை நன்கு உணரப்பட்டால் அன்றிப் பரதனை நன்கு அறிய முடியாது. தானே கூறிச்சென்ற சொற்களைக் கூடத் தவற விட்டுவிட்டானோ என்ற ஐயத்திற்கும் இடம் உண்டாகும். தான் கூறிய சொல்லைப் பெரிதென்று மதித்துப் பரதன் அதனை நிலைநிறுத்தி இருப்பின், பரதனை மனிதருள் சிறந்தவனாக மட்டுமே கருத இடமுண்டு. ஆனால், தன் சொல்லைப் பெரிதென மதியாமல் இராமன் கட்டளையைச் சிரமேற்கொண்டு நந்திக் கிராமத்தில் வந்து தங்கிவிட்டமையின், பரதன் மனிதத் தன்மையைக் கடந்து கடவுள் தன்மையை அடைந்துவிட்டான். ஆம்! 'மனிதராகப் பிறந்தவர்கள் என்ன செய்யவேண்டும்? என்ன தியாகத்தைச் செய்தால் உயர்வை அடைய முடியும்?' என்பதைச் செயலில் செய்து காட்டிவிட்டான் ஆயிரம் இராமர்கட்கும் மேம்பட்டவனான அப்பரத வள்ளல்.

'நேர்மையின் ஆணி' என்று இராமனே பரதனைக் கூறினான் என்பதை அறிவோம். 'தன்சொல்லைக் காவாமல் விடுவது நேர்மையா? அறமா?' என்ற வினாத் தோன்ற இடமுண்டு. பல சமயங்களில் அறம், நேர்மை என்பன நம்மை மருட்டிவிடுகின்றன. எது அறம்? எது நேர்மை? இதோ பரதனுடைய சொல்லையும் செயலையுமே எடுத்துக்கொள்வோம். பரதன் அறம் பிறழ்ந்து விட்டானா தன் சொல்லைக் காவாமையால்? அறத்தின்

பொருளை உணராதவர் அவன் தவறிவிட்டான் என்று கூடக் கூற முன்வருவர்! சாதாரண உலகியல் நிலையில் நிற்கும் நாம் அறம் என்று கூறுவதை அனைவரும் ஏற்பர் என்று கூறல் இயலாது. உலகியல் அறம், காலத்துக்கு ஏற்பவும், இடத்திற்கு ஏற்பவும் மாறுபடும் இயல்புடையது. நூறு ஆண்டுகட்குமுன் அன்ன சத்திரங்கள் கட்டி வைத்தல் அறம் என்று கருதப்பட்டது. அன்று நாடு இருந்த நிலையில் அது முறைதான். ஆனால், இன்றும் அதனை அறம் என்று கூறினால் அறிஞர்கள் நம்புவார்களா? காலம் மாறினதால் அறமும் மாறிவிட்டது. இம்மாறுபாட்டைத் தான் நம் காலத்தை வாழ்ந்த கவிஞர் உணர்த்துகிறார்,

'அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
.. ........... ......................
அன்ன புண்ணியம் யாவினுங் கோடி
ஆங்குஓர் ஏழைக்கு எழுத்துஅறி வித்தல்.'' —பாரதியார்

என்ற பாடல் மூலம். கால மாற்றத்தால் அறம் மாறினதுபோல இடம் மாறும் பொழுதும் அறம் மாறுபடும். குளிர் தவிர வேறு அறியாத 'எஸ்கிமோக்கள்' வாழும் இடத்தில் புலால் உணவு அறத்திற்கு மாறுபட்டது என்று கூறமுடியுமா? சீல்மீன்கள் தவிர வேறு எதனை உண்டாலும் அவன் வாழ முடியாது. எனவே, இடத்திற்கு ஏற்பவும் அறம் மாறுபடுவதைக் காண்கிறோம். இவை போன்றவை உலகியல் அறங்கள் எனப்பெறும். இத்தகைய அறங்கள் காலம், இடம் என்பவற்றிற்குக் கட்டுப்பட்டு மாறுபடும் இயல்புடையவை. உலகியலில் வாழ்பவர்கள் தாம் வாழும் இடம் காலம் என்பவற்றிற்கு ஏற்ப இந்த அறங்களைக் கடைப்பிடித்து வாழ வேண்டுவது மிக மிக இன்றியமையாதது. ஆனால், பரதன் போன்றவர்கள் இந்த அறங்கட்குக் கட்டுப்படுவதில்லை. அவர்கள் இவற்றினும் வேறுபட்ட உயர்ந்ததும், மாறாததும், என்றும் இருப்பதும் ஆன அறத்தைப்[1] பின்பற்றி நடப்பவர். அத்தகைய அறங்களுள் ஒன்றுதான் குறிக்கோளுடன் வாழ்வது. தமிழ் நாட்டானுக்கும், எஸ்கிமோவுக்கும், ஐயாயிரம் ஆண்டுகள் முன்னர் வாழ்ந்தவனுக்கும், கி. பி. நாலாயிரம் ஆண்டில் வாழ்பவனுக்கும் இவ்வறம் பொதுவானதே; என்றும் உள்ளது; எங்கும் பொதுவானது. இத்தகைய அறத்தை வாழ்வில் மேற்கொண்டவர்களை நாம் நம்முடைய சில்லறை அளவு கோலால் அளந்து காண்டல்

1. Higher Moral law

அரிது; அளக்க முற்படுவதும் தவறு. பரதனை 'அறத்தின் கடல்' என்று விசுவாமித்திர முனிவனும், 'நேர்மையின் ஆணி' என்று இராமனும் குறிப்பிடுகையில் இந்த உயர்ந்த அறத்தையும் நேர்மையையும் மனத்தில் கொண்டு பேசுகிறார்கள் என்பதை அறிதல் வேண்டும். முனிவன் பரதனைப் பற்றிக் கூறும் உருவகமே இத்தகைய முறையில் பொருள் கூற இடந்தருகிறது. இதோ அவன் கூற்று.

''தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளம்எனும் தகையானை'' (குலமுறை. 21)

'விலக்குதற்கு அரிதாகிய சிறந்த அறங்கள் (நியாயம்) என்னும் பெரிய ஆறுகள் தன்னிடம் சேர்தலால். பெருகி நிற்கும் கடல் போன்றவன்' என்கிறான் முனிவன். ஆம்! ஆற்றுக்கு நீர் ஏது? கடலிலிருந்துதான் கிடைக்கிறது மழை மூலமாக. ஆனால், ஆற்று நீரின் சுவையும் இயல்பும் கடல் நீரின் சுவையினும் இயல்பினும் மாறுபட்டவை அல்லவா? அதே போலச் சில்வாழ் நாள் சிற்றறிவுடையவர்கட்கு உரிய அறம் வேறு; யாவரினும் மேம்பட்ட பெரியோர்கட்கு அறம் வேறு. இரண்டிற்கும் அறம் என்றுதான் பெயர் கூறப்படும். என்றாலும், நிலைபேறுடைய கடல் போன்ற அறங்களைக் கடைப்பிடிப்பவர்களும் உண்டு. பரதனும் இத்தகையவனே என்பதை உய்த்து உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

கம்பநாடன் படைத்த பரதனிடம் மற்றொரு சிறப்பும் காணக் கிடக்கின்றது. பரதன் என்ற மனிதன் மகாத்துமா பரதன் ஆகிறான். அவன் வாழ்வு முழுவதிலும் ஒரு தெய்விக நிகழ்ச்சி[1] யாவது குறிக்கப்படவில்லை. காவியத்தில் படைக்கப்படும் பெருந்தலைவர்கட்கு இத்தகைய நிகழ்ச்சிகளையும் உடன் அமைப்பது திறனாய்வாளரும் ஒப்புகின்ற முறைதான். உலகின் பல்வேறு மொழிகளிலும் தோன்றியுள்ள காப்பியங்கள் அனைத்திலும் 'இயற்கையின் இறந்த நிகழ்ச்சி'[2] கலந்தே கூறப்படுகின்றன. ஆனால், கம்பநாடன் பரதனைப் பெரியவனாக, மகாத்துமாவாகக் காட்ட இவற்றின் உதவியைச் சற்றும் நாடவில்லை. மற்றவர்கள் ஒருவனைப் பெரியவனாக ஏற்றுக்கொள்வதற்கு அவனிடம் காணப்பெறும் இந்நிகழ்ச்சிகள் காரணமாகலாம்.

1. Miracle
2. Supernatural action.

ஆனால், இவை இன்றியும் ஒருவனைப் பெரியவன் என்று அனைவரும் போற்றுகின்றனர் எனில், அதில் ஒரு வியப்பு அடங்கி யுளது. எவ்விதமான உதவியும் இன்றிப் பரதன் நம்முடைய மனத்தைக் கவர்ந்துவிடுகிறான். தெய்வம் என்று கருதப்படும் இராமனில் தொடங்கி, விலங்கு என்று கூறப்படும் அனுமன் ஈறாக அனைவருடைய கவனத்தையும் ஈர்த்துவிடுகிறான் பரதன். என்றாலும், இயற்கையின் இறந்த நிகழ்ச்சி ஒன்றையும் அவன் செய்ததாகவோ, செய்ய முயன்றதாகவோ, கவிஞன் காட்ட வில்லை; குறிப்பாகவேனும் காட்ட முயலவுமில்லை. தன்னிடம் இயற்கையாய் அமைந்த பண்பாட்டாலும் தான் கொண்ட குறிக்கோளினிடத்துத் தன்னையே 'தியாகம்' செய்துவிட்ட பண்பாட்டாலும் பரதன் உயர்கிறான். அவனைத் தொடர்ந்து செல்லுதலும் அரிது என்று பிறர் கூறத்தக்க நிலையை அடை கிறான். பால காண்டத்தில் கைகேயி மைந்தனாய்த் தோன்றிப பரதன், பண்பாட்டால் உயர்கிறான். தசரதனின் காதல் மனைவியின் மைந்தன் என்பதாலும், இராமனுக்குப் பின் தோன்றியவன் என்பதாலும் பரதனுக்குப் பால காண்டத்தில் பெருமை கிடைக்கிறது. மேலே செல்லச் செல்ல, பரதனைப் பெற்றவள் என்பதால் கைகேயியின் குற்றத்தைக்கூட அனைவரும் மறக்கத் துணிந்துவிட்டார்கள். ஆம்!

'மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி, 'இவன்தந்தை
என்நோற்றான் கொல்!' என்னும் சொல்.'' (குறள். 70)

என்ற குறள் தந்தைக்கு மட்டுமா பேசுகிறது? பாடலில் ஆண்பால் பேசப்படினும் தாய்க்கும் அக்குறள் பொதுதானே? தசரதனை மணந்த கைகேயியை யாரே மதிப்பர்? பரதனைப்பெற்ற கைகேயியை யாரே இழிப்பர்? ஆம்! பரதனைப் பெற்றதால் அப்பெருமாட்டி செய்த பிழைகளை அனைவரும் மறந்து விட்டனர். இராமபிரான் கைகேயியைத் தாய் எனவே மதித்தான் முதலில். பெற்ற தாய்க்கும் வளர்த்த கைகேயிக்கும், வேறுபாடு பாராட்டவில்லை அப்பெரு மகன்; தன்னை வளர்த்த அவளை அது வரை தாய் எனவே மதித்தான். ஆனால், பின்னர்ப் பரதனுடைய முழுத் தன்மையையும் கண்டறிந்த பிறகு அத்தகையவனைப் பெற்றெடுத்தவள் சாதாரணப் பெண் அல்லள் என்பதை உணர்ந்து விட்டான். பரதனை முழுவதும் அறிந்த பிறகு கைகேயியைப் பற்றி இராமன் ஒரே இடத்தில்தான் பேசுகிறான். ஆனால்

அந்தஇடத்தில்'தாய்'என்று அவளைக் குறிக்கவில்லை; 'தெய்வம்' என்றே குறிப்பிடுகிறான். இராவணனை வென்று வாகை சூடி வரும் மைந்தனை ஆர்வத்துடன் காண வருகிறான் தசரதன் தேவர் உலகினின்று; மைந்தனை ஆரத் தழுவி, 'ஏதேனும் வரம் பெறுக' என இரந்து வேண்டுகிறான். இராமன் ஒரு வரம் வேண்டுகிறான். ஆம்! பரதனுடைய குறிக்கோளுக்கு இலக்கானவனன்றோ இராமன்! அவன் வேறு என்ன கேட்பான்? இதோ காணுங்கள்.

''ஆயினும்உனக்கு அமைந்ததுஒன்று உரை'என அழகன்,
'தீயள் என்றுநீ துறந்தஎன் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருக' எனத் தாழ்ந்தான்.''
(மீட்சி.129)

இதுவரையில் இராமன் கைகேயியை யாண்டும் தெய்வம் என்று கூறவில்லை. ஆனால், இப்பொழுது அவ்வாறு கூறக் காரணம் யாது? ஒன்றே ஒன்றாய்த்தான் இருத்தல் கூடும். பரதனைப் பெற்றவள் தெய்வமாகத்தான் இருத்தல் கூடும் என்ற முடிபுக்கு வந்தான் இராமபிரான். எனவே, 'என் தெய்வமும்' என்று கைகேயியைக் குறிப்பிடுகிறான். 'இவன் தந்தை (தாய்) என் நோற்றான் (ள்) இவனைப் பெறுவதற்கு!' என்ற வியப்புத் தோன்றியவுடன் பெற்றவளைத் தெய்வம் எனவே கருதிக் கூறியும் விட்டான் பண்பாட்டின் உறைவிடமான இராமன். இராமனுடைய மதிப்பில் கைகேயி இவ்வளவு உயர்வடையக் காரணம் யாது? பரதனைப் பெற்றவள் என்ற காரணத்தைத் தவிர வேறு ஒன்றும் கூறுவதற்கில்லை. ஒருவன் பிறந்த குடியை உயர்த்த வேண்டும் என இத்தமிழர் கூறினர். அவர்கள் மனிதனின் தலையாய கடமையாகக் கருதிய இதற்கு நல்லதோர் எடுத்துக் காட்டாய் அமைந்துவிட்டான் பரதன். ஒருவனுடைய தாய் தந்தையரை அறிய வேண்டின், அவனுடைய வாயிலிருந்து வெளிப்படும் சொல்லே போதுமானது என்கிறார் பொதுமறை தந்த பெரியார்.

''நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.'' (குறள்.959)

நிலத்தின் இயல்பை அதில் தோன்றிய மூளை காட்டுவது போல ஒருவன் குடிப் பெருமையை அவன் வாய்ச்சொல் காட்டுமாம். அறத்தின் ஆணி வேரான பரதனுடைய சொற்களை

நேரே நின்று கேட்கும் பேற்றைக் காட்டிலேதான் இராமனும் பெற முடிந்தது. பரதனுடைய பேச்சைக் கேட்கக் கேட்க இராமனுடைய மனம் பரதனை மட்டும் அல்லாமல் அவனைப் பெற்றவளையும் எடைபோட்டு விட்டது. அதன் பயனாக அது வரைத் தாய் என்று நினைத்த கைகேயியை அதன்பிறகு தெய்வம் என்று கூறலானான் இராமனும். அம்மட்டோடு அல்லாமலும் பொதுமறை கூறிய

''இற்பிறந்தார் கண்அல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு.'' (குறள்.951)

என்ற குறளுக்கும் பரதன் இலக்கியமாதல் காண்டற்குரியது. செப்பம் என்பது நேர்மை என்று பொருள் படும். 'நேர்மையின் ஆணி' என்று இராமனே பரதனைப் புகழ்ந்துள்ளான். அடுத்துள்ள நாணம் என்பது பழிபாவங்கட்கு அஞ்சுதல். தான் செய்யா விடினும் பிறர் செய்த பழிக்குக்கூடப் பரதன் எவ்வளவு நாணமடைகிறான் என்று கண்டோம் ஆகலின், நாணுடைமை என்பதும் பரதனிடம் இயல்பாகவே அமைந்திருத்தலைக் காண் கிறோம். இவை இரண்டும் குடிப்பிறந்தார்கண் இயல்பாய் அமைந்திருக்கும் எனக் குறள் பேசுகிறது. பரதனிடம் இவை அமைந்துள்ளனவெனில் அவன் பிறந்த குடியும் (தாய் தந்தை யரும்) உயர்ந்ததாகவே இருத்தல் வேண்டும். எனவே, கைகேயி சிறந்தவள் என்று இராமன் முதல் அனைவரும் கருதப் பரதனுடைய பண்பாடு இடந்தருகிறது.

மேற்கூறிய அனைத்தையும் மனத்துட்கொண்டு பரதனை நோக்கினால், 'சால்பு' என்று வள்ளுவர் குறித்த பண்பாட்டின் ஆணி வேராய் அவன் இலங்கக் காண்கிறோம்.

''அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்.'' (குறள். 983)

அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற, ஐந்தும்தாம் 'சால்புடைமை' என்ற பாரத்தைத் தாங்கும் தூண்களாம். ஆம், பரதனிடம் இவ்வைந்தும் குடிபுகுந்துள்ளன. பரதன் ஒருவன் இருக்கக் கூடுமானால், அதுவே 'இராமராச்சியம்' எனப்படும். தான் என்ற பொருளை முற்றிலும் அழித்துக் கொண்டு, தொண்டு குறிக்கோள் என்பவற்றிற்கே வாழ்பவன் மனிதனாய்ப் பிறந்தாலும் தேவன் ஆகிறான். இவ்வுண்மையை உலகிற்குக் காட்டவே பரதன் படைக்கப்பட்டான்.

# 9. தம்பியர் மூவர் ஏன்?

தசரத குமாரன் உடன்பிறந்த தம்பியர் மூவரைப் பெற்றிருந்ததோடு அமைதியடைந்ததாகத் தெரியவில்லை. அயோத்தியிலிருந்து புறப்பட்டு இலங்வைகரைச் சென்று மீட்டும் அயோத்தி திரும்புவதற்குள் மேலும் மூன்று தம்பியரை விரும்பி ஏற்றுக் கொள்கிறான். மிக நீண்ட காலம் மகப்பேறு இல்லாமல் இருந்த காரணத்தால் தசரதனுக்குப் பிள்ளைகள் வேண்டும் என்ற அவா மிகப் பெரிதாக இருந்திருக்க வேண்டும். எனவே அவனுடைய மூத்த மைந்தன், தந்தையின் விருப்பத்தை நன்கு அறிந்திருந்தமையின் போலும் மேலும் மூன்று சகோதரர்களை ஏற்றுக்கொண்டான். இவ்வாறு செய்வதால் தான் மட்டும் மகிழ்ச்சி அடையவில்லை; இறந்த தன் தந்தையும் சாந்தி பெறுவார் என்ற கருத்தை இராமனைப் பேசும்போது கூறுகிறான்.

குகனொடும் ஐவரானோம் முன்பு, பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனோம், எம்முழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவரானோம்
புகல் அரும் கானம் தந்த புதல்வராற் பொலிந்தான் உந்தை.
(வீட. அடை. 143)

'புதல்வரால் பொலிந்தான்,' என்ற சொற்களை நோக்கவேண்டும். ஒருவனிடம் எப்பொழுது பொலிவு உண்டாகும்? உண்மையான இன்பம் அனுபவிப்பவனிடம் பொலிவைக் காணலாம். இனி, சமதிருஷ்டி பெற்றுவிட்ட சாந்தமூர்த்தியின் முகத்தினும் பொலிவைக் காண முடியும். புதல்வரால் பொலிந்தான் என்பதற்குப் புதல்வர்கள் காரணமாகப் பொலிவைப் பெற்றான் தசரதன் என்று பொருள் கொண்டால் தவறு இல்லை.

இதனைக் காணும் பொழுது ஓர் ஐயம் தோன்றத்தான் செய்கிறது. அறத்தின் மூர்த்தியாகிய இராமனையும் தருமத்தின் உரைகல் எனப்படுபவனாகிய பரதனையும் தொண்டுக்காகப் பிறப்பெடுத்த இலக்குவனையும், ஒப்பற்ற சத்துருக்கனையும் பெற்ற

தசரதனுக்கு இதுவரைத் தோன்றாத பொலிவு, இப்பொழுது தோன்றக் காரணம் யாது? அப்படியானால் அந்நான்கு சகோதரர்களிடமும் காணப்படாத ஏதோ இயல்புகள் இம்மூவரிடமும் இருந்திருக்க வேண்டும். அதனால், ஒருவேளை இவர்களும் உரிமையால் புதல்வர்கள் ஆனபோது பொலிவடைந்தானா?

ஆழ்ந்து நோக்கினால் இவ்வாறு கூறுவதிலும் ஒரு பொருள் இருக்கக் காணலாம். தசரதனைப் பொறுத்தமட்டில் இராமன் முதலிய நால்வரையும் பெற்றான் என்றாலும் அவர்களில் யாரேனும் ஒருவருடைய இயல்பையோ, பண்பையோகூட அவன் அறிந்திருந்தானா என்பது ஐயத்திற்குரியதே! இராமன் பரம்பொருள் என்பதை அவன் அறிய முடியாமல் அவனுடைய பிள்ளைப் பாசம் மறைத்துவிட்டது. சிவ தனுசை ஒடித்தவன் என்று அறிந்திருந்தும் பரசுராமன் எதிர்ப்பட்டவுடன் தன் மைந்தன் ஆற்றலை அறிய இயலாத தசரதன், பெண்களைப் போலப் புலம்புகிறான். இராமனையே அவன் அறிந்து கொள்ள வில்லை எனின், ஏனையோரை அவன் அறிந்து கொள்ளாமல் போனதில் வியப்பு ஒன்றும் இல்லை. 'தள்ள அரிய பெரு நீதித்தனி ஆறு புக மண்டும் பள்ளம்' எனத் தக்க பரதனைத் தசரதன் சரியாகப் புரிந்துகொள்ளாதது மட்டுமன்று; தவறாகவே புரிந்து கொண்டிருந்தான்.

இதன் காரணம் யாதாக இருத்தல்கூடும்? தசரதன் ஒரு சாதாரண சராசரி மனிதனே யாவான். சாதாரண மனிதனுக்கு உரிய விருப்பு வெறுப்புகள், கோப தாபங்கள் ஆகிய அனைத்தும் அவனிடம் நிறைந்திருந்தன. கதை கூறுகிற சமதிருஷ்டி உடையவர்களாகிய இராமன் முதலிய நால்வரை அவன் அறிந்து கொள்ள முடியாமற் போனதில் வியப்பு ஒன்றும் இல்லை. எனவே தான் இந்நால்வரினும் வேறுபட்ட பண்புடைய சகோதரர் சிலரை, தசரதன் புரிந்து கொள்ளக்கூடிய சிலரை, ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலைமை இராமனுக்கு ஏற்பட்டு விடுகிறது.

இராமன் சோதரராக ஏற்றுக்கொண்ட மூவரும் மூன்று துருவங்களில் உள்ளவர்கள். கல்வி வாசனையே இல்லாதவன் குகன் (உணர்ச்சி); 'உம்பரின் ஒரு முழம் உயர்ந்த ஞானத்தை' உடையவன் வீடணன் (அறிவு) இவ்விருவருக்கும் இடைப்பட்டவனாகக் காட்சி தருகிறான் சுக்ரீவன் (இரண்டின் கலப்பு). பரம் பொருளாகிய இராமன் இந்த மூவரை மட்டும் ஏற்றுக்கொள்ள

வேண்டிய காரணம் யாது? இறைவனிடம் அடிமை பூண்ட உயிர்கள் அனைத்தும் இந்த மூன்று வகையினுள் அடங்கும். இந்த மூன்றையல்லாத வேறு ஒரு வகை உண்டு என்று ஆராய்ச்சி அறிவும், மனத்தத்துவ விஞ்ஞானமும் மிகுந்துள்ள இக்காலத்தில் கூடக் காட்ட இயலாது.

இம்மூன்று வகையினரையும் பரம்பொருள் ஏற்றுக் கொள்கிறான். இம்மூன்று வகையான மன நிலைகளையும், அவற்றின் அடிப்படையையும், அவை தொழிற்படும் முறையையும் விரித்துக் கூறுவதற்காகவே கவிச்சக்ரவர்த்தி கம்பன் இம்மூன்று பாத்திரங்களையும் படைத்துக் காட்டுகிறான்.

முதலாவது உள்ளது உணர்வு எனப்படும் தூயஅன்பு. அன்பின் அடிப்படையில் எதனையும் சாதிக்கலாம் என்று நம்பினர் இந்நாட்டுப் பெரியோர். அன்பை இரண்டு வகையாகப் பயன்படுத்தலாம். இறைவன் மேல் செலுத்துகின்ற அன்பைக்கூட இரண்டு வகையாகப் பிரித்துக் காணமுடியும். முதலாவது வகை, அன்பை ஒரு சாதனமாகக் (வழி) கொள்ளுவதாகும். இறைவன் மேல் அன்பைச் செலுத்துவதன் மூலம் வீடுபேறு (மோட்சம்) என்ற பயனைப் பெற முயல்வதே இம்முறை. இம்முறையில் இறைவன் மேல் செலுத்தப்படும் அன்பு நாளும் நாளும் வளர்ந்து வரும். அது வளர வளர ஏனைய பொருள்களின் மேல் உள்ள பற்றுக் குறையத் தொடங்கும். இறுதி நிலையில் இறையன்பு ஒன்று தவிர ஏனையது ஒன்றும் எஞ்சுவதில்லை. இதனைச் சாதன அன்பு (பக்தி சாதனம்) என்பர்.

இதன் எதிராக உள்ளது அன்பை சாதனமாகக் கொள்ளாமல் அதனையே சாத்தியமாகக் (பயன்) கொள்வது. அன்பை வழியாகக் கொண்டு வீடுபேறு போன்ற பயனைப் பெற முடியாமல் அன்பையே பயனாகக் (சாத்தியம்) கொள்வது. இம்முறையில் அன்பு செய்பவன் வேறு எந்தப் பயனையும் விரும்புவதில்லை மோட்சங்கூட அவனால் விரும்பப்படுவதில்லை. இந்த மன நிலையைத்தான் சேக்கிழார் பெருமான் 'கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' என்று கூறுகிறார், அன்பினால் கும்பிட்டு அதற்கு ஒரு பயனை எதிர்பாராமல் அந்தக் கும்பிடுதலிலேயே இன்பங் காணுகின்றார்களாம் அடியார்கள். இக்கருத்தைத்தான் குலசேகரப் பெருமாள் சற்று விரிவாகக் கூறுகிறார்,

'ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வான் ஆளும் செல்வமும் மண் அரசும் யான் வேண்டேன்
தேனார் பூம் சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே' (678)

என்ற பாடலில்.

அன்பை வழியாகக் கொள்ளாமல் அதனையே பயனாகக் கொள்கின்றவர்களிடம் சுரக்கின்ற அன்பு முதல் வகையைப் போலச் சிறிதாகத் தோன்றி நாளா வட்டத்தில் வளர்வதில்லை, அதன் எதிராக, தோன்றும் பொழுதே முழுவதாகத் தோன்றி விடுகிறது. இத்தகைய அன்புடையவர்களை, அன்பு செய்கின்ற அவர்கள், அவர்கள் செய்யும் அன்பு என்று பிரித்துக் காண முடியாது. அவர்களே அன்பு வடிவினர். அவர்களிடம் 'தான்' என்ற அகங்காரமும், 'தனது' என்ற மமகாரமும், இவற்றின் பயனாக விளைகின்ற 'இருவினை'களும் (புண்ணிய, பாவம், இவற்றின் பயனாக விளைகின்ற 'மூன்று குற்றங்'களும் (ஆணவம், கன்மம், மாயை) இருப்பதில்லை. இவர்கள் உடல், பொருள், ஆவி அனைத்தும் அன்பு வடிவாகும். இத்தகைய சாத்திய அன்பு பூண்டவர்கள் என்று கண்ணப்பரையும் குகனையும் நாம் இலக்கிய மூலம் அறிகிறோம்.

குகன் வேடன், கல்வி அறிவு சிறிதும் இல்லாதவன், ஞானிகள், யோகிகள் என்ற எவருடனும் பழகாதவன். பிறவி நோய் என்ற ஒன்று இருப்பதாகவோ, அதனைக் கடக்க வேண்டும் என்பதாகவோ அவன் கனவிலும் நினைக்கவில்லை. இராமனைக் காணவந்துள்ள முனிவர் கூட்டம், அவனைத் தரிசிப்பதன் மூலம். அவனைச் சரண் அடைவதன் மூலம் தம் பிறவியைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்ற கருத்துடனேயே வந்துள்ளது. இவர்களின் எதிராகக் குகன் ஒரு கலயத்தில் தேனையும் மீனையும் கொண்டு வருகிறான். இராமனைக் கண்டு அன்பு கொள்ள வந்துள்ளானே தவிர அவனிடம் எதனையும் எதிர்பார்த்து வரவில்லை. எனவேதான் அவன் வந்துள்ளான், என்று இராமனிடம் விண்ணப்பம் செய்யச் சென்ற இலக்குவன்

'கொற்றவ, நின்னைக் காணக் குறுகினன், நிமிர்ந்த கூட்டச்
சுற்றமும், தானும், உள்ளம் தூயவன்; தாயின் நல்லான்'
(குகப்-11)

என்று கூறுகிறான்.

'உள்ளம் தூயவன்; தாயினும் நல்லவன்' என்பன இளைய பெருமாள் குகனுக்குத் தந்த அடைமொழிகள். உள்ளே சென்று இராமனைக் காணுகிறான் குகன். அவன் 'இருக்க' என்று பணித்த போதும் அமரவில்லை. தான் கொணர்ந்த உணவை இராமன் முன்னே வைத்து ''தேனும் மீனும் அமுதினுக்கு இயைவதாகத், திருத்தினன் கொணர்ந்தேன் என்கொல் திருவுளம்?'' (13) என்று பேசுகிறான். மேலும் ''இப் பார் குலாம் செல்வ, நின்றனை இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன் யான், இன்னலின் இருக்கை நோக்கித் தீர்கிலேன்'' (16) என்றும் பேசுகிறான்.

முன்பின் பார்த்திராத இராமன்மாட்டுக் குகனுக்கு ஏற்பட்ட அன்பு சிறிது சிறிதாகத் தோன்றி, பழகப் பழக முதிர்ந்த அன்பு அன்று. தோன்றும்பொழுதே முழுவதாகத் தோன்றிய அன்பாகும் இது. இந்த அன்பை வழியாகக்கொண்டு குகன் எதனையும் பெற விரும்பவில்லை. இந்த அன்பையே பயனாகக் கொண்டவன். இதனாலேயே பெருமான் இவனை ஏற்றுக் கொண்டான்.

இதற்கு மறுதலையாக, ஞானத்தால் இராமனை இன்னான் என்று தெரிந்துகொண்டு அவனிடம் ஆட்பட்டவன் வீடணன். பெருங் கல்வியாளனும் ஞானியுமாகிய அவன் அனுமன் மூலம் இராமனைப் பற்றி அறிய நேர்ந்தது. இறை அன்பு ஓரளவு அவனிடம் இருந்தது. ஆனால் அந்த அன்பு அவனுடைய ஞானம் வளர்வதற்குத் துணை புரிந்ததோடு சரி. அவன் வளர்ச்சியைக் கவிஞன் நன்கு வெளிப்படுத்துகிறான். 'என் கண் எதிரில் நில்லாது ஒழிக' என இராவணன் கூறியவுடன் துணைவர் நால்வருடன் வீடணன் கடற்கரைக்கு வந்து விட்டான். தன்னுடன் வந்த துணைவரை மேலே செய்யத்தக்கது யாது என வினவினான். அவர்கள் இராமனைச் சென்று காண வேண்டும் என்றனர்.

இவர்கள் கூறியதைக் கேட்டமாத்திரத்தில் வீடணன் 'நல்லது சொல்லினீர்!' என்று கூறிவிட்டுத் தன் மனநிலையை உடன் கூறத் தொடங்குகிறான்.

'முன்புறக் கண்டிலென்; கேள்வி முன்பு இலென்;
அன்புறக் காரணம் அறியகிற்றிலேன்;
என்புறக் குளிரும்; நெஞ்சு உருகுமேல், அவன்
பின்புறப் பிறவியின் பகைஞன் போலுமால்...'
'.............................................................
எல்லையில் பெருங்குணத்து இராமன் தாளினை
புல்லுதும்; புல்லி, இப்பிறவி போக்குதும்.'

(வீட. அடை. 20, 19)

இவ்விரண்டு பாடல்களும் வீடணன் மன நிலையையும் குறிக்கோளையும் நன்கு அறிவுறுத்துகின்றன. முன்பின் பாரா விட்டாலும் இராமன் பெயரைக் கேட்டளவில் எலும்புகள் குளிருகின்றனவாம், நெஞ்சு உருகுகின்றதாம். இவை இரண்டு செயல்களும் இறை அன்பு பூண்டார் மாட்டு உண்டாகின்ற மெய்ப்பாடுகள். அந்த அன்பையும் அதன் விளைவுகளாகிய இந்த மெய்ப்பாடுகளையும் வீடணன் கருவியாகவே பயன்படுத்து கிறான். இத்தகைய உருக்கத்தை ஒருவன் பெயர் உண்டாக்க வேண்டுமெனில் அவன் பிறவியைப் போக்கக் கூடியவனாகத்தான் இருத்தல் வேண்டும் என்பது வீடணன் தன் ஞானத்தால் கண்ட உண்மை. இனி இராமனிடம் அழைத்துச் செல்லப்படும் நேரத்தில் கூட அவனுடைய முக, மனபாவங்களைக் கூறும் கவிஞன் 'வழிந்த கண்ணீருடன்' செல்கிறான் என்று மட்டும் கூறாமல் 'அழிந்தது பிறவி என்னும் அகத்து இயல் முகத்துக் காட்ட' (138) என்று கூறுவதால் வீடணன் தன் ஞானத்தால் பரம்பொருளின் இயல்பையும் கருணையையும் அறிந்ததுடன் அதனால் தான் அடையப்போகும் பேற்றையும் நன்கு விளங்கிக் கொண்டிருந்தான் என்பதைக் கவிஞன் சுட்டிச் செல்கிறான். இராமன் மாட்டு வீடணன் கொண்ட அன்பு (பக்தி) தன்னுடைய பிறவியைப் போக்கிக் கொள்ளவும், அப்பரம்பொருளை ஓரளவு அறிந்து கொள்ளவும் வழியாகப் (சாதனமாக) பயன்பட்டதே தவிர அந்த அன்பைக் குகனைப் போலப் பயனாக (சாத்தியமாக) கொள்ள வில்லை என்பது தெளிவு. குகனிடம் இத்தகைய பக்தி வளர்வதற்கு இயற்கையாக அவனிடம் அமைந்திருந்த ஞானம் உதவி இருக்கலாம். வீடணனிடம் இந்த ஞானம் வளர்வதற்கு இயற்கை யாக அவனிடம் அமைந்திருந்த பக்தி உதவி இருக்கலாம். குகன் பக்தியை சாத்தியமாகவும், வீடணன் பக்தியைச் சாதனமாகவும் கொண்டனர். இருவரையும் வள்ளல் தன் மாட்டு எடுத்துக் கொள்வதால், இந்த இரண்டு வழிகளுமே இறைவனுக்கு உகந்தவை என்பது தெளிவு.

ஆனால் இவர்கள் இருவரும் மேற்கொண்ட வழிகள் சாதாரண மனிதர்கள் மேற்கொள்ள முடியாத சர்வ பரித்யாகம் அடிப்படையானது. எனவே அவை சாதாரண மனிதர்கள் எளிதில் கைக் கொள்ளக்கூடியன அல்ல. அப்படியானால் சாதாரண நம் போன்ற சராசரி மனிதன் இறையருளை நாடவே முடியாதா என்று ஐயங் கொள்ளத் தேவை இல்லை. அதற்கும் ஒரு வழி உண்டு

என்று காட்டுதற்காகவே சுக்ரீவன் படைக்கப்பட்டுள்ளான். சாதாரண மனிதன் தன் அறிவாலும் கேள்வி ஞானத்தாலும் பரம்பொருளின் உண்மையை அறிந்துகொண்டாலும், ஓரளவு அப்பொருளிடத்து பக்தி செய்தாலும் இடை இடையே சந்தேகம் வருவது வாழ்க்கையில் நாம் கண்ட அனுபவமேயாகும். நம்முடைய பக்தியும் ஞானமும் முழுத்தன்மை பெறாமல் உள்ளன ஒரு சிலருக்கு வாழ்க்கையில் கிடைக்கும் அனுபவம் இந்த பக்தியையும் ஞானத்தையும் வளர்க்கப் பயன்படுகின்றன. நல்லவர்கள் தொடர்பும், நல்ல கேள்வி ஞானமும் நாளா வட்டத்தில் நம் பக்தியையும் ஞானத்தையும் வளர்க்க உதவுகின்றன.

நம் போன்ற சராசரி மனிதனுடைய நேர்பிரதிநிதியாக சுக்ரீவன் இருக்கிறான். அவன் கல்வியுடையவன். "இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள் கூறக் கல்லாத கலையும், வேதக் கடலுமே" என்னும் (அனுமன்-18) தோற்றுவிக்கக் கூடிய அனுமனே சுக்ரீவனின் உற்ற துணைவனாகவும் அமைச்சனாகவும் உள்ளான். அந்த அனுமன்தான் இராம இலக்குவர்களைப் பற்றிச் சுக்ரீவனிடம் விவரமாகக் கூறி அவனை அவர்களிடம் அழைத்துச் சென்றான். சுக்ரீவன் இராமனைக் கண்ட இயல்பையும் அவனுடைய மன நிலையையும் கவிஞன் கூறுகின்றான்.

"நோக்கினான்; நெடிது நின்றான்; 'நொடிவரும்
கமலத்தண்ணல்
ஆக்கிய உலகம் எலலாம், அன்று தொட்டு இன்று காறும்
பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்து, இரு படிவம் ஆகி.
மேக்குயர் தடந்தோள் பெற்று வீரராய் விளைந்த' என்பான்,

'தேறினன்—'அமரர்க்கு எல்லாம் தேவர் ஆம் தேவர் அன்றே,
மாறி, இப்பிறப்பில் வந்தார் மானுடர் ஆகி மன்னோ
ஆறு கொள் சடிலத்தானும், அயனும், என்று இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடம் வென்ற தன்றே!'
(நட்புக்—18, 19)

'நான்முகன் படைத்த உலகங்கள் அனைத்தும் செய்த தவமெல்லாம் திரண்டு இரண்டு வீரர் வடிவு பெற்று வந்தன போலும் என்று முதலில் நினைத்தான். பின்னர் ஆராய்ந்து கடவுளர் அனைவரும் உருமாறி மானுட வடிவு பெற்று வந்தவர் போலும் என்றும் நினைந்தான். பின்னர் இராமனை நெருங்கிப்

பேசும்பொழுது 'ஆர் உயிர் துறக்கல் ஆற்றேன்; சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம் என்றால்' (நட்புக்-23) ஏனைய குகனும், வீடணனும் இவ்வாறு இராமனிடம் இரந்து தன் துன்பத்தைத் துடைக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்ள வில்லை. ஆனால் சுக்ரீவன் தன் துன்பத்தைப் (பிறவித் துன்பத்தை அன்று) போக்க வேண்டும் என்று இராமனிடம் சரணம் புகுகின்றான்.

ஞானியாகிய வீடணன் இராமனிடம் சரணம் புகுவதற்கும் கர்மியாகிய சுக்ரீவன் 'சரண் உனைப் புகுந்தேன்' என்று கூறுவதற்கும் வேறுபாடு நிரம்ப உண்டு. இறைவனின் அளப்பரிய பெருமையையும் உயிர்களினுடைய சிறுமையையும் அவனன்றி வேறு புகலிடம் இல்லாமையும் அறிந்துகொண்ட ஞானி தன்னை முழுவதுமாக இறைவனிடம் சரணமாகத் தந்து விடுகிறான். அவ்வாறு தந்துவிட்ட பிறகு அவனுக்கென்று தனிப்பட்ட வாழ்க்கையே இல்லை. அதன் பிறகு வாழும் வாழ்க்கை முழுவதும் இறைவன் பணியை நிறைவேற்றும் ஒரு கருவியாகவே ஞானி வாழ்கிறான். ஆனால் சுக்ரீவன் போன்றவர்கள் சரணம் என்று தன்னைத் தந்தாலும் அது சர்வபரி த்யாகம் அன்று. தங்களுடைய துன்பத்தைத் துடைக்க வேண்டும் என்பதற்காகவே தம்மை அடைக்கலமாகத் தருகின்ற சாதாரண இயல்பு.

வீடணன் சரணத்துக்கும் சுக்ரீவன் சரணத்துக்கும் உள்ள வேறுபாட்டை எளிதில் அறிய முடியும். பரம்பொருள் என்று தன் ஞானத்தால் அறிந்த பிறகே வீடணன் அடைக்கலம் புகுந்தான். பரம்பொருளையன்றி வேறு யாரிடமும் அவன் தன்னை ஒப்படைக்க இசையமாட்டான். ஆனால் சுக்ரீவன் சாதாரண மனித இயல்பு படைத்தவனாகலின் தன்னுடைய அப்போதையத் தேவையை யார் பூர்த்தி பண்ண முன் வருகிறார்களோ அவர் களிடம் அப்போதைக்குச் சரணம புகுந்துவிடுவான். வாலியைக் கொல்லக் கூடியவன் இராமன் ஒருவனே என்று அவன் அறிவு கூறியதால் மட்டுமே அவன் இராமனிடம் சரணம் புகுந்தான்.

இந்த அன்பு முழுத்தன்மை பெற்றது அன்று என்பதை அறிந்துகொள்ள நீண்ட ஆராய்ச்சி தேவை இல்லை. வாலி இறந்த பிறகு தன் படைகளைத் திரட்டி வரக் கொஞ்ச காலம் ஆகும். அதுவரைப் பொறுத்திருக்க வேண்டும் என்று இராமனிடம் கேட்டுக் கொண்டு தன் அரண்மனை சென்ற சுக்ரீவன்;

வாழ்க்கையை அனுபவிக்கத் தொடங்கிவிட்டான். இராமனை அறவே மறந்துவிட்டு, அவனுக்குத் தான் தந்த வாக்குறுதியையும் காற்றில் பறக்க விட்டுப் பெருங்குடியனாக வாழத் தொடங்கி விட்டான். அனுமனும், வாலியின் மனைவியாகிய தாரையுங்கூட அவனைத் திருத்த முடியவில்லை. இன்பங் கண்டவிடத்து இறைவனை மறந்து இன்பவேட்கையில் ஈடுபடும் சராசரி மனிதனாகவே சுக்ரீவன் உள்ளான். அவன் நிலையை இராமனே,

‘பெறல் அருந் திருப்பெற்று, உதவிப் பெரும்
திறம் நினைத்திலன்; சீர்மையின் தீர்ந்தனன்,
அறம் மறந்தனன்; அன்பு கிடக்க, நம்
மறம் அறிந்திலன்; வாழ்வின் மயங்கினான்.’

‘நன்றி கொன்று, அரு நட்பினை நார் அறுத்து
ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளார்க்
கொன்று நீக்குதல் குற்றத்தில் தங்குமோ?’

(கிட்கி. படலம்-2, 3)

என்று பேசுகிறான்.

இவ்வளவு இழிநிலையைச் சுக்ரீவன் அடைந்தாலும், இராமனிடம் வந்து தன் பிழைக்கு இரங்கி மன்னிப்புக் கேட்ட வுடன் இராகவன் இவனை மன்னித்து ஏற்றுக்கொள்கிறான்.

இதே சுக்ரீவன் இராமனுடன் தங்கி நெருங்கிப் பழகத் தொடங்கியபின்தான் உயிரையும் இராகவனுக்கு உதவ முன் வருதலை இராம-இராவணன் போரின்போது காண்கிறோம். அவனுடைய அறிவும் உணர்வும் (ஞானமும், பக்தியும்) சமயத்தில் அவனைக் கைவிட்டாலும் இறுதியில் அவன் செயல்கள் மூலமாக இராமனின் தம்பியாக ஆவதற்குரிய தகுதியைப் பெற்று விடுகிறான். சராசரி மனிதனுடைய குற்றங்கள் எத்துணைப் பெரிய மலையளவு இருப்பினும் அவையும் மன்னிக்கப்படும் என்பதற்கும், அவனும் திருவருளுக்குப் பாத்திரமாகலாம் என்பதற்கும் எடுத்துக்காட்டாக சுக்ரீவன் நிற்கிறான்.

சுக்ரீவன் மனத்தளர்ச்சியும் பின்னர் இராமனுடன் வாழத் தொடங்கியபின் அவன் பெற்ற மன வளர்ச்சியும் சராசரி மனிதனைப் படம் பிடித்துக் காட்டுவதாக அமைகின்றன. எனவே அவனையும் இராமன் தம்பியாக ஏற்றுக்கொள்கிறான். எனில் சராசரி மனிதனுக்கும் இறையருள் என்றும் கிடைக்கும் என்பதற் காக அது சான்றாகிறது.

மூன்று தம்பியரை இராமன் வனத்தில் ஏற்றுக்கொண்டாலும் மூவரும் மூன்று வேறுபட்ட பண்பினை உடையவர்கள். இறைவன் திருவருளுக்கு எத்தகையவர்களும் பாத்திரராக முடியும் என்ற பேருண்மை வெளிக்காட்டவே இம்மூவரும் ஏற்றுக் கொள்ளப்படு கின்றனர். அன்பே வடிவான குகன் பக்தி மார்க்கத்தின் பிரதிநிதி யாகவும், அறிவே வடிவான வீடணன் ஞான மார்க்கத்தின் பிரதி நிதியாகவும் இருக்கின்றனர். இரண்டு வழிகளிலும் முற்றிலும் ஈடுபடாமல் இதிற் கொஞ்சமும் அதிற் கொஞ்சமும் ஏற்றுக் கொண்டு ஆனால் அதே நேரத்தில் சாதாரண மனிதர்கட்குரிய குறைபாடுகளையும் பெற்று, கடமையைச் செய்து வாழும் எந்த மனிதனுங்கூட இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படும் தகுதி பெற்றவனாகிறான், என்பதற்கு எடுத்துக்காட்டாக சுக்ரீவனும் அமைகின்றான். இராகவன் மூன்று தம்பியரை ஏற்றதாகக் கூறுவது இந்த மூன்று வழிகளில் (பத்தி, ஞானம், கர்மம், ஆகிய மார்க்கங்கள்) எதனைப் பின்பற்றினாலும் இறையருள் பெறுவது திண்ணம் என்ற அடிப்படையை அறிவுறுத்தவேயாம்.

# 10. மனிதனின் பிரதிநிதி

இராமன் உடன்பிறவாத் தம்பியராக ஏற்றுக்கொண்டவர்களுள் நடுவில் நிற்பவன் சுக்கிரீவன். அன்பே வடிவாக இருக்கும் குகனுக்கும் அறிவே வடிவாக இருக்கும் வீடணனுக்கும் இடையில் இருப்பவன் சுக்கிரீவன். இராமனுடைய வன வாழ்க்கை தொடங்கி முடிவதற்குள் இம்மூவரும் ஒருவர் பின் ஒருவராக இராமனை அடைகின்றனர். வந்துசேர்ந்த முறையிலும் சுக்கிரீவன் இடைப்பட்டவனாக இருப்பது எல்லா வகையிலும் பொருத்தம் உடையதாகவே அமைந்துள்ளது.

மனிதன் அறிவு, உணர்ச்சி என்ற இரண்டின் கூட்டுச்சேர்க்கையில் வாழ்பவனாவான். இவை இரண்டும் தம்முள் ஒத்த அளவுடன் இருத்தல் வேண்டுமா, ஓரளவு ஏற்றத்தாழ்வுடன் இருத்தல் வேண்டுமா என்ற வினாவிற்கு விடை இறுத்தல் கடினமானது. சில சமயங்களில் அறிவு தலைதூக்கியும், இன்னுஞ் சில சமயங்களில் உணர்வு தலை தூக்கியும் இருப்பவனே சராசரி மனிதன் எனப்படுவான். அறிவின் விளக்கம் இல்லாமல் உணர்வு மட்டும் உடையவனை நாகரிகமற்றவன் என்றும், உணர்ச்சியே இல்லாமல் அறிவுக்கூர்மை மட்டும் உடையவனை சமுதாய வாழ்க்கைக்கு ஏலாதவன் என்றுங் கூறுகிறோம். "அரம்போலும் கூர்மைய ரேனும், மரம்போல்வர் மக்கட்பண் பில்லா தவர்" (997) என்று அறநூல் பேசுகிறது. திருவள்ளுவர் மக்கட்பண்பு என்று கூறுவது அறிவும் உணர்வும் கலந்த ஒரு நிலையையேயாகும். இத்தகைய அறிவு, உணர்வுக் கூட்டில் பல சமயங்களில் விநோதமான சூழ்நிலை ஏற்படுவதும் உண்டு. அறிவு சரி என்று கூறுவதை உணர்வு ஏற்றுக்கொள்ள மறுப்பதும், உணர்வு ஒப்புவதை அறிவு ஏற்க மறுப்பதும விநோதமான சூழ்நிலையை உருவாக்கும். சராசரி மனிதனுக்கு அறிவைவிட உணர்ச்சியே தலைதூக்கி நிற்கும்.

'கொல்லவில்லை; பெண் கொலை கூடாதாகலின்' என்று வாயினால் கூறாமல் அவள் அரற்றினாள் என்று கூறி வணங்கினான் அப்பெருமகன். இக் குறிப்பை அறிந்து கொண்டு சக்கரவர்த்தி திருமகன்

'தொல்இருள், தனைக் கொலத் தொடர்கின்றாளையும்
கொல்லலை! நாசியைக் கொய்து நீக்கினாய்!
வல்லைநீ! மனு முதல் மரபினோய்! என...

(கம்பன்-3632)

நீ மனு முதல் மரபின் வந்து அந்தப் பழமையான அறத்தைக் காப்பவன் ஆதலின் பெண் கொலை செய்யவில்லை. நின்னை வாழ்த்துகிறேன் என்றான். இராகவன் தான் தன் விழுப் பொருளை மாற்றிக்கொண்டதுபோல இளையவனும் மாற்றிக் கொள்ள வேண்டும் என்று நினைக்கவில்லை. இதுவே அறத்தின் மூர்த்தியாகிய இராகவனுக்குப் பெருமை.

இருவரும் அண்ணன் தம்பிகள்தாம். என்றாலும் இருவருடைய விழுப்பொருள்களும் மாறுபடுகின்றன! என்றாலும் என்ன? தான் கொண்ட விழுப்பொருள் அண்ணன் கொண்ட விழுப்பொருளினும் மாறுபட்டது என்றாலும் அதை வெளிப்படையாகக் கூறி அண்ணன் மனம் நோகுமாறு செய்ய இலக்குவன் விரும்பவில்லை. ஆனால் அதன் அருமைப் பாட்டை நன்குணர்ந்து கொண்ட இராகவன் 'மனுவின் மரபு கெடாமல் காக்கின்றவன் நீயே' என்ற பெரியதொரு புகழ் மாலையைத் தம்பிக்குச் சூட்டி மகிழ்கின்றான்: மாறுபட்ட கருத்துக்கு மதிப்புத் தருவதே இருவருக்கும் ஒத்த விழுப்பொருள் போலும்!

இலக்குவனுடைய விழுப் பொருளுக்கு இப்பொழுது மரியாதைதந்து ஏற்றுக்கொள்ளும் இராமன், முன்னர் ஒரு நிலையில் இவ்வாறு செய்யவில்லை. தான் கூறினவுடன் இலக்குவன் அடங்கிவிடுவான் என்று தவறாக எடைபோட்டு விடுகிறான். இலக்குவனுடைய உண்மையான ஸ்வரூபத்தை இங்குத்தான் இராமன் காண்கிறான். அதிலிருந்து கற்றுக் கொண்ட பாடந்தான் அயோமுகி நிகழ்ச்சியில் இராமன் தக்கவாறு நடந்துகொள்ள உதவிற்று போலும்.

பரதனுக்கு முடி வழங்கக் கைகேயி அரசனிடம் வரம் பெற்றுவிட்ட செய்தி இலக்குவன் காதில் விழுந்து விட்டது: அந்த நேரத்தில் இராகவன் அவனுடன் இல்லை. எனவே கொதித்து எழுகிறான் சுமித்திரை சிங்கம்.

'புவிப்பாவை பரம்கெட, போரில் வந்தோரை எல்லாம்
அவிப்பானும், அவித்து அவர் ஆக்கையை அண்டம்
முற்றக்
குவிப்பானும், எனக்கு ஒரு கோவினைக் கொற்ற மௌலி
கவிப்பானும் நின்றேன்; இது காக்குநர் காமின்'
(கம்பன்-1722)

என்று கூவிக்கொண்டு நிற்கிறான். தேவரும் அஞ்சும் அந்த நிலையில் அவனிடம் சென்று பேச யாருக்குத் தைரியம் வரும்? இராகவன் இலக்குவனிடம் வந்து 'என் அத்த! என்? நீ இமையோரை முனிந்திலாதாய் சன்னத்தன் ஆகித்தனு ஏந்துதற்கு ஏது? (கம்பன்-1727) என்கிறான்.

இதற்கு இலக்குவன் கூறிய விடை நாம் நன்கு அறிந்த ஒன்றாகும். இராமன் என்ன கூறியும் இலக்குவன் சினம் அடங்குவதாகத் தெரியவில்லை. 'இது விதியின் பிழை' என்ற இராமனுக்கு 'விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி' என்று விடை கூறிவிட்டான் இளையவன். இவ்வாறு இளையவன் கோபிக்கக் காரணம் யாது? 'வாய் தந்தன கூறுதியோ மறைதந்த நாவால்' என்று கூறியும் இலக்குவன் அடங்கவில்லை. இதற்கு மேல் ஒருபடி சென்ற இராமன் 'ஐய! இவ்வையம் மையல் தோன்றா நெறிவாழ் துணைத் தம்பியைப் போர் தொலைத்ததோ? சான்றோர் புகழும் தனித்தாதையை வாகை கொண்டோ? ஈன்றாளை வென்றோ இனி இக் கதம் தீர்வது? என்று கூட இராமன் தன் துயரை வெளியிட்டான்.

இந்தப் பேச்சுக்கள் எதுவும் இலக்குவன் காதில் ஏற மறுத்து விட்டன. காரணம் என்னவாக இருக்கும்? இராமனுடைய விழுப்பொருளும் இலக்குவனுடைய விழுப்பொருளும் முற்றிலுமாக மாறுபட்டு நிற்பதேயாகும். இராமனைப் பொறுத்த வரையில் அவனுக்குத் தாய், தந்தை சகோதரன் என்று பாகுபாடு உண்டு. முன்னர் உள்ள இருவரும் என்ன 'ஏவினாலும்' ஏன் என்று கேளாமல் உடனே கீழ்ப்படிய வேண்டும் என்ற கொள்கை உடையவன். அவன் உயிரினும் மேலாக மதிக்கின்ற விழுப்பொருள் அவ்வாறு கீழ்ப்படிதலே என்ற கொள்கையுடையவன். அதனால்தான் கைகேயி 'அரசன் உன்னை வனஞ் செல்ல ஆணையிட்டுள்ளான்' என்று கூறினவுடன் மறுவார்த்தை பேசாமல் ''எந்தையே ஏவநீரே உரை செய இயைவது உண்டேல் உய்ந்தனன் அடியேன்'' என்றும் ''மன்னவன் பணி அன்றாகில்

நும் பணி மறுப்பனோ? என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ? என்றும் கூறி, 'விடையுங் கொண்டேன்' என்று புறப்படுகிறான். இராமனுடைய விழுப்பொருள் இவ்வாறு இருத்தலின் அவன் எதிர்பேசாது உடன் புறப்படச் சித்தமானதில் புதுமை இல்லை.

ஆனால் இளையபெருமாளைப் பொறுத்தமட்டில் நிலைமையே வேறு! அப்படியானால் அவனுக்குத் தாய் தந்தை என்ற மதிப்பு இல்லையா? நன்றாக உண்டு. தாய் தந்தையரை உயிரினும் மேலாக மதிக்கின்றவன்தான் இலக்குவனும். அப்படியானால் ஏன் இராமன் 'தந்தையை வாகை கொண்டோ? ஈன்றாளை வென்றோ இக்கதம் (கோபம்) தீர்வது?' என்று கேட்டபொழுதும் இலக்குவன் அது பற்றிக் கவலைப்படவில்லை என்ற வினா நியாயமானதே! இதில் ஒரே ஒரு சிறு வேறுபாடுதான் உண்டு. அதனைப் புரிந்து கொள்ளாவிடின் விளைவது தவறேயாகும். இளையவனைப் பொறுத்தமட்டில், அவன் தாய், தந்தை, சோதரர்கள் யார் தெரியுமா? இதோ அவனே இராமனிடம் பேசும்போது இந்த உண்மையைக் கூறுகிறான்.

'நல் தாதையும் நீ! தனிநாயகன் நீ; வயிற்றில்
பெற்றாயும் நீயே பிறர் இல்லை'. (கம்பன்-1737)

இப்பொழுது புரிகிறதல்லவா? ஏன் இலக்குவன் தசரதனையும், கைகேயியையும், பரதனையும் மதிக்கவில்லை என்று! அவனைப் பொறுத்த மட்டில் சுமித்திரை அவனைப் பெற்றவள் என்பதைக் கூட ஏற்க மறுத்துவிட்டான்!. 'வயிற்றில் பெற்றாயும் நீ' என்று ஆண்மகனாகிய இராமனைப் பார்த்துக் கூறியதுகூட வியப்பில்லை. அடுத்து ஒரு சொல்லைப் போட்டானே அதுதான் சிறப்பு. 'வயிற்றில் பெற்றாயும் நீயே; பிறர் இல்லை' என்ற சொற்கள் இலக்குவனுடைய அந்தரங்கத்தில் உள்ள விழுப்பொருள் யாது என்பதை நமக்குக் காட்டிவிடுகிறது. ஒரு தாய் ஏவினதை ஏற்றுக்கொண்டான் இராமன். ஆனால் இலக்குவனைப் பொறுத்தமட்டில் இராமனுக்கு ஆபத்து என்றால் அவனுடைய தாய், தந்தை, தெய்வம் (தனிநாயகன்) ஆகிய அனைவருக்கும் ஒரு சேர ஆபத்து வந்துவிட்டதாகவல்லவா பொருள்! எனவே இராமன் கூறிய தசரதன், பரதன் கைகேயி என்பவர்கள் இராமனுக்குத் தந்தை, தம்பி, தாய் எனப் படுபவர்களே தவிர இலக்குவனைப் பொறுத்தமட்டில்

இவர்கள் அனைவரும் அந்நியர்களே! அவன் தாய், தந்தை, தெய்வம் அனைவரும் இராமனே ஆதலின் அவன் தசரதனைப் போரிட்டுக் கொல்லத் துணிந்ததில் தவறு இல்லை யல்லவா? இவர்கள் அந்நியர்களாக ஆகவிட்டது மட்டுமன்று; பகைவர்களாகவும் ஆகிவிட்டனர். ஏன்? அவன் தாயும், தந்தையுமாக உள்ள இராமனுக்குத் தீமை புரிகின்றவர்களை அவன் எவ்வாறு பார்த்துக்கொண்டு பொறுமையோடு இருக்க முடியும்? எனவேதான் அவன் தெய்வமாகிய இராமனுக்குத் தீமை நினைந்து செய்யத் துணிந்தவர்களை அழிக்க முற்பட்டால் அதில் யார் தவறு காண முடியும்' அவன் பகை என்று கருதுபவர்கள் துரதிஷ்டவசமாக இராமனுக்குத் தாயும் தந்தையுமாக இருந்துவிட்டனர். அது ஒரு தற்செயல் (accident) இதற்காக இளையவன் என்ன செய்ய முடியும்? அவன் விழுப்பொருள் என்று கருதும் இராமனுக்கு வரும் தீமையைத் தடுக்க முற்படுகிறான். எனவே அவனுடைய கோபம் தவறானது என்று கூறமுடியாத நிலை. இதனை இராமனும் புரிந்துகொள்கிறான். அவன் எப்பொழுது புரிந்து கொண்டான்? 'பெற்றாயும் நீயே பிறர் இல்லை' என்று இலக்குவன் அடித்துப் பேசியபொழுதுதான் இராமன் இலக்குவனையும் அவனுடைய விழுப்பொருள் யாது என்பதையும் புரிந்துகொண்டான்.

புரிந்துகொண்ட இராமன் மற்றொன்றையும் தெரிந்து கொண்டான். தான் கூறிய வாதங்களில் இலக்குவன் கட்டுப்படமாட்டான் என்பதனையும் இவனை இப்படியே விட்டால் விளைவது தீமையே என்பதையும் நன்கு தெரிந்து கொண்டான். அப்படியானால் அடுத்துச் செய்யவேண்டியது யாது? இலக்குவன் எதனைத் தனது விழுப்பொருள் என்று கருதுகிறானோ, அதன் வழியியே சென்றுதான் அவனை மடக்கவேண்டும் என்ற உண்மை இராமனுக்கு நன்கு புலனாயிற்று. தனக்கு விழுப்பொருளாக உள்ள தாய், தந்தை, சோதரன் என்பவர்களைக் காக்க வேண்டுமானால் இலக்குவனை அடக்க வேண்டும். அவனை அடக்கவேண்டு மானால் அவனுடைய விழுப்பொருளுக்கு ஊறு நேராமல் அதன் வழியே சென்று அதனை முடிக்கவேண்டும். இந்த வழி தெரிந்தவுடன் இராமன் தான் இதுவரை பேசிய முறையை மாற்றிக்கொண்டு விட்டான். தசரதனையோ, பரதனையோ குறித்துப் பேசினால் இலக்குவன் கோபத்திற்கு எண்ணெய் ஊற்றியதுபோலாகிவிடும். ஆனால் அவர்களை விட்டு

விடவும் முடியாது. இதற்கு வழி என்ன? இதோ அற்புதமான வழியைக் கண்டு பேசுகிறான் மூத்தவன். 'தம்பி! எனக்கு நல்ல அறிவுரைகளை அன்றாடம் கூறி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்த என் தந்தையின் கட்டளையை மீறி அரசை மறுபடியும் ஏற்பது எனக்குத் தக்கதன்று என்ற முடிவுக்கு நான் வந்துவிட்டேன். காரணம் என் விழுப்பொருள் அதுதான், உன்னைப் பொறுத்தமட்டில் உன் விழுப்பொருள் என் ஒருவனை மட்டுமே பொறுத்துள்ளது. அப்படியானால் உன்னால் தாய், தந்தை, தெய்வம் என்று வழிபடப்படுகின்ற என் சொல்லைத் தட்டி நடப்பது உனக்கு முறையாகுமா? என் சொற்படி நடந்துகொண்டால் அதனால் உனக்கு ஏதேனும் ஊனம் உண்டாகுமென்று நினைக்கிறாயா? என்ற பொருளில்

'நன் சொற்கள் தந்து ஆண்டு, நாளும் எனைவளர்த்த தாதை ;
தன்சொல் கடந்து எற்கு அரசாள்வது தக்கது அன்றால் ;
என்சொல் கடந்தால், உனக்கு யாது உளது ஊனம்? என்றான்—
தென்சொல் கடந்தான், வடசொற் கடலுக்கு எல்லை தேர்ந்தான்'

(கம்பன் - 1741)

செல்லுஞ் சொல் வல்லானாகிய இராமன் ஒரு சில சொற்களைக் கூறுவதன்மூலம் தேவரும் மூவரும் செய்ய முடியாத காரியத்தைச் செய்துவிட்டான். 'என் சொல்லைத் தட்டாமல் ஏற்றால் உனக்கு அதனால் என்ன இழுக்கு நேரப் போகிறது?' என்ற வினாவில் ஓர் ஆணையல்லவா அடங்கி இருக்கிறது: ஆம் இலக்குவனுடைய விழுப்பொருளுக்கு மதிப்புக் கொடுக்கும் முறையில் அவனை முற்றிலுமாக ஆட்படுத்தி விட்டான் இராமன்.

இதன் விளைவு என்ன தெரியுமா?

'சீற்றம் துறந்தான் ; எதிர்நின்று தெரிந்து செய்யும்
மாற்றம் துறந்தான் ; மறை நான்கு என வாங்கல் செல்லா
நால் தெண்திரை வேலையின், நம்பிதன் ஆணையாலே
ஏற்றம், தொடங்காக் கடலின் தணிவு எய்தி நின்றான்'.

(கம்பன் - 1742)

உடனடியாக இலக்குவன், கோபம் இருந்தவிடம் தெரியாமற் போய்விட்டது! வார்த்தைக்கு வார்த்தை பதில் சொல்லும் வகை மறைந்துவிட்டது! அடங்கிய கடலைப்போல அடங்கி விட்டான் தம்பி. ஆம்! அவனுடைய விழுப்பொருளுக்கு (Values) அவனால் வணங்கப்படும் அண்ணனே இப்பொழுது மதிப்புக் கொடுத்துவிட்டான். இலக்குவன் விழுப்பொருள் என்று எதனை உயிரினும் மேலாகக் கொண்டிருந்தானோ அதற்கு மதிப்புக்கொடுப்பதன்மூலம் இராமன் இலக்குவனை இன்னும் நெருக்கத்திற்குக் கொண்டுவந்துவிட்டான். இலக்குவன் இராம அனுஜனாக ஆகிவிட்டான்; ஒவ்வொரு வரும் தத்தம் விழுப்பொருளை விட்டுக் கொடுக்காமலேகூட உயிரினும் இனிய உறவுடன் இருக்க முடியும் என்பதைக் கம்பன் காட்டும் இடம் இது.

ஒரே மனிதனுடைய வாழ்க்கையில் புதிய நிகழ்ச்சிகள் அவனுடைய பழைய விழுப்பொருள்களை மாற்ற உதவியாக இருக்கலாம். அந்த நிகழ்ச்சிகளைக் கண்ட அல்லது கேட்ட அனைவருக்கும் அவை ஒரே மாதிரியான எதிர்த் தாக்குதல் களைத் தரவேண்டும் என்று நினைக்கக்கூடாது. உதாரண மாகக் கற்பைப் பற்றித் தமிழர்கள் எவ்வளவு உயர்வாகவும் இன்றியமையாத சிறப்பினை உடையதாகவும் நினைக்கிறார் களோ அதே போன்ற நினைவுடையவர்தாம் மகாத்மா காந்தியும். நவகாளியில் நடை உலாச் செல்கையில் அடிகளாருக்குப் பல கடிதங்கள் வந்தன. இந்து முஸ்லிம் கலவரத்தில் கற்பழிக்கப்பட்ட சகோதரிகள் பலர் கருவுற்றுள்ளனர் என்றும் அவர்களை என்ன செய்யலாம் என்றும் பலர் அடிகளாரைக் கேட்டிருந்தனர். காந்திஜி என்ன பதில் எழுதினார் தெரியுமா? ஆண்மை உடையவர்கள் என்று தம்மைக் கூறிக்கொள்ளுபவர் யாவரும் அந்தப் பெண்களை மணஞ்செய்து கொண்டு வாழ வேண்டும் என்று எழுதினார். பெரிய சனாதனிகள் என்று பறைசாற்றிக்கொண்டு கள்ள வாழ்க்கை வாழும் போலிகள் சிலர் ஆகா! காந்தி இந்து தர்மத்தை அழித்துவிட்டார் என்று காட்டுக் கூச்சல் போட்டனர். ஆனால் அடிகளாரின் அடிப்படை விழுப் பொருளையே மாற்றக்கூடிய மாபெரும் கொடுமை நடந்து விட்ட நிலைமையில் அடிகளார் தம் விழுப்பொருளை மாற்றிக் கொண்டார். இவ்வாறு மாற்றிக்கொண்டதும் அந்தக் குறிப் பிட்ட நிகழ்ச்சி நடந்த அந்தக் குறிப்பிட்ட கால எல்லைக்கு மட்டுமே பொருந்தும். இம்மாதிரியாக தற்காலிக மாற்றம் நிகழ்வதும் உண்டு. இதன் எதிராக, நடைபெற்ற நிகழ்ச்சி

காரணமாக நிலையான விழுப்பொருள் மாற்றம் ஏற்படுவதும் உண்டு. நிலையான விழுப்பொருள் மாற்றம் ஏற்பட வேண்டுமானால் அதற்கு இரண்டு முக்கியமான சூழ்நிலைகள் வேண்டும். நிலையான விழுப்பொருளை அதுவரை கொண்டிருந்த ஒருவன் மாற வேண்டுமாயின் அவன் வளர்ச்சி அடைகிறான் என்பதையே அது குறிக்கும். அற்பசொற்ப ஊதியங்கட்காகவோ, இலாபம் வருகிறது அல்லது வாழ்க்கையில் முன்னேறலாம் என்பதற்காவோ, பட்டம்பதவிகட்காகவோ விழுப்பொருளை விட்டுக்கொடுப்பவன் சாதாரண மனிதன்; இன்னும் கூறவேண்டுமாயின் சாதாரண மனிதனும் ஒருபடி தாழ்ந்தவன்.

இரண்டாவது சூழ்நிலை எதிரே நடைபெறும் நிகழ்ச்சியைப் பொறுத்தாகும். அற்பமான ஒன்றுக்காக விழுப்பொருளை மாற்றிக்கொள்வது கீழ்மகன் வேலை என்று கண்டோம். இதன் எதிராக மிக உயர்ந்த ஒன்றிற்காக வேறு பயன் ஒன்றையுங் கருதாமல் விழுப்பொருளை மாற்றிக் கொள்வதும் உண்டு. இது மிக அருகி நடைபெறும் ஒன்றாகும். இதற்கும் கம்பனில் இடம் உண்டு.

ஆதி காவியமாகிய வான்மீகத்திலும் வங்காள இராமாயணம் போன்றவற்றிலும் வாலி என்ற பாத்திரம் சாதாரணக் குரங்காகவே படைக்கப்பட்டுள்ளது. உலக இலக்கியம் எதிலும் காணப்படாத முறையில் கம்பநாடன் வாலியையும் அனுமனையும் படைத்துள்ளான். வாலியின் தவவலி, கல்வி முதலியவற்றிற்கு ஈடு இணையே இல்லை என்னும்படி படைக்கப்பட்டுள்ளான், கதை அனைவருக்கும் தெரியுமாதலின் இதனை வளர்த்தவேண்டிய தேவை இல்லை. வாலிஇராமன் அம்பால் அடிபட்டு வீழ்ந்து கிடைக்கின்றான். தன் மார்பையும் ஒருவனுடைய அம்பு துளைக்க முடியும் என்று அவன் கனவிலும் கருதினவன் அல்லன். எனவே மார்பைத் துளைத்துக்கொண்டு செல்ல முற்பட்ட இராமன் அம்பைத் தன் வாலாலும் காலாலும் பற்றி அது மேலே போகாமல் நிறுத்திவிட்டான். இராமன் அம்பை மேலே செல்லாமல் தடுத்து நிறுத்திய ஒரே பாத்திரம் இராமாயணம் முழுவதிலும் வாலி என்பவனேயாகும். வியப்பிலும், ஐயத்திலும் ஆழ்ந்துவிட்ட வாலி அந்த அம்பைத் தடுத்து நிறுத்தியதன் நோக்கம் அதை எய்தவன் யார் என்பதை அறிவதற்கேயாகும்.

அம்பில் பொறிக்கப்பெற்ற பெயர் இரண்டு எழுத்துக்களால் ஆயது. அதன் தன்மையைக் கூற வந்த கவிஞன் 'செம்மை சேர் நாமம்' என்று கூறுகிறான். அந்தப் பெயரைக் கண்டவுடன் வாலிக்கு ஆத்திரமோ சினமோ முதலில் தோன்றவில்லையாம். அதற்குப் பதிலாக வெட்கப்பட்டானாம். ஏன் தெரியுமா? சூரியகுலம் இராமன் பிறந்த காரணத்தால் நல்லறம் துறந்துவிட்டது என்றுதான் நாணம் அடைந்தான்: தந்தை சொன்னான் என்பதற்காக வனத்திடை வந்தவன் கேவலம் என் பொருட்டால் வில் அறம் துறந்துவிட்டானே! என்று நினைத்தவுடன் சிரிப்பு வந்து விட்டதாம் வாலிக்கு. இவ்வாறு வாலி நினைக்கக் காரணம் யாது? சுத்த வீரனாகிய வாலி வீரத்தைப்பற்றிக் கொண்டிருந்த விழுப்பொருளின் அடிப்படையில் பிறந்தது இந்நகை! தூய வீரம் தேவையற்ற இடத்தில் போர் செய்யத் துணியாது; காரணமில்லாமல் ஒருவனைக் கொல்ல விரும்பாது. எல்லாவற்றையும் விட மறைந்து நின்று ஒருவன் மேல் சுத்த வீரன் அம்பு போட மாட்டான். இவை அனைத்தும் வாலியின் மனத்தில் தூய வீரம் பற்றிக் கொண்டிருந்த விழுப் பொருள்கள்.

இத்தகைய விழுப்பொருள்களை உயிரினும் மேலாக மதித்திருந்தான் வாலி. இந்த மனநிலையில்தான் இராமனைப் பற்றி அவன் எடைபோட்டிருந்தான். அவன் மனைவியாகிய தாரை, இராமன் சுக்ரீவனுக்குத் துணையாக வந்துள்ளான் என்று கூறியதைக் கேட்ட வாலி பெருங்கோபங் கொள்கிறான். ஏன் தெரியுமா? அவன் எவ்வெவற்றை உயிரினும் மேலான விழுப்பொருள்கள் என்று கருதி இருந்தானோ அவற்றைக் கொண்டே தசரதன் புத்திரனை எடைபோட்டிருந்தான்: வாலி, தன் குறிக்கோளாக இருந்த விழுப்பொருள்களுக்கு நேரிய இலக்கணமாக உள்ளவன் இராமன் என்று எண்ணியிருந்தான் வாலி. ஆதலால்தான் சுக்ரீவனுக்குத் துணையாக இராமன் வந்துள்ளான் என்று கூறிய தாரையை (வாலியின் மனைவி)ப் பெரிதும் கோபித்துக் கொண்டான் வாலி. அத்துணைத்தூரம் தன் விழுப்பொருளுக்கு ஒரு வடிவமாக அமைந்தவன் இராமன் என்று நினைத்திருந்த வாலிக்கு இப்பொழுது இராமன் அம்பைக் கண்டவுடன் பெருத்த இடி விழுந்தது போலாயிற்று. அவன் கருது கோளாக இருந்த விழுப்பொருள் கீழே விழுந்து நொறுங்கி விட்டது.

எனவேதான் நாணத்தால் சிரித்துவிட்டான் வாலி. இராமன் பெயர் அம்பில் பொறித்திருந்தாலும் அதைப் பார்த்தவுடன் நம்பத் தயாராக இல்லை வாலி. தன் கண்களே தன்னை ஏமாற்றுகின்றனவோ என்றுகூட நினைத்து விட்டான். பலமுறை பார்க்கிறான். கண்ணால் கண்டதை மனம் நம்ப மறுக்கிறது! இந்த இக்கட்டைக் கவிஞன் அற்புத மாகப் படம் பிடித்துக் காட்டுகிறான். 'செம்மை சேர் நாமம் தன்னைக் கண்களால் தெரியக் கண்டான்' (வாலி—79) என்பது கம்பன் வாக்கு. கண்களால் கண்டான் என்றாலே போதுமே. தெரியக் கண்டான் என்று வேறு கூறவேண்டுமா? ஆம் மனம் முதலில் ஏற்க மறுத்து இறுதியில் வேறு வழி இல்லாமல் ஏற்பதைத்தான் இவ்வாறு கவிஞன் பாடிக்காட்டு கிறான்.

இராமனைப்பற்றி வாலி என்ன என்ன நினைத்திருந்தான் என்பதை இப்பொழுது நினைவுக்குக் கொண்டுவர வேண்டும். ஒன்று தனக்குக் கிடைத்த அரசைத் துச்சம் என நினைத்துத் தம்பிக்கு வழங்கியவன். இரண்டு அத்தகையவன் வந்த இடத்தில் அண்ணன் தம்பியின் சண்டையில் தலையிட மாட்டான். மூன்றாவது தனக்கும் அவனுக்கும் எவ்விதப் பகையும் இன்மையால் தன்னிடம் போர் தொடுக்கமாட்டான். நான்காவது சுத்த வீரனாகிய இராமன் நேர்நின்று பொருவானே தவிர மறைந்து நின்று அம்புபோடக் கனவிலும் கருதமாட்டான். இந்த நான்கு பண்புகளும் இவற்றால் தோன்றிய விழுப்பொருள்களும் இப்பொழுது நொறுங்கி விட்டன.

இதனால்தான் இராமன் தன் எதிரே வந்தவுடன் வாலி அவனை ஏசத் தொடங்குகிறான். இராமன் அவன் கண் எதிர் வந்து தந்த காட்சியைக் கவிஞன் வேறு ஒரு காரணத் திற்காக விரிவாகக் கூறுகிறான்.

''கண்ணுற்றான் வாலி கார்முகில் கமலம் பூத்து
மண் உற்று வரிவில் ஏந்தி, வருவதேபோலும் மாலை
புண் உற்றது அனைய சோரி பொறியொடும் பொடிப்ப நோக்கி
என்னுற்றாய்! என் செய்தாய்? என்று ஏசுவான் இயம்பலுற்றான்''

(வாலி—83)

கார்முகில் கமலம் பூத்து மண் உற்று வரிவில் ஏந்தி வருகின்றது போன்ற திருமாலைக் கண்ணுற்று...நோக்கி... ஏசுவான் இயம்பலுற்றான் என்று இயைத்துக் காண்டல் வேண்டும். மாபெரும் தவறு செய்துவிட்டான் இராமன் என்று நினைத்துச் சூரிய குலமே இவனால் பழிபட்டுவிட்டது என்று வருந்தும் வாலி இராமனைக் கண்டான் என்று கூற வந்த கவிஞன் 'கார்...போலும்' என்று கூறுவது பொருந்துமா? சாதாரண நிலையிலும் இது பொருந்தாதுதான். கவிஞன் கூறுகின்ற இந்தக் காட்சி வாலியின் கண்ணில் பட்டிருந்தால் ஏசுவானா? ஏச மனம் வருமா? உறுதியாக வராது! அப்படியானால் கவிஞன் தேவை இல்லாமல் முன் இரண்டு அடிகளில் பரம்பொருளைப் பற்றிய விளக்கம் தரக் காரணம் என்ன? பாடுபவன் கவிச் சக்கரவர்த்தி! எனவே நின்று நிதானித்துக் காண்டல் வேண்டும். நாம் நின்று நிதானித்துப் பொருள் காணவேண்டும் என்பதற்காகவே கவிஞன் இரண்டு சொற்களை இப்பாடலில் பெய்துள்ளான். கண்ணுற்றான் என்று தொடங்கி நோக்கி என்று முடித்துள்ளான். இந்த மூன்று அடிகளும் கவிஞன் கூற்று. கண்ணுற்றான என்றால் கண்ணினாற் கண்டான் என்று பொருள்படும். நோக்கி என்றால் கருத்தினால் ஆராய்ந்து என்று பொருள்படும். எனவே எதிரே வந்து நிற்பவனைக் கண்ணினால் முதலில் கண்டான்; பிறகு கருத்தினால் நோக்கினான். இவை இரண்டும் உடனடியாக நிகழ்ந்த செயல்கள் என்றாலும் இவற்றால் விளைந்த பயன்கள் வெவ்வேறானவை. கை, கமலம், வாய் கமலமாக உள்ளவனைக் கண்ணினால் கண்டான். அழகே வடிவானவனைக் கண்ணினால் கண்டால் ஈடுபாடுதானே ஏற்படவேண்டும். இந்தப் பார்வை அவனிடம் ஈடுபாட்டை ஏற்படுத்த முயல்கிறது. ஆனால் இந்த அழகன் செய்த அடாத செயலைச் சிந்தித்தவுடன் சினம் பொங்குகிறது. இந்தச் சிந்தனை ஓடிய முறையைத்தான் கவிஞன் 'நோக்கி' என்ற சொல்லால் குறிக்கிறான். ஏன் இவ்வாறு ஒரே பாடலில் இந்த முரண்பாட்டைக் கவிஞன் கூற வேண்டும்? பின்னர் வாலியின் மனமாற்றமாகிய பூட்டின் திறவுகோலாக அமைந்துள்ளது இந்தப் பாடல்தான்.

ஒருவனுடைய வடிவில் ஈடுபாடும் அவன் செயலில் சினமும் உண்டாவது இயற்கையே. இந்த முரண்பாடு தோன்றினால் இறுதியில் இவை இரண்டில் ஒன்று வெற்றி பெறும். ஒன்று அந்த ஈடுபாடு மிகுந்து சினம் தணிந்துவிடும்; இன்றேல் சினம் மேலோங்கி ஈடுபாட்டை அழித்துவிடும்;

ஒன்று மட்டும் உறுதி: வாலியைப் பொறுத்தமட்டில் கண்ணிற்கண்ட வடிவில் ஈடுபாடும் நோக்கியதால் சினமும் தோன்றியது உண்மை. இந்த வினாடி, போராட்டத்தில், அவன் ஈடுபாட்டை மீதூர்ந்து சினம் வெற்றி பெற்று விட்டது. அதனால்தான் ஏசத் தொடங்கிவிட்டான்;

இதே போன்ற ஒரு சூழ்நிலையை மற்றோர் இலக்கியத்திலும் காணலாம். நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமணத்தில் கிழவேதியன் வடிவில் இறைவன் வருகிறான். 'உனக்கும் எனக்குமிடையே பெரிய வழக்கு ஒன்று உண்டு; அதைத் தீர்த்தால் ஒழியத் திருமணத்தை நடத்த ஒட்டேன்' என்றான் கிழவேதியன். வழக்கு என்ன என்று கேட்டவுடன் ''இந்த ஆரூரனும் இவன் மரபுளோரும் எனக்கு அடிமை' என்று வாதிட்டான். அதிசயமான இந்த வழக்கில் பிரதிவாதியாக நிற்பவர் திருமண மாப்பிள்ளையான நம்பியாரூரர். கிழவரைக் கண்ட மாத்திரத்தில் ஆரூரருக்கு அவர்பால் எல்லையில்லாத ஈடுபாடு ஏற்படுகிறது, ஆனால் அந்தக் கிழவன் பேசும் வார்த்தைகள் எல்லையற்ற கோபத்தை உண்டாக்குகிறது; இந்த முரண்நிலையைக் கூறவந்த சேக்கிழார் பெருமான் சற்று வெளிப்படையாகவே இதனைக் கூறுகிறார்.

''கண்டது ஓர் வடிவால் உள்ளம் காதல் செய்து உருகா நிற்கும்
கொண்டது ஓர் பித்தவார்த்தை கோபமும் உடனே யாக்கும்'' (தடு, 42)

பார்த்த வடிவில் ஈடுபாடும் செயலில் கோபமும் வருதல் உண்டு என்பதைக் காட்டவே இந்த எடுத்துக்காட்டு: இதன் விளைவு என்ன தெரியுமா? கோபம் முதலில் வெற்றிபெறும்; அதற்குரிய ஏச்சு நடைபெறும்பொழுதேகூடத் கண்ணிற் கண்ட காட்சி மனத்தினுட் சென்று மனமாற்றத்தை உண்டாக்கிவிடும்.

இப்பொழுது மறுபடியும் வாலியிடம் சென்றால் கம்ப நாடன் ஏன் கண்ணுற்றான் என்று தொடங்கி, இறுதியில் 'நோக்கி ஏசுவான் இயம்பலுற்றான்' என்று முடிக்கிறான் என்பதை அறிந்துகொள்ள முடியும். பின்னர் அந்த வாலியே அவ்வளவு கோபத்திலுங்கூட

'உங்கள் குலத்து உதித்தோர்கட்கு எல்லாம்—
ஓவியத்து எழுதவொண்ணா உருவத்தால்!' (86)

என்று விளித்துப் பேசுகிறான் என்றால் அந்த வடிவழகில் வாலி எவ்வளவு தூரம் சிக்கித் தவிக்கிறான் என்பது விளங்கும். இது கருதித்தான்போலும் வியாக்யான கர்த்தராவுங்கூட 'ஒரு நாள் கண்டதால் அந்த வடிவ அழகு படுத்தும்பாடு இதுவாயிற்றிரே' என்று கூறிப் போனார். இந்த அழகில் ஈடுபட்டான் வாலி என்பதைக் குறிப்பால் கூறவந்த கவிஞன் 'கண்ணுற்றான்' என்று கூறிப் பாடலைத் தொடங்குகிறான். இதனை அடுத்து இராமன் செய்த செயலால் கோபமும் நாணமும் ஒருங்கே கொண்டமையின் ஏசத் தொடங்குகிறான்.

ஏசத்தொடங்கிய வாலி ஒரேயடியாக ஏசிவிடவும் இல்லை. எள்ளி நகையாடல், ஏசல், இரக்கப்பட்டு மொழிதல் முதலிய பல்வேறு வழிகளிற் பேசுகிறான். 'நீ பரதனுக்கு அண்ணனாகப் பிறந்தாயே!' தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை; வலியவர் மெலிவு செய்தால் புகழின்றி வசையும் உண்டோ' என்பன போன்றவை எள்ளல் குறிப்பில் எழுந்தவை. 'இலங்கை வேந்தன் முறையல செய்தான் என்று முனிதியோ?—முனிவிலா தாய்!' 'வாலியைப் படுத்தாயலை, அறவேலியைப் படுத்தாய் விரல் வீரனே! என்பன போன்றவை ஏசல். 'வீரம் அன்று விதி அன்று நின் மண்ணினுக்கு என்னுடல் பாரமன்று, பகையன்று' 'ஒளித்து நின்று, விரிசிலை குழைய வாங்கி வாய் அம்பு மருமத்து எய்தல் தருமமோ? பிறிது ஒன்று ஆமோ?' என்பன போன்றவை இரக்கத்திற் பிறந்தவை. இந்த ஏசல்கள் மாறி மாறி மின்னல் வேகத்தில் வந்தன. இராமன் ஒன்றும் விடை கூறக்கூடிய நிலையில் இல்லை; ஒருவேளை அவனுடைய முகமண்டலமே இரக்கத்திற்கு உரியதாக இருந்திருக்கும் போலும்!

வாலி செய்த தவறுகள் யாவை என்று இராமன் அடுக்கிக் கூறவும் வாலி ஒரே வாக்கியத்தில் அவற்றை அடித்து விடுகிறான். "இராமா! நீ பேசும், அறம், பிறன்மனை நயத்தல் என்ற விழுப்பொருள்கள் உன்னுடைய மானிட சமுதாயத்திற்கு ஏற்ற விழுப்பொருள்கள். அந்த நீதிகளை எங்கள் குரங்குச் சமுதாயத்திற்கு ஏற்றி நியாய அநியாயம் காண முற்படுவது தவறு" என்கிறான். அடுத்து அவை ஒரு புறம் இருக்கட்டும். போர்க்களத்தில் நேர்நின்று போர் புரியாமல் புதர் மறைந்து வேட்டுவன் போல ஏன் அம்பு எய்தாய் என்னும் பொருளில் 'செருக்களத்து உருத்து வெவ்விய புளிஞர் என்ன, விலங்கியே மறைந்து, வில்லால்

எவ்வியது என்னை? என்றான்'' (124) இந்த வினா எங்கே வந்துவிடுமோ என்று அஞ்சிக்கொண்டிருந்தான் இராகவன்; இவ்வினா வந்தவுடன் இளையபெருமாள் அண்ணனைக் காப்பாற்ற முனைந்து 'எதிரே வந்தால் நீயும் அடைக்கலம் என்று வந்துவிட்டால் என்ன செய்வது என்று கருதியே மறைந்து நின்று எய்தான்' என்று விடைகூறுகிறான். இந்த விடையை இன்று படிக்கின்ற நமக்குக்கூட சிரிப்புத்தான் வருகிறது என்றால் அன்று இதனைக் கேட்ட வாலிக்கு எவ்வாறு சிரிப்பு வராமல் இருந்திருக்கும்?

வீடணன் அடைக்கலம் என்று வந்த பொழுது 'இன்று வந்தான் என்று உண்டோ? எந்தையை யாயை முன்னம் கொன்று வந்தான் என்று உண்டோ?' (வீ: அடை 106) எந்த நிலையிலும் அடைக்கலம் என்று வந்தவனை ஏற்பதே முறை என்று கூறும் இராமன், வாலி அடைக்கலம் என்று வந்து விட்டால் மட்டும் கலங்கிவிடவா போகிறான்? எனவே இளையவனுடைய இந்த சமாதானம் நொண்டிச் சமாதானம் என்பது மட்டுமன்று; நகைப்புக்கும் இடமான ஒன்றாகும்.

அப்படியானால் இந்த நகைப்புக்கு இடமான சமா தானத்தைக் கேட்டவுடன் வாலி மனம் மாறிவிட்டான் என்றல்லவா கவிஞன் கூறுகிறான்.

'கவிக்குலத்து அரசும் அன்ன கட்டுரை மனத்துட் கொண்டான்
அவியுறு மனத்தன் ஆகி', அறத்திறன் அழியச் செய்யான்
புவியுடை அண்ணல்' என்பது எண்ணினன் பொருந்தி முன்னே
செவியுறு கேள்விச் செல்வன் சென்னியின் இறைஞ்சிச் சொன்னான்' (வா; வ. 126)

சற்று நின்று, நிதானித்தால் ஓர் உண்மை விளங்காமற் போகாது. வாலி திடீரென்று முற்றிலும் மனம் மாறி விட்டான். இராமன் காட்டிய ஏதுக்களால் மனம் மாறாதவன் இலக்குவன் கட்டுரையால் மாறினான் என்பது சரியன்று. ஆனாலும் மாறினான் என்பது உண்மை: அப்படியானால் மாறினமைக்குரிய காரணம் யாதாக இருக்கும் என ஆராய வேண்டும். இங்கேதான் கவிஞன் பற்பல விழுப்பொருள்களை நேரிடையாகவும் குறிப்பாகவும் புகுத்திக் காட்டுகிறான்; வாலி மனம் மாற வேண்டுமாயின் அவன் இதுவரை

கொண்டிருந்த பார்வையும் எண்ணங்களும் மாறி இருக்க வேண்டும். நிகழ்ச்சிகள் நிகழ்ந்துவிட்டமையின் அவற்றில் மாற்றம் என்பது இயலாத காரியம். அப்படியானால் இந்த நிகழ்ச்சியை இதுவரை வாலி கண்ட விதம் வேறு; இப்பொழுது காணும் விதம் வேறு. ஒருவன் அடிபட்டு வீழ்ந்து இறந்து விட்டான் என்று வைத்துக்கொள்வோம். பிறரிடம் பட்ட அடியால் இறந்துவிட்டான் என்று கருதினால் அந்தப் பிறர்மேல் எல்லையற்ற சினம் கொள்கிறோம். அதற்கு மாறாக, பிணத்தை அறுத்துக் காண்பவர் பட்ட அடியால் இறக்கவில்லை. இருதயக் கோளாறால் இறந்து விட்டார் என்று சான்று கூறிவிட்ட பிறகு அடித்தவரிடம் நாம் வெறுப்பும் சினமும் கொள்ளமாட்டோம் அல்லவா? இதே உவமையைச் சற்று மாற்றிக்கண்டால் மற்றோர் உண்மையும் நன்கு புலப்படும். மருத்துவன் அறுவை சிகிச்சையில் நோயாளி இறந்தாலும் நாம் மருத்துவனைக் குறை கூறுவதில்லை.

அதுபோல இப்பொழுது வால் நினைக்கத் தொடங்கி விட்டான். அறத்தின் மூர்த்தியாகிய இராமன் அறத்திறன் அழியும் படியாக நடந்திருக்கமாட்டான் என்பதை முதலில் மனத்தில் வாங்கிக்கொண்டான். இந்த எண்ணம் தோன்றிய தற்குக் காரணம் கூறவந்த கவிஞன் 'அன்ன கட்டுரை மனத்துள் கொண்டான்' என்று நுணுக்கமாகக் கூறிவிட்டு விட்டான். அன்ன கட்டுரை என்ற சொற்களுக்கு முதற் பாடலில் உள்ள இலக்குவன் கூறிய சமாதானம் என்று பொருள் கொண்டுவிட்டால் பெரிய இடர்ப்பாடு நேர்ந்து விடும். இந்த வார்த்தைகளாலா வாலி மனம் மாறிவிட்டான் என்ற வினாவிற்கு விடை கூற முடியாமற் போய்விடும். எனவே அன்ன கட்டுரை எனக் கவிஞன் கூறுவது ஏதோ ஒன்றை நினைவூட்டவேயாகும் என்பதை அறிதல் வேண்டும். அது யாதாக இருக்கும் என்று ஆராயுமுன்னர் இன்னுஞ் சில அடிப்படைகளையும் நினைவுகூற வேண்டும்.

முதலாவது வாலி இராமனைப்பற்றிக் கொண்டிருந்த மிக உயரிய எண்ணங்கள்; இரண்டாவது தாரையிடம் இராமனைப் பற்றி அவன் கூறிய தகவல்கள். இவை இரண்டும் கூடி, வாலியின் அகமனத்திலும் புற மனத்திலும் இராமனைப் பற்றிய மிக உயர்ந்த எண்ணங்களே நிறைந்திருந்தன என்பதைக் காட்டுகின்றன. மூன்றாவது நிலையில் 'கார்முகில் கலலம் பூத்து மண்ணுற்று வரிவில் ஏந்தி வருகின்ற' காட்சியைக் கண்ணுற்றான் வாலி, இதற்கு ஒரு வினாடி

முன்னர்த்தான் 'மும்மை சால் உலகுக்கு எல்லாம் மூல மந்திரத்தை' கண்களில் தெரியக் கண்டான். அதாவது

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டான்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டான்
நாமம் கண்களால் தெரியக் கண்டான்.

அடுத்துக் கமலம் பூத்து வருவதைக் கண்ணுற்றான். நான் காவதாக அதே இராமன் அடிபட்ட வாலியிடம் சில வார்த்தைகள் கூறினான். தான் அவனைக் கொன்றதற்குச் சமாதானமாக இராமன் இவற்றைக் கூறினாலும் இதிலுள்ள தத்துவம் வாலியின் அகமனத்துள்ளுரைத்தது.

''பொறியின் யாக்கையதோ? புலன் நோக்கிய
அறிவின் மேலது அன்றோ அறத்து ஆறுதான்?
நெறியும் நீர்மையும், நேரிது உணர்ந்த நீ
பெறுதியோ, பிழை உற்றுறு பெற்றிதான்?

'நன்றி தீது என்று இயல் தெரிநல் அறிவு
இன்றி வாழ்வது அன்றோ விலங்கின் இயல்?
நின்ற நல்நெறி, நீ அறியா நெறி
ஒன்றும் இன்மை, உன் வாய்மை உணர்த்துமால்!

'தக்க இன்னன, தகாதன இன்ன என்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே! மனுவின் நெறி,
புக்கவேல் அவ்விலங்கும் புத்தேளிரே?''

(வா-வ-116, 1920)

நடைபெற்ற உரையாடற் போட்டியை மறந்துவிட்டு இச் சொற்களைப் படித்தால் ஓர் உண்மை விளங்கும். இராமன் வாலிக்கு உபதேசஞ் செய்த பகுதியாகும் இது. தன் செய்கைக்கு சமாதானங் கூறும் முறையில் இராமன் இதனைக் கூறினாலும் உண்மையில் இந்த உபதேசம் வாலியின் அகமனத்தில் சென்று தைக்கவேண்டும் என்று இராகவன் கருதினான் போலும்!

உண்மையிலேயே இச்சொற்கள் வாலியினுடைய வெறுப் புணர்ச்சி நிறைந்த புறமனத்தை ஊடுருவிச் சென்று அவனுடைய அகமனத்தில் ஆழப் பதிந்துவிட்டது. 'அன்ன

கட்டுரை கருத்தில் கொண்டான்' என்று கவிஞன் கூறுவது இதனையே யாகும். இச்சொற்கள் அகமனத்தில் சென்று பதிந்தவுடன், வாலி இதுவரை கொண்டிருந்த விழுப் பொருள்கள் முற்றிலும் மாறத் தொடங்கிவிட்டன.

'தக்க இன்னன' தகாதன இன்ன என்று ஒக்க உன்ன வேண்டும் என்றால் இராமன், தக்கவை, தகாதவை என்பவை கூட ஒருவன் மனவளர்ச்சிக்கு ஏற்ப மாறுபாடும். சூழ்நிலைக்கு ஏற்பக்கூட மாறுபடும். உதாரணமாக ஒருவனுக்குத் தந்தை யானவன் கடவுளுக்குச் சமமானவன். தந்தையை ஒருவன் தெய்வமாக மதித்துப்போற்றி வழிபட வேண்டும். ஆனால் அந்த ஒருவன் துறவியாக மாறிவிட்டால் இதே தந்தை அத்துறவியின் காலில் விழுந்து வணங்க வேண்டும். விழுப் பொருள் சூழ்நிலையால் மாறிவிடக் காண்கிறோம்.

பகை பாராட்டுபவனுடன் மட்டுமே போர் புரிய வேண்டும், காரணமில்லாமல் போர் புரியக்கூடாது, நேரே நின்றுதான் போர் புரியவேண்டும் என்ற இவை எல்லாம் விழுப்பொருள்கள்தாம். எப்பொழுது? ஒரு நிலையில் இருக்கும்பொழுது இவை விழுப்பொருள்கள். சாதாரண விருப்பு வெறுப்புக்கள் நிறைந்த சராசரி மனிதனுக்கு இந்த உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவனுக்கு இவை எல்லாம் சிறந்த விழுப்பொருள்கள் என்பதை மறக்கமுடியாது.

ஆனால் பகை என்ற ஒன்று உண்டா? யார் பகைவர்? யாருக்கு யார் பகை? உயிர்கள் மற்ற உயிர்களுடன் பகைப்பது முறையா? காரணம் இல்லாமல் போர் புரியக்கூடாது என்றால் காரணம் இருந்தால் மட்டும் போர் புரியலாமா? மாற்சரியமே கூடாது என்ற பின் பகைவர், உறவினர் என்று யாருமே இருக்க முடியாதே! அப்படி இருக்க நேர் நின்று போரிடுதல், மறைந்து நின்று போரிடுதல் என்பவை அர்த்த மற்ற வெற்றுரைகள் அல்லவா? விருப்பு வெறுப்பு இல்லாமல் சமதிருஷ்டியுடன் இருப்பவன் ஒருவனைக் கொல்கிறான் என்றால் அது அறுவை மருத்துவன் செய்யும் ஆப்பரேஷன் போன்றதல்லவா? அறுவை மருத்துவம் செய்யும்பொழுது நோயாளி இறந்துவிட்டான் என்றால் யாரேனும் மருத்துவனைக் குறை கூறுவார்களா? இம்மாதிரிக் கோணத் தில் நின்று நடைபெற்ற நிகழ்ச்சிகளை வாலி ஆயத்தொடங்கி விட்டான். அதற்குரிய மனப்பக்குவத்தை அவன் இப்பொழுது

பெற்றுவிட்டான். அந்தப் பக்குவம் அவனுக்கு வரக் கீழே கொடுக்கப்பெற்றுள்ளவை துணைபுரிந்தன.

(1) இராமனைக் காணுமுன் அவன்மாட்டு வாலி கொண்டிருந்த பெருமதிப்பு.

(2) மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்திரத்தைக் (கண்களில்) தெரியக்கண்டது.

(3) கமலம் பூத்த கார்முகிலைக் கண்ணுற்றது.

(4) இராமன் சொற்களாலும், அம்பாலும் செய்த உபதேசம்.

இந்த நான்கின் எதிரே, இராமன் மறைந்து நின்று அம்பு எய்ததும், நியாய அநியாயங்களும், போர் அறம் எனக் கூறப் பெற்ற சட்டதிட்டங்களும் பொடி சூரணமாகிவிட்டன. இந்த நான்கும் சித்திக்கு முன்னர் இவை பெரிய விழுப் பொருள்கள். இந்த நான்கும் சித்தித்த பிறகு அனைத்தும் பிள்ளை விளையாட்டு. எனவே அவற்றிற்கு எவ்வித மதிப்பும் தர வாலி தயாராக இல்லை. ஒரு கோடு எவ்வளவு பெரியது என்று நினைத்தாலும் அதனையடுத்து மற்றொன்று அதைவிட நீளமாகப் போட்டுவிட்ட பிறகு பழைய கோடு மதிப்பை இழந்துவிடுதல் போல இப்புதிய பார்வையில் பழைய விழுப் பொருள்கள் சிறப்பு இழந்துவிடுகின்றன. இப்புதிய பார்வை வருமுன்னர் அந்த விழுப்பொருள்கள் மிகப்பெரியவை; மிக உயர்ந்தவை. புதிய பார்வை வந்துவிட்ட பிறகு அவ்விழுப் பொருள்கள் மிக அற்பமானவையாய் மிகச் சிறியனவாக ஆகிவிட்டன. இத்தனையும் மனத்துட் கொண்டு வாலியி னுடைய மாற்றத்தைக் கவிஞன் கூற முற்படுகிறான். ஆம்! வாலி முற்றிலும் மாறிவிட்டான். அதாவது வாலி அதுவரை கொண்டிருந்த விழுப்பொருள்கள் அனைத்தும் மாறிவிட்டன. எனவே சிறியவையாக மாறிவிட்ட அந்தப் பழைய விழுப் பொருள்களை இப்பொழுது வாலி நினைக்கக்கூட விரும்ப வில்லை என்கிறான் கவிஞன். 'சிறியன சிந்தியாதான்' என்ற அடைமொழியை வாலிக்குத் தருகிறான் கவிஞன்.

வாலியின் விழுப்பொருள்கள் மாறிவிட்டன என்பதை எவ்வாறு அறிய முடிகிறது? எந்த இராமனை! 'பரதன் முன் தோன்றினாயே!' என்று ஏசினானோ அந்த இராமனை இதோ பேசுகிறான்.

"தாய் என உயிர்க்கு நல்கி, தருமமும், தகவும், சால்பும்
நீ என நின்ற நம்பி! நெறியினின் நோக்கும் நேர்மை

நாய் என நின்ற எம்பால் நவை அற உணரலாமே?
நீயென பொறுத்தி!" என்றான்—சிறியன 'சிந்தியாதான்'
(வாலி—வ. 127)

இராமனைத் தாய் என்று கூறுவதோடு அமையாமல் தருமம், தகவு, சால்பு என்பவற்றின் வடிவம் என்றுங் கூறுகிறான்.

யார் வயிற்றைக் கிழிக்கிறார்கள் என்று அறிந்து கொள்ளாமல் கிழிக்கப்படும் செயலை மட்டும் பார்த்த ஒருவன் இது கொலை என்று கூறுகிறான். சில வினாடிகளில் கிழிப்பவர் மருத்துவர் என்று தெரிந்தவுடன் அன்புள்ளங் கொண்ட மருத்துவர் என்று பேசுகிறான், இரண்டிலும் நடைபெறுவது அறுவைதான் என்றாலும் இரண்டிற்கும் இடையே விழுப்பொருள் மாறிவிடுகிறது. இதே நிலையில் வாலி இருந்தமையின் விழுப்பொருளில் மாற்றங் கண்ட பிறகு சிறியன சிந்தியாமல் நடைபெற்ற நிகழ்ச்சியை நோக்கினான். உடன் அதன் சிறப்புத் தெரியத் தொடங்கிற்று. இராமனைத் தாய் என்றும் சால்பு ஊன்றிய தூண் என்றும் பேசத் தொடங்கி விடுகிறான்; முன்னர் விழுப்பொருள்களாகக் காட்சியளித்தவை இப்பொழுது அற்பமாகத் தோன்றத் தொடங்கிவிட்டன. அவற்றைச் சிறியன என்று கூறுகிறான் கவிஞன். வாலியைச் 'சிறியன சிந்தியாதான்' என்று கூறுவதன் பொருள் இதுவே யாகும். எனவே வாலி திடீரென்று மனம் மாறக் காரணம் இலக்குவன் தந்த விடையன்று. இராகவன்பால் பெற்ற உபதேசத்தால் வாலி திடீரென்று வளரத் தொடங்கிவிட்டான். அவனுடைய இந்த ஆன்ம வளர்ச்சியால் புதிய ஒரு பார்வையை அல்லது கண்ணோட்டத்தைப் பெறுகிறான். எல்லையில்லாத ஆனந்தத்தில் அமிழ்ந்துவிடுகிறான். இந்த ஆன்மிக வளர்ச்சியில் நின்று அதனால் பெற்ற புதிய கண்ணோட்டத்துடன் இந்த உலகைப் பார்க்கிறான். இந்த உலகில் உள்ள சட்டதிட்டங்கள், விழுப்பொருள்கள் ஆகிய அனைத்தும் இப்பொழுது அற்பமானவையாக அவன் கண்ணுக்குப் படுகின்றன.

முன்னர் உலகியல் நிலையில் நின்று பார்க்கையில் சில கட்டுப்பாடுகள் இருந்தன. தூரப்பார்வை இல்லை. எதிர் காலத்தை அறிய முடியவில்லை. விருப்பு வெறுப்புகள் நிறைந்திருந்தன. நண்பர், பகைவர், நொதுமலர் என்ற வேறுபாடுகள் இருந்தன. இன்னுங் கூறவேண்டுமானால் நன்மை—தீமை; பகை—நட்பு; ஒளி—இருள்; பாவம்—புண்ணியம் என்ற இரட்டைகள் இப்பொழுது அர்த்த

மற்றவையாய்விட்டன; கீதையின் வழியில் கூறவேண்டு மானால் வாலி 'ஸ்திதப் பிரஞ்ஞ'னாகிவிட்டான்; 'சமதிருஷ்டி.' பெற்றுவிட்டான்; எனவேதான் பழைய விழுப்பொருள்கள் சிறயனவாகிவிட்டன. இப்பொழுது புதிய விழுப்பொருள்களைப் பெற்றுவிட்டான் (New Values) இந்தப் புதிய விழுப்பொருளை எவ்வாறு பெற்றான்? எப்பொழுது பெற்றான்? இதோ அவனே விடை கூறுகிறான்.

''ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்
ஆவிபோம் வேலைவாய், அருள் தந்து அருளினாய்
மூவர்நீ ! முதல்வன் நீ! முற்றும் நீ ! மற்றும் நீ !
பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!
(வா. வ. 129)

ஆம்! எப்பொழுது புதிய விழுப்பொருளைப் பெற்றான்? ஆவிபோம் வேளையில் பெற்றானாம். எவ்வாறு பெற்றானாம்? ஏவுகூர் வாளியால் பெற்றானாம். பெற்றதனால் விளைந்த பயன் யாது? துவந்தங்கள் எனப்படும் இரட்டைகள் அறவே ஒழிந்து சமதிருஷ்டி கிடைத்தது. இதைத்தான் வாலி விளக்குகிறான். இந்த விழுப்பொருள் கிடைக்குமுன் உன்னை தசரத புத்திரன் இராமன் என்று நினைத்து, என் உயிரைப் போக்கும் பகைவன் என்று எண்ணி நீ பாபம் செய்துவிட்டாய் என்ற முடிவுக்கு வந்து உலகம் உள்ளளவும் பழிபூண்டுவிட்டாய் என்று கருதிவிட்டேன். இப்புதிய அறிவை நீ தந்தவுடன் நீ தசரதன் புத்திரன் அல்லை. நீயே மூவர்! நீயே முதல்வன்! நீதான் புகழ்! நீதான் இகழ்; நீதான் பாபம்! நீதான் புண்ணியம்; பகையும் நீயே உறவும் நீயே; உன்னை அன்றி மற்று ஒன்றும் இல்லை என்ற புதிய விழுப்பொருளைப் பெற்றுவிட்டேன் என்று கூறுகிறான் வாலி.

இன்னும் ஒருபடி மேலே சென்றும் பேசுகின்றான். இயங்கியற்பொருள், நிலையியற் பொருள் (சரஅசரம்) களாக உள்ளான். பூவும் அதில் உள்ள மணமும் போல எல்லா வற்றிலும் ஊடுருவி நிற்கின்றவன் என்று அறிஞர் கூறுவதை இன்று உணர்ந்துகொண்டேன் என்ற பொருளில்,

"யாவரும் எவையுமாய், இருதுவும் பயனும் ஆய்
பூவும் நல்வெறியும் ஒத்து; ஒருவ அரும் பொதுமையாய்

ஆவ நீ ஆவது' என்று அறிவினார் அருளினார் ;
தாவரும் பதம் எனக்கு அருமையோ ? தனிமையோய்
(வா. வ. 131)

என்றும் கூறுகிறான். வாலியின் மனத்தில் நிகழ்ந்த இந்த விழுப்பொருள் மாற்றத்தை உணர்ந்து கொண்டவன் (Change in values) இராமன் ஒருவனேயாவான்.

நல்லதொரு சந்தருப்பங் கிடைத்தவுடன் தான் கொண்டிருந்த விழுப்பொருள்களை மாற்றிக்கொண்டான் வாலி. அதனால் உடனடியாகத் தேவர்கட்கும் கிட்டாத வீடு பேற்றைப் பெற்றுவிட்டான் என்கிறான் கவிஞன். ஆனால் இதே கம்பன் மற்றொரு பாத்திரத்தின்மூலம் என்ன நிகழ்ந்தாலும் தான் கொண்ட விழுப்பொருள்களை மாற்றிக்கொள்வதில்லை என்ற உறுதியுடன் உயிரை விடுகின்ற நிகழ்ச்சியையும் காட்டிச் செல்கிறான்.

போர்க்களத்தில் வந்து நிற்கும் கும்பகருணனைக் கண்ட இராமனே வியப்பெய்துகிறான். அவனுடைய நேர்மையைப் பற்றி வீடணன் கூறி இந்த நல்லவனைக் கொன்று ஒரு பயனும் இல்லை. அறிவுரை கூறி இவனை அழைத்து வருகிறேன் என்று இராமனிடம் அனுமதி பெற்றுக் கும்பனிடம் வருகிறான் வீடணன். அவனைக் கண்ட கும்பகருணன் வியப்பும் வருத்தமும் ஒருங்கே எய்தியவனாய் 'ஏன் நீ என்னிடம் வந்தாய் ? இறக்கும் தறுவாயில் இருக்கும் எங்களை நாடி வருவது நியாயமா ?' என்ற கருத்தில்

'கவிஞரின் அறிவு மிக்காய் காலன்வாய்க் களிக்கின்றேம்பால்
நவைஉற வந்தது என் நீ? அமுது உண்பாய் நஞ்சு
உண்பாயோ ?
(கும்ப. வதை—131)

என்று பேசுகிறான். வீடணன் பக்குவமாகக் கும்பனிடம் பேசத் தொடங்கி 'நீ இதுவரை உன் வாழ்நாளை வீணாளாக உறங்கியே கழித்துவிட்டாய் ! வேதங்களைக் கற்ற நீ இப்பிறவி நோயிலிருந்து விடுபட வேண்டாமா ? இராமனிடம் சரணம் புகுந்து விட்டால் இலங்கை அரசுடன் வீட்டரசும் உனக்கு நல்குவான்' என்று பல்வேறு காரணங்களைக் காட்டிப் பேசினான்.

வீடணனிடம் எல்லையில்லாத அன்பு பூண்டவன் கும்பகருணன். ஆனால் அண்ணன் தம்பியராகிய இவர்கள்

இருவருக்கும் விழுப்பொருள்கள் வேறு வேறு. இராமனிடம் சேர்வது

'மருள்உறு பிறவி நோய்க்கு மருந்தும் ஆம்; மாறிச்
செல்லும்'
உருள்உறு சகட வாழ்க்கை ஒழித்து விடளிக்கும்.....
(கு. வதை—139)

என்று கருதுபவன் வீடணன். வீடணனைப் போலவே கல்வி, கேள்வி ஞானங்களில் நிறைந்தவன்தான் கும்பகர்ணனும். என்றாலும் என்ன? இருவருடைய விழுப்பொருள்களும் இரு வேறு துருவங்களாக அமைந்துவிட்டன. இரு துருவங்களாக விழுப்பொருள்கள் இருப்பினும் ஒருவர்மாட்டு ஒருவர் கொள்ளும் அன்பு இதனால் குறைய வேண்டியதில்லை என்பதையும் எடுத்துக்காட்டவே கவிஞன் இந்தக் காட்சியை அமைத்துக் காட்டுகிறான்.

அண்ணனாகிய கும்பனைத் தன்னுடன் வருமாறு வேண்டிய வீடணன் தரையில் வீழ்ந்து அண்ணனை வணங்குகிறான். வணங்கும் தம்பியை எடுத்து மார்புறப் புல்லிக் கண்ணீர் சோரப் பேசுகிறான் கும்பகர்ணன். தன் முடிவையும் தமையன் முடிவையும் மிக நன்றாக அறிந்திருந்தான் கும்பன். என்றாலும் என்ன? வீடணன், இம்மையில் இலங்கை அரசும் மறுமையில் கிடைக்கும் என்று கூறினதால் தன் விழுப் பொருளை மாற்றிக்கொள்ள இசைந்தானா கும்பன்? அப்படி யானால் அவனுடைய விழுப்பொருள்தான் என்ன?

'ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உரியது' (157)
'தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனோ தமையன்' (158)
'(யமனிடம்) துணை இன்றி (அண்ணன்) சேரல் நன்றோ?'

இவ்வாறு அண்ணனிடம் தன் கடமை உணர்ச்சியை வெளிப் படுத்தினான். இனித் தன் வீரத்தின்பால் அவன் கொண்ட உறுதி வருமாறு:

'கும்பிட்டு வாழ்கிலேன் யான் கூற்றையும் ஆடல்
கொண்டேன் (160)

'பனி துடைத்து உலகம் சுற்றும் பரிதியின் திரிவென்'
'கறங்கு எனத் திரிவென்'
'ஒருவரும் திரிய வொட்டேன் உயிர் சுமந்து உலகில்' (163)

இவைதான் கும்பகருணனுடைய விழுப்பொருள்கள். இவ்வாறு கூறுவதால் முட்டாள்தனத்துடன் பகைவனின் வன்மை

அறியாமல் தன்னைப்பற்றி உயர்வாக நினைத்துள்ளானோ என்று யாரும் நினையவேண்டியதில்லை. தன் முடிவு என்ன? இராவணன் முடிவு என்ன? இலங்கை அரக்கர் முடிவு யாது என்பவற்றை மிக நன்றாக அறிந்த ஒருவன் இலங்கையில் உண்டு என்றால் அவன் கும்பகருணன்தான். என்றாலும் என்ன? தான் கொண்டிருந்த விழுப்பொருள்களை விட்டுக்கொடுக்கவோ வேறு விழுப்பொருள்களை ஏற்றுக் கொள்ளவோ அவன் தயாராக இல்லை. தம்பியாகிய வீடணனுக்கு இராமனிடம் சரணமாதல்தான் தக்கது என்பதையும் தான் போர் புரிந்து மரணமடைவதுதான் புகழ் என்பதையும் நன்கு அறிந்தவனாகலின் அவரவர் விழுப் பொருள்களை அவரவர் காப்பதே முறை என்று கருதினான். எனவே களத்தில் வீடணனிடம் பேசும்போது

''மலரின்மேல் இருந்த வள்ளல் வழுஇலா வரத்தினால்
உலைவு இலாத் தருமம் பூண்டாய்; உலகு உளதனையும் உள்ளாய்
தலைவன் நீ, உலகுக்கு எல்லாம்; நினக்கு அது (சரணம் அடைதல்) தக்கதேயால்
புலைஉறு மரணம் எய்தல் எனக்கு இது புகழதேயால்'

என்று திட்டவட்டமாகக் கூறுகிறான்.

மனிதன் ஒருவனுக்குத்தான் விழுப்பொருள் என்ற ஒன்று உண்டு. குறிக்கோளுடன் வாழவேண்டும் என்று நினைப்பவன் தான் மனிதன். குறிக்கோள் இலாத வாழ்க்கை விலங்கு வாழ்க்கையே யாகும். அந்தக் குறிக்கோள் உயர்ந்ததாகவும் சிறந்ததாகவும் இருக்கவேண்டுமாயின் வாழ்க்கையில் சில உயர்ந்த விழுப்பொருள்கள் இருத்தல் வேண்டும்; இலக்கியத்தில் வரும் பாத்திரங்கள் அனைத்தும் விழுப் பொருளை உயிரினும் மேலாகப் போற்றும் பாத்திரங்களாகத் தான் அமையும். அதில் தனிமனித விழுப்பொருள், சமுதாய விழுப்பொருள் என இருவகை உண்டு. தனிமனித விழுப் பொருள்களை மாற்றிக்கொள்கிறவர்கள் உண்டு; மாற்ற மறுப்பவர்களும் உண்டு. அதேபோலச் சமுதாய விழுப் பொருள்கள் காலத்துச்கு ஏற்ப மாறும் இயல்புடையன. தனி மனிதர்கள் கொண்ட விழுப்பொருள்களும் தக்க காரணங் களால் மாறும் இயல்புடையன. உறவு காரணமாக இருவர்க்கு ஒரே வகையான விழுப்பொருள்தான் இருக்கவேண்டும் என்ற தேவை இல்லை. ஆக விழுப்பொருள் இல்லாதவன் மனிதனே இல்லை என்பது கம்பநாடன் காப்பியம் காட்டும் உண்மை;